# நமது தமிழ் வாசகம்

## முதலாம் புத்தகம்

## பொதுப் பகுதி

ஆசிரியர்

*சென்னை பச்சையப்பன் கல்லூரி துணைத்தமிழ்ப் பேராசிரியர்*

**அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட்.**

மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட்

மதராஸ் பம்பாய் கல்கத்தா லண்டன்

1954

# முன்னுரை

இந்தியா விடுதலை பெற்றபின் தாய்மொழியானது கல்வித் திட்டத்தில் ஒரு சிறந்த இடத்தைப்பெற்றுவிட்டது. தத்தம் மொழியை வளர்க்க வேண்டும் என்ற ஆர்வம் அவ்வப்பகுதியில் உள்ள மக்கள் உள்ளத்தில் உண்டாகிறது. சென்னை அரசாங்கத்தார் மக்கள் ஆர்வத்தை அறிந்து, இப்பகுதியில் உள்ள மொழிகளை வளர்க்க வழி பல வகுத்தனர். அவற்றுள் ஒன்று பாடநூல்களைத் திருத்தி அமைக்கும் முறை.

தமிழ்ப்பாடதிட்டத்தை அமைப்பதற்காக சென்னை அரசாங்கத்தார் 1951-ஜூன் 26ம் நாள் ஒரு திருந்திய முறையை சென்னை கெஜட்டில் பிரசுரம் செய்தனர். அதில் உயர்தர பாடசாலைகளின் முதல் மூன்று பாரங்களில் தமிழ்ப் பாடம் பொது, சிறப்பு என இருவகையாகப் பிரிக்கப்பட்டு, அவ்வவற்றிற்கு உரிய அமைப்புகளும் விளக்கப்பட்டன. அத்திட்ட முறைப்படி இதுவரை தமிழ்ப் பாடநூல்கள் வெளி வருகின்றன.

சென்னை மாக்மில்லன் கம்பெனியார் அப்பாடதிட்டத்தின் அடிப்படையில் முதல் மூன்று பாரங்களுக்குத் தமிழ் நூல்கள் வெளியிட விரும்பினர். அவர்தம் விருப்பமே இந்த நூற்றொகுதியாக வருகின்றது. மூன்று பாரங்களுக்கும் பொது, சிறப்பு என்ற தனித்தனிப்பகுதிகள், அரசியலார் வரம்பு கடவாத வகையில் அமைக்கப்பட்டு வெளிவருகின்றன. இப்பாடநூல் வரிசை மாணவர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்ற துணிபுடையேன்.

பாடசாலைகளின் தலைவர்களும் தலைமை ஆசிரியர்களும், தமிழாசிரியர்களும் இந்த நூற்றொகுதியை ஏற்று ஆதரிக்கக் கேட்டுக்கொள்ளுகிறேன். இத்துறையில் என்னை ஊக்கிய மாக்மில்லன் கம்பெனியாருக்கு என் நன்றி.

ஆசிரியன்.

# பொருளடக்கம்


| பாடம் | | பக்கம் |
|---|---|---|
| 1. | காஞ்சிபுரம் | 5 |
| 2. | அறிஞர் இராமன் | 14 |
| 3. | சமயோசித புத்தி | 21 |
| 4. | உழவுத்தொழில் | 29 |
| 5. | மேட்டூர் அணை | 36 |
| 6. | தாகூரின் இளமைப்பருவம் | 42 |
| 7. | தந்தையின் அறிவுரை | 49 |
| 8. | மாமல்லபுரச் செலவு | 58 |
| 9. | பனைமரம் | 66 |
| 10. | பாரதியார் | 71 |
| 11. | பாரதியாரின் கடிதம் | 79 |
| | செய்யுள் பகுதி | 83 |
| | கதைப்பகுதி | 88 |
| | குறிப்புரை | 93 |
| | அருஞ்சொற் பொருள் | 103 |


---

*பாரதியாரின் கடிதமும் பாரதியாரின் பாடல்களும் அரசாங்கத்தின் அனுமதி பெற்று சேர்க்கப்பட்டுள்ளன. அனுமதிக்கு அரசாங்கத்திற்கு நன்றி.*

# 1. காஞ்சிபுரம்

தமிழ் நாட்டில் உள்ள பலபேரூர்களில் காஞ்சிபுரமும் ஒன்று. இது மிகப் பழங்காலந் தொட்டுப் பெருமைபெற்ற சிறந்த ஒரு நகரமாகும். இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே இந்த நகரம் சிறப்புப்பெற்றிருந்தது என்பது சீத்தலைச் சாத்தனார் என்ற புலவர் எழுதிய மணிமேகலையாலும் பிற நூல்களினாலும் நன்றாக விளங்குகின்றது. இன்றும் இந் நகர் தன் பழம் பெருமை கெடாத வகையில் சிறந்துள்ளதை அனைவரும் அறிவர்.

சோழநாட்டில் கரிகால்பெருவளத்தான் என்பவன் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஆண்டுவந்தான். அவன் தலைநகரம் அப்போது காவிரிப்பூம்பட்டினம் என்ற அழகிய கடற்கரை நகராக இருந்தது. அவன் இக் காஞ்சிபுரத்துக்கு வந்து, இங்குள்ள காமகோட்டம் என்ற காமாட்சி அம்மன் கோவிலில் காவலிருந்த சாத்தனார் என்பவரிடம் செண்டு என்னும் ஆயுதத்தைப் பெற்றதாக ஒரு பழம்பாட்டு இருக்கிறது. அவன் அக் காமகோட்டத்தைப் புதுக்கியதாகவும், அதற்காகச் சாத்தனார் செண்டு கொடுத்ததாகவும் கூறுவர்.

காஞ்சிபுரம் சிலகாலம் சோழர் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. ஆண்ட சோழருள் கரிகாலன் ஒருவன். கிள்ளிவளவன் மற்றொருவன். கிள்ளிவளவன் இக் காஞ்சிபுரத்தின் பக்கத்தில் இருந்த ஒரு சோலையில் கண்ட பீலிவளை என்னும் நாக கன்னிகையை மணந்து, இளந்திரையன் என்ற மகனைப்பெற்றெடுத்ததாக வரலாறு கூறுகின்றது.

இடைக்காலத்திலே காஞ்சிபுரம் பல்லவர் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. முதல் முதல் கருங்கற் கோயில்கள் கட்டியவர்கள் பல்லவர்கள்தாம். அவர்களும் முதலில் மலைகளைக் குடைந்தே கற்கோயிலாக்கினார்கள். எனவேதான் காஞ்சிபுரத்தை அடுத்துள்ள பல்லவபுரம், மாமண்டூர் போன்ற இடங்களில் இன்னும் அத்தகைய குகைக்கோயில்கள் காணக்கிடைக்கின்றன. பல்லவர்கள் காலத்தில் காஞ்சிபுரம் மிகவிரிந்த நிலப்பரப்பை உடையதாயிருந்தது என அறிகின்றோம். கடைச்சங்க காலத்தும் பல்லவர் காலத்தும் காஞ்சிபுரம் தமிழ் நாட்டிலேயே ஒரு தலைசிறந்த நகரமாக விளங்கிற்று என்பதில் ஐயமில்லை.

இப் பழம்பெரு நகரமாகிய காஞ்சிபுரம் இன்றும் தன் பழம் பெருமை குறையாததாய்ச் சிறப்புக்கள் பலவற்றோடு விளங்குகின்றது. இந்த நூற்றாண்டின் தொடக்கம் வரையிலே செங்கற்பட்டு மாவட்டத்தின் தலைநகராக இருந்தது காஞ்சிபுரமேயாகும். இன்னும் சென்னைக்கு அடுத்தாற் போலுள்ள பெருநகரங்களுள் காஞ்சிபுரம் சிறந்த புகழ் பெற்றதாக விளங்குகின்றது.

காஞ்சிபுரத்துக்குச் செல்லுமுன்பு ஒரு காத தூரத்துக்கு அப்பாலேயே அங்குள்ள கோயில்களின் உயர்ந்த கோபுரங்கள் நம் கண்ணுக்குப்புலப்படும். காஞ்சியின் இரண்டு கோடிகளிலும் இரண்டு பெரிய கோயில்கள் உள்ளன. கிழக்கே இருப்பது வரதராசப்பெருமாள் கோயில். மேற்கே-சற்றுவடமேற்கு மூலையில்-இருப்பது ஏகாம்பர நாதர் கோயில். இவைகளுக்கு இடையிலே எத்தனையோ பெரிய கோயில்களும் சிறிய கோயில்களும் இருக்கின்றன.

பல்லவர்கள் வாழ்ந்த காலத்தை நமக்கு இன்னும் இந்நகரின் கெடாத பல்லவசிற்பங்கள் விளக்கிக் கொண்டிருக்கின்றன. வைகுண்டப்பெருமாள் கோயிலும், கயிலாசநாதர்



*Copyright, Department of Archaeology*

வைகுண்டப் பெருமாள் கோயில்

கோயிலும், வேறு பல சிறு கோயில்களும் பல்லவர் காலத்துக் கட்டப்பட்டவை. அவற்றுள் கயிலாசநாதர் கோயில் வயல்களுக்கு நடுவே மிகச் சிறிய அளவில் தற்போது காணப்படுகிறது. வைகுண்டப்பெருமாள் கோயில் காஞ்சிபுரம் புகை வண்டி நிலையத்துக்கு அருகிலேயே அமைந்துள்ளது. இரண்டிலும் சுண்ணம்புக்காரையாலும் கருங்கல்லாலும் செய்யப்பட்ட பல்லவர்காலத்துச் சிற்பங்கள் நமக்குப் பல உண்மைகளை வெளியிடுகின்றன. கயிலாசநாதர் கோயில் அமைப்பைக் கண்ட வெளிநாட்டு மக்களும் போற்றி வியக்கின்றனர். இந்த இரண்டு கோயில்களும், இன்னும் சிலவும் இன்று இந்திய அரசாங்கப் புதைபொருள்



கயிலாச நாதர் கோயிலும் குளமும்

ஆராய்ச்சி இலாக்காவின் மேற்பார்வையில் உள்ளன. அவர்கள் அக்கோயில்களுக்குப் பழுதுண்டாகாதவாறு காவல் புரிந்து வருகின்றனர்.

காஞ்சிபுரத்தில் தற்போது பெரும்பாலும் சைவரும் வைணவருமே வாழ்கின்றனர். காஞ்சிபுரத்துக்கு இரண்டு கல் தொலைவிற்குள் சைனகாஞ்சி என்றபகுதி ஒன்று இருக்கிறது. அங்கே ஒரு பெரிய சைனக்கோயில் இருக்கிறது. அச்சிற்றூரில் சில சைனர்கள் வாழ்கின்றார்கள். பழங்காலத்தில் காஞ்சீபுரம் பௌத்த சைன சமயங்களுக்கு முக்கிய இடமாக அமைந்திருந்தது. வெளிநாட்டிலிருந்து வந்த பௌத்த சமணத்துறவிகள் இங்கு தங்கி, பல கற்றறிந்த புலவர்களோடு பலகாலம் ஆராய்ச்சி செய்ததாக வரலாறு கூறுகின்றது. கி. பி. மூன்றும் நூற்றாண்டு முதல் ஏழாம் நூற்றாண்டு வரையில் இங்கு சைனமும் பௌத்தமும் சிறந்த சமயங்களாக இருந்தன. பின் ஏழாம் நூற்றாண்டில், மகேந்திரன் என்ற பல்லவ மன்னன் காலத்தில் வாழ்ந்த அப்பர் என்னும் திருநாவுக்கரசரால் நாட்டில் சைவம் தழைத்தபோது காஞ்சிபுரமும் சைவத்துக்கு இடமளித்து இன்றுவரை நிலை கெடாது வாழ்ந்து வருகிறது. தற்போது காஞ்சிபுரத்தில் சைவரும் வைணவரும் பெரு அளவிலும், மகமதியரும் கிறிஸ்தவரும் சிறு அளவிலும், பௌத்தரும் சமணரும் மிகச்சிறு அளவிலும் வாழ்ந்து வருகின்றார்கள்.

காஞ்சிபுரம் பழங்காலத்தில் வாணிபத்துக்குப் பேர் போனது. இன்றும் அதேபோல் காஞ்சிபுரம் ஒரு முக்கிய சிறந்த வியாபார நகரமாக விளங்குகிறது. இங்கு நெய்யப்படும் நூலாலாகிய துணியும், பட்டும் நாட்டின் பல பாகங்களுக்கு அனுப்பப்படுகின்றன. இந்திய நாட்டின் வட பகுதியிலிருந்தும் பல வியாபாரிகள் வந்து இவ்வூர்ப் பட்டினை வாங்கிச் செல்லுகின்றார்கள். இங்கு ஆயிரக்கணக்கான

பட்டுத்தறிகளும் நூல்தறிகளும் உள்ளன. நெசவே இங்கு முக்கியத் தொழிலாகப் போற்றப்படுகிறது. மேலும் சுற்றுப் புரக் கிராமங்களுக்கெல்லாம், இது பெருநகராக இருப்ப தால் பண்டமாற்று செய்யும் இடமாகவும் இந்நகர் அமைந் துள்ளது. கிராமங்களில் விளையும் நெல்லையும், நவதானியங் களையும், பிறவற்றையும் மக்கள் இங்கு கொண்டுவந்து விற்றுத் தத்தமக்கு வேண்டிய பொருள்களைப் பெற்றுச் செல்லும் அன்றாடக் காட்சி ஒரு சிறந்தகாட்சியேயாகும்.

காஞ்சிபுரம் நகர அமைப்பைப்பற்றி ஒரு பழங்காலப் புலவர் அழகாகப் பாடியுள்ளார். காஞ்சிபுரம் ஒரு மயிலைப் போன்றிருந்ததாக அப்புலவர் பாட்டு அமைகின்றது. காஞ்சிபுரத்துக்கு இரண்டு பக்கங்களிலும் இரண்டு ஏரிகள் இருந்தன. அவை சிறகாக அமைந்தனவாம். பழங்காலத்துக் காஞ்சிபுரத்தைச் சுற்றியிருந்த மதிலே அம்மயிலுக்கு வயி ருக அமைந்தது. காஞ்சியைச் சுற்றியுள்ள நீண்ட சோலைகளே அம்மயிலின் அழகிய தோகையாக அமைந் தது. கிழக்கே வரதராசர்கோயில் சற்று நீண்டு வந்து அமைந்திருப்பதால் அப்பகுதி நீண்டகழுத்தோடு கூடிய மயிலின் வாயாக அமைந்தது. இவ்வாறு புலவர்தம் கற் பனை அழகிய பாட்டாக வந்தது.

‘ஏரி இரண்டும் சிறகா எயில் வயிரா
காரனைய பீலி கடிகாவா—நீர்வண்ணன்
அத்தியூர் வாயா அணிமயிலே போன்றதே
பொற்றேரான் கச்சிப்பொலிவு’

என்பதே அப்பாட்டு. இதில் பீலி என்பது மயில் தோகை. அத்தியூர் என்பது வரதராசர் கோயில் உள்ள இடம்.

காஞ்சிபுரத்தின் நகர அமைப்பு சிறந்துள்ளது. மிகப் பழங்காலத்தில் நிர்மாணிக்கப்பட்ட ஒரு நகரமானபோதி

லும், தற்காலத்தில் அமைக்கும் புது நகரங்களைக் காட்டி லும் எத்தனையோ வகையில் உயர்ந்துள்ளது, இராச வீதிகள் எனப்படும் நான்கு தெருக்களும் பிற வியாபாரத் தெருக்களும் மிக அகலமாக உள்ளன. அவை தேரோடும் தெருக்களாகும். இன்றும் ஆண்டுதோறும் வைகாசி மாதத்தில் நடைபெறும் வரதராசரின் தேரோட்டம் இலட் சக்கணக்கான மக்களால் போற்றப்படுகிறது.

பெருந்தெருக்களில் வீட்டமைப்பும் சிறந்துள்ளது. தெருவிலிருந்து வீட்டின் அடித்தரை சுமார் பத்து அடி உயர மாவது இருக்கும். மிக உயர்ந்த நிலையில் வீடுகளை அமைத்து, நீர்க்கழிவு முதலியவற்றிற்கான ஏற்பாடுகளை யெல்லாம் செய்துள்ளனர். இன்று காஞ்சிபுரம் நகராண் மைக்கழக அமைப்பின் ஆளுகைக்கு உட்பட்டுள்ளது. அதுவும் நகரத்தின் அமைப்பிலும் வளர்ச்சியிலும் கருத்துக் கொண்டுவருகின்றது.

காஞ்சிபுரத்தில் கல்வி மேலோங்கியிருந்தது. 'கல் வியே கரையிலாத காஞ்சிமாநகர்' என்றும், 'தமிழ் சேர் காஞ்சி' யென்றும் இந் நகரைப் பல பெரியோர்கள் போற்றியுள்ளார்கள். அன்றைக்கும் இன்றைக்கும் இங்கு பல புலவர் பிறந்து வாழ்ந்து காஞ்சிபுரத்தின் பெருமையைக் காப்பாற்றி வருகிறார்கள். தமிழ் வளர்த்த பல புலவர்கள் இவ்வூரில் பிறந்து வாழ்ந்துவந்த வரலாறுகளும் உள்ளன. கம்பர் காஞ்சிபுரத்தில் பிறந்தார் என்றும், ஏகம்பர் என்ற இறைவன் பெயரே திரிந்து, 'ஏ' என்ற முதல் நீங்கிக் 'கம்பர்' என்று அவர் பெயராகி வழங்கிவந்தது என்றும் கூறுவர். எப்படியும் பல புலவர்கள் இங்கு வாழ்ந்தனர் என்பது உறுதி.

இன்றும் காஞ்சிபுரம் பல உள்நாட்டு வெளிநாட்டு யாத்திரிகர்களைத் தன்னிடம் வருவிக்கும் சிறப்பினைப் பெற்

றுள்ளது. இன்று இவ்வூர் பழைமையும் புதுமையும் கலந்த பேரூராகக்காட்சியளிக்கின்றது. பல்லவர்கள் கட்டிய கலைக் கோயில்கள் ஊரின் இருபுறங்களிலும் அமைந்துள்ளன. அதே சமயத்தில் வானோங்கிய கோபுரங்களோடு கூடிய வரதராசப் பெருமாள் கோயிலையும் ஏகாம்பரநாதர் கோயிலையும் யாரும் காணாது செல்லமாட்டார்கள். நகரின் நடுவில் உள்ள காமகோட்டத்தையும் குமரகோட்டத்தையும் வருகின்றவர்கள் காணத் தவறுவதில்லை. பல்லவர்கள் அரண்மனை கட்டி வாழ்ந்த இடம் இன்று பாழடைந்த மேடாகிக் கிடந்தாலும், அதுதான் பல்லவர் மாளிகைநின்ற இடம் என்பதைக் குறிக்கப் 'பல்லவமேடு' என்னும் பெயராலேயே அது பார்ப்போர்க்குக் காட்சி யளிக்கின்றது. காஞ்சிபுரம் சென்னைக்கு அருகில் உள்ளதால் பல தற்கால வசதிகளும் இந் நகருக்கு உண்டு. நல்ல சாலைகள், புகைவண்டி நிலையம், தந்தி டெலிபோன் வசதிகள், மின்சாரம், பிற தற்கால வாழ்வின் தேவைகள் எல்லாம் நிரம்பப்பெற்றதாய், அதேவேளையில் தன் பழமையும் கெடாததாய் காஞ்சிபுரம் இன்றும் சிறந்த நகரமாக விளங்குகிறது.

## கேள்விகள்

1. காஞ்சிபுரம் பழங்காலத்தில் எவ்வாறு சிறந்திருந்தது?
2. இந் நகரில் வந்து வாழ்ந்த சோழ மன்னர்கள் யாவர்? அவர்கள் செய்தன யாவை?
3. பல்லவர் காலத்தில் காஞ்சிபுரம் எவ்வெவ்வாறு சிறப்புற்றது?
4. காஞ்சிபுரம் செல்லுமுன்பே அவ்வூரை நமக்குக் காட்டுவன யாவை?
5. காஞ்சிபுரத்தில் இன்றும் விளங்கும் பல்லவ சிற்பங்கள் யாவை?

6. காஞ்சிபுரத்தில் முற்காலத்தில் என்னென்ன சமயங்கள் சிறந்து ஓங்கியிருந்தன? இன்று அங்குள்ள சமயங்கள் யாவை?
7. காஞ்சிபுரம் ஒரு முக்கிய வியாபாரத் தலமாவதற்குக் காரணம் என்ன?
8. காஞ்சிபுரம் எவ்வெவ்வியாபாரத்துக்குப் பேர் பெற்றது?
9. காஞ்சிபுர நகர அமைப்பு எவ்வாறு சிறந்துள்ளது?
10. காஞ்சிபுரத்தில் கல்வி சிறந்திருந்தது என்பதை எப்படிக் காணலாம்?
11. காஞ்சிபுரம் பழைமையும் புதுமையும் கலந்த இடம் என்பதை விளக்குக.

## பயிற்சி

உங்கள் ஆசிரியர்மூலம் காஞ்சியில் நடக்கும் பங்குனி, வைகாசி விழாக்களை அறிந்து அவைகளைப்பற்றித் தனித்தனிக் கட்டுரைகள் வரைக.

கூடுமானல் காஞ்சிபுரம் நேரில் சென்று கைலாசநாதர் கோயில், வைகுண்டப் பெருமாள் கோயில் இரண்டையும் கண்டு ஒவ்வொன்றைப்பற்றியும் ஒவ்வொரு கட்டுரை வரைக.

காஞ்சியில் பிறந்த புலவர் ஒருவரைப் பற்றிக் கேட்டறிந்து அவரைப்பற்றி ஒரு கட்டுரை வரைக.

## இலக்கணம்

(1) பலவின் பாலுக்கு இரண்டு உதாரணம் தருக.
(2) புலவர், கோவில், மக்கள், மாளிகை—இவைகளுக்கு உள்ள பாலினை எழுது.
(3) கீழ் வரும் சொற்றொடர்களைப் பிழை நீக்கி எழுது:—

மனிதன் வந்தாள்
ஓர் பெண் வந்தது
சிறந்த நகரமாக விளங்குகின்றன.

(4) வல்லின உயிர்மெய்களையும், இடையின ஒற்றுக்களையும் எழுதுக.

(5) பெருமாள்-பெருமான்: இந்த இரண்டும் ஒரே பொருளைத் தருகின்றன. இது என்ன பெயரிட்டு அழைக்கப்படும்?

## 2. அறிஞர் இராமன்

புரசைக்குடி என்பது தஞ்சையையடுத்துள்ள ஒரு சிற்றூர். அதில் சந்திரசேகர ஐயர் என்று ஒருவர் இருந்தார். அவர் திருச்சிராப்பள்ளியில் வாழ்ந்த காலத்தில் (கி. பி. 1888-ல்) அவருக்கு ஓர் ஆண் மகவு பிறந்தது. பெற்றோர் மிகவும் மகிழ்ந்தனர். அக்குழந்தைக்கு வேங்கடராமன் என்று பெயரிட்டு மிகவும் அன்புடன் வளர்த்து வந்தனர். குழந்தையும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தது. சந்திரசேகரஐயரும் பல்கலைக் கழகத் தேர்வில் வெற்றிபெற்றார். அத்துடன் விசாகப்பட்டினத்திலுள்ள இந்துக் கல்லூரியில்



அறிஞர் இராமன்

வேலையும் பெற்றார். பௌதிகப் பேராசிரியராகப் பணி யாற்றி வந்தார்.

வேங்கடராமன் தக்க பருவத்தில் பள்ளியில் சேர்க்கப் பட்டார். ஒவ்வொரு வகுப்பிலும் முதல்வராகவே தேர்வு பெற்றார். தம் பதின்மூன்றும் வயதில் எப். ஏ. தேர்விலும் முதல்வராகத் தேர்வுபெற்றார். அதன் பின்னர் பீ. ஏ. வகுப் பில் சேர எண்ணிச் சென்னையை அடைந்தார். அக்காலத் துச் சிறப்புற்று விளங்கிய மாகாணக் கல்லூரியிற் பௌதி கம் பயிலும் பீ. ஏ. மாணவராகச் சேர்ந்தார். மிக்க இளம் வயதிலேயே பீ. ஏ. வகுப்பிற் பயிலும் இவரைக்கண்டு வியவாதார் ஒருவரும் இலர். அத்தேர்விலும் முதல் வராகவே தேறிப் பட்டம் பெற்றார். தமக்கு விருப்பமான பௌதிகத் துறையில் மேலும் அறிவு பெற விரும்பினார். அதற்காக 1904-ல் மாகாணக் கல்லூரியிலேயே எம். ஏ. வகுப்பிற் சேர்ந்தார்.

அவர் பௌதிக சம்பந்தமான பல ஆராய்ச்சிகளை மிகவும் நுட்பமாகச் செய்து கண்டார். பௌதிக சம்பந்த மாக இராலிபிரபு (Lord Rayleigh), ஹெம்ஹோல்ட்ஸ் (Helmholtz) முதலியோரியற்றியுள்ள நூல்களையெல்லாம் விரைவிற் கற்றுணர்ந்தார். இராமனது அறிவின் கூர்மை யையும், ஆராய்ச்சித் திறனையுங் கண்ட அனைவரும் அவரி டம் அன்பு கொண்டனர். மாகாணக் கல்லூரியிலுள்ள ஒவ்வொருவரும் இராமனை நன்கறிந்திருந்தனர். மிக எளி தில் ஆசிரியர்களுடைய நன்மதிப்பையும் பெற்றார். அப் போதிருந்த பௌதிகப் பேராசிரியர்களுள் ஜோன்ஸ் (Jones) என்பாரும் ஒருவர். அவரும் இராமனிடத்து நன்மதிப்பும் அன்புங் கொண்டிருந்தார்.

அப்பாராவ் என்பவர் இராமனொடு உடன்பயின்ற மாணவர். இராமனுக்கு நெருங்கிய நண்பர். ஒருநாள்

அவர் ஒலிபற்றிய ஒரு சோதனையில் ஈடுபட்டிருந்தார். நெடுநேரம் முயன்றும் எதிர்பார்த்த முடிவு காணப்பட வில்லை. பின்னர்தான் அதில் பிழை உண்டாவதைக் கண்டார். உடன் தன் பௌதிகப் பேராசிரியரான ஜோன்ஸை அடுத்துத் தாம் கண்டதையும், அப்பிழை ஏற்படாமல் சோதனை செய்யும் முறையையும் விளக்கும்படி வேண்டிக் கொண்டார். ஆனால் ஆசிரியர் எந்த விதமான மறுமொழி யுங் கூறவில்லை.

அருகிலிருந்த இராமன் இவற்றையெல்லாம் கவனித் துக்கொண்டிருந்தார். சிறிது சிந்தித்தார். அக்குறை ஏற்படுங் காரணத்தையும், அதைப் போக்கும் வழியையும் அறிந்துகொண்டார். அப்பாராவிற்கு அவற்றை விளக்க மாகக் கூறினார். அவரது சந்தேகமும் நீங்கிற்று. தான் எண்ணிய புதிய முறைப்படி ஒரு சோதனை அமைப்பை உண்டாக்கினார். அச் சோதனைமூலம் தான் கருதிய உண்மை யையும் அவர் செய்து காட்டினார்.

இராமன் தான் செய்த சோதனையையும், அதன் விளைவையும் விவரித்து ஓர் கட்டுரை எழுதினார். அதனைத் திருத்தித் தருமாறு தம் ஆசிரியர் ஜோன்ஸிடம் கொடுத் தார். மாதங்கள் மூன்றாகியும் கட்டுரை திருப்பித்தரப்பட வில்லை. ஒரு நாள் இராமன் தன் ஆசிரியரிடம் சென்றார். தம் கட்டுரையில் ஒரு பிழையிருப்பதாகவும், அதைத்திருத் தித் தருவதாகவும் கூறினார். அவரும் உடனே கட்டுரை யைத் தந்துவிட்டார்.

இராமன் அக்கட்டுரையை லண்டனிலிருந்த விஞ் ஞானப் பத்திரிகை ஒன்றின் ஆசிரியருக்கு அனுப்பி வைத்தார். அக்கட்டுரையும் அப்பத்திரிகையில் பிரசுரிக் கப்பட்டது. தன் கட்டுரை வெளியிடப்பட்ட பத்திரிகை யைக் கையில் எடுத்துக்கொண்டு இராமன் ஜோன்ஸிடம்

சென்றார். அப்பத்திரிகையைப் பார்த்த ஜோன்ஸ் மிகவும் வியப்படைந்தார். இராமனது மற்றொரு ஆராய்ச்சிக் கட்டுரையும் இங்கிலாந்திலுள்ள இயற்கை (Nature) என்னும் பத்திரிகையில் வெளிவந்தது. இவ்வாறு இராமன் படிக்கும் காலத்திலேயே ஆராய்ச்சிக் கட்டுரைகள் பல எழுதி மேனாட்டு அறிஞர்களின் பாராட்டைப் பெற்றார்.

இராமன் எம். ஏ. வகுப்பிற் பயிலும் போதே, அவரை இங்கிலாந்துக்கு அனுப்ப ஜோன்ஸ் முயன்றார். அரசாங்கமும் இதற்குப் பொருளுதவி செய்ய முன்வந்தது. எனினும் மருத்துவர் இவர் அயல்நாடு செல்லுதற்குரிய உடல் நலம் பெற்றில்லை எனக்கூறிவிட்டதால் அம்முயற்சி கைவிடப்பட்டது. எம். ஏ. தேர்வில் முதல்வராகத் தேர்வு பெற்றார். பின்னர் எழுதிய எப். ஸி. எஸ் தேர்விலும் முதல்வராகவே தேர்வு பெற்றார்.

இராமன் தன் பத்தொன்பதாவது வயதில் கல்கத்தாவில் டிப்டி அக்கௌண்டெண்டு ஜெனரலாக நியமனம் பெற்றார். இவர் அரசாங்க அலுவலில் இருந்தாலும் உள்ளம் பௌதிகத்திலேயே ஊன்றி நின்றது. கல்கத்தாவிலிருந்த 'இந்திய விஞ்ஞான வளர்ச்சிச் சங்கம்' இவரை வரவேற்றது. இவரும் அதன் உறுப்பினராகிப் பல ஆராய்ச்சிக் கட்டுரைகளை வெளியிட்டார்.

மூன்றாண்டுகளுக்குப் பின்னர் இவர் இரங்கூனுக்கு மாற்றப்பெற்றார். கொஞ்ச நாட்களில் இவர் தந்தையார் இறந்ததால் ஆறுமாத விடுமுறையில் சென்னை வந்து சேர்ந்தார். மீண்டும் நாகபுரி சென்று, அலுவலை ஒப்புக் கொண்டார். விரைவிலேயே அக்கௌண்டெண்டு ஜெனரலாகக் கல்கத்தாவிற்கு மாற்றப்பெற்றார். அங்கு ஆராய்ச்சிக் கட்டுரைகள் பல வெளியிட்டார்.

அப்போதுதான் கல்கத்தாப் பல்கலைக் கழகத்தில் "விஞ்ஞானக் கல்லூரி" தொடங்கப்பெற்றது. இவ் விஞ்ஞானக் கல்லூரி தன் தலைவனாக இராமனையே எதிர்பார்த்தது. இராமனும் அரசாங்க அலுவலை விட்டுவிட்டு அதன் தலைவரானார். இராமனது ஆராய்ச்சி யுரைகளும் பெருகலாயின. அத்துடன் மாணவர் பலர்க்கும் கற்பித்து, மாணவரின் நன்மதிப்பையும் பெற்றார்.

இராமன் 1924-ம் ஆண்டு மேல் நாட்டிற்குப் புறப்பட்டார். இங்கிலாந்து, கனடா, அமெரிக்க ஐக்கிய நாடுகள், நார்வே, ஸ்வீடன், டென்மார்க்கு, ஜெர்மனி, பிரான்சு முதலிய பல நாடுகளுக்கும் சென்றார். அங்கங்கே நடந்த விஞ்ஞான மாநாடுகளிலெல்லாம் கலந்துகொண்டு சொற்பொழிவாற்றிப் பேரும் புகழும் பெற்றார். 1929-ம் ஆண்டில் 'சர்' பட்டம் அளிக்கப்பெற்றார். அடுத்த ஆண்டில் 'இராமன் நிகழ்ச்சி' என்னும் புதிய ஆராய்ச்சியைக் கண்டுபிடித்ததற்காக "நோபெல் பரிசு"ம் வழங்கப்பட்டார்.

கடல்நீர் நீல நிறமாயிருப்பதை எல்லோரும் அறிவோம். ஆனால் அந்நிறம் எதனால் உண்டாகிறதென்பதைப் பலரும் அறியமாட்டோம். நீருக்கு நிறமில்லைதான் ; ஆனால் சூரிய ஒளி நீரிற் பாயும்போது நீர் ஒரு குறித்த நிறத்தை அடைகிறது. இதற்குக் காரணம், நீரிலுள்ள கூட்டணுக்கள் சூரிய ஒளியைச் சிதறச்செய்து, அவ்வொளியிலுள்ள ஒரு நிறத்தைமட்டும் ஏற்றுக்கொள்வதேயாகும்.

இந்த ஒளிச் சிதறலைப்பற்றி இராமன் மேலும் ஆராய்ச்சி செய்தார். குறித்த பண்புகளையுடைய ஒரே வகைக் கிரணங்களைப் 'பென்ஸீன்' என்னுந் திராவகத்துள் செலுத்தினார். திராவகத்தினின்று வெளிவந்த கிரணங்களைச் சோதித்தார். அவை மாறுபாடடைந்து காணப்பட்டன. அத்திரவத்திலுள்ள கூட்டணுக்களே, அக்கிரணங்

களைச் சிதறடித்து அவற்றின் பண்புகளையும் மாற்றிவிட்டன. ஆதலால் இதுவும் ஒளிச் சிதறலே எனக் கண்டறிந்தார். இதுவே 'இராமன் நிகழ்ச்சி' எனப்படும். இதைக் கண்டுபிடித்ததற்காகத்தான் இராமனுக்கு 'நோபெல் பரிசு' வழங்கப்பட்டது.

ஸ்வீடன் தேசத்தில் இமானுவல் நோபெல் என்னும் ஒருவர் இருந்தார். அவர் புதிய முறை வெடிமருந்தைக் கண்டுபிடித்து அதனால் ரஷிய அரசாங்கத்தாரிடம் செல்வமும் செல்வாக்கும் பெற்றிருந்தவர். அவருடைய பிள்ளை ஆல்பிரடு நோபெல் என்பவரும், உலக முழுவதும் சுற்றி வெடிமருந்து சம்பந்தமான பல ஆராய்ச்சிகளைச் செய்து வந்தார். அதில் வெற்றிபெற்றுப் பல வெடிமருந்துத் தொழிற்சாலைகளை நிறுவிக் கோடிகோடியாகப் பொருள் திரட்டினார். தான் இறக்கும்போது, தன் சொத்தில் ஐந்தில் நான்கு பங்கைத் தனியாக்கி ஒரு பரிசுத்திட்டத்தை ஏற்படுத்தினார். அதிலிருந்து வரும் வருவாயைக் கொண்டு ஆண்டுதோறும் உலகிலேயே இலக்கியம், பௌதிகம், இரசாயனம், மருத்துவம், சமாதானம் என்ற துறைகளில் உழைத்த சிறந்தவருக்குப் பரிசு கொடுத்தல் வேண்டும் எனத் திட்டஞ் செய்தார். அதுவே நோபெல் பரிசு என்ற பெயரால் வழங்குகிறது. அத்திட்டத்தில் பௌதிகத்திற்காகப் பரிசு பெற்றவர்தான் இராமன்.

இராமன் நிகழ்ச்சியைப் பற்றிப் பல நூற்றுக்கணக்கான ஆராய்ச்சி யுரைகள் வெளிவந்துள்ளன. இவர், மேலும் வாயுப் பொருள்களின் காந்த சக்தி, இசைக்கருவிகளின் ஒலித் தன்மை, செவிக்கெட்டாத ஒலி விளக்கம் முதலிய பல துறைகளிலும் ஆராய்ச்சி செய்து, பல அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகளை வெளியிட்டு, நம் நாட்டிற்கேயன்றி உலகிற்கே பெருந் தொண்டியற்றியுள்ளார்.

இராமன் 1933-ம் ஆண்டில் பெங்களூர் ஆராய்ச்சிக் கழகத்தின் தலைவரானார். அன்று முதல் அங்கேயே தங்கித் தம் ஆராய்ச்சிகளைச் செய்து வருகின்றார். பௌதிக ஆராய்ச்சியிலீடுபட்டுள்ள மாணவர் பலர்க்குக் கற்பித்தும், அவரை ஊக்குவித்தும் உதவி செய்து வருகிறார். இவரால் விஞ்ஞானத்துறையில் இன்னும் பல புதுப்புது விளைவுகள் கண்டுபிடிக்கப்படலாம். அவ்வகையில் இவரது ஆராய்ச்சித் தொண்டு சிறப்படைந்து, அவ்வாராய்ச்சியின் மூலம் இந் நாட்டுக்கு மட்டுமன்றி உலகுக்கே பல நன்மைகள் விளையும் என்பது உறுதி.

## கேள்விகள்

1. இராமன் பயின்ற கல்லூரிகள் யாவை ?
2. அப்பாராவ் யார் ? அவருக்க ஏற்பட்ட சந்தேகம் யாது ?
3. அப்பாராவின் ஐயம் யாரால் நீங்கியது ?
4. இராமன் ஜோன்ஸிடம் கொடுத்த கட்டுரையின் முடிவென்ன ?
5. இராமன் பார்த்த அரசாங்க அலுவல்கள் யாவை ?
6. இராமன் அரசாங்க அலுவலிலிருந்து விலகியதேன் ?
7. இராமன் எந்தெந்த நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்தார் ?
8. இராமன் பெற்ற உயர்ந்த பட்டமும், பரிசும் யாவை ?
9. நோபெல் பரிசை ஏற்படுத்தியவரின் வரலாறென்ன ?

## பயிற்சி

1. இராமன் நிகழ்ச்சி பற்றி ஒரு கட்டுரை எழுதுக.
2. இராமன் ஜோன்ஸிடம் கொடுத்த கட்டுரையின் வரலாற்றை இராமன் சொல்லுவது போல் எழுதுக.

3. 'இராமனும் அரசாங்க அலுவலும்' என்பது பற்றி ஒரு பக்கம் எழுதுக.
4. இந்தியாவிலுள்ள நோபெல் பரிசுபெற்றவர்கள் யாவர் என்பதை அறிந்து எழுதுக,

## இலக்கணம்

(1) கீழே கொடுத்த சொற்களுக்கு உயர்வுப் பெயரைத் தருக :—

ஒருவன்
அவன்
அவள்.

(2) வேற்றுமை யுருபைச் சேர்த்து எழுதுக :—

கட்டுரை வெளியிட்டு
வீடு சென்றுன்
பதவி அமர்ந்தார்.

(3) பன்மை தருக :—

நிறம், தலைவன், அது, நான்,

(4) சுட்டு என்றுல் என்ன? அதற்கு இரண்டு உதாரணம் தருக.

# 3. சமயோசித புத்தி

இந்தியத் துணைக் கண்டத்தின் வடவெல்லையாயமைந் துள்ளது இமயமலை. இம்மலையினின்றும் பல ஆறுகள் உற்பத்தியாகின்றன. அவற்றுள் கங்கையாறும் ஒன்றுகும். கங்கை என்றும் வற்றுப் பெருநதியாகும். ஆதலின் இதனை வட இந்தியப் புண்ணிய நதி எனப்போற்றுவர். அக்கங்கை யாற்றின் கரையில் பெரியதொரு வெண்ணுவல் மரம் இருந்தது. சுமுகன் என்னும் வானரம் அம்மரத்தைத் தன்னிருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்திருந்தது.

ஒருநாள் மந்தபுத்தி என்னும் முதலை அங்கு வந்தது. சுமுகன் அதனை வரவேற்று முகமன் உரைத்தது. விருந்தாக வந்த மந்தபுத்திக்குச் சில நாவற்கனிகளையுங் கொடுத்தது; மந்தபுத்தியும் அச் சுவைமிக்க கனிகளைத் தின்று மிகவும் மகிழ்ச்சியடைந்தது. சுமுகனிடம் நெடுநேரம் உரையாடியிருந்து, பின்னர் விடை பெற்றுச் சென்றது.

அது முதல் மந்தபுத்தி நாள்தோறும் அங்கு வரலாயிற்று. குரங்கும், முதலைக்கு வேண்டிய நாவற் கனிகளைக் கொடுத்து, அது உண்டபின், அதனுடன் அளவளாவி மகிழ்ந்திருந்தது. இவ்வாருக இருவர் நட்பும், நாளும் வளர்ந்து வரலாயிற்று.

வழக்கம்போல் ஒருநாள் முதலை வானரத்தை நாடி வந்தது. வானரம் அன்று அதிகமாகக் கனிந்த கனிகளை அம்முதலைக்குக் கொடுத்தது. கரா அக்கனிகளை வேண்டுமட்டும் புசித்தது. மிகுந்திருந்த கனிகளைத் தன்மனைவி துர்ப்புத்திக்குக் கொடுக்க நினைத்தது. ஆதலின் சுமுகனிடம் விரைவில் விடைபெற்றுத் தன்னிருப்பிடம் சேர்ந்து, கனிகளைத் தன் மனைவியிடம் கொடுத்தது.

என்றுமில்லாது அன்று பெற்ற இனிய நாவற்கனிகளைத் துர்ப்புத்தி மிகவும் ஆவலுடன் உண்டது. அக்கனிகளின் இனிய சுவையைக் கண்டு மிகமிகப் பூரித்துப் போயிற்று. அது தன் கணவனைப் பார்த்து வினவியது: " இக்கனிகள் அமுதத்தினும் சிறந்த சுவையுடையனவாயுள்ளனவே. இவற்றை எங்குப் பெற்றீர் ? " என்று

மந்தபுத்தி :—சுமுகன் என்னும் என் நண்பன் தந்தவை இக்கனிகள். நான் அங்கு செல்லும் போதெல்லாம் கனிகள் தருவான். அங்கேயே உண்டு வந்து விடுவேன். இன்று நான் உண்டு எஞ்சியிருந்ததை உனக்குக் கொண்டு வந்தேன்.

துர்ப்புத்தி:—இந்த நறுங்கனிகளை நாடோறும் நீர் உண்ணுகின்றீரா? அப்படியானால் எனக்கேன் கொண்டு வருவதில்லை?

மந்தபுத்தி:—கனிகள் மிக்க சுவையாக இருந்தமையால் என்னையும் அறியாமலே நான் அனைத்தையும் தின்று விடுவேன். நினைவிருந்தால் உனக்கும் கொண்டுவராமலிருப்பேனா?

துர்ப்புத்தி:—நான் இதனை நம்பமாட்டேன், உங்கள்சுயநலத் தன்மையே இவ்வாறு செய்யத் தூண்டியிருக்கின்றது.

மந்தபுத்தி:—இல்லை, நான் அவ்வாறு சுயநலத்தால் செய்யவில்லை; உறுதியாகக் கூறுகிறேன்.

துர்ப்புத்தி:—[தனக்குள்ளே—இவ்வினிய கனிகளை நாடோறும் உண்டவர் நமக்குக் கொடாமல் ஏமாற்றி வந்திருக்கிறார். இனி இவருக்கும் இக்கனிகள் கிடைக்காத வழிச் செய்யவேண்டும். ஆம்! சுமுகனையே கொன்று தான் நம் வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ளவேண்டும்].

அது போகட்டும். இத்தகைய தீங்கனிகளைக் கொடுத்த உம் நண்பன் மிகவும் நல்லவனென்றே தெரிகின்றது. அவரை எப்படியும் இங்கே அழைத்து வரவேண்டுகிறேன்.

மந்தபுத்தி:— ஏன் இங்கு அழைத்து வரச் சொல்லுகின்றாய்? ஏதாவது விருந்திற்கு ஏற்பாடு செய்யப் போகின்றாயா?

துர்ப்புத்தி:—ஆம்! ஆம்! அவருக்கு முதலில் விருந்து வைத்துப் பின்னர் எனக்கு விருந்தாக்கிக் கொள்ளப் போகின்றேன்!

மந்தபுத்தி:—எனக்கு நீ கூறுவது ஒன்றும் விளங்கவில்லையே! கொஞ்சம் தெளிவாகக் கூறேன்!

துர்ப்புத்தி:—விளங்காதுதான்! இத்தகைய இனிய கனிகளை நாள்தோறும் உண்பவனது ஈரல் தேவாமுதத்தி

னும் சிறந்திருக்கும். ஆதலால் அதனை உண்ணவிரும்பு கிறேன்.

மந்தபுத்தி:—இது என்ன விந்தையாயிருக்கிறது! அவன் ஈரலை உண்ணுவதால் வரும் நன்மையென்ன?

துர்ப்புத்தி:—அவ்வீரல் அமுதத்தினுஞ் சிறந்த தென்று நான் கூறவில்லையா? நான் அதனை உண்டால் மூப்பு சாக்காடு இல்லாமல் என்றென்றும் உம்மோடு சுகித் திருப்பேன்.

மந்தபுத்தி:—எனக்கு உயிர்க்குயிர்ாயிருக்கிற நண் பனுக்கு ஏன் இவ்வாறு தீங்கு நினைக்கிறாய்?

துர்ப்புத்தி:—நான் வேண்டுமென்ற உண்மையான விருப்பம் இருந்தால் கொண்டு வந்து கொடும். இன்றேல் என்னை மறந்து விடும்.

மந்தபுத்தி:—வேண்டாம் இந்தப் பிடிவாதம். சகோ தரனிலும் நண்பன் மேலானவன் என்பது வழக்கு. அருள் கூர்ந்து அவனுக்குத் தீங்கு நினைப்பதை விட்டு விடு.

துர்ப்புத்தி:—போதும் அறிவுரை! என்னிடம் அன் பில்லை; எல்லாம் மேலுக்கு என்பதனை இப்போதுதான் அறிந்தேன். உம் அன்பு வேறிடத்துள்ளதால்தான் என் வார்த்தையை மறுத்துப் பேசுகிறீர். இனி நான் உயிர் தரியேன்!

மந்தபுத்தி:—அவ்வாறெல்லாம் எண்ணாதே! அவனே என் உயிர்க்குயிரான நண்பன். நீயோ பிடித்ததை விடா மலிருக்கிறாய். ஆதலால் நான் இருதலைக் கொள்ளி எறும் பானேன். எனினும் உன்விருப்பப்படி முயன்று பார்க்கிறேன்.

சிறிது நேரங் கழித்து மந்தபுத்தி சுமுகனிடஞ் சென் றது. மந்தபுத்தியைக் கண்ட சுமுகன் எப்போதும் போல் வரவேற்றது. மந்தபுத்தி சிறிது நேரம் பேசியிருந்த பின் சுமுகனைத் தன்வீட்டிற்கு விருந்துண்ண அழைத்தது.



குரங்கும் முதலேயும்

தண்ணீரில் வருதல் தன்னுலியலாதெனக் குரங்கு கூறியது. முதலே தன் முதுகில் ஏற்றிக்கொண்டு செல்வதாகக் கூறவே குரங்கும் ஒத்துக் கொண்டது. முதலே கரையருகில் வந்ததும் குரங்கு அதன் முதுகின்மேல் ஏறிக்கொள்ள முதலே நீரில் நீந்திச் சென்றது.

குரங்கு முதலேயைப் பார்த்துத் தனக்குப் பயமாயிருப்பதால் மெல்லப் போகும்படிக் கூறியது. முதலேயோ, குரங்கு தன் கையிலகப்பட்டதென்ற எண்ணத்தால் குரங்கை நோக்கி, "நண்பா! உன் இஷ்டதேவதையை நினைத்து வணங்கு. இன்னும் கொஞ்ச நேரத்தில் இறக்கப்

போகின்ருய்'' என்றது. ''ஏன் அவ்வாறு கூறுகிருய்?'' என்று குரங்கு கேட்டது. ''என் மனைவி உன் ஈரலை விரும்பியதால்'' என்று முதலை பதிலிறுத்தது. அது கேட்ட குரங்கு கைகொட்டி நகைத்து, ''இதனை முன்னரே கூறியிருக்கக் கூடாதா? ஈரலை மரத்திலல்லவோ மறைத்து வைத்திருக்கிறேன். அப்போதே கொடுத்திருப்பேனே! ஈரல் வேண்டுமாஞல் மறுபடியும் மரத்தடிக்குப் போ. நான் எடுத்து வருகிறேன்'' என்றது குரங்கு.

மந்தபுத்தி அது கேட்டுத் திரும்பி விரைந்து நாவல் மரத்தடியை யடைந்தது. சுமுகனும் ''இன்று காலன் கையினின்றும் தப்பி வந்தோம்'' என்று எண்ணி மகிழ்ந்து விரைந்தோடி மரத்தின்மேல் ஏறிக் கொண்டது. சற்று நேரம் காத்திருந்த முதலை சொல்லிற்று:—

''நண்பா! ஈரலை விரைவிலே கொடு. உன் மதனியிடம் கொடுத்து விரைவில் வருவேன்.''

சுமுகன்:—மூடா! எப்போதாவது ஈரல் உடலை விட்டுத் தனியே எடுக்கப்படுவதுண்டா? உனக்கு உதவிய என்னையே கொல்ல நினைத்தாயே! துஷ்டா! இவ்விடம் நில்லாதே, விரைந்தோடிப்போ!

முதலை:—(சற்று நிதானித்து) நண்பா! நான் விளையாட்டாகக் கூறியதை உண்மையென்று எண்ணிப் பயந்து போஞயே! பாவம்! ஈரல் உடலை விட்டு எடுக்கமுடியாததென்பது சிறு பிள்ளைக்குக் கூடத் தெரியாதா? உன் மதனி உனக்காக வழிமேல் விழி வைத்துக் காத்திருப்பாள்; விரைவில் வா, போகலாம்.

சுமுகன்:—செய்ந் நன்றி கொன்றவனே! இனி உன் பேச்சை நம்பேன். உன் பேச்சில் நம்பிக்கை வருவித்து என்னைக் கொல்லப் பார்க்கின்ருய். பசித்தவன் பேச்சில் எப்போதும் நம்பிக்கை வைத்தலாகாது. ஓடிப்போ.

நெடுநேரம் இருவருக்கும் வாக்குவாதம் நடை பெற்றுக் கொண்டிருந்தது. அப்போது வேறொரு முதலை அவ்விடம் வந்து, துர்ப்புத்தி இறந்ததாகக் கூறியது. முதலை கண்ணீரும் கம்பலையுமாய்த் தன்னிருப்பிடம் விரைந்தோடியது. அதன் இருப்பிடத்தில் வேறு ஒரு முதலை இருப்பதைக் கண்டு திகைப்படைந்தது. நண்பனே ஆபத்தில் உதவுபவன் என்றெண்ணிச் சுமுகனிடம் சென்றது.

சுமுகன், முதலைக்குப் பலவாறாக ஆறுதல் கூறியதுடன், "உன்னுடன் ஒத்த முதலையாகிய பகைவனைப் போரில் வென்று துரத்திவிடு. அதுவே ஆண்மையும் புகழுமாகும். மேலும் எவனும் தன்னிடத்திலிருப்பதுவே எல்லா வகையாலும் மேலாகும். விரைந்து சென்று வெற்றி பெறுவாயாக!" என்று கூறியது. உணர்ச்சியூட்டப் பெற்ற மந்தபுத்தி விரைந்து சென்று, பகைவனுடன் பொருது விரட்டித் தன்னிருப்பிடத்தைக் கைக்கொண்டு அங்கேயே வாழ்ந்திருந்தது.

## கேள்விகள்

1. சுமுகன் எங்கு வசித்திருந்தது ?
2. மந்தபுத்தி என்பது யார் ? அதற்கும் சுமுகனுக்கும் நட்புண்டான தெவ்வாறு ?
3. நாவற்கனியுண்ட துர்ப்புத்தி கூறியதென்ன ?
4. நண்பனைக் கொல்லக்கூடாதென்பதற்கு மந்தபுத்தி கூறிய காரணங்களெவை ?
5. சுமுகனைக் கொல்ல மந்தபுத்தி செய்த சூழ்ச்சியாது ?
6. அச் சூழ்ச்சி பலிக்காமற் போன தேன் ?
7. சுமுகன் எவ்வாறு தன்னைக் காப்பாற்றிக் கொண்டது?
8. இப்பாடத்தால் நாமறியும் படிப்பினைகள் யாவை ?

## பயிற்சி

1. மந்தபுத்தி, துர்ப்புத்தியின் கெட்ட எண்ணத்தை மாற்றப் புத்திமதி கூறியது போல் ஒரு பக்கம் எழுதுக.
2. காலன் வாயிலிருந்து மீண்டதை சுமுகனே சொல்லுவது போல் எழுதுக.
3. இப்பாடத்திலுள்ள கதையைச் சுருக்கி எழுதுக.
4. இப்பாடத்தின் தலைப்பு எவ்வாறு பொருந்தும் என்பதை விளக்குக.

## இலக்கணம்

(1) சேர்த்து எழுதுக :—

வெண்மை + நாவல்
நாள் + தோறும்
விருப்பம் + படி
பதில் + இறுத்தது

(2) பெயர் எத்தனை வகைப்படும்? அதில் காரணப் பெயருக்கு இரண்டு உதாரணம் தருக.

(3) ஒருவனைக் கூப்பிடுவதற்கு என்ன பெயர்? அது எந்த வேற்றுமையின் பாற்படும்?

(4) கீழ்வரும் சொற்களை முற்றுவிக்க :—

உண்ண
சுமுகனிடம்
ஓடி
நீந்தி.

(5) ஒருமைச் சொல் தருக :—

நம்மை, கேள்விகள், வானரங்கள், சென்றனர்.

# 4. உழவுத் தொழில்

'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வர்' என்பது திருக்குறள். உலகில் எத்தனையோ தொழில்கள் உள்ளன. அவற்றுளெல்லாம் தலைசிறந்தது உழவுத் தொழில் என்று சிறப்பிக்கவே திருவள்ளுவர் அவ்வாறு கூறினர். பிற தொழில்கள் செய்வாருக்கும் மற்றவர்களுக்கும் தேவையான உணவுப்பொருளை இவ்வுழவுத்தொழில் செய்பவர் உண்டாக்கித் தருவதனாலேயே அத்தொழில் சிறந்ததாகின்றது. நிலத்தை நன்கு உழுது, நீர்ப்பாய்ச்சி, எருவிட்டு, களைகட்டி நல்ல பயிரைப் பயிரிடுபவன் உழவன் ஆவன். அவன் என்றும் ஓய்ந்து இருக்க மாட்டான்.

தமிழ் நாட்டில் மிகப் பழங்காலந் தொட்டே இவ்வுழவுத் தொழில் சிறந்துவந்துள்ளது. இந்தியநாட்டின் பெரும் பகுதிகளிலும் இவ்வுழவு நல்ல முறையில் நடைபெற்று வருகின்றது. தமிழ் நாட்டில் உழவினால் உண்டாக்கும் முக்கிய விளைபொருள் நெல். வடநாட்டில் விளையும் முக்கியப்பொருள் கோதுமை. மற்றும் சோளம், கேழ்வரகு, நிலக்கடலை போன்ற உணவுப் பொருள்களும் பிற நவதானிய வகைகளும் இவ்வுழவுத் தொழிலாலேயே உண்டாக்கப்படுகின்றன. இவ்வுழவன் இல்லாவிட்டால் உலகமே இல்லை என்று சொல்லிவிடலாம். ஏன் ? அவனே எல்லோரும் வாழ்வதற்கு வேண்டியதாகிய உணவினைப் பயிரிட்டுத் தருதலாலே அது உண்மையாகும்.

இந்திய நாட்டில் மட்டுமல்லாமல் உலகின் எல்லாப் பாகங்கிளிலுமே இவ் வுழவுத் தொழில் நடைபெறுகின்றது. உலக மக்களது உணவின் தேவையை எப்படியும் உண்

டாக்கித் தரத்தானே வேண்டும். எனவே உழவு இல்லாத நாடு தன் உணவுக்குக் கட்டாயம் பிற நாடுகளை எதிர் பார்க்க வேண்டியதுதான். இந்தியநாடு சுதந்திரம் பெற்ற பின் பல நீர்ப்பாசன வசதிகளைச் செய்துகொண்டு தனக்கு வேண்டிய உணவுப் பொருள்களைத் தானே உற்பத்தியாக் கிக்கொள்ளும் வகையில் முயன்று பாடுபட்டு வருகின்றது.

இவ் வுழவுத் தொழில் நாடுதோறும் பலவகையில் நடைபெறுகின்றது. நம் தமிழ் நாட்டில் அது நடைபெறும் விதத்தைக் காணலாம். நம் நாட்டில் இரண்டு பருவக் காற்றுக்கள் மழையைக் கொண்டுவருகின்றன. ஆடி மாதத்திலே வீசும் தென்மேற்குப் பருவக்காற்று பெரு மழையைக் கொண்டுவருகின்றது. அம் மழையின் பெரும் பகுதி மேற்குக் கடற்கரைக்கும் மேற்குத்தொடர்ச்சி மலைக்கும் இடையிலே உள்ள மலையாள நாட்டிலேயே பெய்கின்றது. நம் தமிழ் நாட்டில் அவ்வளவாகப் பெய்வ தில்லை. என்றாலும் உழவர்கள் தம் உழவுத் தொழிலைத் தொடங்கும் அளவுக்குப் பெய்யும். எனவே உழவு வேலை ஆனி ஆடி மாதங்களில் (ஜூன், ஜூலை) இங்கு தொடங்கப் பெறும்.

வரண்டு கிடக்கின்ற வயல்வெளிகளில் நீரைப்பாய்ச்சி உழுவார்கள். தமிழ் நாட்டாரது உழவுக்கு மாடுகள் பெரி தும் உதவுகின்றன. மாடுகள் பூட்டிய கலப்பைகளே உழவுக் குப் பயன்படுகின்றன. நன்றாக உழுது நிலத்தை விதைக் கப் பக்குவப் படுத்துவார்கள் உழவர்கள். பின்னர் முன் ஆண்டில் சேர்த்துவைத்த நல்ல விதைகளைத் தெளிப்பார் கள். சிலர் முன் நாற்றுவிட்டுச் சிறிதுகாலம் கழித்து அந் நாற்றுக்களை எடுத்து நடுவதும் உண்டு. பெரும்பாலும் நீர்நிறைந்த இடங்களில்தான் இவ்வாறு நாற்று நடும் வழக்கம் உண்டு.



பெண்கள் நாற்று நடுதல்

'ஏரினும் நன்றுல் எருவிடுதல்' என்பது திருக்குறள். எனவே எவ்வளவு நல்ல முறையில் ஏர் உழுகிறார்களோ அதற்கு அதிகமாக எரு இடுவதைக் கவனிக்கவேண்டும். எரு என்பது பயிர் வளர்வதற்குத் தேவையான உயிர்ச்சத்து. அச்சத்து சாதாரணமாகக் கழிபொருள்களிலும், மாட்டுச் சாணத்திலும், பசும் தழைகளிலும் அதிகமாக உள்ளது. எனவே உழவர்கள் அவைகளைச் சேர்த்துவைத்துத் தேவை யான காலங்களில் பயிர்களுக்கு இட்டு அதை வளமாக்கு வார்கள்.

நெல்லுக்குப் பாடுபடும் அதே சமயத்தில் உழவர்களை அறியாமல் புல்லும் கூடவே முளைப்பது உண்டு. அத்

தகைய புல் பூண்டுகளைக் களைந்து அப்புறப்படுத்துவதே களை எடுத்தல் எனப்படும். இவ்வாறு எருவிட்டுக் களையெடுத்து நீரையும் ஒழுங்காகப் பாய்ச்சிவந்தால் நான்கு அல்லது ஐந்து மாதங்களில் நெற்பயிர் கதிர்விட்டு முற்றி அறுவடைக் குப் பக்குவமாகும். பின் உழவர்கள் அப்பயிர்களை அறுத் துக் கொண்டுவந்து நெல்லை வேருகவும் தாளை வேருகவும் பிரிப்பார்கள். நெல்லை அதிலிருக்கும் பதர் முதலியவைகளைப் போக்கி நல்லதாக்கி, உழவர்கள் தங்கள் களஞ்சியங்களில் சேமித்து வைப்பார்கள். தாளை வைக்கோலாக்கி மாட்டு உணவுக்காகப் போரிட்டுத் தேவையானபோது பயன்படுத் திக் கொள்வார்கள்.

ஆடி மாதத்தில் தொடங்கிய உழவுத் தொழில் இவ் வாறு ஐந்தாறு மாதங்கள் இடைவிடாது உழைத்தபின் பயனைக் கொடுக்கும். சில நெற்பயிர்கள் குறுகிய காலத் திலும் சில நீண்டகாலத்திலும் பயன் தருவன. மூன்று அல்லது நான்கு மாதங்களில் பயிராகிப் பயன்தரும் நெல் வகையும் உண்டு. ஆடியில் இட்ட விதை கார்த்திகையில் அறுவடைக்குத் தயாராகும். அக்கார்த்திகை மாதத்தில் வடகிழக்குப் பருவகாற்று வீசி மழை பெய்யும். மேகம் எனப்படும் கார் சூழ்ந்து மழை பொழியும் காலமாதலால் அக்காலத்தைத் தமிழர் கார்காலம் என்று அழைத்தனர். அக்காலத்தில் அறுவடையாகும் பயிரையும் அதே 'கார்' என்ற பெயராலேயே அழைத்தனர். எனவே உழவர்களுக்கு முதலாவதாகக் கிடைக்கும் நெல் கார் நெல்லாகும்.

கார்த்திகை தொடங்கி தை அல்லது மாசி மாதம் வரையில் தமிழ் நாட்டில் அறுவடைக்காலம்தான். அறு வடையில் பெற்ற நெல்லைத் தனக்கு வேண்டிய அளவு வைத்துக்கொண்டு, மிகுதியை விற்று உழவன் தனது பிற தேவைகளைத் தேடிக்கொள்வான். நல்ல நீர்வளம் நிறைந்த

இடங்களில் இரண்டாவது முறையும் பயிரிடுவது உண்டு. மார்கழி தையில் தொடங்கி, சித்திரை வைகாசி வரையில் அந்த இரண்டாவது உழவு நடைபெறும். சித்திரையில் அவன் உழைத்த அந்த உழைப்பின் பயனை வைத்துக் கொண்டு உற்றாரையும் மற்றவரையும் அழைத்து உடன் கலந்து இளவேனிற் காலத்தில் விழாக்கள் கொண்டாடு வான். எனவேதான் தமிழ் நாட்டில் இளவேனிற் காலமாகிய பங்குனி, சித்திரை மாதங்களில் விழாக்கள் அதிகமாக உள் ளன. விழாக்கள்மட்டுமன்றி உழவர் வீட்டுக்கலியாணங் களும் பெரும்பாலும் அம்மாதங்களில்தான் நடைபெறும்.

தற்காலத்தில் உழவுத் தொழில் பலவகையில் முன் னேற்றம் பெற்றுவருகிறது. இவ்வுழவுத் தொழிலுக்கு விஞ்ஞானமும் உதவுகிறது. பெரு நிலப்பரப்புடையவர்க ளெல்லாம் 'டிராக்டர்' என்ற புது இயந்திரம் கொண்டு வயல் களை விரைவில் உழுகிறார்கள். நீர் இறைக்க இயந்திரங்களும், மின்சாரமும் பயன்படுகின்றன. நாற்று நடும் முறையில் புதிய ஜப்பான் முறையென ஒன்றைக் கையாள அரசாங் கத்தார் முயலுகின்றனர். அங்கங்கே விவசாயமாதிரிப் பண்ணைகளை அமைத்துப் பலவகைப் பயிர்களை உண் டாக்கும் முறைகளை அரசாங்கத்தார் மக்களுக்குக் கற்பித்து வருகின்றனர். நல்ல விளைவினை உண்டாக்கி யார் அதிக உணவுப்பொருளைப் பயிரிடுகிறார்களோ அவர்களுக்கு அரசாங்கத்தார் பரிசும் அளிக்கிறார்கள். புதுப்புது நீர்ப் பாசன வசதிகளுக்கேற்ற வகையில் பெரிய அணைக்கட்டு களும் சிறிய அணைக்கட்டுகளும் கட்டிக்கொண்டு வரு கிறார்கள். இன்னும் இரண்டொரு ஆண்டுகளில் நாடு தன்னிறைவுகொள்ளும் வகையில் உணவுப்பொருள் உற் பத்தியை அரசாங்கம் பெருக்கிவருகிறது.

3



'டிராக்டர்' என்னும் இயந்திரம்

இவ்வுழவுத் தொழிலைப்பற்றிப் பாடாத புலவர் இல்லை. தொல்காப்பியம் என்று கூறப்படும் மிகப் பழங் காலத்திய இலக்கண நூல் தொடங்கி, இன்று வரும் புது இலக்கிய நூல்கள் வரையில் இவ்வுழவைப் பற்றிப் பேசு கின்றன. இராமாயணம் பாடிய கம்பர் இவ்வுழவுத் தொழி லைச் சிறப்பித்து 'ஏர் எழுபது' என்ற ஒரு நூல் எழுதி யிருக்கின்றார். திருக்குறளில் இவ்வுழவைப்பற்றி ஒரு அதி காரமே இருக்கின்றது. இவ்வாறு எல்லோராலும் போற்றப் படும் இவ்வுழவு நன்றாக நடந்தால்தான் நாட்டுமக்கள் பசியின்றிச் சுகமாக வாழமுடியும். எனவே ஒவ்வொரு

நாடும் இத்தொழில் வளர்ச்சியில் கருத்தைச் செலுத்தி அதை வளர்க்கும் வகையில் முயல வேண்டும்.

## கேள்விகள்

1. 'உழுதுண்டுவாழ்வாரே வாழ்வர்' என்று திருவள்ளுவர் ஏன் சொன்னார்?
2. இந்திய நாட்டில் விளையும் முக்கிய விளைபொருள்கள் யாவை?
3. சுதந்திரமாகவாழ ஒவ்வொரு நாடும் என்ன செய்ய வேண்டும்?
4. தமிழ்நாட்டில் உழவுத் தொழிலுக்குச் சாதகமாயிருப்பன யாவை?
5. உழவு வேலை ஆண்டுதோறும் எக்காலத்தில் ஆரம்பமாகும்? ஏன்?
6. உழவுத் தொழிலை முறைப்படி எவ்வாறு செய்ய வேண்டும்?
7. எருவிடுதல் என்றால் என்ன? அதன் அவசியம் யாது?
8. களை எடுத்தல் என்றால் என்ன?
9. உழவின் பயன் எந்த மாதங்களில் கைகூடும்?
10. 'கார்' நெல் எம்மாதத்தில் அறுவடையாகும்? அதற்கு அப்பெயர் எவ்வாறு வந்தது?
11. தற்காலத்தில் உழவுத் தொழில் எவ்வாறு வளர்ச்சி பெற்றுள்ளது?
12. உழவுத் தொழிலுக்கு அரசாங்கம் செய்யும் உதவி என்ன?
13. உழவுத் தொழிலின் சிறப்பு யாது?

## பயிற்சி

1. கிராமங்களில் பயிர் வளரும் முறையை நேரில்கண்டு ஒரு கட்டுரை வரைக.

2. உழவர் கொண்டாடும் ஒரு விழாபற்றி அறிந்து கட்டுரை எழுதுக.
3. புதிய ஜப்பான் உழவு முறைபற்றி ஆசிரியரைக் கேட்டறிந்து அது பற்றி ஒரு கட்டுரை வரைக.

## இலக்கணம்

(1) பிரித்து எழுதுக :—
அவற்றுளெல்லாம்
எருவிட்டு
இவ்வுழவு
தன்னிறைவு
(2) அகவினாவிற்கும், புறச்சுட்டிற்கும் ஒவ்வோர் உதாரணம் தருக.
(3) பெண்பாற் சொல் தருக :—
உழவன், எருது, வண்ணான்.
(4) "இன்று வரும் புது இலக்கிய நூற்கள் வரையில் உழவைப் பற்றிப் பேசுகின்றன"—இதில் வேற்றுமையுருபு எங்கெங்குளது ?
(5) நாடு, நடு, உழவு, செய்து—இதில் எது எது குற்றியலுகரங்கள் ? அல்லாதவற்றின் பெயரென்ன ?

# 5. மேட்டூர் அணை

'அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சாகும்' என்பது நம் நாட்டில் வழங்கும் ஒரு பழமொழி. இது தென்னிந்தியாவைப் பொறுத்த மட்டில் உழவுத் தொழிலில் நூற்றுக்கு நூறுபங்கு உண்மையானதாகவே இருந்து வந்தது. எவ்வாறெனில் இங்குள்ள காவிரி முதலிய பல ஆறுகளும் உழவுத் தொழிலுக்குப் பயன்படுகின்றன. அதேபோல் உழவுத் தொழிலுக்கு அழிவையுந்தந்து நிற்கின்றன. பயிர்த் தொழில் நடைபெறுங்காலமாகிய ஜூன் ஜூலை மாதங்

களில் வேண்டும் நீரைத் தந்து உதவுகின்றன. பின்னர் பயிர் நன்ருக வளர்ந்துள்ள அக்டோபர் நவம்பர் மாதங்களில் வெள்ளப் பெருக்கிஞல் அழித்து விடுகின்றன.

இத்தகைய அழிவு வேலைகளினின்றும் தங்களைக் காப் பாற்றிக் கொள்ளவேண்டியது மக்களுடைய முதற்கடமை யாயிற்று. அது பற்றி நன்கு சிந்தித்து ஒரு முடிவுக்கு வர முடிந்தது. அம் முடிவின் பயனே அம்மக்களது ஆக்கத் திற்கு மேலும் அரண் செய்வதாயு மமைந்தது. ஆறுகளில் வாய்ப்பான இடங்களில் நீர்த்தேக்கங்கள் கட்டப்பெற்றன. இவைகள் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டு நஷ்டமுண்டாக் காமல் தடுப்பதுடன், தேக்கி வைக்கப்பட்ட தண்ணீரைக் கொண்டு, சாகுபடிக்கு வேண்டுங் காலத்துத் தட்டில்லாது பாய்ச்சி, இரு போக, மூன்று போக விளைவுகளை உண்டாக் கவும் பயன்படுகின்றன.

நம் நாட்டில் கட்டப்பட்டுள்ள நீர்த்தேக்கங்களுள் முதலாவதாகவும் முதன்மை வாய்ந்ததாகவும் உள்ளது காவிரியில் கட்டப்பட்டுள்ள மேட்டூர் நீர்த்தேக்கமாகும். இது ஏறக்குறைய இருபது ஆண்டுகளுக்கு முன்பு கட்டப் பட்டதாகும். இதைக் கட்டி முடிக்க ஆறு ஆண்டுகளும் ஆறு கோடி ரூபாயும் செலவாயினவாம். இதனுல் விளைந் துள்ள நன்மைகள் மிகப் பல. இது நம் நாட்டில் ஒரு சிறந்த நீர்த்தேக்கமாயிருப்பதுடன், உலகிலுள்ள சிறந்த நீர்த்தேக்கங்களுள் ஒன்ருகவும் கருதப்படுகிறது.

காவிரியாறு, நம் நாட்டில் பெய்யும் இரு பருவமழை களாலும் நீரைப் பெறுகின்றது. எனினும் தென்மேற்குப் பருவக்காற்ருல் உண்டாகும் மழையை அதிகமாகப் பெறு கின்றது. மழை பெய்யும் போது நீர் அதிகமாகப் பெருகிப் பாய்ந்து கடலிற் கலந்து விடுவதும், மழையில்லாத போது வறண்டு கிடப்பதுமாகவே இருந்து வந்தது. அதனுல்

உழவுத் தொழில் எல்லாக் காலங்களிலும் நடைபெற இயலாது போயிற்று. ஆதலால் தக்க இடத்தில் காவிரிக்கு ஒரு அணை கட்டித் தண்ணீரைத் தேக்கினுல் இந்த நிலை மாறுதல் கூடும் என அறிஞர்கள் கருதினுர்கள். அதன் விளைவாகத் தான் மேட்டூர் அணை கட்டப்பட்டது.

மேட்டூருக் கருகில் காவிரி இரு மலைகளுக்கிடையே யுள்ள பள்ளத்தாக்கின் வழியே பாய்ந்து வருகின்றது. இரு மருங்கிலுமுள்ள மலைகள் காவிரிக்கு இயற்கையாயமைந்த உயர்ந்த கரைகள் போலமைந்துள்ளன. இவற்றிடையே யுள்ள நிலப்பகுதி மிகவும் ஆழமானதாக உள்ளது. இம் மலைகள் ஓரிடத்தில் ஒன்றையொன்று நெருங்கியுள்ளன. 1200 அடி அகலமுள்ள அக்குறுகிய இடத்தில் ஓர் அணையை அமைத்து நீரைத் தேக்கினுல், ஆண்டு முழுவதும் உழவுத் தொழில் செய்வதற்கு வேண்டிய தண்ணீர் கிடைக்கும் என்று அறிந்தனர். கர்னல் எல்லிஸ் என்பார் அது பற்றிய பெரிய திட்டம் ஒன்றை உருவாக்கி அரசாங்கத்தாரிடம் கொடுத்தார். இத்திட்டம் நாட்டிற்கு மிகப் பெரிய நன்மை பயப்பதாகும் எனத்தெரிந்தும், எதிர்பாராத பல இடையூறு களால் அரசாங்கம் அதனை மேற்கொள்ளவில்லை. ஆயினும் ஸர். ஸி. பி. இராமசாமி ஐயரின் முயற்சியால் இத்திட்டம் அரசாங்கத்தாரின் இசைவைப் பெற்றது; 1925-ம் ஆண்டு ஜூலை மாதம் சென்னைக் கவர்னர் கோஷன் பிரபுவால் அணைக்கட்டு வேலைத் தொடக்கவிழாவும் ஆற்றப் பெற்றது.

அணைக்கட்டு தொடங்குவதற்கு முன் மேட்டூர் மிகச் சிறிய கிராமமாயிருந்தது; ஆனுல் அணைக்கட்டு கட்டத் தொடங்கிய பின்னர், பற்பல நாகரீக வசதிகள் அமைந்த நகரமாக மாற்றப்பட்டு விட்டது. இவ் வணைக்கட்டு வேலை செய்வதற்கு வேண்டிய மின்சாரம், சிவசமுத்திரத்தி லிருந்து கொண்டு வரப்பட்டது. நம் நாட்டில் அதுவரை

பயன்படுத்தப்படாத பற்பல புதிய இயந்திரங்களும் அவ் வேலைக்குப் பயன்படுத்தப்பட்டன. எனினும் மொத்த வேலை யில் ஐந்தில் நான்குபங்கை மக்களே செய்து முடித்தனர் என்பதைக் கேட்கும் போது வியப்புண்டாகின்றதல்லவா! இயந்திரப் பெருக்கம் ஏற்பட்டாலுங்கூட, மனிதன் கையாற் செய்யக்கூடிய வேலையை மனிதனேதான் செய்ய வேண்டிய தாயுள்ளது.



மேட்டூர் அணைக்கட்டு

மேட்டூர் அணை 5300 அடி நீளமும் 176 அடி உயரமும் உள்ளதாகும். பூமிக்கடியில் நாற்பதடி ஆழத்தில் 170 அடி அகலமுள்ள அஸ்திவாரம் போடப்பட்டுள்ளது. அணையின் மேற்புறம் இருபதடி அகலமுள்ளதாயும், பதினாறு அடி அகலமுள்ள சாலையைக்கொண்டதாயும் உள்ளது. இவ் வணையால் ஏற்பட்டுள்ள நீர்த்தேக்கம் அறுபது சதுரமைல்

பரப்புள்ளதாக இருக்கிறது. அணையிலிருந்து முப்பத்து மூன்று மைல் தூரம் வரை தண்ணீர் தேங்கி நிற்கிறது. நீர்த்தேக்கத்தின் அதிகமான ஆழம் 165 அடிகளாகும். இத் தேக்கத்தில் ஏறக்குறைய 9,350 கோடி கனஅடி தண் ணீரைத் தேக்கலாம் எனக் கணக்கிட்டிருக்கின்றனர்.

இவ்வணையில் நீர்ப்போக்கை ஒழுங்குபடுத்துவதற் கேற்ற பல வசதிகளை அமைத்துள்ளார்கள். எ∴கினால் ஆகிய பெரிய மதகுக் கதவுகள் அமைக்கப்பட்டுள்ளன. இங்கு தேக்கப்படும் நீர்ப்பரப்பின் அதிக உயரம் கடல் மட்டத்திலிருந்து 790 அடிகளாகும். ஆதலால் 770 அடி உயரத்தில் பதினாறு மேல் மதகுகளும், 720 அடி உயரத்தில் எட்டு மதகுகளும், 670, அடி உயரத்தில் ஐந்து கீழ் மதகு களும் அமைக்கப்பட்டுள்ளன. மதகுகளின் கதவுகள் யாவும் மின்சாரத்தினாலேயே இயக்கப்படுகின்றன. அணை மிகவும் பெரியதாதலின் அதன் நடுவில் ஒரு கசிவு நீர்ச்சுரங்கம் அமைக்கப்பட்டுள்ளது. மேலும், வடக்கில் சிறிது தூரத்தில் ஒரு கழிவு நீர் வாய்க்காலும் அமைக்கப்பட்டுள்ளது. அதிக மாயுள்ள நீர் அதன் வழியாக வழிந்தோடும்படியாகவே அது ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

மேட்டூர் நீர்த்தேக்கத்தின் உதவி கொண்டும் மின் சாரம் தயாரிக்கப்படுகின்றது. இங்கு தயாரிக்கப்படும் மின் சாரம் நம்நாடு முழுவதும் அனுப்பப்பெற்றுப் பயன்படுத் தப்படுகின்றது. மேட்டூரில் பல தொழிற்சாலைகள் ஏற்பட் டுள்ளன. இப்பகுதிகளில் சில கனிப்பொருள்கள் கிடைப் பதால் அதுபற்றிய தொழில்களை ஏற்படுத்த அரசாங்கத் தார் முயன்று வருகிறார்கள். இத்தேக்கத்தால் ஏற்பட்ட வசதியாலும், தட்ப வெப்ப மாறுபாட்டாலும் இப்பகுதிகளில் பருத்தி, கடலை முதலியன மிகுதியாகப் பயிரிடப்படுகின்றன. இத்தகைய சிறப்புக்களால் இருக்குமிடம் தெரியாமலிருந்த

மேட்டூர், பெரும் நகரமாகிய சேலத்துடன் இருப்புப்பாதையால் இணைக்கப்பட்டுத் தென்னிந்திய அழகிய நகரங்களுள் ஒன்றுகத் திகழ்கின்றது. இவ்வணையால் தஞ்சை மாவட்டத்திலும், திருச்சி மாவட்டத்திலும், புதுக்கோட்டையிலும் கரம்பு நிலமாயிருந்த பகுதியெல்லாம் விளைபுலங்களாகிச் செழிப்படைந்து, உணவுப் பெருக்கத்தை மிகுத்துள்ளன.

## கேள்விகள்

1. ஆறுகள் •உழவுத் தொழிலுக்கு ஊறு செய்வதெவ்வாறு ?
2. மேட்டூர் அணை எத்தனை ஆண்டுகளில், எவ்வளவு பொருட்செலவிற் கட்டப்பட்டது ?
3. காவிரி எவ்வாறு தண்ணீரைப் பெறுகிறது ?
4. அணை அமைப்பதில் இயற்கை உதவிய தெவ்வாறு ?
5. மேட்டூர் அணை கட்டக் காரணமாயிருந்தவர்களில் முக்கியமானவர்கள் யாவர் ?
6. மேட்டூர் அணையின் அமைப்பு யாது ?
7. அணையில் ஏற்படுத்தப்பட்டுள்ள நீர்ப்போக்கு வசதிகள் யாவை ?
8. மேட்டூர் அணை கட்டியதாலேற்பட்டுள்ள மாறுபாடுகள் யாவை ?
9. மேட்டூர் அணையால் விளைந்துள்ள நன்மைகள் யாவை ?

## பயிற்சி

1. நீர்த்தேக்கங்களின் இன்றியமையாமையை விவரித்து ஒரு கட்டுரை எழுதுக.
2. மேட்டூர் அணையின் அமைப்பு முதலியவை பற்றி ஒரு கட்டுரை எழுதுக.
3. மேட்டூர் அணையால் விளைந்துள்ள நன்மைகளை விளக்கி ஒரு கட்டுரை எழுதுக.

4. பள்ளிக்கூடத்தில் சேகரித்து வைக்கப்பட்டுள்ள மேட்டூர் அணைபற்றிய படங்களையெல்லாம் பார்த்துப் படித்தவற்றுடன் ஒத்திட்டுப்பார்க்கவும்.

## இலக்கணம்

(1) கீழ் வருஞ் சொற்களைச் சேர்த்து எழுதுவதால் உண்டான எழுத்து மாறுபாட்டைக் காண்க:—
மலைகளுக்கு + இடையில் = மலைகட்கிடையில்
கட்டுப்பட்டு + உள்ள = கட்டுப்பட்டுள்ள
கையால் + செய்யக்கூடிய = கையாற் செய்யக் கூடிய

(2) தன்வினை, பிறவினை என்றால் என்ன ?

(3) அணை, அடி, வரை, கட்டு—இச்சொற்களின் முதலெழுத்தை நெடிலாக்கிப் பொருள் தருக.

(4) ஒன்று முதல் பத்து வரையுள்ள சொற்களில் எத்தனை சொற்கள் குற்றியலுகரம் என்பதை எழுதுக.

# 6. தாகூரின் இளமைப் பருவம்

கவி தாகூரின் குடும்பம் மிகப் பழமையானது. அக் குடும்பத்தினர் நெடுங்காலமாகக் கல்கத்தாவில் வசித்து வருகிறார்கள். அவர்கள் கல்விச் செல்வமும் பொருட் செல்வமும் மிக்கவர்கள். ஏராளமான நிலபுலங்கள் உள்ளவர்கள். தாய்மொழியாகிய வங்காளி மொழியில் மிக்க பற்றுடையவர்கள். தம்மைப்போலவே பிறரையும் எண்ணி உதவி செய்யுந் தன்மைவாய்ந்தவர்கள். எளியவர்பால் என்றும் அன்புகாட்டுந் தன்மையுடையவர்கள். அந்நாட்டு மக்களால் நன்கு மதிக்கப் படுபவர்கள்.

இக்குடும்பத்தில் பிறந்த ராஜா துவாரகநாத் தாகூர் என்பவர் கி. பி. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலே வாழ்ந்துவந்தார். அவர் சீர்திருத்த மனப்பான்மையுடையவர். பிரம சமாஜத்தைத் தோற்றுவித்தவராகிய ராஜாராம் மோஹன்ராயின் நெருங்கிய நண்பர். ராம் மோகனருக்குப் பிறகு சமாஜத்தைப் பேணிவந்தவர் துவாரகநாதரேயாவர். "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்," என்பது நம் செந்தமிழ்ப் பெரியார் திருமூலர் அருளிய அறநெறி. இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டது தான் பிரமசமாஜம்.

துவாரகநாதரின் மைந்தர் தேவேந்திரநாத் தாகூர் ஆவர். இவரும் சமய, சமூக சீர்திருத்தத்தில் ஆர்வங் கொண்டவர். அவர் ஒரு சிறந்த வேதாந்தி. இயற்கையழகில் ஈடுபாடு கொண்டவர். ஒரு சமயம் கங்கையில் படகில் சென்றுகொண்டிருந்தபோது, அதன் இயற்கையழகிலீடுபட்டவராய் அப்படியே தியானத்தில் ஆழ்ந்து விட்டார். படகுக்காரர்கள் அதனால் நெடுநேரங் காத்திருக்கவேண்டியதாயிற்று. இவர்தம் அருமைப் பத்தினியார் சாரதாதேவி என்னும் பெண்மணியாவார். இவ்விருவர் தம் அருந்தவப் பயனாய்த் தோன்றியவரே கவியரசர் இரவீந்திரநாத தாகூர் ஆவார்.,

கவி இரவீந்திரரின் குடும்பமே கலைகளுக்கெல்லாம் நிலைக்களனாயிருந்தது. கவியின் மூத்த தமையனார் வேத நூல்களில் வல்லவர்; வேதாந்தி. அவருக்கடுத்த தமையனார் சிறந்த ஓவிய விற்பன்னர்; மேலும் கப்பற்றொழில் நடத்தியவர். அவருக்கு அடுத்த தமையனார் ஐ. ஸி. எஸ். பட்டம் பெற்ற அறிஞர். இசைக்கலை அவர்தம் குடும்பப் பொதுச் சொத்தாக இருந்துவந்தது. இயற்கை எழில் வாய்ந்த இல்லமும், முன்னோர் தம் கலைச் செல்வங்களும்,

கவியரசர் தம் எதிர்கால வாழ்வை ஆக்குதற்கேற்ற கலா நிலையங்களா யிருந்தன.

கவி தாகூர் 1861-ம் ஆண்டு மே மாதம் கல்கத்தாவில் பிறந்தார். தம் பிள்ளைப் பருவத்திலேயே தாயார் சாரதா தேவியாரை இழந்தார். தாய்க்குப்பின் தந்தை தேவேந்திர நாதரே இவரை நன்கு பேணி வளர்த்து வந்தார். வீட்டு வேலைக்காரர்களும், வீட்டிற்குவந்து கல்வி கற்பிக்கும் ஆசிரியர்களும்கூடக் கவியரசரின் வளர்ப்பில் பங்கெடுத்துக் கொண்டார்கள் என்று கூறின் அது மிகையாகாது. சுருங்கக் கூறுமிடத்து, வீட்டிலுள்ளவர்களும், வீட்டிற்கு வருபவர்களும் ஆகிய எல்லோருமே இரவீந்திரரிடத்தில் அளவற்ற அன்பும், பரிவும் காட்டிவந்தனர்.

இரவீந்திரர் தம் இளமைப் பருவத்தில் கல்விப் பயிற்சியில் அவ்வளவாக ஊக்கங் காட்டவில்லை. ஆசிரியருக்கும் இவருக்கும் அடிக்கடி போராட்டம் நிகழ்வதுண்டு. ஆசிரியர் வீட்டுக்கு வராமலிருப்பதற்காக, மழைவரக்கூடாதா என்று எதிர்பார்ப்பார். பள்ளிக்கூடம் செல்லாமலிருப்பதற்கு என்னென்ன வழிகளுண்டோ அவற்றையெல்லாம் செய்வார். பி. ஏ., எம். ஏ., முதலிய பல்கலைக்கழகப் பட்டங்கள் பெறவேண்டுமென்ற விருப்பம் அவருக்கு ஏற்பட்டதேயில்லை. ஆதலால் சாதாரண பள்ளிப்படிப்புடனேயே தம் கல்விப் பயிற்சியை நிறுத்திக் கொண்டார். அக்குடும்பத்தில் பிறந்தவர்களுள் இவரே ஒன்றுக்கும் உதவாதவராக ஆகிவிடுவார் என்று எல்லோரும் எண்ணினார்கள்; சிலர் சொல்லவும் செய்தார்கள். இரவீந்திரர் அப்போதுங் கூடத் தம் உள்ளத்தை மாற்றிக் கொள்ளவில்லை.

இரவீந்திரர் மிகவும் பயந்த குணமுடையவர். அதிலும் பேய் பிசாசு என்றாலோ இன்னும் அதிகமாகப் பயப்படுவார். பாமர மக்கள் எப்போதும் பேய் பிசாசுக் கதைகளையே

பேசிக் கொண்டிருப்பார்கள். தாகூர் வீட்டு வேலைக்காரி யொருத்தி ஷக்குனி என்னும் பெண் பேயின் முழக்கத்தைக் கேட்டதாகக் கூறி மூர்ச்சையற்றுக் கீழே விழுந்து விடு வாள். ஒரு சமயம் ஒரு பேய் அவர்கள் வீட்டருகிலுள்ள வாதுமை மரத்தில் ஒரு காலையும், அவர்கள் வீட்டு மூன்றும் மாடியில் மற்றொரு காலையும் வைத்துக்கொண்டு நின்ற தாக வேலையாள் ஒருவன் கூறினன். அங்கு வந்திருந்த நண்பர் அது கேட்டு மிகவும் நகைத்தாராம். அது கண்ட வேலையாட்கள், அவர் நாஸ்திகரென்றும், அவர் கழுத்து விரைவில் ஒடிந்து போகுமென்றும் கூறினர்கள். இத் தகைய சூழலில் இருந்த இளந் தாகூர் பேய் பிசாசுகளுக் குப் பயந்தது வியப்பில்லை அல்லவா!

இரவீந்திரருக்குப் பள்ளி வாழ்க்கை மிகவும் கசப் பாகவே இருந்தது. அவர் இயற்கையின் எழிலிலும், இசை, ஓவியம் போன்ற கலைகளிலும் மனஞ் செலுத்தியிருந்தார். ஆனல் பள்ளிக்கூட வாழ்க்கையில் இவைகளெல்லாம் வளர்ச்சியடைய வாய்ப்பில்லை. தன் போக்கில் வளரவிரும் பும் அறிவைக் 'கூண்டுக் கிளி' போல் கட்டுப்பாட்டிற்குட் படுத்த அவர் விரும்பவில்லை. ஆகவே தம் பதின்மூன்றும் ஆண்டுக்குள்ளாகவே பள்ளிக்கூடத்தை விட்டு விட்டார்.

இரவீந்திரர் மாணவராயிருந்தபோது, 'இராபின்சன் குருசோவின்' வங்க மொழிபெயர்ப்புக் கிடைத்தது; அதைப் படித்தார். உள்ளத்தைப் பதியவைத்துப் படித்தார். ஆதரவற்ற நிலையிலுள்ள தனி மனிதன் இயற்கையுடன் போராடி அதன் தன்மையை யுணர்ந்து, வெற்றிபெற்று, அதனுடன் ஒத்துவாழும் தன்மையடைந்தான் எனக் குறிக் கப்பட்டுள்ளது அவர் உள்ளத்தை முற்றுங் கவர்ந்தது. இயற்கை யழகிலீடுபட்டு, அதிற் கடவுளைக் காணும் தாகூருக்கு இது மிகவும் விருப்பமாயிருந்தது. இயற்கையி

லீடுபட்ட உள்ளமும், இசைக் கலையில் அவரடைந்திருந்த தேர்ச்சியும் அவரைப் பதினைந்து வயதிலேயே ஓர் புலவ ஞக்கிவிட்டன.

தாகூர் குடும்பத்தினர் பாரதி என்ற பத்திரிகை ஒன்றை நடத்திவந்தனர். அதன் வாயிலாகத்தான் இரவீந்திரரின் கவிப்புலமை புலஞயிற்று. கவிஞர் முதன் முதலில் ஸந்தியா கீதம் என்னும் மாலைப்பாட்டை வெளியிட்டார். அதன் பின்னர்தான் பிரபாத் கீதம் என்னும் காலைப்பாட்டு உருப் பெற்றது. பிச்சைக்காரன் கதை, கருணை என்னும் நவீனம் புலவர் மனத்தைக் கொள்ளைகொண்ட வனமலர் என்னும் பாட்டு முதலிய நூல்களெல்லாம் 'பாரதி' வாயிலாகவே வெளியிடப்பெற்றன. தாகூர் ஆங்கில அறிஞரான ஷெல்லி, கீட்ஸ் முதலியோரின் நூல்களை நன்கு பயின்ருர். அவை நம் கவிஞரின் கற்பனை யுள்ளத்திற்கு மேலும் அரண் செய்வதாயின.

இரவீந்திரர் தம் பதினேழாம் வயதில் இங்கிலாந்து சென்ருர். அங்குள்ள பிரைட்டன் கல்லூரியில் இசைபயின் ருர். இங்கிலாந்து வாழ்க்கை அவருக்கு விருப்பமானதா யில்லை. மூன்ருண்டுகளில் தாய்நாடு வந்தடைந்தார். ஆங்கிலப் புலவர்களின் நூல்களை யெல்லாம் நன்கு ஆராய்ந்து பல அரிய கட்டுரைகளை வெளியிட்டார். அக் காலத்தில் 'உடைந்த உள்ளம்' என்னும் நாடகத்தைப் பாரதி யில் வெளியிட்டார். தாகூரின் பதினெட்டாம் ஆண்டில் உருப்பெற்ற இந்நாடகத்தில் இன்னிசையும் வேண்டுமள விற்கு இடம் பெற்றிருந்தது. அந்நூல் அறிஞர் எல்லோ ராலும் மிகவும் பாராட்டப்பெற்றது.

இரவீந்திரரின் தந்தையார் அவரை இங்கிலாந்திற்கு அனுப்பிச் சட்டம் பயிலச்செய்ய ஏற்பாடுகள் செய்தார். தாகூருக்கு அத்துறையில் விருப்பமின்மையால் சென்னை

வரை சென்று மீண்டும் கல்கத்தா வந்துவிட்டார். இரண்டாண்டுகட்குப் பின்னர், அழகும் குணமும் வாய்ந்த மிருணுளினி என்னும் ஓர் உயர்குடும்பப் பெண்ணைத் திருமணஞ் செய்துகொண்டு இல்வாழ்க்கைத் துறையில் இறங்கினுர்.

## கேள்விகள்

1. தாகூர் குடும்பத்தினரின் சிறப்பியல்புகள் யாவை ?
2. இக்குடும்பத்தினர்க்கும் பிரம சமாஜத்திற்கும் இருந்த தொடர்பு என்ன ?
3. இரவீந்திரர் கவிஞராவதற்கு அவரது குடும்பச் சூழ்நிலை உதவிய தெவ்வாறு ?
4. இரவீந்திரர் தம் பள்ளிப்படிப்பை விரைவில் நிறுத்திய தேன் ?
5. இரவீந்திரர் பயந்த குணமுள்ளவரென்பதை எதனுலறிகின்ருேம் ?
6. இரவீந்திரருக்குப் பள்ளி வாழ்க்கை கசப்பாயிருந்ததேன் ?
7. இரவீந்திரர் முதலி லியற்றிய கவிதைகள் யாவை ?
8. உடைந்த உள்ளம் என்னும் நூலைப் பற்றி நாமறிவதென்ன ?

## பயிற்சி

1. தாகூர் குடும்பத்தினர் என்னும் பொருள் பற்றி ஒரு சிறு கட்டுரை எழுதுக.
2. இயற்கையும், சூழலுமே இரவீந்திரரைக் கவியரசாக்கின என்பதை விளக்கி எழுதுக.
3. தாகூரின் பள்ளி அனுபவம் பற்றி அவரே கூறுவது போல் எழுதுக.

4. தாகூர் இயற்றிய நூல்களிற் சில பற்றி ஆசிரியரிடம் கேட்டு அறிந்து கொள்ளுக.

## இலக்கணம்

(1) எதிர் மறை தருக :—
காலை, பிச்சைக்காரன், பெண், உயர்குடும்பம், வேலைக்காரி.

(2) கீழ்வரும் சொற்கள் பண்புச் சொற்கள் எனப் பெயர் பெறும், அச் சொற்களைக் கொண்டு சொற்றொடர் அமைக்க :—
இளமை, நெடுமை, மறுமை, பழமை.

(3) கீழ்வருஞ் சொற்களின் ஏனைய காலங்களை வரைக :—
கொண்டார்
வருவர்
இருந்தன
செய்கின்றது.

(4) வந்தான், சென்றாள், சென்றது, உறங்கினர்— இங்கு பாலைக் குறிப்பிடும் உறுப்பு எது ?

# 7. தந்தையின் அறிவுரை

(ஹர்ஷரின் தந்தை பிரபாகரவர்த்தனர் மரணப் படுக்கையில் உள்ளார். தாய் பக்கத்தில் இருக்கிறார். ஹர்ஷர் வந்து வணங்கி நிற்கிறார்.)

ஹர்ஷர் :—தந்தையே ! உங்களை இக்கோலத்தில் காணவா நாங்கள் உங்களை விட்டுப் பிரிந்தோம். ஆகா ! அண்ணன் ராஜ்ய வர்த்தனனும் இல்லையே. அம்மா !

யசோமதி:—அப்பா! கவலைப்படாதே! பட்டு என்ன செய்வது? சிவபிரான் சித்தம் எதுவோ யார் அறிவார்? நீயாவது நல்ல வேளையாக வந்து சேர்ந்தாயே!.

ஹர்ஷர்:—அப்பா! உடம்பு எப்படி இருக்கிறது?

பிரபாக:—அப்பா குழந்தாய்! கவலைப்படாதே. என் நாள் முடிந்து, நான் போவது என்னவோ உறுதியாகி விட்டது. குழந்தைகள் ஒருவரும் அருகில் இல்லையே என்ற கவலையிருந்தது. ராஜ்யஸ்ரீ தன் கணவன் வீட்டில் இருக்கிருள். நீங்கள் ஹூணரைத் தொலைக்கப் போர்மேற் சென்று விட்டீர்கள். அன்று என்னவோ நான் வேண்டாம் என்றுதான் சொன்னேன். நீ போகத் துணிந்தாய். எப்படியோ இன்று திரும்பி வந்து விட்டாய் என்பதை அறிய மகிழ்கின்றேன். உன் அண்ணன் அருகில் இல்லாவிட்டாலும் நீயாவது அருகில் இருப்பது எவ்வளவு ஆறுதல் அளிக்கிறது தெரியுமா?

ஹர்ஷர்:—அப்பா! இதோ நான் உடனே ஆள் அனுப்பி அண்ணனையும் தங்கையையும் அழைத்துவரச் சொல்லுகின்றேன்.

யசோமதி:—அப்பா உன் தங்கையை அழைத்து வர ஆள் அனுப்பியாயிற்று. உன் அண்ணனுக்கு ஆள் வேண்டாம் என்ருர் உன் அப்பா.

ஹர்ஷர்:—அப்பா! ஏன் அப்படி?

பிரபாக:—ஏனு! அவன் வந்தாலும் வரா விட்டாலும் நான் இறப்பது உறுதி. ஆனல் அவன் வந்து விட்டால் போர் என்னுவது-அப்பா! நம் உயிரினும் நாடு பெரிது. உற்ருரினும் அந்நாட்டிலுள்ள



பிரபாகாவர்த்தனர் மரணப் படுக்கை

மக்கள் வாழ்வு பெரிது. அண்ணன் திரும்பி வந்து விடுவானுனல் ஹூணர்தொல்லை பெருகி நம் நாட்டையே அழித்தால் என்ன செய்வது? குழந்தாய்! ஆகவே அவன் போர் முடித்துத் திரும்பும் வரையில் ஆள் அனுப்பாதே. எனது உயிர் ஒரு வேளை சில விநாடிகளில் அகலும். அதன் பிறகும் நான் சொல்லியதை மறவாதே!

ஹர்ஷர்:—அப்பா! தாங்கள் சொல்லிய அனைத்தும் உணர்ந்தேன். உங்கள் வாய்மொழிப்படியே நடப்பேன்.

பிரபாக :—குழந்தாய்! இறுதியாக உன்னிடம் சில சொல்ல வேண்டும். என்னமோ என் உள்ளம் இந்த இறுதி நாளில் நீ ஒரு பேரரசனுகி இந்நாட்டின் பெரும் பகுதியை ஆளப் போகிருய் என்று எனக்கு அறிவுறுத்துகிறது. ஒரு வேளை உன் அண்ணனேடு கலந்தோ, அன்றி தனித்தோ நீ தரணி ஆளும் பொறுப்பை ஏற்ருல் என்ன செய்ய வேண்டு மென்பதை அறிந்து கொள்ள வேண்டாமா?

யசோமதி:—ஏன் வீணுக உடம்பை அலட்டிக் கொள்ளுகிறீர்கள்; சற்று அமைதியாக இருங்கள்.

பிரபாக :—ஆம்; அமைதியாக இருக்கத்தான் போகிறேனே இன்னும் சில விஞடிகளில்; மீளா அமைதி. அதற்கு முன் உங்களோடெல்லாம் கலந்து பேச விரும்புகின்றேன். அதிலும் கண்மணி ஹர்ஷன் எப்படியோ உலகம் உள்ளளவும் போற்றக்கூடிய பேரரசன் ஆவான் என்பதை நான் உணர்கிறேன். ஆகவே, சில அறநெறிகளை உணர்த்த வேண்டாமா?

யசோம்தி:—ஆம்—வேண்டும்தான்—ஆனுல் நீங்கள் இந்த நிலையில் பேசாதிருக்கவேண்டுமென்று வைத்தியர்களெல்லாம் சொல்லுகிருர்களே!

பிரபாக :—வைத்தியர்கள்—உயிரை நிலை நிறுத்தமுடியுமா அவர்களால்? வேண்டுமாளுல் சாவைச் சில விஞடிகள் தள்ளிவைக்கமுடியும். அவ்வளவு தானே.

ஹர்ஷர் :—அப்பா! தாங்கள் அமைதியோடு ஆண்டவனை எண்ண வேண்டுமென்பது தான் அன்னையின் ஆசை.

பிரபாக:—ஆம். கடமையைச்செய்வதும் ஆண்டவனை எண்ணுவதில் தான் முடியும். இதோ உனக்கு அரசநெறியை உணர்த்துவது என் கடமை. அக்கடமையில் கடவுள் காட்சி தெரிகின்றது. அசைக்கமுடியாத அமைதி வாழ்வு அங்கே பிறக்கிறது.

யசோமதி:—ஐயோ, நான் தவருக ஒன்றும் சொல்ல வில்லையே. நீங்கள் ஏன் ஏதேதோ பேசுகிறீர் கள்?

பிரபாக:—யசோமதி! நான் ஒன்றும் பேசவில்லை. நீ கவலை யுருதே! நான் இறப்பது கருதி நீ வருந்தினுல் நீ அரசி என்று அழைப்பதற்குத் தகுதியற்றவ ளாவாய்.

யசோமதி:—என்ன? ஆம்—என் உள்ளம் வீரம் வாய்ந்தது தான். கடமை நோக்கிக் கல்நெஞ்ச மாகும் அதே மனம் தங்கள் கருணை முகம் நோக்கிக் கசியாது என் செய்யும்?

பிரபாக:—பெண்ணே! உன் திண்மை உணர்ந்தேன், அப்பா ஹர்ஷா! அருகில் வா.

ஹர்ஷர்:—அப்பா! தாங்கள் என்ன சொல்லவேண்டும்?

பிரபாக:—சொல்ல ஒன்றுமில்லை; நீயே எல்லாம் அறிவாய். நாங்களெல்லாம் சைவ சமயத்தைச் சார்ந்த வர்களாயினும் நீ மஹாயான புத்தமதத்தைச் சார்ந்துள்ளாய். புத்தர் அருங்கருணை நெறி உன்னைப் போற்றி வளர்க்கும் என்பது உறுதி. உன் அண்ணன் இந்நாட்டு மன்னனுக வாழ் வான் என்று நினைக்கும் அதே வேளையில் உன் தலையிலும் மணிமுடி விளங்குவதாக எண்ணுகிறேன். அது எப்படி நடக்குமோ

அறியேன். ஒரு வேளை அவ்வாறு எந்த நாட்டையாவது நீ ஆள நேரின் உரிமை பற்றி மக்களை ஒடுக்காது கடமைபற்றி அவர்களைக் காத்து ஓம்ப வேண்டும் என்பதை விளக்கத் தான் விழைந்தேன். கொடுங்கோல் மன்னனாகி மக்களை அல்லல் வழி அழிக்காது, அருள் மனத்தினனாகி அவர்களை அரவணைத்து ஆதரிக்க வேண்டிய வழிகளைச் சொல்லத் தான் விரும்பினேன். ஆனால் பேசமுடிய வில்லையே—மூச்சு தடுமாறுகிறதே.........

ஹர்ஷர் :—அப்பா! என்ன! இதோ வாக்களிக்கிறேன். புத்தன் முன் புகல்கின்றேன். எதிர்பாராதபடி தங்கள் மனம் அறிந்த நிலையில் நான் இந் நாட்டுமன்னனாக வரின் தங்கள் தவப்புதல் வன் என்பதைச் செயலில் காட்டுவேன். இது உறுதி. வாழ்வேன் மக்களுக்காக.

பிரயாக :—ஆம்......அதுதான்—தேவை. (அமைதி).

(மனைவியின் மடியில் சாய்கிறான்)

யசோமதி :—அந்தோ! அணையா ஒளி அணைந்ததே!

ஹர்ஷர் :—அப்பா! அப்பா! (அனைவரும் கவல்கின்றனர்).

(சிறிது நேரம் சென்று)

அமைச் :—குழந்தாய்! அம்மா! கவன்று பயன் என்ன! அப்பா கூறிய உரைகளை மறந்தீர்களோ! உங்கள் கடமையைச் செய்யுங்கள்.

ஹர்ஷர் :—ஆம், கடமையைச் செய்யத்தான் வேண்டும். ஆனால் இடையில் பாசம் பிணிக்கிறதே. (அன்னையாரை வெறித்து நோக்குகின்றார்).

அமைச் :—பாசம். ஆம், அது பொல்லாதது தான். கடவு ளரையும் கட்டிப் பிணிக்கும் அந்தப்பாசம்

கொடியதுதான். அதைக் கடக்கவேதான் புத்தர் மனைவியை விட்டு, கண்ணனைய மைந்தனை விட்டுக் காடு நடந்து வழியினை ஆராய்ந்தார். உலகம் உள்ளளவும் பாசம் விடாது. ஆனால் அறிந்தோர் அதைக் கடந்தே ஆகவேண்டும்.

ஹர்ஷர் :—அறிந்தேன் புத்தபிரானே! உன் பொன்னெறி மறந்தேன்; அம்மா! கவன்றால் பயனில்லை. ஆற்றியிருங்கள்.

யசோமதி :—ஆம், ஆற்றியிருக்கத்தான் வேண்டும். இன்னும் சிறிது நேரம். சிதை அடுக்கி நாடாண்ட பிரபாகரரோடு நானும் ஈமத்தீயில் எரியும் வரையில் ஆற்றியிருக்கத்தான் வேண்டும்.

ஹர்ஷர் :—என்ன! அம்மா! தாங்களும் உடன் கட்டை ஏறவா?

யசோமதி :—கண்ணே! அது தானே கற்புடைப் பெண்டிரின் கடமை நெறி. தந்தை வலியுறுத்திய கடமையை மறந்தாயா? வீரம் அங்கே தானே பெண்களுக்கு விளைகிறது. உன் தாய் கடமை உணர்ந்து வீரம் செறிந்து, கணவனோடு உடன்கட்டை ஏறினாள் என்ற புகழுடன் நீ வாழவேண்டாமா?

ஹர்ஷர் :—ஆம்!—வேண்டும்—தந்தையைப் பிரிந்து, தாயை இழந்து, பின் நான் எப்படி வாழ்வது, ஆ! அண்ணனுக்கும் ஆள் அனுப்ப வேண்டாம் என்பது தந்தையின் கட்டளை. தங்கையோ இன்னும் வரவில்லை. நான் தனியாக இருப்பதா? ஆ! வேண்டாம்! வேண்டாம் இந்த வாழ்வு........

யசோமதி :—என்ன ! நீயே இப்படி மனம் பதைத்தால்......

வாயிற்காவலன் :—அரசே ! போர்க்களத்திலிருந்து வெற்றிச் செய்தியோடு இரு தூதுவர் வந்துள்ளனர்.

தாய் :—ஹா ! என் மைந்தன் வெற்றி பெற்று விட்டானு ! வாழ்க அவன் வீரம் !

ஹர்ஷர் :—அப்படியா ! நல்லது. இனி உடனே தந்தையாரின் பிரிவைத் தமையனுக்குச் சொல்லி அனுப்பலாம். மற்றவை பிறகு பார்த்துக் கொள்ளலாம் (அமைச்சரை நோக்கி) அமைச்சர்பிரானே ! உடனே என் தமைய்ன் ராஜ்ய வர்த்தனனுக்கு—ஆம்—இன்றுமுதல் இந்நாட்டு மன்னனுனவனுக்குத் தந்தையின் பிரிவை உடனே தனி ஆள்மூலம் விரைந்து அனுப்புங்கள்.

அமைச் :—அப்படியே.

ஹர்ஷர் :—என் தந்தையின் உடல் என் தமையன் வரும் வரை பாதுகாக்கப்படவேண்டும் ஆகவே அவர் உடலைத் தைலமிட்டுப் பாதுகாருங்கள். ஆம் ! அதுவரை என் உயிரினிய அன்னையைக்கண்டு கொண்டாவது இருப்பேனே ! (உடனிருந்த பணிப்பெண்களை நோக்கி) பணிப்பெண்களே ! அன்னையை நன்கு பாதுகாருங்கள். நான் அரச காரியம் ஏதேனும் உண்டாயின் கண்டுவருகின்றேன்.

அனைவரும் :—அப்படியே—!

## கேள்விகள்

1. பிரபாகரவர்த்தனனின் இறுதிக் காலத்தில் உடனிருந்தவர் யாவர் ?

2. பிரபாகர மன்னனின் இறுதிக் காலத்தில் அவனைப் பிரிந்திருந்தோர் யாவர் ? ஏன் ?
3. பிரபாகரன் ஏன் ராஜ்ய வர்த்தனனுக்கு ஆள் அனுப்ப வேண்டாம் என்று கூறினன் ?
4. ஹர்ஷருக்குத் தந்தை கூறிய அறிவுரை என்ன ?
5. யாசோமதி தான் உடன்கட்டை ஏறுதற்குக் கூறிய நியாயங்கள் யாவை ?

## பயிற்சி

1. இதிலடங்கியுள்ள கதையை எழுதுக.
2. குடிகளுக்கு மன்னனின் கடமைகள் என்பதுபற்றி ஒரு கட்டுரை எழுதுக.
3. வரலாற்று நூலிலிருந்து பிரபாகரவர்த்தனன் முதலியவர்களைப் பற்றித் தெரிந்துகொள்.

## இலக்கணம்

(1) ஏற்ற மரபுவினை கொண்டு முடிக்க :—

*அண்ணன்*
தங்கை
தாய்

(2) தம்பி, தாய், தந்தை இவைகளை மூவிடத்தும் பொருத்திக் காட்டுக.

(3) எட்டாம் வேற்றுமைக்கு இரண்டு உதாரணம் தருக.

(4) இரண்டாம் வேற்றுமையும், மூன்றும் வேற்றுமையும் தொடர்ந்து வந்த ஒரு சொற்றொடரை அமைத்து எழுது.

(5) கீழ்வரும் சொற்களின் வல்லின ஒற்றை எடுத்து மெல்லின மமைத்து எழுதிப் பொருள் வேறுபாட்டைத் தெரிந்து கொள்க :—
உணர்த்த, படித்த, வளர்த்த.

## 8. மாமல்லபுரச் செலவு

ஒவ்வோராண்டிலும் கோடை விடுமுறைக்கு முன்னர் எங்கள் பள்ளி மாணவர்களை ஏதேனும் ஒரு வரலாற்றுச் சிறப்புடைய ஊருக்கு அழைத்துச் செல்லுவது வழக்கம். பெரிய நீர்த்தேக்கம் அல்லது மின்சார உற்பத்தி நிலையம் போன்ற முக்கியமான இடங்கட்குச் சென்று வருதலும் உண்டு. இவ்வாறு சென்றுவருதலாற் பல நன்மைகள் உண்டாகின்றன. ஆதலால்தான் இது பள்ளிக்கூடப் பாடத் திட்டத்திலேயே இடம்பெற்றுள்ளது. கடந்த ஆண்டில் நாங்கள் மகாபலிபுரம் என்றழைக்கப்படும் மாமல்லபுரம் சென்றுவந்தோம்.

நாங்கள் செல்லுவதற்கென்று ஒரு தனி பஸ்ஸை ஏற்பாடு செய்திருந்தார்கள். நாங்கள் எல்லோரும் காலை ஆறு மணிக்கு முன்னதாகவே எங்கள் பள்ளிக்கூடத்தை அடைந்தோம். ஆசிரியர் கூறியவுடனே பஸ்ஸிலேறி அமர்ந்து கொண்டோம். காலை ஆறரை மணிக்கெல்லாம் பஸ் புறப்பட்டது.

நாங்கள் பஸ்ஸில் சென்றபோது அங்கங்கேயுள்ள இயற்கைக் காட்சிகளையும் பிறவற்றையும் பார்த்து மகிழ்ந்து கொண்டே சென்றோம். புறப்பட்டுக் கொஞ்சநேரத்திற் கெல்லாம் ஒரு பெரிய ஆற்றைக் கடந்தோம். அதுதான் அடையாறு என்றும், அதில் கட்டப்பட்டுள்ள பாலம் மிக வும் பழமையானது என்றும் எங்கள் ஆசிரியர் கூறினர். அப்பாற் சென்றபோது ஒரு பெரிய தோப்பும், அதனிடையே சில கட்டிடங்களுங் காணப்பட்டன. அதுவே நம் மாகாணக்

கவர்னர் தங்கியிருக்கும் கிண்டி அரண்மனை என்று எங்கள் ஆசிரியர் கூறினர்.

சிறிது நேரத்திற்கெல்லாம் எங்கள் பஸ் ஒரு பாலத்தின்மேல் செல்லுவதைக் கண்டோம். கீழே பார்த்தால் ஆறில்லை; அதற்குப் பதிலாக இருப்புப்பாதை சென்றது; அப்போதுதான் அது மேற்பாலம் (over bridge) என்பதைத் தெரிந்துகொண்டோம். அருகில், இரண்டொரு பெரிய கட்டிடங்களையும், பரந்த செப்பம் செய்யப்பட்ட வெளியையுங் கண்டோம். அதுதான் கிண்டி குதிரைப் பந்தய மைதானம் என்பதை அறிந்துகொண்டோம்.

சற்றுத் தூரத்தில் பரங்கிமலை காணப்பட்டது. அதைத் தாண்டிச் செல்லும்போது மீனம்பாக்கம் வானவூர்தி நிலையத்தைக் கண்டோம். அங்கே இரண்டு மூன்று விமானங்கள் இருப்பதையும் பார்த்துக்கொண்டே சென்றோம். சற்று நேரத்தில் நாங்கள் தாம்பரத்தை யடைந்தோம். பெரியதொரு புகைவண்டி நிலையத்தையும், மரங்களினிடையே மறைந்து தோன்றும், கிருஸ்தவக் கல்லூரியையும் பார்த்து மகிழ்ந்துகொண்டே சென்றோம்.

எங்கும் தங்காமல் விரைந்து சென்றுகொண்டிருந்த எங்கள் பஸ், செங்கற்பட்டைத் தாண்டித் திருக்கழுக்குன்றத்தை யடைந்தது. நாங்கள் மிக்க மகிழ்ச்சியுடன் அங்குள்ள சங்கு தீர்த்தத்தில் இறங்கிக் குளித்தோம். குழாய் நீரிலேயே குளித்து அலுத்துப்போன எங்களுக்குக் குளத்தில் இறங்கிக் குளிப்பது எவ்வளவோ ஆனந்தத்தைத் தந்தது. பின்னர் வேதபுரீசரை வணங்கி எங்களுக்கென ஏற்பாடு செய்திருந்த விடுதியை யடைந்தோம்; சிற்றுண்டி யருந்திச் சற்றுக் களைப்பாறினோம்.

நாங்கள் முன்னரே திட்டமிட்டிருந்தபடி மலையின்மேல் ஏறினோம். அங்கு மக்கள் பலர் கூடியிருந்தனர். சிறந்த



*Copyright, Department of Archaeology*

பட்சிகள் உணவு உண்ணுதல்

அடியாரான தேசிகர் ஒருவர், பாறையின் ஓரிடத்தே அமர்ந் திருந்தார். சிறிது நேரத்திற்கெல்லாம் இரு கழுகுகள் வந்தன. அவற்றிற்குப் பூசை செய்து அன்னமிட்டார். அவ்வாறு கழுகுகள் அறிவுக்கெட்டாத காலந்தொட்டே வந்து உணவுகொண்டு செல்லும் குன்றம் ஆதலாலே அதற்குக் கழுக்குன்றம் என்ற பெயர் உண்டாயிற்று. அத் துடன் 'திரு' என்ற அடைமொழியும் சேர்ந்து திருக்கழுக் குன்றம் என்ற காரணப் பெயர் வந்தது என்று எங்கள் ஆசிரியர் விளக்கினர். எல்லோரும் இந்தக் காட்சியைக் கண்டு கீழிறங்கினேம். விடுதிக்குச் சென்று பகல் உண

வருந்திச் சிறிது களைப்பாறினேம். மீண்டும் இரண்டு மணிக்குப் பஸ் ஏறி மகாபலிபுரத்தை யடைந்தோம்.

மாமல்லபுரம் மிகப் பழமையானதொரு கடற்கறைச் சிற்றூர். ஒரு காலத்தில் பட்டினமாக இருந்த இடம். இது கடல் மல்லை எனவும் வழங்கியது. பல்லவர் காலத்தில் மிகச் சிறப்படைந்திருந்தது. துறைமுகமாகவும் விளங்கியது. வெளிநாடுகள் பலவற்றுடனும் வாணிகம் செய்தது. பல்லவ மன்னனுகிய நரசிம்மவர்மன் காலத்திலேயே இது மிகவும் மேன்மையடைந்தது. அவனே இன்று உலகம் முழுவதும் புகழ்பெற்றுள்ள மாமல்லபுரச் சிற்பங்களைச் செய்வித்தவன். அவனுக்கு மாமல்லன் என்னும் பெயரும் உண்டு. அவன் சிறப்புப் பெயராலேயே இவ்வூரும் மாமல்லபுரம் என வழங்கப்படுகிறது. மாமல்லபுரச் சிற்பங்களைக் காணுதற்கென்றே பல நாட்டிலுள்ளவர்களும் வந்து செல்கின்றனர்.

நாங்கள் முதலில் மகிஷாசுர மர்த்தனி மண்டபத்திற்குச் சென்றோம். அது மலையின் ஒரு புறத்தில் செதுக்கிச் செய்யப்பட்டுள்ளது. நடுவில் சிவபெருமான் நந்தியுடன் காணப்படுகிருர். உமாதேவியாரின் மடியில் முருகப் பெருமான் அமர்ந்துள்ளார். உலகளந்தோனும், கலைமகள் நாதனும் கூப்பிய கையராய்க் காணப்படுகின்றனர். தென்புறம் தேவி அம்பெய்து போர்செய்து நிற்கிருள். மகிஷாசுரனும் கவலை தேக்கிய முகத்துடனே போர் செய்துகொண்டே பதுங்குகிருன். மற்ருெரு பக்கத்திலே பாற்கடலிற் பள்ளி கொள்ளும் திருமாலின் கோலம் சிறந்த காட்சியாக வுள்ளது.

அங்கிருந்தபடியே பஞ்சபாண்டவர் ரதங்களைக் காணச் சென்ருேம். இவை ஒவ்வொன்றும் தனித்தனிப் பாறைகளைக் குடைந்து செய்யப்பட்ட கற்கோயில்களாகும். தோற்றத்தால் இரதங்களை ஒத்திருப்பதால் இரதங்கள் என்றழைக்கப்படுகின்றன. இவைகள் இரதங்கள் என்று அழைக்கப்பட்



Copyright, Department of Archaeology

ஐந்து தேர்கள்

டாலும் இவைகளெல்லாம் கோயில்களேயாம். இவற்றிலுள்ள சிற்பங்கள்தாம் உலகப் புகழ்பெற்றவை. பண்டைத் தமிழரின் சிற்பத் திறனுக்கு எடுத்துக்காட்டாக விளங்குபவை. திரௌபதி ரதம் என்றழைக்கப்படும் கற்கோயிலின் மேற்பகுதி, கிராமத்திலுள்ள வைக்கோல் வேயப்பெற்ற வீட்டின் கூரைபோன்று அமைக்கப்பட்டுள்ளது. இத்தோற்றம் எல்லோருக்கும் மிக்க வியப்பைத் தருவதாயுள்ளது.

அதற்கடுத்தபடியாக அருச்சுனன் தவநிலைச் சிற்பத்தைக் காணச் சென்றோம். அது மிகவும் பெரியதொரு சிற்பம். அதுவும் பெரிய பாறையின் ஒரு பக்கத்தைச் செதுக்கி மண்டபமாக்கி அதில் செதுக்கப்பட்டுள்ளது.

இதில் அருச்சுனன் தவஞ்செய்திருப்பதுபோன்று காட்டப் பட்டுள்ளது. அருச்சுனனே யன்றித், தேவர், மக்கள் முதலி யோரும், விலங்குகள், பறவைகள் முதலியனவும் அவனுடன் தவஞ்செய்வது போன்றும் சித்திரிக்கப்பட்டுள்ளது. எண் ணற்ற பல உயிர்களின் வடிவங்களை அவ்வவற்றிற் கேற்ற அளவில் அமைத்துள்ளமை மிகவும் வியக்கத்தக்கதாயுள் ளது. அவையாவும் உயிர்த்தன்மை பொருந்தி, பண்டைத் தமிழரின் சிற்பத்திறனையும், கலை நுணுக்கத்தையும், பொறுமையையும் எடுத்துக் காட்டுவனவாய் இலங்குகின் றன.

பின்னர் அதையடுத்துச் சிறிது தூரத்தேயுள்ள கலங் கரை விளக்கத்தைக் காணச்சென்றோம். அது சென்னையி லுள்ளதைப்போன்று அவ்வளவு பெரியதாக இல்லாதுபோயி னும் காண்பதற்கு மிகவும் அழகாக அமைந்துள்ளது. மிகவும் உயர்ந்த ஒரு பாறைமீது அமைக்கப்பட்டுள்ளது. அதைப் பார்த்தபின்னர் அங்கு ஒருசார் தங்கிக் கடற்காற் றில் திளைத்தோம். தேநீரருந்திக் களைப்பு நீங்கப்பெற்றவர் களாய்க் கடற்கரை சேர்ந்தோம்.

கடற்கரையோரத்தில், கடலலை தவழ ஒரு அழகிய கோயில் கட்டப்பட்டுள்ளது. அது தற்போது சிதைந்தும் பாழடைந்துங் கிடக்கின்றது. அதுபோன்று வேறு சில கோயில்கள் இருந்ததாகவும், அவை கடலாற் கொள்ளப் பட்டனவென்றும் சொல்லிக்கொள்ளுகின்றனர்கள். எஞ்சி யுள்ள இக்கோயில் ஒன்றே பண்டைத் தமிழரின் கட்டிடக் கலைத்திறனை எடுத்துக்காட்டி அழகுற விளங்குகிறது. இவற்றையெல்லாம் தம் கற்பனையால் உருவாக்கிப் பின்னர் உண்மையிலேயே வடிவுபெறச்செய்த கலைஞனின் திறத்தை வியவாதிருத்தலுங் கூடுமோ! இவற்றை உருவாக்க

எத்தனை ஆண்டுகளும் எவ்வளவு பொருட்செலவும் ஆகியிருக்குமோ ?



*Copyright, Department of Archaeology*

கடற்கரைக் கோயில்

இந்தப் பழம்பெரு நகரத்தை முக்கியம் வாய்ந்த யாத்திரை நகராக்க இந்திய அரசாங்கத்தார் முயல்கின்றனர்கள். உள்நாட்டிலிருந்தும், வெளிநாட்டிலிருந்தும் பலர் இங்கு வந்து சிற்பங்களைக் கண்டவண்ண மிருக்கின்றனர். அவர்கள் தங்கவும், வேண்டிய உதவிகளைப் பெறவும் கட்டிடம் முதலிய வசதிகளைச் செய்ய இந்திய அரசாங்கத்தார் முன் வந்துள்ளார்கள் என அறிகிறோம்.

இவற்றையெல்லாங் கண்டு மகிழ்ந்த பின்னர், நாங்கள் தங்கியிருந்த விடுதிக்குச் சென்றோம் ; உணவை முடித்துக்

கொண்டோம். எங்களுக்காகக் காத்திருந்த பஸ்ஸிலேறிச் சென்னை வந்துசேர்ந்தோம். பண்டைத் தமிழர்களின் கலைத் திறனை எண்ணிப் பெருமிதங் கொண்டோம். அக்கலைத் திறன் கடற்கரையில் என்றென்றும் நிமிர்ந்து நின்று நம் நாட்டின் பெருமையைப் பேசிக்கொண்டிருக்கும் என்பதில் ஐயமில்லை.

## கேள்விகள்

1. ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் பள்ளி மாணவர்களை எங்கே அழைத்துச் செல்லுகிறார்கள் ?
2. சென்னையிலிருந்து செங்கற்பட்டு செல்லும் முன்னர் வழியில் மாணவர்கள் கண்டவை யாவை ?
3. கழுக்குன்றை யடைந்த மாணவர்களின் செயல்கள் யாவை ?
4. திருக்கழுக்குன்றம் என்று ஏன் பெயர் வந்தது ?
5. மாமல்லபுரத்தின் பண்டைச் சிறப்பென்ன ?
6. பஞ்ச பாண்டவர் ரதங்கள் யாவை ? அவற்றின் சிறப்பென்ன ?
7. கடற்கரைக் கோயிலைப்பற்றி நாமறிவதென்ன ?
8. இவ்வூர் பற்றி இந்திய அரசாங்கத்தார் எடுத்துள்ள முயற்சி என்ன ?

## பயிற்சி

1. நீ மகாபலிபுரம் போய்வந்ததைப் பற்றி உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுதுக.
2. நீ செய்த ஏதாவதொரு பிரயாணத்தை விவரித்து ஒரு கட்டுரை எழுதுக.
3. 'மாமல்லபுரச் சிற்பங்கள்' என்னும் பொருள் பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

4. 'கழுக்குன்றில் ஒருநாள்' என்பது பற்றி இரண்டு பக்கத்தில் எழுதுக.

## இலக்கணம்

(1) காரணப் பெயருக்கும், சிறப்புப் பெயருக்கும் இரண்டு உதாரணம் தருக.

(2) வினைச்சொல், வினை யெச்சம், வினை முற்று, பெயரெச்சம், பெயர்ச்சொல் இவைகளுக்கு முறையே ஒவ்வோர் உதாரணம் தருக.

(3) தச்சனால் தேர் செய்யப்பட்டது. தச்சன் தேரைச் செய்தான். இவ்விரண்டிற்கு முள்ள பொருள் வேறுபாட்டையும், வேற்றுமை மாறுபாட்டை யும் அறிந்து எழுதுக.

(4) புணர்ச்சியில் ஒற்றுமிகுந்த நான்கு இடங்களை எடுத் துக் காட்டு.

# 9. பனை மரம்

தமிழ் நாட்டில் பனை மரத்தை அறியாதார் இருக்க முடியாது. பனை மரம் இல்லாத ஊரே இராதென்று கூடச் சொல்லலாம். அது நம் நாட்டுப் பழமொழிகளிலே கூறப்படு கிறது. இலக்கியங்களிலேயும் இடம் பெற்றுள்ளது. இத் தகைய பனையின் சிறப்பையோ, பயனையோ சிந்திப்பவர் அதிகமாயில்லை. எந்தப்பொருளையும் ஆராய்ந்து பாராமல் மேலாகப் பார்த்துத் தள்ளி விடுவது நல்லதன்று, எதையும் நன்றாக எண்ணிப்பார்த்து முடிவு செய்வது தான் நல்லது.

பனை மரம் சாதாரணமாக மணற்பாங்கான பூமி யிலேயே பயிராகின்றது. வறண்ட பூமியே இதற்கு ஏற்றது. இதற்கு அதிக வெப்பம் தேவை. மற்றைத் தென்னை



பனை மரங்கள்

முதலிய மரங்களைப் போன்று வெட்டிக் கொத்தித் தண்ணீர் பாய்ச்சிக் கவனமாகப் பாதுகாக்க வேண்டுவதில்லை. தம் இயல்பாகவே வளரும் தன்மையுடையவை. பெரும்பாலும், ஆற்றங்கரை, குளத்தங்கரை, ஏரிக்கரை, பெரிய மணல் வெளி, கடற்கரையையடுத்துள்ள பகுதிகள் முதலிய இடங் களிலே பனை மரங்கள் வளர்ந்திருப்பதைக் காணலாம்.

பனை மரம் தென்னையின் இனத்தைச் சேர்ந்தது. ஈச்சை, பேரீச்சை, கமுகு முதலியனவும் இவ்வினத்தையே சேர்ந்தவை. பனையிலும் தாளிப்பனை, சவ்வரிசிப்பனை, எண்ணெய்ப்பனை என்று பல வகையுண்டு. பனை நன்முக உயர்ந்து வளரக்கூடியது. பொதுவாக ஐம்பது அல்லது

அறுபதடி உயரம் வளரும். இந்த இனத்திலுள்ள எல்லா மரங்களையும் விட இது மிகவும் உறுதியுள்ளது. நல்ல கறுப்பு நிறம் உடையது.

நன்றாக முற்றிய பனங்கொட்டை மிகவும் உறுதியாக இருக்கும், அதனை நமக்கு வேண்டிய இடத்தில் மணலில் நட்டால் அது விரைவில் முளைத்து வளரும். அது சிறு கன்றாக இருக்கும் போது ஆடு, மாடுகள் மேய்ந்து விடா தபடி பார்த்துக் கொள்ளவேண்டும். எந்த இடத்தில் விதை, நடுகின்றோமோ, அந்த இடத்தில் முளைத்துச் செங்குத்தாக மேலோங்கி வளரும். கன்று சற்றுப்பெரியதான பிறகு நம் பராமரிப்பு இல்லாமலே வளரும். தன் மட்டைகளின் இரு புறமும் உள்ள கருக்கினாலேயே ஆடு, மாடு முதலிய பிராணி களிடமிருந்து அது தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும்.

பனை மரம் ஏறக்குறைய பதினைந்து ஆண்டுகளில் பூக்கத் தொடங்கும். பூக்களில் ஆண்பூக்களும், பெண்பூக் களும் தனித்தனி மரங்களில் பூக்கும். ஆனால் ஆண்பூக் கள் உள்ள மரங்கள் காய்க்கமாட்டா. பெண்பூக்கள் உள்ள மரங்களில்தான் காய்கள் குலை குலையாக உண்டாகும். இதனால் பனை மரத்தில் ஆண்பனை, பெண்பனை என்று இரு பிரிவுகளுண்டு. பனம் பூக்களைச் சுட்டுக் கரியாக்கிப் பைகளில் அடைத்துச் சிறுவர்கள் கார்த்திகைப் பொறி சுற்றுவார்கள்.

பனை மரம் பெரும்பாலும் கோடைகாலத்திலேயே காய்க் கும். ஆண்டொன்றுக்கு ஏறக்குறைய ஒருமரம் இரு நூறு காய்கள் காய்க்கும். காய்கள் குலை குலையாக இருக்கும். காய்கள் மிகவும் கனமானவை ஆதலால் அவை குலையாகத் தொங்கும். காயின் கனத்தைத் தாங்குவதற்கு ஏற்றவாறு குலையின் காம்பும் மிகவும் உறுதியுள்ளதாயிருக்கும். பனங் காயில் பெரும்பாலும் மூன்று கண்கள் இருக்கும். அருமை

யாக இரண்டு அல்லது நான்கு கண்கள் இருப்பதும் உண்டு. பனநுங்கு உண்பதற்கு மிகவும் இனிப்பாயிருக்கும். உடலுக்கு மிகவும் குளிர்ச்சி தரும்.

இளங்காய்களை வெட்டாமல் விட்டு விட்டால் அவை நன்ருக முற்றிப் பழுத்துக் கீழே உதிரும். பனம் பழத்தின் மேற் புறத்திலுள்ள நார் சதைப்பற்றுடையதாகவும், சுவை உடையதாகவும் இருக்கும். சற்று சிவப்புக் கலந்த மஞ்சள் நிறம் உடையதாயிருக்கும். எளியவர்கள் இதனைச் சுட்டோ, அவித்தோ உண்ணுவதுண்டு. கொட்டைகள் முளைத்து வேர் விட்டு வளரும் போது அவற்றின் வேர்கள் ஒரு முழ நீளத்திற்குக் கொழுமையாயிருக்கும். இதுவே பனங்கிழங்கு எனப்படுவது. இதனையும் சுட்டும், வேகவைத்தும் மக்கள் உண்ணுவார்கள்.

பனையின் பாளையைச் சீவி அதிலிருந்து இனிய சுவையுடைய நீரை எடுக்கிருர்கள். இதுவே புளிப்பேருதிருக்கும் போது பதநீர் எனப்படுகின்றது. புளிப்பேறிய பின்னர் கள் என்று அழைக்கப்படுகின்றது. இது ஆண்பனையிற் கிடைப்பதைப் போல் ஒன்றரை மடங்கிற்கு அதிகமாகவே பெண் பனையிற் கிடைக்கிறது. இவ்வினிய நீரிலிருந்து பனை வெல்லமும் பனங் கற்கண்டும் செய்யப்படுகின்றன. அவை சுவையாயிருப்பதுடன் உடலுக்கு நன்மை பயப்பனவாயுமுள்ளன. நாட்டு வைத்திய முறைக்கு இவை மிகவும் பயன் படுகின்றன. மேலும் பனஞ்சாற்றைப் புளிக்கவைத்து அரக்குச்சாராயமும் வடிக்கலாம். கள், சாராயம் முதலியன நம் நாட்டில் தடைப்படுத்தப் பட்டுள்ளதால் இப்போது கள், சாராயம் முதலியன செய்யப்படுவதில்லை. ஆதலால் வெல்லமும், கற்கண்டும் மிகுதியாகச் செய்யமுடிகிறது.

பனை ஓலையும், நாரும் மிகுந்த பயனுடையவை. நார் மிகவும் உறுதியானது. அடிமட்டையிலிருந்து நார் எடுக்

கிறார்கள். பனை ஓலை தடுக்கு, பாய் முதலியன முடையவும், கூடைசெய்யவும், குழந்தைகளுக்கான விளையாட்டுச் சாமான்கள் செய்யவும், விசிறி முதலியன செய்யவும் பயன் படுகின்றது. சில இடங்களில் பனை ஓலையால் கூரையும் வேய்கிறார்கள்.

பனை மரம் மிகவும் உறுதியானது. நன்றாக முற்றி வைரம் பாய்ந்த மரம் பல ஆண்டுகள் வரை கெடுவதில்லை. அது உளுத்துப் போகாது. ஆதலால் இதனைப் பலர் வீட்டுவேலை களுக்குப் பயன் படுத்துகிறார்கள். வீடு கட்டுவதற்கு உத்தர மாகவும், விட்டமாகவும், சாரமாகவும் இதுபோன்ற இன்னும் பல வகையாகவும் பயன்படுத்துகின்றார்கள். வாயிற்படி, தூண் முதலியனவும் அமைக்கிறார்கள். ஆகவே பனைமரம் எல்லா வகையாலும் மக்களுக்குப் பயன்படுகின்றது.

## கேள்விகள்

1. தென்னையின் இனத்தைச்சார்ந்த மரங்கள் யாவை ?
2. பனை மரங்களை எங்கே காணலாம் ?
3. பனையில் எத்தனை வகையுண்டு? பெயர்களைக் கூறுக ?
4. பனை பயிராவதற்கு என்ன தேவை ?
5. எல்லாப் பனைகளும் காய்ப்பதில்லை. ஏன் ?
6. பனஞ்சாறு எவ்வாறு பயன்படுகின்றது ?
7. பனை ஓலையின் பயனை எழுதுக ?
8. பனை மரம் எவ்வெவ்வாறு பயன் படுத்தப்படுகிறது ?

## பயிற்சி

1. பனை மரம் தன் வாழ்க்கையைத்தானே கூறுவதுபோல் எழுது.
2. நீ எவ்வாறு பனையைப் பயிர் செய்வாய் என்பதனை எழுது.

3. பனையின் உபயோகங்களைத் தொகுத்து எழுதுக.
4. இலக்கியத்தில் பனைமரம் வந்துள்ள இரண்டொரு இடங்களை ஆசிரியரைக் கேட்டு அறிந்துகொள்.

## இலக்கணம்

(1) மரம் என்ன பெயர்? அதில் சிறப்புப் பெயருக்கு ஓர் உதாரணம் தருக.
(2) கீழ் வருவன வற்றிற்குப் பொருள் தருக:—
மரம்—மறம்; அரம்—அறம்; ஊண்—ஊன்;
(3) நிறப்பெயர் இரண்டு தருக.
(4) தென்னை, நட, சுட்டான், வந்து, சென்ற, குலைகுலையாக—இவைகளுக்கு இலக்கணத் தொடர்பு தருக.
(5) கார், வைரம், வரை இவைகளுக்கு இரண்டிரண்டு பொருள்கள் தருக.

# 10. பாரதியார்

செந்தமிழ்ப் புலவர்களைத் திருமகள் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை. மேல்நாட்டுப் புலவர்களும் இதற்கு விலக்கில்லை. முடிமன்னரும், வள்ளல்களும் புலவர்களைப் பாதுகாத்து வந்தார்கள். அவர்கள் கொடுத்த பொருளைப் புலவர்கள் தமக்கென்று வைத்துக் கொள்ளுவதில்லை. எல்லோருக்கும் கொடுத்துத் தாங்களும் அனுபவிப்பர்.

எட்டையபுரம், தமிழ் வளர்த்த பாண்டிநாட்டிலுள்ள ஓர் ஊர்; திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்தது. ஒரு சிற்றரசுக்கு (ஜமீன்) உட்பட்டது. அவ்வரச குடும்பத்தினர் பலரும் புலவர்களை ஆதரித்துத் தமிழை வளர்த்து வந்தார்

கள். ஆதலால் செந்தமிழ்ப் புலவர் பலர் அரச சபையில் எப்போதும் இருப்பார்கள். அவ்வாறிருந்தவர்களுள் சின்ன சாமி ஐயர் என்பவரும் ஒருவர்.

சின்னசாமி ஐயர் தமிழிற் சிறந்த புலமையுடையவர். ஆங்கிலமும் அறிந்தவர். தருக்கம் முதலியவற்றிலும் வல்ல வர். ஆதலால் அவைப் புலவர்களுள் அவரே சிறந்து விளங்கினுர். இவர் அழகும், குணமும் அமைந்த இலக்குமி



பாரதியார்

என்பாரை மணந்துகொண்டார். இல்வாழ்க்கை சிறப்புற நடந்துவந்தது. அவர்தம் அன்புகனிந்த வாழ்வின் பயனுக ஓர் ஆண்மகவு பிறந்தது; அத்தோன்றலே கவியரசர் சுப்பிரமணிய பாரதியார் ஆவர்.

பாரதியார் 1882-ம் ஆண்டில் பிறந்தார். பெற்ளோராலும், மற்ளோராலும் அன்பு பாராட்டி வளர்க்கப்பெற்ருர். தம் ஐந்தாம் வயதிலேயே தாயை இழந்தார். சின்னசாமி ஐயரே இவருக்குத் தாயுந் தந்தையும் ஆனுர். ஆயினும் விரைவிலேயே அன்னையினும் அன்புசால் வள்ளியம்மை என்பாரைத் தம் மாற்ருந்தாயாகப் பெற்ருர். அவரும் பாரதியாரைப் பெற்ற பிள்ளையினும் மேலாக வளர்த்தார்.

பாரதியார் கல்வியில் தேர்ந்து, சிறந்த உத்தியோகத்தில் அமரவேண்டும் என்பதே தந்தையாரது விருப்பம். அதற்கேற்ப இளமையிலேயே தம் மகனுக்கு இலக்கியமும், கணிதமும் கற்பித்துவந்தார். திருக்குறள், தாயுமானவர் பாடல், கம்பராமாயணம் முதலியவற்றை முறையாகப்பாடஞ் சொல்லிவந்தார். பாரதியாரோ இலக்கியத்தைப் பற்றி எண்ணவில்லை ; கணிதத்தைப்பற்றிக் கவலைப்படவுமில்லை ; ஆனுல் கவிதைப் பயிற்சியையே கைக்கொண்டார். இளமையிலேயே கவிபாடும் ஆற்றலும் பெற்ருர். பாரதியாருக்கு ஆங்கிலங் கற்பிக்க எண்ணி அவரது தந்தை அவரைத் திருநெல்வேலிப் பள்ளியொன்றிற் சேர்த்தார். ஆயிரத்திற்கு மேல் பொருள் செலவாயிற்றே தவிர ஆங்கிலப் படிப்பில் மனம் பதியவில்லை. எனவே மீண்டும் எட்டையபுரத்திற்கே வந்து சேர்ந்தார்.

பாரதியாருக்குப் பள்ளிப் படிப்பில் அவ்வளவாக விருப்பமில்லை ; எனினும், தாய்மொழிப் பற்று வளர்ந்தது. கவிதை யுள்ளமும் தழைக்கத் தொடங்கியது. எட்டையபுர வாழ்க்கை இதற்குத் துணைசெய்தது. அரசவைப் புலவர் பலரொடும் பழகும் வாய்ப்பும் ஏற்பட்டது. தானும் ஒரு புலவனுகவேண்டும் என்ற பேரவாவும் உண்டாயிற்று. பல நூல்களை அவர் மனப்பாடமாகக் கற்றிருந்ததும் அவருக்கு நல்ல பயனைத் தந்தது.

ஏட்டுக் கல்வியைப் பயிலுவதைக் காட்டிலும், இயற்கையில் ஈடுபடுவதே இவருக்குப் பெரு விருப்பாயிருந்தது. பள்ளிக்குச் செல்லப் புறப்படுவார்; அதனை மறந்துவிட்டு ஆற்றங்கரைக்கோ அல்லது சோலைக்கோ சென்று விடுவார். அங்கு சென்று இயற்கையன்னையின் எழிலில் ஈடுபட்டு விடுவார். தம்மையும் மறந்து சிந்தனையில் ஆழ்ந்திருப்பார்; கற்பனைக் கடலிலும் நீந்துவார். இருண்ட பின்னரே தன் நினைவடைந்து வீடு திரும்புவார். சிற்றன்னையார் கேட்ட பிறகே, தான் பள்ளிக்குப் புறப்பட்டதும் புத்தகங்களை வழியில் விட்டுவிட்டதும் அவருக்கு நினைவு வரும்.

பள்ளிக்கூடப் படிப்பில் விருப்பில்லாவிடினும், கற்பனையும், கவிதையறிவும் வளர்ந்து வந்தன. தாமாகவே பாக்கள் புனையத் தொடங்கினர். தம் தந்தையார் இல்லாத சமயம் பார்த்து அரசவைக்குச் செல்லுவார். தாம் ஆக்கிய கவியை இசையுடன் பாடிக்காட்டிப் பொருள்கூறுவார். இவரது கவிதைத் திறனைக்கண்ட அரசரும் மனம் மகிழ்ந்து பாராட்டுவார். ஒரு சமயம் சின்னசாமி ஐயருக்கும் சொல்லிப் பாராட்டினர், அதுகேட்ட தந்தையும் உளம் பூரித்துப் போனர். ஒரு சமயம் அரசர் சொற்படி மறைந்திருந்து, பாரதியார் அரசவையில் கவிதையைப் பாடிகாட்டிப் பொருள்கூறியதைக் கேட்டு அகமிக மகிழ்ந்தார்.

தம் புத்திரரது கவித்திறனைக்கண்டு மகிழ்ந்த சின்னசாமி ஐயர், அவரது மணச்சிறப்பையுங் கண்டு மகிழ விரும்பினர். பாரதியாருக்கு வயது பதினன்குதான்; எனினும் மணம் நிச்சயிக்கப்பட்டது. திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள கீழக்கடையத்தில் வாழ்ந்த செல்லப்பா ஐயரின் மகள் செல்லம்மாள்தான் மணமகள். மணமகளுக்கு வயது ஏழேதான். இந்த இளமை மணத்தில் பாரதியாருக்கு விருப்பில்லை; எனினும் திருமணத்தில் பலவித கேளிக்கை

கள் இருந்ததால் பாரதியார் உற்சாகமுடையவராகவே காணப்பட்டார். திருமணமும் மிகச் சிறப்பாகவே நடைபெற்றது.

அடுத்த ஆண்டிலேயே பாரதியாருக்கு மிகவும் துன்பந்தரும் நிகழ்ச்சி ஒன்று ஏற்பட்டது. சின்னசாமி ஐயர் பெரும்பொருள் திரட்டுதற்கேற்ற தொழில் முயற்சியிலீடுபட்டிருந்தார். அது கைகூடி வராததுடன் கைப்பொருள் முற்றும் அம்முயற்சியில் அழிந்துவிட்டது. அதுகண்ட ஐயர் மனமுடைந்து நோய்வாய்ப்பட்டார். அதுவே அவரைத் தம் அருமைத் திருமகனிடமிருந்தும் பிரித்துவிட்டது. பாரதியார் அடைந்த கவலைக்கு அளவில்லை. வறுமையும் பற்றிக்கொண்டது. செய்வதறியாது திகைத்தார்.

பாரதியாரின் அத்தை குப்பம்மாள் என்பவர் காசியிலுள்ள சிவமடத்தில் தன்கணவர் கிருஷ்ணசிவனுடன் வாழ்ந்து வந்தார். அவர் பாரதியாரைக் காசிக்கு வருமாறு பரிந்து அழைத்தார். பாரதியாரும் காசி சேர்ந்தார். பாரதியார் அங்குள்ள பள்ளி யொன்றிற் சேர்ந்தார்; இந்துஸ்தானியும், சம்ஸ்கிருதமும் பயின்றார். பல்கலைக் கழக நுழைவுத் தேர்வில் முதல்வாரகத் தேறினார். இத்துடன் அவரது பள்ளிப் படிப்பும் முற்றுப் பெற்றது.

பாரதியார் காசியிலேயே தங்கிவிட எண்ணியிருந்தார். ஆனால் அரசரின் அழைப்பினால் மீண்டும் எட்டையபுரத்தை அடைந்தார். தன் மனைவியை அழைத்துவந்து இல்வாழ்க்கையைத் தொடங்கினார். கொஞ்சகாலத்தில் இவ்வாழ்க்கை பிடிக்காமல் மதுரையை யடைந்தார். அங்குள்ள சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகச் சேர்ந்தார். அத்தொழிலிலும் வெறுப்படைந்து விட்டுவிட்டார்.

'சுதேசமித்திரன்' ஆசிரியரான ஜி. சுப்பிரமணிய ஐயர் ஒருசமயம் மதுரைக்கு வந்தார். பாரதியாரைத் தன்னோடு

வரும்படி அழைத்தார். பாரதியாரும் சென்னை சேர்ந்து, 'சுதேசமித்திரன்' துணை ஆசிரியரானார். அதில் கட்டுரைகளும், கவிதைகளும் அடிக்கடி எழுதித் தேசத்தொண்டு செய்துவந்தார். அவரது கவிதைகள் மக்களுக்குத் தேசீய உணர்ச்சியை ஊட்டி வந்தன.

தனியாக ஒரு பத்திரிகையை நடத்தவேண்டுமென்பதே பாரதியாரின் விருப்பம். அதற்கேற்ப 'இந்தியா' என்ற வாரஇதழின் ஆசிரியரானார். அதில் வெளிவந்த கட்டுரைகளும், கவிதைகளும் பாரதியாரை வெளியுலகிற்கு நன்கு எடுத்துக் காட்டின. அப்போதிருந்த அரசியல் கிளர்ச்சியைத் தூண்டுவதில் 'இந்தியாவும்' தன் கடமையைச் செய்து வந்தது. அரசியலாரும் அதற்குத் தடை விதித்தனர். பாரதியார் மீதும் குற்றம் சாட்டிக் கைது செய்யக் கட்டளையிட்டனர்.

அது தெரிந்த பாரதியார், புதுவையிற் குடியேறினார். இந்திய அரசாங்கத்தார் அங்கும் அவருக்கு ஓயாத தொல்லைகள் கொடுத்துக்கொண்டே யிருந்தனர். அப்போது தேச பக்தர்களாகிய வ. வே. சு. ஐயரும், அரவிந்தரும் புதுவை வந்து சேர்ந்தனர். மேலும் 'இந்தியா' பத்திரிகையும் புதுவையிலிருந்தே வெளிவர ஏற்பாடாயிற்று. பாரதியாரும் முன்போலவே தன் தொண்டைத் தடையின்றிச் செய்துவரலானார். ஆனால் அப்பத்திரிகைபிரிட்டிஷ் இந்தியாவில் வரக்கூடாதென்ற கட்டுப்பாட்டால் நின்று விட்டது. பின்னர் அரவிந்தர் வெளியிட்ட 'கர்மயோகி' என்ற பத்திரிகையைத் தமிழில் வெளியிட்டார். இதுவும் இரண்டாண்டுகட்குப் பின்னர் நின்றுவிட்டது.

விடுதலை வேட்கைகொண்ட பாரதியாருக்குப் புதுவையில் சிறையிருப்பது வெறுப்பைத் தந்தது. சென்னைக்குப் புறப்பட்டார். இந்திய அரசாங்கத்தாரால் கைது செய்யப்

பெற்றுக் கடலூரில் சிறை வைக்கப்பட்டார். எனினும் அவர் மேல் குற்றஞ்சாட்டி வழக்குத் தொடர வழி யில்லாததால் விரைவில் விடுதலை செய்யப்பட்டார். நேரே சென்னை சென்று, சிலநாள் தங்கியிருந்து பின்னர் குடும்பத்துடன் கீழக்கடையம் சென்று தங்கியிருந்தார். அப்போது சுதேச மித்திரனுக்குக் கட்டுரைகள் எழுதினார். இவ்வாறு சில ஆண்டுகள் கழிந்தன.

இளமையில் வாழ்ந்து வந்த சென்னை சேரவேண்டும் என்ற எண்ணம் மீண்டும் பாரதியாருக்கு உண்டாயிற்று. சுதேசமித்திரன் பத்திரிகையிலிருந்து அழைப்பும் வந்தது; பாரதியார் சென்னை சேர்ந்தார். முன்புபோல் சுதேசமித் திரன் துணையாசிரியரானார். அப்பத்திரிகையின் ஆசிரிய ரான அரங்கசாமி ஐயங்காரும் அவரை மிகவும் அன்புடன் நடத்திவந்தார்.

திருவல்லிக்கேணியிலுள்ள பார்த்தசாரதி கோவிலுக்கு அவர் நாள்தோறும் செல்லுவது வழக்கம். அங்குள்ள யானைக்குத் தேங்காய் கொடுத்து நெருங்கிப் பழகுவார். ஒரு சமயம் அது அவரைக் கீழே தள்ளிவிட்டது. நண்பர்கள் அவரை மருத்துவமனைக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தனர். காயம் குணமடைந்தது. எனினும் உடல்நலங் குறைந்து கொண்டேவந்து 1921-ம் ஆண்டு செப்டம்பரில் பூதவுடல் நீத்துப் புகழுடல் பெற்றார். அவர் மறைந்தாலும் அவரது எழுத்துக்கள் இன்றும் தமிழ் மக்களுக்கு நல் உணர்வு தந்துகொண்டிருப்பதை அறியாதார் யார் ?

## கேள்விகள்

1. சின்னசாமி ஐயர் எவ்வெவற்றிலே புலமை பெற்றி ருந்தார் ?
2. பாரதியாரின் பெற்றோர் யாவர் ?

3. பாரதியார் யார் யாரிடம் கல்வி கற்ருர் ?
4. பாரதியாரிடம் அரசர்க்கு அன்பேற்பட்டது எவ்வாறு ?
5. பாரதியார் காசிக்குச் சென்றதேன் ? அங்கு என்ன பயின்ருர் ?
6. பாரதியார் பார்த்த அலுவல்கள் யாவை ?
7. பாரதியார் புதுவையை அடைந்ததேன் ?
8. பாரதியார் சிறை செய்யப்பட்ட வரலாறென்ன ?

## பயிற்சி

1. பாரதியார் கல்வி கற்றமையை ஒரு பக்கத்தில் எழுதுக.
2. பாரதியாரின் பெற்ருேர், உற்ருரைப்பற்றி ஒரு கட்டுரை எழுதுக.
3. பாரதியாரின் தேசத்தொண்டை விவரிக்க.
4. பாரதியாரின் புதுவை வாழ்வு பற்றி ஒரு பக்கத்தில் எழுதுக.
5. நூல் நிலேயத்திலிருந்து பாரதி நூல்களே வாங்கி அவரியற்றிய பாடல்கள், கதைகள் முதலியவற்றிற் சிலவற்றைப் படிக்கவும்.

## இலக்கணம்

(1) வினேயாலணேயும் பெயர் என்ருல் என்ன ?

(2) கீழ் வரும் சொற்றொடர்களேச் சரியாக எழுது :—

புதுவை—குடியேறினுர்.

ஓயாத—கள் கொடுத்து இருந்தனர்.

பள்ளி—முற்றுப் பெற்றது

(3) நலம்—நலன் ; பயம்—பயன் ; கோவில்—கோயில் இவைகளுக்கு இலக்கணத்தில் என்ன பெயரிட்டு அழைக்கப்படும் ? ஏன் ?

# 11. பாரதியாரின் கடிதம்.

ஓம்

புதுச்சேரி.
19-7-1915.

எனதருமைத் தம்பியாகிய ஸ்ரீ நெல்லையப்ப பிள்ளையைப் பராசக்தி நன்கு காத்திடுக.

தம்பி—மாதத்துக்கு மாதம், நாளுக்கு நாள், நினதறிவு மலர்ச்சி பெற்று வருவதைக் காண்கிறேன். நினது உள்ளக் கமலத்திலே பேரறிவாகிய உன்—ஞாயிற்றின் கதிர்கள் தாக்கி நினக்கு நல்லின்பம் உண்டாகுமென்றே கருதுகின்றேன்.

* * *

நெஞ்சம் இளகி விரிவெய்த அறிவிலே சுடர் ஏறுகிறது. நம்மிலும் மெலியாருக்கு நாம் இரங்கி அவர்களை நமக்கு நிகராகச் செய்து விடவேண்டுமென்று பாடுபடுதலே நாம் வலிமை பெறுதற்கு வழியாகும். வேறு வழியில்லை.

* * *

ஹா! உனக்கு ஹிந்தி, மராட்டி முதலிய வடநாட்டு பாஷைகள் தெரிந்திருந்து அந்தப் பாஷைப் பத்திரிகைகள் என்ன அற்புதமான புதுமை பெற்றுள்ளன என்பதை நேரிடத் தெரிந்து கொள்ள முடியுமானால்—தமிழ்நாட்டிற்கு எத்தனை நன்மை யுண்டாகும்! தமிழ், தமிழ், தமிழ்—என்று எப்போதும் தமிழை வளர்ப்பதே கடமையாகக் கொள்க. ஆனால் புதிய புதிய செய்தி, புதிய புதிய யோசனை, புதிய புதிய உண்மை, புதிய புதிய இன்பம்—தமிழில் ஏறிக் கொண்டே போக வேண்டும்.

* * *

தம்பி—நான் ஏது செய்வேனடா! தமிழை விட மற்ருெரு பாஷை சுகமாக இருப்பதைப் பார்க்கும்போது எனக்கு வருத்தமுண்டாகிறது. தமிழனைவிட மற்ருெரு ஜாதியான் அறிவிலும், வலிமையிலும் உயர்ந்திருப்பது எனக்கு ஸம்மதமில்லை. தமிழச்சியைக் காட்டிலும் மற்ருெரு ஜாதிக்காரி அழகாயிருப்பதைக் கண்டால் என்மனம் புண்படுகிறது.

தம்பி—உள்ளமே உலகம்.

ஏறு! ஏறு! ஏறு! மேலே, மேலே, மேலே! நிற்கும் நிலையிலிருந்து கீழே விழாதபடி கயிறுகள் கட்டி வைத்துக் கொண்டு பிழைக்க முயற்சி பண்ணும் பழங்காலத்து மூடர்களைக் கண்டு குடல் குலுங்கச் சிரி.

உனக்குச் சிறகுகள் தோன்றுக. பறந்துபோ.

பற! பற!—மேலே, மேலே, மேலே.

* * *

தம்பி—தமிழ்நாடு வாழ்க என்றெழுது. தமிழ் நாட்டில் நோய்கள் தீர்க என்றெழுது. தமிழ்நாட்டில் வீதிதோறும் தமிழ்ப் பள்ளிக்கூடங்கள் மலிக என்றெழுது.

அந்தத் தமிழ்ப் பள்ளிக்கூடங்களிலே நவீன—கலைகளெல்லாம் பயிற்சி பெற்று வளர்க என்றெழுது. தமிழ் நாட்டில் ஒரே ஜாதிதான் உண்டு—அதன் பெயர் தமிழ் ஜாதி. அது ஆர்ய ஜாதி என்ற குடும்பத்திலே தலைக் குழந்தை என்றெழுது.

ஆணும்—பெண்ணும் ஒருவரின் இரண்டு கலைகள் என்றெழுது.

அவை ஒன்றிலொன்று தாழ்வில்லை என்றெழுது.

பெண்ணைத் தாழ்மை செய்தோன் கண்ணைக் குத்திக் கொண்டான் என்றெழுது.

தொழில்கள், தொழில்கள், தொழில்கள் என்றுகூவு.

தப்பாக வேதம் சொல்பவனைக்காட்டிலும் நன்றாகச் சிரைப்பவன் மேற்குலத்தான் என்று கூவு. வியாபாரம் வளர்க. யந்திரங்கள் பெருகுக. முயற்சிகள் ஓங்குக,— ஸங்கீதம், சிற்பம், யந்திரநூல், பூமிநூல், வானநூல் இயற்கை நூலின் ஆயிரம் கிளைகள். இவை தமிழ்நாட்டிலே மலிந்திடுக என்று முழங்கு.

சக்தி, சக்தி, சக்தி என்று பாடு. தம்பி—நீ வாழ்க.

* * *

உனது கடிதம் கிடைத்தது. குழந்தைக்கு உடம்பு செம்மையில்லாமல் இருந்தபடியால் உடனே "ஜவாப்" எழுத முடியவில்லை. குழந்தை புதிய உயிர்கொண்டது. இன்று உன் விலாஸத்துக்கு "நாட்டுப் பாட்டுக்கள்" அனுப்புகிறேன். அவற்றைப் பகுதி பகுதியாக உனது பத்திரிகையிலும், ஞானபானுவிலும் பிரசுரம் செய்வித்திடுக. "புதுமைப்பெண்" என்றொரு பாட்டு அனுப்புகிறேன். அதைத் தவராமல் உடனே அச்சிட்டு அதன் கருத்தை விளக்கி எழுதுக. எங்கேனும், எப்படியேனும் பணம் கண்டுபிடித்து ஒரு நண்பன் பெயரால் நமக்கனுப்புக.

தம்பி—உனக்கேனடா இது கடமையென்று தோன்றவில்லை—நீ வாழ்க.

உனதன்புள்ள

**பாரதி**

## பயிற்சி

1. பாரதியார் கூறியுள்ள கருத்துக்களையெல்லாந் தொகுத்து ஒரு கட்டுரையாக எழுதுக.
2. இது போன்ற சிறந்த கருத்துக்கள் இரண்டொன்றை அமைத்து உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.

3. பள்ளிக்கூட நூல் நிலையத்திலிருந்து பாரதியார் நூல்களை வாங்கி, அவர் எழுதிய மற்றக் கடிதங்களையும் படித்துப்பார்.

## இலக்கணம்

(1) பாரதி வரலாறு
பாரதியாரின் கடிதம்
இவ்விரண்டிற்கு முள்ள வித்தியாசம் என்ன ?

(2) உவமையைப்பற்றி உனக்குத் தெறிந்தது யாது ? அதற்கு இப்பாடத்தின் துணை கொண்டே ஒரு உதாரணம் தருக.

(3) அடுக்குச் சொல்லிற்கு இப்பாடத்திலிருந்து நான்கு எடுத்துக் காட்டு தருக.

# செய்யுள் பகுதி

## I. வாழ்த்து

1. தேவாரம்—திருநாவுக்கரசர்

விறகில் தீயினன் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட்டு உணர்வுக் கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே.

2. நாலாயிரம்—குலசேகரப் பெருமாள்

தருதுயரம் தடாயேல்உன் சரணல்லால்
சரண் இல்லை
விரைகுழுவு மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட்டு
அம்மானே
அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினு
மற்றவள்தன்
அருள்நினைந்து அழுங்குழவி அதுவேபோன்று
இருந்தேனே.

3. தமிழ் மொழி—பாரதியார்

1. யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல்
இனிதாவது எங்கும் காணோம்
பாமரராய் விலங்குகளாய் உலகனைத்தும்
இகழ்ச்சிசொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழரெனக் கொண்டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ சொல்லீர்
தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும்வகை செய்தல் வேண்டும்.

2. யாமறிந்த புலவரிலே கம்பரைப்போல்
வள்ளுவர்போல் இளங்கோவைப் போல்

பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை
உண்மைவெறும் புகழ்ச்சி யில்லை
ஊமையராய்க் குருடர்களாய்ச் செவிடர்களாய்
வாழ்கின்றோம் ஒருசொல் கேளிர்
சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
தமிழ்முழக்கம் செழிக்கச் செய்வீர்.

# II நீதி

## திருக்குறள்

1. அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு (1—1)
2. கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின் (1—2)
3. ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால் (2—4)
4. செயற்குஅரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்குஅரிய செய்கலா தார் (3—6)
5. அறத்தின் ஊங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்குஇல்லை கேடு (4—2)
6. அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு (8—2)
7. பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற (10—5)
8. இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று (10—10)
9. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று (11—8)

10. எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு (11—10)

11. சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி (12—8)

12. எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து (13—5)

13. நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும் (14—8)

14. ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல் (14—9)

15. அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை (16—1)

16. கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும் (17—6)

17. நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும் (18—1)

18. புறங்கூறிப் பொய்த்து உயிர்வாழ்தலில் சாதல்
அறம்கூறும் ஆக்கம் தரும் (19—3)

19. சொல்லுக சொல்லின் பயனுடைய சொல்லற்க
சொல்லில் பயனிலாச் சொல் (20—10)

20. தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடியுறைந் தற்று (21—8)

21. ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும் (22—4)

22. ஊருணி நீர்நிறைந் தற்றே உல(கு அ)வாம்
பேரறி வாளன் திரு (22—5)

23. நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று (23—2)

24. ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு (24—1)

25. மன்னுயிர் ஓம்பி அருள்ஆள்வார்க்கு இல்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை (25—4)

26. உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல் (29—2)

27. வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல் (30—1)

28. தன்நெஞ்சு அறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்நெஞ்சே தன்னைச் சுடும் (30—31)

29. மறத்தல் வெகுளியை யார்மட்டும் தீய
பிறத்தல் அதனால் வரும் (31—3)

30. பிறர்க்குஇன்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா
பிற்பகல் தாமே வரும் (32—9)

31. நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி (33—4)

32. அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா (37—6)

33. கற்க கசடறக் கற்பவை ; கற்றபின்
நிற்க அதற்குத் தக (40—1)

34. தொட்டனைத்து ஊறும் மணற்கேணி ; மாந்தர்க்குக்
கற்றனைத்து ஊறும் அறிவு (40—6)

35. செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் ; அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை (42—1)

36. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு (43—3)

37. சொல்லுதல் யார்க்கும் எளிய ; அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல் (67—4)

38. உடுக்கை இழந்தவன் கைபோல் ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு (79—8)

39. பணியுமாம் என்றும் பெருமை, சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து (98—8)

40. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்; மற்று(எ)ல்லாம்
தொழுதுஉண்டு பின்செல் பவர். (104—3)

## நல்வழி

1. ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும் அந்நாளும் அவ்வாறு
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லை எனமாட்டார் இசைந்து.

2. மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவரும் அங்கில்லை-சுரந்தமுதம்
கற்றா தரல்போல் கரவாது அளிப்பரேல்
உற்றார் உலகத் தவர்.

3. ஆறிடும் மேடும் மடுவும்போல் ஆஞ்செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர்-சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து.

4. வெட்டெனவை மெத்தனவை வெல்லாவாம் வேழத்தில்
பட்டுருவும் கோல்பஞ்சில் பாயாது-நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும்.

5. பூவாதே காய்க்கும் மரமுமுள மக்களுளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே-தூவா
விரைத்தாலும் நன்றாக வித்தெனவே பேதைக்கு
உரைத்தாலும் தோன்றாது உணர்வு.

# III கதைப்பகுதி

## குசேலர் உபாக்கியானம்—நட்பின் சிறப்பு

[வறுமையில் வாடிய குசேலன் தன் பள்ளி நண்பன் கண்ணனைக் காணத் துவாரகைக்குச் சென்று கண்ணனது மாளிகையில் அவனைக் காண்கின்றான்]

1. தாயது வருகை கேட்ட தனியிளங் குழவி போன்று
நேயமிக் குடையோ னாகி நெஞ்சினில் உவகை பூப்பப்
போயழைத் திடுமின்! இன்னே போயழைத் திடுமின் இன்னே
போயழைத் திடுமின் இன்னே எனவிரை பொருளில் சொன்னான்

2. மன்னனைக் காணும் அன்பும் வாயில் காவலரும் முன்னே
நன்னயத் துடன் நடப்ப நடப்பவன் ஆங்காங் குள்ள
பன்னரும் வளங்க ளெல்லாம் பார்த்தனன் இறும்பூ துற்றான்
பொன்னகர் சிறந்த தென்பார் புல்லியர் எனஉட் கொண்டான்

3. எண்ணனைக்கு இலங்கு மார்பம் ஈந்தருள் பிரானை நீல
வண்ணனைத் திகிரி சங்கம் வலமிடம் உறக் கொண் டானை
மண்ண னைத்தும் புரக்கும் வாசு தேவனை மணக்கும்
கண்ணனைத் துளவத் தாமக் கண்ணனைக் கண்ணிற் கண்டான்

4. காண்டலும் உவகை பூப்பக் கால் விசைகொடு நடந்தான்
ஆண்டகை அவனும் கண்ணுற்று அணையுடைத் தெழுநீத்தம் போல்

நீண்டபூம் பள்ளி நீத்து நிலவு பேரன்புபொங்கப்
பூண்ட மாதவன் முன்சென்று பொன்னடி வணங்
கினுனல்

5. பாக்கிய முற்ற திங்நாள் பாக்கிய முற்ற திங்நாள்
ஆக்கிய வரம் பலித்த ஆக்கிய வரம் பலித்த
யோக்கிய மடைந்த திந்த மனேயுமென் றுரைத்
துரைத்துத்
தேக்கிய புகழினுன் கொண் டாடினுன் சிலேவ லோயே!

6. விரைதரு தூமங் காட்டி மேவுநெய் விளக்கங் காட்டி
உணவுறு பளித நீரா சனக்கலம் ஒளிரச் சுற்றித்
திரைசெய் நல்லமுத மன்ன தீஞ்சுவை உணவு
நல்கிக்
கறையறு தவத்தோன் வாயும் கையும்ஒள் ளறலில்
பூசி

7. பாகடை சிறப்ப நல்கிப் பயன்பெறு முகமன் கூறிப்
போகுயர் மாடத்திட்ட பொற்றகன் படுக்கை யேற்றி
மோகமிக் கருகி ருந்து முதுகு தைவந்து பின்னும்
கோகனகப் பூங்கையால் குளிர் செம்பொற் கவரி
வீசி

8. வழிநடந் திளேத்த வேயிம் மலரடி யிரண்டு மென்று
கழிமகிழ் சிறப்ப மெல்ல வருடினுன் கமலக் கண்ணன்
பழியில் பல்உபசா ரங்கள் பண்ணவும் தெரியா னுகி
ஒழிவறு தவக்குசேலன் ஒன்றும் பேசா திருந்தான்

9. இன்னணம் இவன் இருப்ப இவன்வர வனேத்தும்
சொல்லா
முன்னரே உணர்ந்து கொண்ட முழுமுதற் கண்ணன்
என்பான்
மன்னிய உவகை பூத்து வழிதரு மனத்த னுகி
அன்னவன் வதனம் நோக்கி அமைய இன்னன
சொல்வானுல்

வேறு

10. மன்னுடைய மறையனைத்தும் வகுத்துணர்ந்த மாதவனே !
உன்னுடைய தரிசனத்தால் உடலம்பூ ரித்தனன்யான்
மின்னுடைய விளங்கொளிவேல் வேந்தருளும் தேவருளும்
என்னுடைய பெறலரும்பேறு யார்பெற்றார் யார் பெறுவார் ?

11. இருவேமும் முன்னுளில் இலங்குசாந் தீபமுனி
வருகாமர் அடிவணங்கி மாமறைகள் உணர்ந்திடுநாள்
பெருகார்வத் தொடுபேசிக் கொண்டிருந்த பேச்செல்லாம்
திருகாரா உளத்துநினைத் திருக்கின்றாயோ சிறப்ப

வேறு

12. பந்தனை யகன்ற மேலோய் பற்பல நாட்குப் பின்பு
வந்தனை எனக்கென் கொண்டு வந்தனை அதனையின்னே
தந்தனை யாயி னன்று தருசுவைப் பக்க ணத்தென்
சிந்தனை நின்றதென்றான் தெரிவரும் வஞ்சக் கள்வன்.

13. நடலை தீர்ந்தவன் மெய் போர்த்த நாள்பல கண்டகந்தைப்
படர்தலைச் சுருக்கி வாங்கிப் பாங்குவைத் தினிதின் ஆய்ந்து
விடலருங் கற்பு வாய்ந்த மின்னனார் வணங்கும் தெய்வம்
திடமுற முடிந்து வைத்த சிறுபொதி கண்டு கொண்டான்.

14. செறிதரு சுவைத்தீது என்றும் தேவர்க்கும் அரிய தாகும்
அறிதரு விருப்பின் இல்லில் அமைத்ததே பழைதும்
அன்று
குறிதரு விலைப்பால் சென்று கோடலில் வளத்ததோ
என்று
உறிஅளை வாரி உண்டோன் ஒருபிடி அவல்
தின்றானே

## பல்சுவைப் பகுதி

1. படிக்காசுப்புலவர் சீதக்காதி என்ற வள்ளலைப் பாடியது :

ஓர் தட்டிலே பொன்னும் ஓர்தட்டிலே நெல்லும் ஒக்க
விற்கும்
கார் தட்டிய பஞ்ச காலத்திலே தங்கள் காரியப் பேர்
ஆர்தட்டினும் தட்டுவா ராமலே அன்ன தானத்துக்
மார்தட்டிய துரைமால் சீதக்காதி வரோதயனே.

2. ஔவையார் உழவுத் தொழிலைச் சிறப்பித்துப் பாடியது:

ஏரும் இரண்டுளதாய் இல்லத்தில் வித்துளதாய்
நீரருகே சேர்ந்த நிலமுளதாய்—ஊர்அருகே
சென்றுவர அண்மைத்தாய்ச் செய்வாரும் சொற்
கேட்டால்
என்றும் உழவே இனிது.

3. கச்சியப்பர் கவி வீரராகவ முதலியரைப் புகழ்ந்து பாடியது:

பொங்குதமிழ் அயோத்தியில்வாழ் தசரதன்என்
போனிடத்தும் பூதூர் வேந்தன்
*துங்க வடுகன் இடத்தும் வீரராகவர்
இருவர் தோன்றி னால்

* வடுகநாத முதலியார்.

அங்கொருவன் ஒருகலை மான் எய்திடப்போய்
வசைபெற்றான் அவனி பாலன்
இங்கொருவன் பலகலைமான் எய்திடப்போய்
கவிதையினால் இசைபெற் றானே.

4. சிவப்பிரகாசர் பிள்ளையார் முருகன் ஆகியோர் இளமை விளையாட்டைப் பற்றிப் பாடியது:

அரனவனிடத்திலே ஐங்கரன் வந்து தான்
ஐயஎன் செவியை மிகவும்
அறுமுகன் கிள்ளினான் என்றே சிணுங்கிடவும்
அத்தன் வேலவனை நோக்கி
விரைவுடன் வினவவே அண்ணன் என்சென்னியில்
விளங்குகண் எண்ணினன் என
வெம்பிடும் பிள்ளையைப் பார்த்து நீஅப்படி
விகடமேன் செய்தா யென
மருவுமென் கைந்நீள முழமளந் தானென்ன
மயிலவன் நகைத்து நிற்க
மலையரையன் உதவவரு உமையவளை நோக்கிநின்
மைந்தரைப் பாரா யெனக்
கருதரிய கடலாடை உலகுபல அண்டம்
கருப்பமில் பெற்ற கன்னி
கணபதியை அருகழைத் தகமகிழ்வு கொண்டனள்
களிப்புடன் உமை காக்கவே.

5. இராமச்சந்திரக் கவிராயர் வறுமையினால் அயனை நிந்தித்துப் பாடியது :

கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான்
குடிக்கத்தான் கற்பித் தானா
இல்லைத்தான் பொன்னைத்தான் எனக்குத்தான்
கொடுத்துத்தான் ரட்சித் தானா

அல்லேத்தான் சொல்லித்தான் ஆரைத்தான்
நோவத்தான் ஐயோ எங்கும்
பல்லேத்தான் திறக்கத்தான் பதுமத்தான்
புவியில்தான் பண்ணி னேனே!

# குறிப்புரை

## வாழ்த்து

1. இச்செய்யுளை இயற்றியவர், **திருநாவுக்கரசர்:** இவர் சைவ சமய குரவர் நால்வரில் ஒருவர். இவர் பாடிய தேவாரப் பாடல்கள் நான்கு, ஐந்து, ஆருந் திருமுறைகளாக வகுக்கப் பெற்றுள்ளன.

பாலில் படு = பாலிற் பொருந்தியுள்ள
மாமணிச் சோதியான் = சிறந்த மாணிக்கம் போன்ற, ஒளி வடிவாயுள்ள இறைவன்
உறவு = அன்பு
முறுக = முற்ற

2. **குலசேகரப் பெருமாள்:** இவர் நாலாயிர திவ்யப் பிரபந்தம் பாடியருளிய ஆழ்வார்கள் பன்னிருவருள் ஒருவர். அரச குடும்பத்திற் பிறந்து அரசராயிருந்தவர். திருமாலன்பு அதிகரிக்கவே அரசைத்துறந்து ஆழ்வாரானவர். இவரது பாடல்கள் நாலாயிர திவ்யப் பிரபந்தத்துள் முதலாயிரத்தி லுள்ளன.

தருதுயரம் தடாயேல் = வருகின்ற துன்பங்களை நீக்கா விட்டால்
உன் சரண் அல்லால் = உன்னுடைய திருவடிகளே யல்லாமல்
சரண் இல்லை = வேறு புகலிடம் இல்லை

விரைகுழுவும் = மணம் நிறைந்த
பொழில் = சோலே
வித்துவக்கோடு = சேரநாட்டிலுள்ள வைணவத் திருப்பதி
அரி சினத்தால் = மிக்க கோபத்திஞலே

## தமிழ் மொழி

**சுப்பிரமணிய பாரதியார் :** இந்நூற்ருண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த சிறந்த தேசிய கவிஞர். நாட்டுப் பற்று மிக்கவர். தம் சிறந்த கட்டுரைகளாலும், இனிய உணர்வூட்டும் பாடல்களாலும், தமிழ் நாட்டிற்கும், தமிழ் மொழிக்குந் தொண்டாற்றிய தேசியப் புலவர். புதுமைக் கவிஞர்.

1. பாமரர் = அறியாதவர்
பான்மை = தகுதி
தேமதுர = தேன்போன்று இனிக்குந் தன்மையுடைய

2. கம்பர் : இராமாயணம் என வழங்கும் இராம காதையைப் பாடியவர். தமிழ்ப் பெரும்புலவர், சடையப்பவள்ளலால் ஆதரிக்கப்பட்டவர்

இளங்கோ : முப்பெருங் காப்பியங்களுள் ஒன்ருகிய சிலப்பதிகார ஆசிரியர். சேரமன்னன் செங்குட்டுவனின் இளவல்

சேமம் = நன்மை, சிறப்பு.

## நீதி

திருக்குறள் :—இதன் ஆசிரியர் திருவள்ளுவர், இந்நூல் சாதி, சமய வேறுபாடின்றி, எந்நாட்டவர்க்கும், எக்காலத்தவர்க்கும் ஒப்ப உரைக்கும் தமிழர் அறநூல். உலகிலுள்ள பல மொழிகளில் பெயர்க்கப்பட்டுள்ள தனி நூல்.

1. அகரமுதல = 'அ' என்னும் எழுத்தை முதலாக உடையன

ஆதிபகவன் = கடவுள்

2. வாலறிவன்=மெய்யுணர்வினை யுடைய இறைவன்
நல்தாள்=சிறந்த திருவடிகள்
3. புயல்=மழை
வாரி=வருவாய்
வளம்=பயன்
4. செய்கலாதார்=செய்ய முடியாதவர்கள்.
5. அறத்தின் ஊங்கு=அறஞ் செய்தலைக் காட்டிலும்
ஆக்கம்=செல்வம், உறுதி, நன்மை
கேடு=அழிவு
6. என்பு=எலும்பு முதலாகக் கொண்ட உடம்பு
7. பணிவு=வணக்கம்
அணி=அணிகலன்
8. இனிய=அறம்—நன்மை பயக்கும் இனிய சொற்கள்
இன்னாத=பாவம்—தீமை விளைக்கும் கடுஞ் சொற்கள்
காய் கவர்ந்தற்று=காயைப் பறித்து உண்டதனோடு ஒக்கும்
9. நன்றி=ஒருவர் செய்த நன்மை
நன்று அன்று=அறம் ஆகாது
நன்று அல்லது=தீமை
10. எந்நன்றி கொன்றார்க்கும்=எத்தகைய அறத்தை அழித்தவர்க்கும்
உய்வு=பாவத்தினின்றும் பிழைக்கும் வழி
செய்ந் நன்றி=ஒருவர் செய்த நன்மை
11. சமன் செய்து=முன்னேயேதான் சமமாக இருந்து
கோல்= துலாக்கோல்—தராசு
கோடாமை=ஒரு சார்பு பற்றாமை
அணி=அழகு
12. பணிதல்=பெருமிதமின்றி யடங்குதல்
செல்வந் தகைத்து=வேறு ஒரு செல்வமாக அமையும் சிறப்புடையது

13. நன்றிக்கு = அறத்திற்கு
வித்து = அடிப்படை
என்றும் = இம்மைக்கும் மறுமைக்கும்
இடும்பை = துன்பம்

14. ஒல்லா = முடியா
வழுக்கியும் = மறந்தும்

15. அகழ்வார் = தோண்டுகின்றவர்
இகழ்வார் = அவமதிப்பவர்
தலை = தலையாயது, சிறந்தது

16. அழுக்கறுப்பான் = பொருமைப்படுகின்றவன்
சுற்றம் = உறவினர்

17. நடுவு இன்றி = நடு நிலை இல்லாமல்
வெஃகின் = விரும்பினால்
பொன்றி = அழிந்து

18. புறங்கூறி = ஒருவன் இல்லாதஇடத்தே அவனை இகழ்ந்து கூறி
பொய்த்து = பொய்ம்மை யுடையவனாகி
அறங்கூறும் = அற நூல்கள் கூறுகின்ற
ஆக்கம் = மறுமையில் அடையும் பயன்

20. வீயாது = விடாது, நீங்காது
அடி உறைந் தற்று = அடியின்கண் தங்கிய தன்மையை ஒக்கும்

21. ஒத்தது அறிவான் = உலக நடையை அறிந்து செய்வான்
செத்தாருள் வைக்கப்படும் = இறந்தவர்களில் ஒருவனாகக் கருதப்படுவான்

22. உலகு அவாம் = உலக நடையை விரும்பிச் செய்யும்
ஊருணி = (ஊர் + உண்ணி) ஊரிலுள்ளாருக்கு உண்ணீர் கொடுக்கும் குளம்

23. நல்லாறு = நல்ல நெறி

24. இசைபட வாழ்தல்=ஈதலாற் புகழுண்டாக வாழ்தல்
அது வல்லது=அப்புகழே யல்லாமல்
ஊதியம்=பயன்

25. மன்னுயிர் ஓம்பி=நிலைபேறுடைய உயிர்களைக் காத்து
அருள் ஆள்வார்=அருளை உடையவர்
வினை = தீ வினைகள்

26. உள்ளலும்=குற்றங்களை நினைத்தலும்
தீதே=பாவமாம்
கள்ளத்தால்=வஞ்சனையால்
கள்வேம் எனல்=கவர்ந்து கொள்வோம் என்று கருதல். (அல் : எதிர்மறைப் பொருளது)

27. வாய்மை=உண்மை
எனப்படுவது=என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது

28. பொய்யற்க=மறைக்கக் கூடாது
தன்னைச் சுடும்=தன்னை வருத்தும்

29. வெகுளி=கோபம்
மறத்தல்=விட்டு விடுக

30. இன்னா=துன்பம்

31. நல்ல ஆறு=நல்ல நெறி
சூழும் = கருதுகின்ற

32. அஞ்சுவது=அஞ்சிக் காக்கத் தகுவது
அறம்= துறவறம்
வஞ்சிப்பது=(வீடடையாமல்) மோசஞ் செய்வது
அவா = ஆசை (ஒரும் என்பன அசை நிலை)

33. கசடு அற=குற்றம் நீங்க
அதற்குத் தக= அக்கல்வி கூறுகின்ற நன்னெறியிலே

34. தொட்டனைத்து = தோண்டிய அளவிற்கு
மாந்தர் = மக்கள்

35. செவிச் செல்வம் = கேள்வியாற் பொருளை அறிதலாகிய செல்வம்

36. எப்பொருள் = சொல்லப்பட்ட யாதானும் ஒருபொருளை
மெய்ப்பொருள் = மெய்யான பயன்
காண்பது அறிவு = காண வல்லது அறிவு

38. உடுக்கை = ஆடை
இடுக்கண் = துன்பம்
களைதல் = நீக்குதல்

39. பெருமை = பெருமையுடையார்
சிறுமை = சிறுமையுடையார்
அணியும் = புனைந்து கூறுவர்

**நல்வழி:** இதனை இயற்றியவர் ஔவையார் என்னுந் தமிழ் மூதாட்டியாராவர். ஔவை என்ற பெயரை அறியாதவர் யாரும் தமிழ்நாட்டிலிரார். இவர் ஆத்திசூடி முதலிய பல நீதி நூல்களை இயற்றியுள்ளார்.

1. ஆற்றுப் பெருக்கு = வெள்ளப் பெருக்கு
அடி சுடும் = நடப்பவரின் கால்களைச் சுடுகின்ற
ஊற்றுப் பெருக்கால் = ஊற்று நீர்ப் பெருக்கினால்
உலகு = உலகத்தாரை
ஊட்டும் = உண்பிக்கும்
நல் கூர்ந்தார் ஆனாலும் = வறுமையுடையவர் ஆனாலும்
இசைந்து = மனம் பொருந்தி

2. இரந்து அழைப்பார் = வேண்டி அழைப்பவர்
யாவரும் இல்லை = ஒருவரும் இல்லை
சுரந்து = மடி சுரந்து
அமுதம் = பால்
கற்றா = கன்று ஆ—கன்றையுடைய பசு

கரவாது = ஒளியாமல்
உற்ருர் = உறவினராவர்

3. ஆறு இடும் = ஆற்று வெள்ளத்திஞல் உண்டாக்கப் படும்
மடு = பள்ளம்
ஏறிடும் = வளரும்
மாறிடும் = குறையும்
சார்பு ஆக = துணையாக
உள்நீர்மை = உள்ளத்தின் தூயதன்மை
வீறும் = விளங்கும்

4. வெட்டெனவை = வன் சொற்கள்
மெத்தனவை = இன் சொற்கள்
வேழம் = யானை
பட்டுருவும் = துளைத்துச் செல்லும்
கோல் = அம்பு
நெடு இருப்புப் பாரை = நீண்ட இரும்பாலாகிய பாரை
பாறை = கற்பாறை
நெக்கு விடும் = பிளந்து போகும்

5. ஏவாதே = சொல்லாமலே
தூவா = தூவி
நன்று ஆகா = முளைத்துப் பயன்படாத
வித்து என = விதையைப் போல
பேதைக்கு = மூடருக்கு
உரைத்தாலும் = விளங்கும்படிச் சொன்ஞலும்
உணர்வு தோன்ருது = அறிவு உண்டாகாது

## கதைப் பகுதி

**குசேலோபாக்கியானம்:** இது தொண்டை நாட்டிலுள்ள வல்லூர் தேவராசப்பிள்ளையால் பாடப்பட்டதெனக் கூறுவர்.

1. குழவி = குழந்தை
   நேயம் = அன்பு
   உவகை = மகிழ்ச்சி

2. நயம் = இன்பம் ; மகிழ்ச்சி
   பன்னரும் = சொல்லுதற்கரிய
   இறும்பூது = மகிழ்ச்சி
   பொன்னகர் = தேவலோகம்
   புல்லியர் = கீழ்மக்கள் ; அறியாதோர்
   உட்கொண்டான் = உள்ளத்தே நினைத்தான்

3. எண் அனைக்கு = புகழ்மிக்க இலக்குமிக்கு
   இலங்கு = விளங்குகின்ற
   நீலவண்ணனை = நீல நிறமுடைய திருமாலை
   திகிரி = சக்கரம்
   மண் அனைத்தும் = எல்லா உலகங்களையும்
   புரக்கும் = பாதுகாக்கும்
   கள் நனை = தேனொழுகுகின்ற
   துளவத் தாமம் = துளசி மாலை

4. உவகைபூப்ப = மகிழ்ச்சி மிக
   விசை = விரைவு
   நீத்தம் = வெள்ளம்
   பூம் பள்ளி = அழகிய படுக்கை

5. பாக்கியம் = செல்வம்
   ஆக்கிய வரம் = செய்த தவத்தின் மேலான பயன்

யோக்கியம் = சிறப்பு
தேக்கிய = நிறைந்த
சிலைவலோயே = வில் வித்தையில் சிறந்தவனாகிய பரீட்சித்து மன்னவனே

6. விரை தரு = மணம் வீசுகின்ற
தூமம் = புகை
பளிதம் = கற்பூரம்
திரை = அலையோடு கூடிய கடல்
நல்கி = கொடுத்து (உண்ணச் செய்து)
கரையறு தவம் = அளவற்ற தவம்
அறல் = நீர்

7. பாகடை = பாக்கு வெற்றிலை
முகமன் = உபசார வார்த்தை
மோகம் மிக்கு = அன்பு மிகுந்து
தைவந்து = தடவி
கோகனகம் = தாமரை

8. கழி மகிழ் சிறப்பு = மிக்க மகிழ்ச்சியுண்டாக
பழியில் = குற்றமற்ற
ஒழிவு அறு = நீங்குதலில்லாத

9. மன்னிய = நிலை பெற்ற, பொருந்திய
வதனம் = முகம்

10. மன்னுடைய = பெருமையுடைய
மறை = வேதம்
மாதவன் = சிறந்த தவத்தினையுடைய குசேலன்
மின் = மின்னலை யொத்து
பேறு = செல்வம்

11. காமர் = அழகு
ஆர்வம் = அன்பு

12. பந்தனை = பிறவியாகிய பாசம் (கட்டு)
இன்னே = இப்போதே
தெரிவரும் = (அறிந்து கொள்ள வியலாத) அறிதற் கரிய

13. நடலை = பொய் யொழுக்கம், வஞ்சனை
பாங்கு = பக்கத்தே
விடலரும் = நீக்குதற் கரிய
தெய்வம் = தெய்வத்தையொத்த சுசீலை
திடமுற = உறுதியாக
பொதி = முடிச்சு (மூட்டை)

14. செறிதரு சுவை = சுவைமிகுந்த
அளை = வெண்ணெய், தயிர்

## பல்சுவைப் பகுதி

1. ஒக்க = சமமாக
கார் தட்டிய = மழை பெய்யாது பொய்த்த
காரியப் பேர் = கரரியக்காரர்
ஆர் தட்டினும் = யார் தடுத்தாலும்
தட்டு வாராமலே = முட்டுப்பாடு இல்லாமல்.
மார்தட்டிய = தைரியம் சொல்லி நடத்துகின்ற
மால் = காத்தற் கடவுளாகிய திருமாலை யொத்த
வரோதயன் = வரத்தினுற் பிறந்தவன்

2. ஏர் = கலப்பை
இல்லம் = வீடு
வித்து = விதை நெல்
செய்வார் = வேலையாள்

3. துங்க = சிறந்த
வடுகன் = வடுகனுத முதலியார்

வசை பெற்றான் = பழிக்குக் காரணமாயினான்
அவனி பாலன் = பூமியைக் காக்கும் அரசன்
பலகலைமான் = பல வகையான கலைகள்
எய்திட = அடைய (நிறைவெய்த)
இசை = புகழ்

4. சென்னி = தலை
வெம்பிடும் = அழுகின்ற
விகடம் = வேடிக்கை
மருவும் = பொருந்திய
கை = துதிக்கை
பல அண்டம் = வேறு பல உலகங்களையும்

5. அல்லைத்தான் = படுகின்ற அல்லலைத்தான்
பதுமத்தான் = தாமரைமலரிலிருக்கும் நான் முகன்

## அருஞ் சொற் பொருள்

காஞ்சிபுரம்

பழங்காலந் தொட்டு—பழங் கால முதல்
பழுது—பிழை
பண்டமாற்று—பொருள் மாற்றுதல்
நகராண்மைக் கழகம்—நகரத்தை ஆளும் குழு
கறையில்லா—மாசில்லா
திரிந்து—வேறுபட்டு
வானோங்கிய—ஆகாயமளவு வளர்ந்த

அறிஞர் இராமன்

மகவு—குழந்தை
நன் மதிப்பு—நல்ல மதிப்பு
பாராட்டு—புகழ்ச்சி
அலுவல்—வேலை

செவி—காது
ஒலி—சப்தம்
விளைவு—பயன்

சமயோசித புத்தி

வெண்ணாவல்—வெண்மையான நாவல் மரம்
முகமன்—ஆறுதல்
வானரம்—குரங்கு
அளவளாவி—உரையாடி
கரா—முதலை
மூப்பு—கிழமை
சாக்காடு—இறப்பு
கொள்ளி—நெருப்பு

உழவுத் தொழில்

களைகட்டி—களையெடுத்து
ஓய்ந்து—களைப்பாறி
வரண்டு—நீரற்று உலர்ந்த
வளமாக்கு—செழிப்பாக்கு
இடைவிடாது—இடையில் விடாமல்
பதர்—பயன் படா நெல் (அரிசியில்லா நெல்)
உற்றார்—சுற்றத்தார்
தன்னிறைவு—தன் தேவையளவு

மேட்டூர் அணை

நஞ்சு—விடம்
ஆக்கம்—பயன்
அரண்—உறுதி
சாகுபடி—பயிரிடுதல்
தட்டில்லாது—முட்டுப் பாடின்றி
கரம்பு—பயிர் செய்யா நிலம்
விளைபுலம்—பயிரிடும் பகுதி

தாகூரின் இளமைப் பருவம்

தோற்றுவித்தார் —உண்டாக்கியவர்
வல்லவர்—திறமையானவர்
விற்பன்னர்—கெட்டிக்காரர்
இல்லம்—வீடு
பேணி—போற்றி
பரிந்து—மனமிரங்கி
சூழல்—சூழ்நிலை
வியப்பு—ஆச்சரியம்

ஹர்ஷன்

இறுதி நாள்—கடைசி நாள்
அலட்டி—மனத்தை மேலும் புண்படுத்தி
ஒடுக்காது—அடக்காது
புகல்கின்றேன்—சொல்லுகின்றேன்
கடக்க—நீங்க
கவன்றால்—கோபித்தால்
ஈமத்தீ—பிணத்தீ
தமையன்—அண்ணன்

மாமல்லபுரச் செலவு

பஸ்—பொறியூர்தி
வானவூர்தி—ஆகாய விமானம்
விடுதி—தங்கு மிடம்
உலகளந்தான்—திருமால்
கலைமகள் நாதன்—பிரமன் (நான்முகன்)
வேயப்பட்டது—போடப்பட்டது
எஞ்சியுள்ள—மிகுதியாயுள்ள

பனைமரம்

வெப்பம்—சூடு
சிந்திப்பவர்—எண்ணுபவர்

பாரதியார்

திருமகள்—இலக்குமி
தோன்றல்—குலப்பிறப்பு
அன்புசால்—அன்பு மிகுந்த
பூரித்து—மிகமகிழ்ந்து
அகமிக—உள்ளம் பெரிதும்
பரிந்து—இரங்கி
தொண்டு—பணி

பாரதியாரின் கடிதம்

காத்திடுக—நேரத்தை எதிர் நோக்கி யிருக்க
மலர்ச்சி—புது உணர்வு
கமலம்—தாமரை
ஞாயிறு—சூரியன்
ஸம்மதமில்லை—விருப்பமில்லை
மலிக—பெருக
முழங்க—ஒலிக்க
செம்மை—செழிப்பு

# நமது தமிழ் வாசகம்

## முதலாம் புத்தகம்

### சிறப்புப் பகுதி

ஆசிரியர்

சென்னை பச்சையப்பன் கல்லூரித் துணைத்தமிழ்ப் பேராசிரியர்

அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட்.

மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட்

மதராஸ் பம்பாய் கல்கத்தா லண்டன்

1954

# முன்னுரை

இந்தியா விடுதலை பெற்றபின் தாய்மொழியானது கல்வித் திட்டத்தில் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றுவிட்டது. தத்தம் மொழியை வளர்க்க வேண்டும் என்ற ஆர்வம் அவ்வப்பகுதியில் உள்ள மக்கள் உள்ளத்தில் உண்டாயிற்று. சென்னை அரசாங்கத்தார் மக்கள் ஆர்வத்தை அறிந்து, இப்பகுதியில் உள்ள மொழிகளை வளர்க்க வழி பல வகுத்தனர். அவற்றுள் ஒன்று பாடநூல்களைத் திருத்தி அமைக்கும் முறை.

தமிழ்ப்பாடதிட்டத்தை அமைப்பதற்காக சென்னை அரசாங்கத்தார் 1951-ஜூன் 26ம் நாள் ஒரு திருந்திய முறையை சென்னை கெஜட்டில் பிரசுரம் செய்தனர். அதில் உயர்தர பாடசாலைகளின் முதல் மூன்று பாரங்களில் தமிழ்ப் பாடம் பொது, சிறப்பு என இருவகையாகப் பிரிக்கப்பட்டு, அவ்வவற்றிற்கு உரிய அமைப்புகளும் விளக்கப்பட்டன, அத்திட்ட முறைப்படி இதுவரை தமிழ்ப் பாடநூல்கள் வெளி வருகின்றன.

சென்னை மாக்மில்லன் கம்பெனியார் அப்பாடதிட்டத்தின் அடிப்படையில் முதல் மூன்று பாரங்களுக்குத் தமிழ் நூல்கள் வெளியிட விரும்பினர், அவர்தம் விருப்பமே இந்த நூற்றொகுதியாக வருகின்றது. மூன்று பாரங்களுக்கும் பொது, சிறப்பு என்ற தனித்தனிப்பகுதிகள், அரசியலார் வரம்பு கடவாத வகையில் அமைக்கப்பட்டு வெளிவருகின்றன. இப்பாடநூல் வரிசை மாணவர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்ற துணிபுடையேன்.

பாடசாலைகளின் தலைவர்களும் தலைமை ஆசிரியர்களும், தமிழாசிரியர்களும் இந்த நூற்றொகுதியை ஏற்று ஆதரிக்கக் கேட்டுக்கொள்ளுகிறேன். இத்துறையில் என்னை ஊக்கிய மாக்மில்லன் கம்பெனியாருக்கு என் நன்றி.

ஆசிரியன்.

# பொருளடக்கம்


| பாடம் | | பக்கம் |
|---|---|---|
| 1. | காவிரி | 5 |
| 2. | காந்தருவதத்தை | 16 |
| 3. | ஆறுமுக நாவலர் | 27 |
| 4. | சீன யாத்திரிகன் | 35 |
| 5. | கோதை | 45 |
| 6. | பாரி பறித்த பறி | 53 |
| I. | கடவுள் வாழ்த்து | 71 |
| II. | நீதிப் பகுதி | 72 |
| III. | கதைப் பகுதி | 73 |
| IV. | பல்சுவைப் பகுதி | 75 |
| | குறிப்புரை | 76 |
| | அருஞ்சொற் பொருள் | 82 |

# 1. காவிரி

ஒரு நாட்டைப் பல வகையிலும் வளமுறச் செய்து, சிறந்து விளங்க வைப்பது ஆறேயாகும். அதனாலன்றோ 'ஆறில்லா ஊருக்கு அழகு பாழ்' என்ற ஔவை மொழியும் பிறந்தது. நாகரிகத்தின் பிறப்பிடமாய் விளங்கிய பல நகரங்களும், ஆற்றங் கரைகளிலேதான் அமைந்திருந்தன. நாட்டின் தலைநகரங்கள்கூட ஆற்றங் கரைகளிலே அமைந்திருந்ததைக் காண்கிறோம். பாண்டி நாட்டின் தலைநகராகிய மதுரை வைகைக் கரையிலேயும், சோழ நாட்டின் தலைநகராகிய உறையூர் காவிரிக் கரையிலேயும் அமைந்துள்ளன. துறைமுகப்பட்டினங்களும் ஆறு கடலொடு கலக்குமிடத்தில் அமைந்திருந்தன. காவிரிப்பூம்பட்டினமே அதற்குத் தக்க சான்றாகும்.

நம் செந்தமிழ் நாடு பல சிறந்த ஆறுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. அவற்றுள் தலை சிறந்தது காவிரியாறெனின் மிகையாகாது. தமிழ் நாட்டின் ஆறுகளைக் கூறவந்த புதுமைக்கவி பாரதியாரும் தம் பாடலில், 'காவிரி தென் பெண்ணை பாலாறு' எனக் காவிரியையே முதலி லமைத்துக் கூறியுள்ளார். காவிரி பாய்தலின், சோழநாடு 'காவிரிநாடு' எனவும், அந்நாட்டையாண்ட சோழன் 'காவிரி நாடன்' எனவும் வழங்கப்பட்டதை இலக்கியங்கள் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. அத்தகைய சிறப்பு வாய்ந்த காவிரியாற்றைப் பற்றி நாமும் அறிந்து கொள்வோம்.

தென்னிந்திய நாடுகளில் ஒன்றாய் அமைந்துள்ளது குடகுநாடு. அந்நாட்டின் பெரும் பகுதியும் மேற்குத்

தொடர்ச்சிமலையைச் சார்ந்த பிரதேசமேயாகும். சையமலை என்பது அங்குள்ள தொரு குன்றாகும். அதற்கு, பிரம்ம கிரி, பிரம்ம கபாலம் என்னும் பெயர்களும் வழங்குகின்றன. இதன் சிகரத்திலமைந்துள்ள நீரூற்றுத்தான் காவிரி நதியின் பிறப்பிடம். இந் நீரூற்று என்றும் வற்ருது பெருகுவதாகும். ஆதலின் அங்குள்ளார் அதனைப் புண்ணிய தீர்த்தமெனக் கொண்டாடிப் போற்றுகின்றனர். அவ்விடத்தில் இவ் வாறு தலைக்காவிரி என்றழைக்கப்படுகின்றது.

குடகு நாட்டில் காவிரியாறு தோன்றுமிடத்தில் அந் நாட்டு மக்கள் முப்பதடி சதுரமான குளம் ஒன்றை அமைத்துள்ளனர். இக்குளத்தில் எப்போதும் இரண்டரை அடி ஆழமே தண்ணீர் இருக்கும். அதற்குமேல் சுரக்கும் நீரெல்லாம் வெளியே சென்று விடுமாறு வழி அமைக்கப்பட்



*By Courtesy of the Publicity Dept., Coorg State.*

தலைக்காவிரி

டுள்ளது. இதற்குத்தான் 'தலைக்காவிரி' என்று பெயர். இக் குளத்தின் மேல்கரையில் ஒரு சிறிய கோயில் அமைந்துள்ளது. அக்கோயிலில் கருணைப் பெருக்கான காவிரி யன்னையின் வடிவமைத்து மக்கள் வழிபாடு செய்து வருகின்றனர். அதனருகில் என்றும் அணையா விளக்கொன்றும் எரிந்து கொண்டிருக்கிறது. இவ்விளக்கு, என்றும் வற்ருது சுரக்கும் காவிரியன்னையின் அருட்பெருக்கின் வடிவாய் அமைக்கப்பட்டது போலும்!

குடகு நாட்டு மக்கள் இக்குளத்தைப் புண்ணிய தீர்த்தமாகக் கொள்ளுகிருர்கள். அதில் நீராடுதலைப் பெரும் பேருகக் கருதுகிருர்கள். சிறப்பாக ஐப்பசித் திங்களின் தொடக்கத்தில் ஓர் நீராடு விழாவைக் கொண்டாடுகிருர்கள். அந்நாட்டின் பல பகுதிகளிலுள்ள மக்களும் அங்கு வந்து கூடுகிருர்கள். அப்புண்ணிய தீர்த்தத்தில் நீராடி, காதோலை, கருமணி முதலிய மங்கலப் பொருள்களைப் படைத்து காவிரியில் விட்டு மகிழ்கிருர்கள். நம் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் மக்கள் இங்கு வந்து, இத்தீர்த்தத்தில் நீராடிச் செல்கிருர்கள்.

இத்தகைய சிறப்புடன் புறப்படும் காவிரி அங்குள்ள காடுகளின் வழியாக ஓடிப் பாகமண்டலம் என்னும் இடத்தை அடைகின்றது. அங்கே கனகா என்னும் சிறு நதி காவிரியில் கலக்கிறது. அதன் பின்னரே காவிரி "ஆறு" என்று சொல்லத்தக்கதாக அமைகின்றது. அங்கிருந்து சித்திரபுரம் என்னும் இடத்தின் வழியாயோடி பிரேஸர்பேட்டை என்னும் ஊருக்கருகில் மைசூர் நாட்டையடைகிறது. அங்கிருந்து ஏறக்குறைய இருபது கல் தூரம் குடகு, மைசூர் ஆகிய இரு நாடுகளுக்கும் எல்லையாக ஓடி, கண்ணேகால் என்ற ஊரையடைகின்றது. இப்பகுதிகளெல்லாம் மலைநாடாதலின் இயற்கை எழில் மிக்க காடுகளுக்கிடையே பலவாறு வளைந்

தும் நெளிந்தும், பாறைகளுக்கிடையே தவழ்ந்தும் ஓடிவரும் காவிரியின் காட்சி காணுதற்கரிய காட்சியாகும்.

இவ்வாறு ஓடிவரும் காவிரி சுஞ்சின்கட்டே என்னு மிடத்தில் குறுகிய பாறைகளுக்கிடையே ஓடி வருகிறது. அங்கு ஆற்றின் ஆழம் அதிகம். பின்னர் அது ஒரு அருவி யாக வீழ்ந்து ஓடித் திப்பூர் என்னுமிடத்தைச் சேருகின்றது. அங்கு ஹேமாவதி என்னும் சிறந்த நதி ஒன்று வந்து காவிரி யில் கலக்கிறது. பின்னும் சற்றுத் தூரத்தில், இலட்சுமண தீர்த்தம் என்னும் நதி காவிரியின் மறுப்புறத்தில் வந்து கலக் கிறது. இவ்வாறு ஒன்றன்பின்னொன்றாக இரண்டு நதிகள் காவிரியில் கலக்குமிடமாகிய முக்கூடலை யடுத்துத்தான் கிருஷ்ணராஜ சாகரம் என்னும் நீர்த்தேக்கம் அமைக்கப்பட் டுள்ளது. இந்த நீர்த்தேக்கத்தால் மைசூர் நாடு மிகவும் வளம் படுத்தப்பட்டுள்ளது. இவ்வணை மைசூர் மன்னர் கிருஷ்ணராஜேந்திர உடையார் முயற்சியால், அவர் காலத் தில் கட்டப்பட்டதால் அவர் பெயராலேயே இன்றும் வழங் கப்படுகிறது. இதற்கருகில்தான் இயற்கை எழிலுடன் செயற்கை எழிலும் சேர்ந்த பிருந்தாவனம் என்னும் நந்த வனம் அமைந்துள்ளது.

கிருஷ்ணராஜ சாகரத்தில் தேக்கப்பட்ட காவிரி, அணையைக்கடந்து முன்னிலும் வேகமாகப் பாய்ந்து செல் கிறது. அதன் போக்கில் அங்கங்கே சிறு சிறு தீவுகள் ஏற் பட்டுள்ளன. கௌதம ஆசிரமம் என்னுமிடத்தில் காவிரி இரு கிளைகளாகப் பிரிகிறது. பிரிந்த இரு கிளைகளும் எட்டுக் கல்தூரம் ஓடிய பிறகு ஒன்று சேருகின்றன. அந்த இடத் திற்குச் ' சங்கமம் ' எனப் பெயர் வழங்கி வருகிறது. இவ் விரு கிளைகளுக்கும் இடையேயுள்ள தீவு தான் சீரங்கப்பட்ட ணம் என்னும் வரலாற்றுச் சிறப்புவாய்ந்த இடமாகும்.

அங்கிருந்து, காவிரி தென் கிழக்காக ஓடி நரசிப்பூர்



கண்ணம்பாடி அணை அல்லது கிருஷ்ணராஜசாகரம்

என்னும் ஊரையடைகின்றது. அங்கு கப்பினி என்னும் ஓராறு ஓடிவந்து காவிரியிற் கலக்கிறது. காவிரி பின்னும் சிறிது தூரம் சென்ற பின்னர், வரலாற்றுச் சிறப்புடைய தாலக்காடு என்னுமிடத்தை யடைகிறது. அவ்விடத்தைத் தாண்டிய பின்னர், சுவர்ணவதி என்னும் ஆறு காவிரியிற் கலக்கின்றது. தன்னிற் கலந்த பல சிற்ருறுகளின் வெள்ளத்தையெல்லாம் தன்னுள்ளடக்கிக் கொண்ட காவிரி மிகப் பரந்த பெரியாறென உருவெடுத்து ஓடத்தொடங்குகிறது. இவ்வாறு செல்லும்போதுதான் இருநூற்றைம்பது அடி ஆழமுள்ள நீர்வீழ்ச்சியாகக் கீழிறங்குகிறது. இதுவே உலகப்புகழ்பெற்ற சிவசமுத்திர நீர்வீழ்ச்சியாகும்.

சிவசமுத்திரமும் காவிரியின் நடுவிலுள்ள ஒரு சிறு தீவேயாகும். இப் பகுதியில் காவிரி வடக்கு நோக்கி ஓடுவதால், இருகிளைகளாகப் பிரிந்து மேற்கில் ஒன்றும், கிழக்

கில் ஒன்றுமாக ஓடி அருவியாகக் கீழிறங்குகிறது. மேற்கில் உள்ள அருவி ககனசுகி எனவும், கிழக்கில் உள்ள அருவி பார்சுகி எனவும் அழைக்கப்படுகின்றன. ககனசுகி, மூன்று கிளைகளாகப் பிரிந்து பேரிரைச்சலுடன் விழுகிறது, இவ்வருவி காண்பதற்குக் கம்பீரமான தோற்றமுடையது; ஆனால் காண்போர்க்குப் பேரச்சத்தை விளைக்கிறது. இதற்கு ஒரு கல் கிழக்கில் பார்சுகி, மிகப் பரந்து ஓடி, அமைதியாகக் கீழிறங்குகிறது, எளிதில் அதனருகில் சென்று நீர்வீழ்ச்சியின் எழிலைக் கண்டு மகிழலாம். இவ்வருவி, அடிவாரத்திலுள்ள தொரு பெரிய குளத்தில் கலந்து பின்னர் வடதிசையாகவே ஓடி மேற்குக் கிளையுடன் கலந்து காவிரியாகப் பாய்கிறது.

இவ்வாறு ஒன்று சேர்ந்த காவிரி கிழக்கு முகமாகப் பாய்ந்து குறுகிய ஒரு மலைக் குடைவின் வழியே செல்லுகிறது. அதன்பின்னர் ஷிம்ஷா, அர்க்காவதி என்னும் ஆறுகள் காவிரியுடன் கலக்கின்றன. இதன்பிறகு இருபுறமும் மலைச் சரிவிருப்ப அதன் நடுவே மிகவும் குறுகிய வழியில் காவிரி ஓடுகிறது. இவ்விடத்தில் காவிரியின் அகலம் பன்னிரண்டே அடிகள்தான். இவ்விடத்தில் காவிரியை ஒரு ஆடு தாண்டிவிடக்கூடும். ஆதலால் இவ்விடத்திற்கு 'ஆடு தாண்டும் காவிரி' என்று பெயரிட்டுள்ளனர்.

இவ்வாறு மிகக் குறுகி ஓடிய காவிரி, மைசூர் நாட்டைத் தாண்டி சேலம், கோவை மாவட்டங்களின் எல்லையாக நெடுந்தூரம் செல்கிறது. அப்போது பல ஆறுகள் காவிரியில் அங்கங்கே வந்து கலக்கின்றன. காவிரி மைசூரை விட்டுப் பிரிந்த கொஞ்ச தூரத்தில் மிகவும் அழகமைந்த 'ஹொகெனகல்' என்னும் நீர்வீழ்ச்சி உள்ளது, அந் நீர்வீழ்ச்சியின் அடியில் உள்ள பெரிய மடுவிற்கு 'யாக குண்டம்' என்பது பெயர். அது மிகவும் புனிதமானதாகக்

கொண்டுவணங்கப்படுகிறது. அம்மடுவிற் புகுந்துமறைந்த காவிரியைச் சோழ மன்னன் ஒருவன், தன் தலையையே காணிக்கையாகக் கொடுத்து வெளிப்படச் செய்தான் என ஒரு கதை வழங்குகிறது.

இந்த நீர்வீழ்ச்சிக்குப் பிறகு காவிரி பலபடியாகத் திரும்பி ஓடுகிறது. இப்பகுதியில் சனத்குமார நதியும், தோப்பூராறும் காவிரியுடன் கலக்கின்றன. காவிரியின் போக்கை ஒட்டிக் கீழ்ப்புறத்தில் சீதாமலையும், மேற் புறத்தில் பாலமலையும் அமைந்துள்ளன. இவ்விரு மலைகளும் ஓரிடத்தில் ஒன்று சேர்வன போல் நெருங்கி வந்துள்ளன. அந்த இடத்தில் தான் மிகச் சிறந்த மேட்டூர் அணை கட்டப்பட்டுள்ளது. இம்மேட்டூர் அணையால் விளைந்துள்ள நன்மைகள் மிகப்பல. தஞ்சை மாவட்டத்தில் கரம்பு நிலமாயிருந்த பகுதிகள் யாவும் வளமிக்க விளைபுலங்களாக்கப்பட்டு விட்டன. தமிழ் நாட்டின் பலபகுதிகளும் இங்கிருந்து மின்சாரத்தைப் பெறுகின்றன. இவ்விடத்தே பல புதுப்புதுத் தொழிற்சாலைகளும் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

மேட்டூர் அணையைத் தாண்டிய பிறகு காவிரி சமவெளிக்கு வந்து விடுகிறது. ஏறக்குறைய இருபத்தைந்து கல்கள் வந்த பிறகு பவானி என்னும் ஊருக்கருகில் பவானியாறு காவிரியோடு கலக்கிறது. ஈரோட்டைத் தாண்டிய பிறகு காவிரி கிழக்கு நோக்கிப் பாய்கிறது. அவ்வாறு பலகல் தூரம் ஓடிய பிறகு நொய்யல் என்னும் ஆறு காவிரியுடன் கூடுகிறது. அதற்கும் சிலகல்கள் கிழக்கே திருமணி முத்தாறு என்னும் ஆறு காவிரியிற் கலக்கிறது, இன்னும் கிழக்கே வந்த பிறகு கருருக்கருகில் அமராவதி என்னும் ஆறு காவிரியிற் கலக்கின்றது. இதுவே காவிரியில் வந்து சேரும் கடைசி உபநதியாகும்.

கரூருக்குக் கிழக்கில் காவிரி மிகவும் பெரியதாகி விடுகின்றது. ஏறக்குறைய ஒரு கல் அகலமுள்ளதாகி, அகண்ட காவிரி எனப் பெயர் பெறுகின்றது. திருச்சிராப் பள்ளிக்கு மேற்கில், பத்து மைல் தூரத்தில் உள்ள இலமனூர் என்னும் இடத்தில் காவிரி இரு கிளைகளாகப் பிரிகின்றது. அதில் வட புறம் செல்லும் கிளைதான் கொள்ளிடம் ஆகும். இந்த இடம் முக்கொம்பு எனவும் வழங்கப்பெறும். இவ்விடத்திற்குச் சற்று மேற்கில் காவிரியின் தென்புறத்தில் திருப்பராய்த்துறை என்னும் பாடல் பெற்ற சிவத் தலமும், வடகரையில் குணசேகரபுரம் என்னும் சிறந்த வைணவத் தலமும் அமைந்துள்ளன.

கொள்ளிடமே காவிரியிலிருந்து பிரியும் முதற் கிளை நதியாகும். இது காவிரியைக் காட்டிலும் பள்ளமாயமைந்து விட்டதால் காவிரியின் தண்ணீர் அதில் சென்று வீணுகாதவாறு கொள்ளிடத்தின் குறுக்கே அணைகட்டித் தண்ணீரைத் தேக்கியிருக்கிறுர்கள். இதுவே மேலணை என்று அழைக்கப்படுகிறது. வெள்ளக் காலத்தில் அணைக் கதவுகள் திறக்கப்பட்டு, மிகுதியாக உள்ள தண்ணீர் கொள்ளிடத்தில் விடப்படுகிறது. கொள்ளிடம் பாய்ச்சலுக்குப் பயன்படுவதில்லை. எனினும், கும்பகோணத்திற்கு வடக்கில் இதன் குறுக்கே கீழணை என்றதொரு பெரிய அணையைக்கட்டித் தண்ணீரைத் தேக்கித் தென்ஞர்க் காடு மாவட்டப் பகுதிகளைச் செழிக்கச் செய்துள்ளனர். அங்குள்ள மிக முக்கியமான வீராணத்தேரிக்கு இங்கிருந்தே தண்ணீர் கொண்டு செல்லப்படுகிறது.

காவிரி, கொள்ளிடம் என்னும் இரண்டு பேராறுகட்கு மிடையில் தான் திருவரங்கப் பெருநகரம் எனும் வைணவத் தலமும், மூவராலும் பாடப்பெற்ற திருவானைக்கா என்னும் சிவத்தலமும் உள்ளன. காவிரியின் தென் கரையில்தான்

பழைய சோழர் தலைநகராகிய உறையூரைத் தன்னகத்தே கொண்ட, வரலாற்றுச் சிறப்புவாய்ந்த திருச்சிராப்பள்ளி அமைந்து விளங்குகிறது.

திருச்சிராப்பள்ளிக்குக் கிழக்கே எட்டுக் கல் தூரத்தில் காவிரியின் குறுக்கே அழகிய பெரிய அணை ஒன்று கட்டப்பட்டுள்ளது. இவ்வணை மிகப் பழங்காலத்திலேயே சோழ மன்னன் ஒருவனால் கட்டப்பட்டுக் கல்லணை என்றழைக்கப்பட்டது. கடந்த நூற்றாண்டின் இறுதியில் சிறந்த முறையில் இது மாற்றியமைக்கப்பட்டு, 'கிராண்ட் அணைக்கட்டு' என்று வழங்கப்பட்டு வருகிறது. இவ்விடத்தில் தான் காவிரியின் மிகப் பெரிய கிளை நதியாகிய வெண்ணாறும், அண்மையில் வெட்டப்பட்ட கல்லணைக்கால்வாயும் பிரிகின்றன. காவிரியின் வடபுறமாகப் பிரியும் உள்ளாறு காவிரியை மிகவும் அண்மையில் செல்லும் கொள்ளிடத்துடன் சேர்க்கின்றது.

இதன் பின்னர்க் காவிரி தன் வடிவத்தில் சுருங்கத் தொடங்கி விடுகின்றது. குடமுருட்டி, அரிசிலாறு போன்ற



கல்லணை

கிளைநதிகள் பிரிந்த பிறகு மிகவும் சிறியதாக ஆகிவிடு கின்றது. செந்தமிழ்க் கல்லூரி திகழும் திருவையாறு, சுவாமிமலை என்றழைக்கப்படும் திருவேரகம், அரசியலார் கல்லூரி முதலிய கல்வி நிலையங்களைக் கொண்டு, சிறந்த வியாபாரத் தலைநகரமாக விளங்கும் திருக்குடந்தை, தமிழ் வளர்க்கும் மடங்களுள் தருமபுரத்தைத் தன்னகத்தே கொண்ட திருமயிலாடுதுறை முதலிய நகரங்களின் வழியே சென்று, மூங்கிற் பாலத்திற் கடக்குமாறு குறுகி, அமைதி யுற்று, ஆரவாரமின்றித் தரங்கம்பாடிக்கு வடக்கில் பத்துக் கல் தூரத்தில் காவிரி கடலொடு கலந்து விடுகின்றது.

காவிரி கடலொடு கலக்கும் இச்சங்கமத்துறை மிகச் சிறந்த புண்ணிய தீர்த்தமாகக் கொள்ளப்படுகின்றது. இவ்விடத்தில் தான் 'பூம்புகார்' என்று புலவர் பலரும் பாராட்டிக் கூறிய, தமிழர் நாகரிகத்திற்கும், மேம்பாட்டிற் கும் எடுத்துக்காட்டாய் விளங்கிய, கடல்கடந்து பிறநாடு கள் பலவற்றெடும் வாணிபஞ் செய்து வீறு கொண்டு விளங்கிய சோழர் தலைநகரமாகிய காவிரிப்பூம்பட்டினம் அமைந்திருந்தது. அஃது இன்றே கடலாற் கொள்ளப் பெற்று, மண்மேடிட்டு ஒரு சிற்றூராய்க் காட்சி யளிக் கின்றது.

நம் நாட்டின் மேற்குக் கடற்கரையையடுத்துள்ள குடகு நாட்டில் தோன்றிய காவிரி, பலபடியாக ஓடி, சோழ நாட்டை வளங்கொழிக்கச் செய்து, புனல் நாடு, நீர்நாடு என்றெல்லாம் புகழச் செய்து, 'சோழ நாடு சோறுடைத்து' என்னும் முது மொழியையும் தோன்றச் செய்து, கீழ்கடலிற் சென்று சேர்கின்றது. வான் பொய்ப்பினுந் தான் பொய்யாத தாகிய காவிரி, இன்று போல் என்றும் தன் அமுதப் பெருக் கால் நாட்டின் வளம் பெருக்கி நல்வாழ்வு தந்து நலம் பல பெருக்கும் என்பது உறுதி.

## கேள்விகள்

1. காவிரி தோன்றுமிடத்தில் எவ்வாறு அழைக்கப் படுகிறது ? அதன் சிறப்பென்ன ?
2. காவிரியின் துணை நதிகள் யாவை ?
3. காவிரியின் முக்கிய கிளை நதிகள் யாவை ?
4. காவிரியில் கட்டப்பட்டுள்ள அணைக்கட்டுகள் யாவை ?
5. காவிரியில் அமைக்கப்பட்டுள்ள நீர்த்தேக்கங்கள் யாவை ?
6. காவிரிக் கரையிலுள்ள முக்கிய நகரங்கள் யாவை ?
7. காவிரி எந்த நாட்டை எவ்வாறு வளங்கொழிக்கச் செய்கிறது ?
8. காவிரியிலமைந்துள்ள புண்ணிய தீர்த்தங்கள் யாவை ?
9. காவிரிப்பூம் பட்டினத்தின் வரலாறும், சிறப்புகளும் யாவை ?

## பயிற்சி

1. காவிரியின் தோற்றம், போக்கு, முடிவு முதலிய வற்றை விளக்கி ஒரு கட்டுரை எழுதுக.
2. தேச படத்தின் மூலம் காவிரி பாயும் இடங்களையும், நாடுகளையும் அறிந்துகொள்க.
3. காவிரியின் சிறப்புக்களைத் தொகுத்து எழுதுக.
4. ஒரு நாட்டிற்கு ஆறு எங்ஙெந்த வகையில் நன்மை செய்கின்றதென்பதனை விளக்கி எழுதுக.

## இலக்கணம்

(1) பலவின் பாலுக்கு இரண்டு உதாரணங்கள் தருக.
(2) திசையைக் குறிக்கும் இரண்டு சொற்களை எழுதுக.

(3) இப்பாடத்தில் ஒருபொருள்குறித்த பன்மொழிச் சொற்களைத் திரட்டி வரைக.

(4) ஆரவாரமின்றி, வடபுறமாக, இச் சொற்களிலிருக்கும் இன எழுத்துக்களைக் குறிப்பிடுக.

(5) உயிர் மெய் நெடிலிற்கும், உயிர்க் குறிலுக்கும் நன்ஞன்கு உதாரணம் தருக.

(6) சேர்த்து எழுதுக :—

தண்ணீரை + தேக்கி
நிலையங்களை + கொண்டு
நல் + வாழ்த்து
அருள் + பெருக்கு
காவிரி யாற்றை + பற்றி

## 2. காந்தருவதத்தை

பலவளங்களும் நிறைந்த ஏமாங்கத நாடென்ற ஒன்று பண்டைக் காலத்தில் சிறந்திருந்தது. அந்நாட்டின் தலைநகர் இராசமாபுரம். அந்நாட்டை ஆண்டுவந்த சச்சந்தன் என்ற மன்னனை வஞ்சனையால் கொன்று, அமைச்சனுயிருந்த கட்டியங்காரன் என்பான் தானே அரியணை ஏறி அரசு செலுத்தினன். அவன் ஆண்ட காலத்தே அந்நாட்டுத் தலைநகரில் சீதத்தன் என்ற செல்வமிக்க வணிகன் வாழ்ந்து வந்தான். அவன் சிறந்த வணிகன் ஆனமையின் அடிக்கடி கப்பல் ஏறி வெளிநாடுகளுக்குச் சென்றும் பொருளை விற்றும் வாங்கியும் செல்வத்தில் சிறந்து வந்தான்.

ஒருமுறை சீதத்தன் தான் எடுத்துச் சென்ற பொருள்களையெல்லாம் விற்று, வேண்டும் பொருள்களை வாங்கிக் கொண்டு தன் நாடு நோக்கி வந்துகொண்டிருந்தான்.

நடுக்கடலில் வரும்போது ஒரு புயல் கிளம்பிற்று. கப்பல் ஆடியது. அனைவரும் நடுங்கினர். கப்பல் கடலுள் ஆழ்ந்தது. சீதத்தன் கடலில் ஆற்றாது தத்தளிக்கையில், அருகே ஒரு மரக்கட்டை அகப்பட அதைப்பற்றிக் கொண்டே நீந்தினான். தன் வழிபடு கடவுளாகிய அருகதேவனை வாழ்த்திக் கொண்டே நீந்தினான். தன்னை மறந்து உணர் விழந்தான்.

சீதத்தன் கண்விழித்துப் பார்க்கையில் தான் ஒரு கரையில் ஒதுக்கப்பட்டிருப்பதைக் கண்டான். அருகே நகர்ந்து சென்ற பக்கத்திருந்த நண்டுகளை நாரைகளும் அன்னங்களும் ஒன்றும் செய்யாதிருந்தன. அதைக்கண்ட சீதத்தன் தனக்கும் கொடுமை ஒன்றும் இருக்காதெென நினைத்தான். பின்னர் எழுந்து சுற்றுமுற்றும் பார்த்தான். கடலை நோக்கினான். கண்ணுக் கெட்டிய தூரமட்டும் கப்பல் ஒன்றும் தெரியவில்லை. திருப்பித் தரையை நோக்கினான். தூரத்தே ஒருவன் தன்னை நோக்கி வந்து கொண்டிருப்பதை அறிந்தான்.

சீதத்தன் தன்னை நாடி வந்தவனிடம் தான் அங்கு வந்த வரலாற்றை விளக்கி உரைத்தான். வந்தவனோ புன் முறுவலோடு அவற்றைக் கேட்டு, தான் வித்தையில் வல்லவன் என்றும், தன்னால் மூழ்கிய கப்பலை மீட்டுத் தர இயலும் என்றும் கூறினான். பின்பு அவன் சீதத்தனைத் தன்னோடு அருகிலுள்ள நகருக்கு அழைத்துச் சென்று அந்நகர அழகுகளையெல்லாம் காட்டினான். அவன்பெயர் தரன் என்றும் அந்நகர அரசனுக்கு வேண்டியவன் என்றும் கூறினான். அவன் சீதத்தனைத் தன் மாளிகைக்கு அழைத்துச் சென்று விருந்து அளித்தான். பிறகு அந்நகரத்து அரசனுடைய சிறப்புக்களையெல்லாம் கூறினான். அவ்வரசனுக்கு அழகிய மகள் ஒருத்தி தத்தை என்பாள் இருப்பதையும்,

அவளுக்கு மணமுதலிய சிறப்புக்கள் இராசமாபுரத்தே நிகழும் என்று சோதிடன் கூறியுள்ளதையும், அவள் மணப்பருவ மெய்தியுள்ளமையின் அவளை இராசமா புரத்துக்கு அனுப்ப வழி ஆராய்ந்து கொண்டிருப்பதையும் கூறினன். மேலும் அவர்கள் காந்தருவதத்தையை எவ் வாறு இராசமாபுரத்துக்கு அனுப்பலாம் என்று எண்ணிய போதுதான் சீதத்தன் கப்பல் அந்தப் பக்கம் வந்ததையும், அதைத் தன் வித்தையால் மூழ்கியது போல் காட்டியதை யும், சீதத்தன் கப்பல் சேதமுருது உள்ளதையும் கூறினன். அனைத்தையும் கேட்ட சீதத்தன் ஒருபுறம் மகிழ்ச்சியும் ஒருபுறம் வியப்பும் அடைந்து அந்நாட்டு அரசனைக் காண விரும்பினன்.

இருவரும் அரண்மனை நோக்கிச் சென்ருர்கள். அரண் மனையின் அந்தப்புரத்தில் அரசன் கலுழவேகன் தன் மனைவியோடும் மகளோடும் பேசிக் கொண்டிருந்தான். இவர்கள் சென்றதும் அரசன் அவர்களைச் சீதத்தனுக்கு அறிமுகப்படுத்தினன். பின் அரசன் சீதத்தனை நோக்கிப் பேசினன்.

'இதோ காண்கின்றவள் என் மகள். காந்தருவதத்தை என்னும் பெயரினள். வீணையில் வல்லவள். அழகிலே சிறந்தவள். நிறைந்த நல முடையவள். இவளை நீ உன் மகளே என எண்ணி, உன் நாட்டுக்கு அழைத்துச் சென்று வீணையால் இவளை வெல்லுவானுக்கு இவளையே மணத்தில் கொடுத்து மகிழ்வாயாக' என்ருன். ஆனல் பக்கத்தி லிருந்த அரசி தன் மகளைப் பிரிய வருந்தினள். மன்னன் மகளிர் தம் மணளரோடு வாழவேண்டிய சிறப்பை வற் புறுத்தினன். பின் வீணைபதி என்னும் தோழியையும் உடன் அனுப்ப ஏற்பாடு செய்தான். சீதத்தன் பின் அங்கு அரசனளித்த விருந்தை ஏற்று உண்டான்.



கலுழவேகன் காந்தருவதத்தையை வழியனுப்புகிறான்.

பின்னர் அனைவரும் காந்தருவதத்தையை சீதத்த னுடன் வழிகூட்டி அனுப்பக் கடற்கரைக்கு வந்தனர். தரன் சீதத்தனுக்கு அழிந்ததாகத் தோன்றிய அவனுடைய கப்பலைக் காட்டினான். துன்பத்தின் முடிவில் இன்பம் விளை வதையும் குறிப்பிட்டான். பிறகு அனைவரும் காந்தரு வதத்தையை வழிகூட்டி அனுப்ப அவள் சீதத்தனுடன் அவனது கப்பலில் ஏறினாள். கப்பலில் கண்ட தன் நண்பர் களிடம் சீதத்தன் நடந்தவற்றைக் கூறினான். கப்பல் புறப் பட்டு விரைவில் ஏமாங்கத நாட்டு இராசமாபுரத்தை வந்தடைந்தது.

தன் வீட்டுக்கு வந்த சீதத்தன் தன் மனைவியாகிய பதுமையிடம் காந்தருவதத்தையை ஒப்படைத்து, அவளைப்

பற்றி விளக்கிக் கூறினன். பதுமையும் அவளைத் தன் மகளே போல் பாதுகாத்து வந்தாள். அவளுக்கென்று தனி யாகக் கன்னிமாடமும் அமைத்துக் கொடுத்தான் சீதத்தன். பின் தன் நாட்டு அரசனுகிய கட்டியங்காரனிடம் அந்நிகழ்ச் சியைச் சொல்லி, அவளுக்குச் சுயம்வரம் ஏற்பாடு செய்ய வேண்டும் எனக் கூறினன். கட்டியங்காரனும் அவன் வேண்டுகோளுக்கு இணங்கினன். உடனே சீதத்தன் தத்தையின் மணத்துக்கு ஒரு நல்ல நாளை ஏற்பாடு செய்து, மணத்துக்கு வேண்டும் அலங்காரம் முதலியவைகளையும் செய்யத் தொடங்கினன்.

பின் நாடு தோறும் முரசறைந்து தத்தையைப் பற்றி யும் அவளுக்கு நடக்க இருக்கும் மணம் பற்றியும் கூற வைத்தான். அம் மணச்செய்தி கேட்ட மன்னரும் மக்களும் குறித்த நாளில் இராசமாபுரத்தே வந்து சேர்ந்தனர். வந்த மன்னர்களையெல்லாம் சீதத்தனும் அரசன் பணியாட்களும் வரவேற்று உபசரித்துத் தக்க இடங்களும் இருக்கைகளும் கொடுத்துப் போற்றினர்

மணநாள் வந்தது. வீணையில் வல்ல அத் தத்தையை வீணைப்போரில் வென்று, அவளை மணக்க வந்த மன்னர் பலரும் அழகிய சுயம்வர மண்டபத்தே கூடினர். வீணை வாசிக்கத் தொடங்கும் நேரம் வந்தது. சீதத்தன் பல தானங் களையும் சிறப்புக்களையும் செய்தான். தோழிப் பெண்கள் தத்தைக்கு நீராட்டி நன்கு அலங்கரித்து, மணப்பந்தலில் கொண்டுவந்தனர். அவள் அழகினைக் கண்டு அனைவரும் வியந்தனர். அனைவரும் அவளை நோக்கி வியந்து கொண்டே யிருக்கையில் அவளது தோழிப் பெண்கள், அவளுக் கென அமைத்திருந்த உயரிய பீடத்தில் அவளை இருக்க வைத்தனர். அவளும் அவள் தோழி வீணாபதி தேர்ந்தெடுத் துக்கொடுத்த நல்ல யாழைக் கையிலே வாங்கி, சுருதி



*தத்தை யாழ்வாசிக்கிருள்.*

கூட்டி, தன் கண்டமும் யாழும் கலக்கப்பாடினாள். கேட்ட அனைவரும் தம்மை மறந்தனர்.

தத்தை யாழ் வாசித்தவுடன் அவள் தோழியர் அங்குள்ள அரசர்களை நோக்கி, தத்தையை யாழில் வெல்வார் வந்து பாடுமாறு கேட்டார்கள். அவள் பாடலுக்கேற்ப யாழ் வாசித்தோ, அல்லது அவள் வாசிப்பிற்கு ஏற்பப் பாடியோ அவளை வெல்லுமாறு கூறினர். அவள் தோற்றத்திலும் பாட்டிலும் மயங்கிய பலரும் அவளை மணக்க முயன்றனர். எனவே ஒவ்வொருவரும் தாம்தாம் யாழில் வல்லவர் என்று கூறிக் கொண்டு யாழ் வாசிக்கச் சென்றனர். ஆனால் ஒருவரும் வெற்றி பெருது தோற்றனர். வந்த அரசர்பலரும் ஒருவர் பின் ஒருவராகத் தோற்றுவந்தனர். இவ்வாறே

அந்த் யாழ்வினை ஆறு நாட்கள் நடைபெற்றது. வெல்வார் ஒருவரும் இல்லையோ என வியந்தான் சீதத்தன்.

அந்நகரத்தின் மற்றொருசார் கந்துக்கடன் என்ற சிறந்த வணிகன் வாழ்ந்து வந்தான். அவன் தன் மகனெனப்போற்றி வளர்த்த சீவகன் என்னும் சிறந்த வீரன் இந்நிகழ்ச்சிகளை யெல்லாம் கேட்டறிந்தான். சீவகனுக்கு நண்பர் பலர். அவருள் சிறந்தவன் புத்திசேனன் என்பவன். அவன் மூலம் சீவகன் தான் சென்று யாழ் வாசித்துத் தத்தையை அடைய விரும்பும் கருத்தைத் தந்தையாகிய கந்துக்கடனுக்கு அறிவித்தான். கந்துக்கடனும் அதற்கு இசைந்தானுயினும், முன்னமே அரசனுகிய கட்டியங்காரனுக்கும் சீவகனுக்கும் வேறு காரணமாகப் பகைமை உள்ளமையின் அரச சபைக்குப் போகும் போது தக்க காவலோடு செல்லப் பணித்தான். சீவகனும் அவ்வாறே தக்க நண்பர்களோடும் படைகளோடும் தத்தையின் சுயம்வர மண்டபத்தை அடைந்தான்.

அரசர்கள் அனைவரும் தோற்றுத் தத்தையோடு யாழ் வாசிக்க வல்லவர் ஒருவரும் இல்லாது, ஒன்றும் செய்யவும் முடியாது வீற்றிருந்த அந்த வேளையில் சீவகன் தன் நண்பர்களோடு அம்மண்டபத்துள் புகுந்தான். தத்தையும் அவளது தோழிமாரும் சீவகனைக் கண்டனர். மற்றவரும் நோக்கினர். சீவகனைக் கண்ட தத்தை ஒரு வேளை அவன் தன்னை வெல்லவும் கூடும் என்று நினைத்தாள். அவள் ஏவலின்படி சீவகன் பாடவேண்டிய உயரிடத்தில் சென்று அமர்ந்தான். அவனைக் கண்ட அனைவரும் போற்றினர்.

சீவகன் யாழ் வாசிக்கத் தொடங்கினுன். வீணுபதியோ நல்ல யாழ் தவிர்த்து மற்றவற்றையெல்லாம் ஒன்றன் பின் ஒன்ருகக் கொடுத்தாள். சீவகனே ஒவ்வொன்றிலும் உள்ள குற்றங்களை விளக்கிப் பின் நல்யாழைப் பெற்ருன்.

பின் அவன் சுருதி கூட்டி இசையெழுப்பி இனிமையாகப் பாடினன். முன்னமே வடிவு கண்டு தோற்ற தத்தை அவன் இசைகேட்டதும் தன்னை மறந்தாள். அந்த மறப்பில் தான் பாடவேண்டிய நிலையும் தவறினள். எனவே அவள் இசைப் போரில் சீவகனுக்குத் தோற்றள். அருகே இருந்த தோழியர் தாம் வைத்திருந்த மாலையைக் காந்தருவதத்தையின் கையில் கொடுத்தனர். அவளும் அம்மாலையைச் சீவகன் கழுத்தில் இட்டாள். தோழியரும் வீணைப் போர் முடிந்தது என்று திரையிட்டு விட்டார்கள்.

சீவகன்மேல் முன்னமே விரோதங்கொண்டிருந்தான் கட்டியங்காரன் என்னும் அக்காவலன். அவன் இந்த நிகழ்ச்சி கண்டு வருந்தினன். வந்திருந்த அரசர்களையெல்லாம் அச்சீவகனுக்கு எதிராகப் போர் தொடுக்கச் சொன்னன். அரசன் மகளாகிய காந்தருவ தத்தையை, அரசருள் ஒருவன் மணந்து கொள்ளாது வணிகன் மகனகிய சீவகன் மணந்து கொள்வது தவறு என்று உரைத்தான். அரசர்கள் வாளாயிருந்தால் பின் அவர்கள் நாட்டையும் கொள்ளக் கூடும் என்று கூறி அவர்களை அவன் மேல் போருக்கு எழச்செய்தான். அவர்களும் தத்தமக்குக் காந்தருவதத்தை கிடைக்கவில்லையே என்ற வருத்தத்தால் ஒருசேரத் திரண்டு சீவகன் மேல் போர் தொடுக்க முயன்றனர்.

அவ்வேளையில் சீவகன் நண்பனகு அங்கிருந்த பதுமுகன் அரசர்கள் செயல் தகாதது என்று எடுத்துக் கூறினன். வீணைப்போரில் வென்றவர் யாவராயினும் அவரே தத்தையை அடையவேண்டும் என்ற முறைப்படி சீவகன் அடைந்ததை விளக்கினன். அவர்கள் போரிட்டால் அது அரச குலத்துக்கே பழி தருவது எனக் காட்டினன். மேலும், அப்படிப் போர் செய்தாலும், சிறந்த வீரனகிய சீவகனை அனைவரும் ஒன்று சேர்ந்தாலும் வெல்லுதல் இயலாது



சீவகன் மாற்ருரோடு மலைகிருன்.

என்பதையும் எடுத்துரைத்தான். கட்டியங்காரன் செய்து வந்த கொடுமைகளையும் கூறினுன். பதுமுகன் எவ்வளவு கூறியும் மன்னர் கேட்கவில்லை. எனவே போர் மூண்டது.

மதியற்ற மன்னவர் செயல் கண்ட பதுமுகனும், அவன் தோழர்களும், அவர்களோடு வந்திருந்த படைகளும் போர் செய்யத் தொடங்கினர். அதே வேளையில் திரையினுள் இருந்த சீவகன் காந்தருவதத்தையைத் தேற்றிப் போருக்குப் புறப்பட்டான். தத்தை முதலியோர் அஞ்சினர். வெளி வந்த சீவகன் பதுமுகனைத் தத்தைக்குக் காவலாக இருக்கக் கட்டளையிட்டு அரசரோடு போர் தொடங்கினுன். தான் ஒருவனே நின்று எதிர்த்து, வந்து அரசர்களையெல்லாம் வென்ருன். அரசர் படை உடைந்தது. அனைவரும் தோற்ருேடினர்.

கட்டியங்காரன் வாட்டமுற்றுச் சென்ருன். சீவகன் தன் நண்பர்களும் பிறரும் சூழ, காந்தருவதத்தையையும் அவள் தோழியர்களேயும் அழைத்துக் கொண்டு தன்மனே சென்று சேர்ந்தான். அவன் தந்தையாகிய கந்துக்கடனும் அவன் மனேவியும் சீவகனேயும் தத்தையையும் ஏற்று மகிழ்ந்தனர். சீவகன் காந்தருவதத்தையோடு வாழ்ந்து வந்தான்.

(ஆனல் சீவகனுக்கு மட்டுமன்றி வேறுயாருக்கும் அவனே கட்டியங்காரனல் வஞ்சித்துக்கொல்லப்பட்ட சச்சந்தன் என்னும் அரசனது மகன் என்பதும், அவன் தன் தந்தையைக் கொன்ற கட்டியங்காரனேக் கொன்று நாட்டைத் தன் உரிமையாக்கிக் கொள்ள காலமும் வாய்ப்பும் நோக்கிக் காத்துக் கொண்டிருக்கிருன் என்பதும் தெரியாது.)

## கேள்விகள்

1. சீதத்தன் யார் ? அவனேப் பற்றி அறிவன யாவை ?
2. சீதத்தன கப்பல் மறையக் காரணம் என்ன ?
3. புதுத் தீவில் சீதத்தன் கண்டன யாவை ?
4. காந்தருவதத்தை பிறந்ததும் கணி கூறியன யாவை ?
5. இராசமாபுரத்தில் தத்தைக்கு எவ்வாறு மணம் ஏற்பாடு செய்தனர் ?
6. தத்தையை அடையவேண்டுபவர் என்ன செய்ய வேண்டும் ?
7. சீவகன் யார் ? அவன் தத்தையை அடைய என்ன செய்தான் ?
8. தத்தை சீவகனிடம் யாழில் தோற்கக் காரணம் என்ன ?
9. சீவகன் வெற்றியைக் கண்ட கட்டியங்காரன் கூறியன யாவை ?

10. சீவகன் வெற்றியால் மனம் புழுங்கிய மன்னர் என்ன செய்தனர் ?

11. சீவகன் உண்மை நிலை யாது ?

## பயிற்சி

1. சீவகன் பிறப்புப் பற்றி ஆசிரியரிடம் கேட்டு அக்கதையை எழுதுக.
2. கலுழவேகன் தன் மகளை வழிகூட்டி அனுப்பிய நிகழ்ச்சியைச் சுருக்கி எழுதுக.
3. சீவகன் சிறந்த வீரன் என்பதை ஆசிரியர் மூலம் அறிந்து அவனைப்பற்றிச் சில வாக்கியங்கள் எழுதுக.

## இலக்கணம்

(1) பெயர்ச்சொல், வினைச்சொல் என்றால் என்ன ? அதற்கு இப்பாடத்திலிருந்தே இரண்டிரண்டு உதாரணங்கள் தருக.

(2) ஒரு சொல்லின் இறுதியில் கு, சு, டு, து, பு, று, என்ற எழுத்துக்களில் ஒன்று இருக்கின்றதா என்று பார்த்து அவ்வாக்கியங்களில் நான்கை மட்டும் எழுது.

(3) எதிர்ச் சொல் தருக :—
வாங்கி ; மகிழ்ந்து ; வெல்வார், கலந்து, கொடுமை.

(4) பலர்பாலிற்கும், பலவின்பாலிற்கும் உதாரணம் தருக.

(5) சுட்டு எழுத்து எத்தனை ? ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் உதாரணம் தருக.

(6) பிரித்து எழுது :—
வாட்டமுற்று ; முரசறைந்து ; ஒதுக்கப்பட்டிருக்கும்.

# 3. ஆறுமுக நாவலர்

நாற்புறமுங் கடலாற் சூழப்பெற்று, இயற்கை வளஞ் செறிந்து, எழில்பெற்று விளங்குவது இலங்கைத் தீவு. இதன் வடகோடியி லமைந்துள்ளது யாழ்ப்பாணம். தமிழர் பண்டுதொட்டே இங்கு வாழ்ந்து வருகின்றனர். சைவத்தையும் தமிழையும் வளர்த்த பெருமை இந்நாட்டிற்கும் உண்டு. இங்கு நல்லூர் என்னும் பகுதி உளது. இது யாழ்ப்பாணத்து நல்லூர் என்று வழங்கப்படும்.

இவ்வூரில், கார்காத்த வேளாளர் குலத்திலே வந்த ஞானப்பிரகாச சுவாமிகள் மரபு நெடுங்காலமாகச் சிறந்திருந்தது. இம் மரபில் இலங்கை காவல முதலியார் என்பவர் மிகவும் சிறந்திருந்தார். முதலியார் என்பது அக்காலத்து இலங்கை மன்னரால் வழங்கப்பட்டதொரு சிறப்புப் பெயராகும். இவருடைய பிள்ளை பரமானந்தர் என்பவர். இவ்விருவரும் மருத்துவத் துறையில் சிறந்தவர்கள். அந்நாட்டை யாண்ட ஹாலந்து தேச மன்னனுக்கிருந்த தீராத நோயைத் தீர்த்துப் பல பரிசுகளும், பட்டயங்களும், சிறப்புக்களும் பெற்றவர்கள்; பரம்பரையாகத் தமிழ்ப் புலமையும் உள்ளவர்கள்.

பரமானந்தருக்குக் கந்தர், இலங்கையர் என்ற இரு பிள்ளைகள் பிறந்தனர். கந்தர் என்பவரே பிற்காலத்துக் கந்தப்பிள்ளை என்றழைக்கப்பட்டார். இவர் நன்கு கல்வி பயின்று அரசாங்க அலுவலில் அமர்ந்திருந்தார். மருத்துவத் துறையில் சிறந்தவர். இவர் பல மருத்துவ நூல்களை உரை நடையில் இயற்றியிருக்கின்றார். அநேக தமிழ் நாடகங்களையும் இயற்றித் தமிழ்த்தொண்டு செய்தவர் இவர்.

கந்தப்பிள்ளைக்கு ஐவர் ஆண்மக்களும், மூவர் பெண் மக்களும் பிறந்தார்கள். மூத்த பிள்ளைகள் நால்வரும் தந்தையாரைப் போலவே அரசாங்க அலுவலில் இருந்தார்கள். அத்துடன் மருத்துவம், இசை, கவி பாடுதல் முதலியவற்றிலும் சிறந்து விளங்கினார்கள். ஐந்தாவது பிறந்த பிள்ளைதான் ஆறுமுக நாவலர். இவர் சிறுவரா யிருந்தபோது உடல் நலங்குறைந்து, இளைத்தே யிருந்தார். ஆனால் அவரிடம் கல்வித்திறனும், நுண்ணறிவும் உரம் பெற்று வளர்ந்து வந்தன.


ஆறுமுக நாவலர்

*Courtesy:* S. I. S. S. W. P. Society Ltd.,

அந்தக் காலத்தில் நல்லூரில் ஒரு சிறிய தமிழ்ப் பள்ளிக்கூடம் இருந்தது. அங்கு சுப்பிரமணியபிள்ளை என்பவர் ஆசிரியராயிருந்து கற்பித்து வந்தார். நம் நாவலரவர்களும் முதன் முதலில் அவரிடம்தான் படித்தார்கள். மூதுரை போன்ற நீதி நூல்களையும், நிகண்டு முதலியவற்றையும் கற்றுவந்தார்கள். மிக்க விரைவிலே அவைகளையெல்லாங் கற்று வல்லவரானார்கள். ஆனால் அவருடைய தமையன்மார்கள் அவரிடம் அவ்வளவு பற்றுடையவர்களாயில்லை. நாவலரைப் பற்றி அவர்கள் நன்கு தெரிந்துகொள்ளவும் இல்லை.

நாவலருக்கு ஒன்பதாவது வயது நடந்துகொண்டிருந்தது. அப்போது அவருடைய தந்தையார் கந்தப்பிள்ளை ஒரு நாடகத்தை எழுதிக்கொண்டிருந்தார். அன்று ஆனித்

திருமஞ்சன நாள். கந்தப்பிள்ளை ஏடும் எழுத்தாணியும் கொண்டு நாடகத்தை எழுதிக்கொண்டிருந்தார். அந்நிலை யிலேயே தன்னையுமறியாது இறையடி சேர்ந்தார். நாடகம் குறையாயிருப்பதைக் கண்ட நாவலர் அப்போதே அதனைத் தொடர்ந்து பாடி முடித்தார்.

அதுகண்ட அவர்தம் தமையன்மார் நால்வரும் மிக வும் வியப்படைந்தனர். தம் தம்பியாரின் கவித்திறமை யைப் பாராட்டினார்கள். அவர்தம் மேற்கல்விக்கான முயற்சியையும் செய்தார்கள். அக்காலத்துச் சிறந்து விளங்கிய சரவணமுத்துப் புலவர், சேனாதிராய முதலியார் முதலிய தமிழ்ப் புலவர்களிடம் கல்வி கற்க ஏற்பாடு செய்தார்கள்.

நாவலர் காலையில் நான்கு மணிக்கே எழுந்துவிடுவார். உடல்குளித்து, இறை வணக்கம் செய்துமுடித்துப் பின்னர், ஏடெடுத்துக்கொண்டு படிக்கச் செல்லுவார். நடுப்பகல் வீட்டிற்கு வருவார். அப்போது உணவு தயாராயிருந்தால் சாப்பிடுவார். இல்லையாயின் உணவிற்காகக் காத்திருக்க மாட்டார். திரும்பிப் போய்விடுவார். பின்னர் இரவு பத்து மணிக்குத்தான் வருவார். அப்போது சாவதானமாயிருந்து உண்ணுவார். இவ்வாறு உண்டியையுங் கருதாது கல்வி யிற் கருத்தாயிருந்து கற்றுத் துறைபோய தமிழ்ப் புலவரானார் நாவலர்.

நாவலர் யாழ்ப்பாணத்திலிருந்த தமிழ்ப் புலவர்களின் வரலாற்றினை யெல்லாம் அறிந்துகொண்டார். அவர்க ளியற்றிய செய்யுட்களையும் படித்துக்கொண்டார். அவர் தம் கல்வித்திறமையைக் கண்ட தமையன்மார் அவருக்கு ஆங்கிலமுங் கற்பிக்க விரும்பினார்கள். அதற்காக, பர்சிவல் பாதிரியாரால் நடத்தப்பட்ட ஆங்கிலப் பள்ளிக்கு அவரை அனுப்பினார்கள். அவரும் மிக விரைவிலேயே ஆங்கிலத்

திலும் திறமையடைந்தார். அவருடைய இருமொழித் திறமையைக்கண்ட பாதிரியார், அவரைக் கீழ் வகுப்புக்க ளுக்கு ஆங்கிலங் கற்பிக்கவும் மேல்வகுப்புக்களுக்குத் தமிழ் கற்பிக்கவும் ஏற்பாடு செய்தார். நாவலரும், பாதிரி யார் விருப்பத்திற்கிணங்கிச் சில ஆண்டுகள் ஊதியம் பெருத ஆசிரியராயிருந்து கற்பித்து வந்தார்.

பர்சிவல் பாதிரியார் தமக்கு ஒரு தமிழ்ப் பண்டிதரை ஏற்படுத்திக்கொள்ள விரும்பினுர். தக்கார் ஒருவரைத் தேடியிருந்தார். தம் பள்ளியில் படித்துத் தம் பள்ளியிலேயே ஆசிரியராயிருந்த நாவலரின் இரு மொழித்திறன் அவருள் ளத்தைக் கவர்ந்தது. நாவலர் போன்று தமிழ் ஆங்கில மொழிகளில் வல்லமையுடையார் எவரும் இலர். எனவே அவரையே தமது தமிழாசிரியராக இருக்கவேண்டினுர். நாவலரோ, தாம் எப்போதும் திருநீறு, உருத்திராக்கம் முதலிய சிவசின்னங்களைத் தரித்துத்தான் வரமுடியுமென் றும், இன்றியமையாமை நேரும்போது கிருஸ்தவ நிந்தனை செய்யத்தான் நேருமென்றும், இதற்குப் பாதிரியார் தடை சொல்லாவிட்டால்தான், தான் அவர் விரும்பியபடி தமிழாசி ரியராக வரமுடியுமென்றுங் கண்டித்துக் கூறிவிட்டார். அவரை யொத்த வேறு அறிஞர் கிடைக்கமாட்டார் என் பதை அறிந்த பாதிரியார் அவர் நிபந்தனைகளை யெல்லாம் ஒப்புக்கொண்டார். நாவலரும் பாதிரியாரது விருப்பத்திற் கிணங்கினுர்.

பர்சிவல் பாதிரியார் தாம் செய்யும் சமயத்தொண்டிற் குப் பயன்படுமாறு கிருஸ்தவ வேதமாகிய விவிலிய நூலைத் தமிழில் மொழிபெயர்க்க எண்ணினுர். நாவலரையே அவ் வரிய செயலைச் செய்து முடிக்குமாறும் வேண்டிக்கொண் டார். நாவலரும் நல்ல செந்தமிழ் நடையில் மொழி பெயர்க்கத் தொடங்கினுர். அவ்வாறு மொழிபெயர்த்துக்

கொண்டிருக்கையில், அச்செயலால் சைவ சமய வளர்ச்சி குன்றுதற்கு இடமாவதையும் புறச்சமய வளர்ச்சி பெருகுவதற்குத் துணையாவதையும் உணர்ந்தார். தம் சமயமாகிய சைவமுந் தமிழுந் தழைத்தோங்கத் தம் வாழ்நாள் முழுதும் உழைப்பதெனவும் உறுதி பூண்டார். அதற்கென வடமொழியையுங் கற்றுக்கொண்டு, வடமொழி தென்மொழி இரண்டிலுமுள்ள சமயநூல்கள் பலவற்றையும் படித்து முடித்தார்.

நாவலர் விவிலிய நூலை மொழிபெயர்த்துக்கொண்டிருக்கும்போது, சென்னைக் கிருஸ்தவ சங்கத்தாரும் ஒரு மொழிபெயர்ப்பை எழுதிக்கொண்டிருந்தார்கள். பர்சிவல் பாதிரியார் நாவலர் செய்த மொழிபெயர்ப்பை எடுத்துக் கொண்டு, அவரையும் உடன் அழைத்துக்கொண்டு சென்னை வந்துசேர்ந்தார். சென்னைச் சங்கத்தார் நாவலர் மொழிபெயர்ப்பைப் பார்த்தார்கள். அது பலவகையினுஞ் சிறந்திருக்கவே பெரிதும் அழுக்காறு கொண்டார்கள். தங்கள் மொழிபெயர்ப்பு வீணாகிவிடுமே என்றஞ்சினார்கள். நாவலர் மொழிபெயர்ப்பின்மேற் பல குற்றங் குறைகளைக் கற்பித்துக் கூறினார்கள். அப்போது சென்னையிற் பெரும் புலவராக விளங்கிய மழவை மகாலிங்க ஐயரிடம் இரு மொழி பெயர்ப்புக்களுந் தரப்பட்டன. அவர் நாவலர் மொழி பெயர்ப்பைக்கண்டு மிகவும் வியந்தார். 'யாழ்ப்பாணத்தில் இத்தகைய செந்தமிழும் உளதோ?' என்று கூறிப் பாராட்டினர். நாவலர் மொழிபெயர்ப்பே அச்சிட்டு வெளியிடப்பெற்றது. இந்நிகழ்ச்சியிலிருந்து பாதிரியாருக்கு நாவலர் பெருமானிடத்து அளவற்ற அன்பும், மரியாதையும் உண்டாயின.

நாவலர் தம்முடைய ஓய்வு நேரங்களிலெல்லாம் மாணவர்கட்குத் தமிழிலக்கிய இலக்கண நூல்களையும்

புராணங்களையும் பாடஞ்சொல்லத் தொடங்கினார். எடுத்த பொருளை விளக்கும் ஆற்றல் நாவலருக்கு மிக்கு இருந்தது. அதுவே பிற்காலத்துச் சமயச் சொற்பொழிவுகளாக மாறியது. இச்சொற்பொழிவுகள் கேட்டார் பிணிக்குந் தகையவாய்ப் பெருநன்மை விளைத்தன. கோயில்களிலும், பொது இடங்களிலும், விழாக் காலங்களிலும், நல்ல நாட்களிலும் சொற்பொழிவுகள் செய்வார் நாவலர். இவ்வாறு நாவலர் சமயத்தொண்டும், தமிழ்த்தொண்டும் செய்து வந்தார்.

திருவாவடுதுறை யாதீனப் பண்டார சந்நிதிகள் நாவலரது அறிவுத்திறனையும், தொண்டின் பெருமையையும் கேள்விப்பட்டிருந்தார்கள். அதனால் நாவலரை ஆதீனத்துக்கு அழைத்துச் சிறப்புக்கள் பல செய்தார்கள். அங்கு நாவலர் செய்த சொற்பொழிவு எல்லோருடைய உள்ளத்தையுங் கொள்ளைகொண்டது. அங்கிருந்த பண்டார சந்நிதிகளும், புலவர்களும் ஒருமுகமாக இவருக்கு 'நாவலர்' என்ற சிறப்புப் பெயரைத் தந்தார்கள். அது முதல் இவர் ஆறுமுக நாவலர் என்றே அழைக்கப்பட்டார்

நாவலர் யாழ்ப்பாணத்து வண்ணார் பண்ணையில் சைவபிரகாச வித்தியாசாலை என்னும் பெயரால் ஒரு சிறந்த பள்ளிக்கூடம் ஏற்படுத்தினார். அதுபோலவே அவர் சிதம்பரத்திலும் ஒரு வித்தியாசாலையை ஏற்படுத்தினார். அது இன்றும் நிலைத்திருந்து தமிழ்த்தொண்டும் சமயத் தொண்டும் ஆற்றி வருகின்றது.

புத்தகங்களையும், கட்டுரைகளையும் அச்சிடுதற்கு ஒரு பதிப்பகம் இருத்தலே நலமென்று கருதினார் நாவலர்; உடனே சென்னை சென்றார். அச்சகம் ஒன்றை விலைக்கு வாங்கினார். அதனை யாழ்ப்பாணம் வண்ணார் பண்ணையில் 'வித்தியானு பாலன யந்திரம்' என்ற பெயருடன் நிறுவினார்.

அதில் மாணவர்கட்கேற்ற பாலபாடம் போன்ற பல பாடப் புத்தகங்களைச் சிறந்த முறையில் அச்சிட்டு வெளிப்படுத்தினார். இன்னும் பல பழந்தமிழ் நூல்களையும், தான் செய்த உரைகளையும், உரைநடை நூல்களையும் அச்சிட்டார். அவர் பதிப்புக்களில் பிழை என்பதைக் காண இயலாது.

நாவலர் இலக்கிய இலக்கணங்களிலும் தருக்க நூலிலும் வல்லவர். தமிழ், ஆங்கிலம், வடமொழியிலும் மிக்க பயிற்சி பெற்றவர். செந்தமிழ் உரைநடை செய்த முதலாசிரியர். செய்யுளியற்றும் ஆற்றலும், சொற்பொழிவுத் திறனும் ஒருசேரக் கைவரப்பெற்றவர். இப்புலவர் பெருமான் நூலாசிரியராய், உரையாசிரியராய, உரைநடையாசிரியராய், பதிப்பாசிரியராய், மாணவர் பயிற்றும் பேராசிரியராய், சொற்பொழிவாளராய் விளங்கித் தமிழ்த்தொண்டும், சமயத்தொண்டும் செய்து தூய வாழ்க்கையை மேற்கொண்டிருந்து தம் ஐம்பத்தேழாம் ஆண்டில் இறை யருட்பேறு பெற்றார்.

## கேள்விகள்

1. *நாவலரது முன்னோர்கள் யாவர் ?*
2. நாவலரது சகோதரர்கள் எவ்வெத்துறையில் வல்லவர்கள் ?
3. நாவலர் யார் யாரிடம் கல்வி பயின்றார் ?
4. நாவலரது ஒன்பதாம் ஆண்டில் நடந்த நிகழ்ச்சி யாது?
5. பர்சிவல் பாதிரியாரிடம் இவர் கேட்ட நிபந்தனைகள் யாவை ?
6. நாவலரின் விவிலிய மொழி பெயர்ப்பின் வரலாறென்ன ?
7. நாவலர் செய்த தமிழ்த் தொண்டுகள் யாவை ?
8. ‘நாவலர்’ பட்டம் பெற்றதெவ்வாறு ?

## பயிற்சி

1. நாவலரது அறிவாற்றலையும், குணநலங்களையும் விளக்கி ஒரு கட்டுரை எழுதுக.
2. நாவலரது சமயப் பற்றையும், அஞ்சாமையையும் விளக்கி ஒரு பக்கம் எழுதுக.
3. நாவலரே முதல் தமிழ் உரைநடை யாசிரியர் என்பதை விளக்கி ஒரு பக்கம் எழுதுக.
4. நாவலர் இயற்றிய,—பதிப்பித்த—நூல்கள் யாவை என்பனவற்றை ஆசிரியர் வழி அறிந்து கொள்க

## இலக்கணம்

(1) சேர்த்து எழுது :—
நான்கு + புறம்
விருப்பத்திற்கு + இணங்கினர்
பதிப்பு + ஆசிரியர்
சொல் + பொழிவு + ஆளர்.

(2) நன்மை, புலமை, செழுமை, முதுமை இவைகள் பண்புச் சொற்கள் எனப்படும். இதில் ஒவ்வொன்றைக்கொண்டும் ஒவ்வோர் சொற்றொடரமைக்க.

(3) வினா என்றால் என்ன ? வினா எழுத்துக்கள் எத்தனை ? உதாரணம் தருக.

(4) ஏற்ற எழுத்துக்களை அமைத்து எழுது :—
(1) நா–கு ம–க்கே எழுந்து விடுவா.
(2) சாவதா–மாயி–ந்து உ—பார்.
(3) மொழி பெய–க்க எ–ணி–ர்.
(4) வ—மையுடன் வி–ங்கினர்.

(5) காலத்தைக் குறிக்கும் மூன்று சொற்களை வரைக.

(6) திருத்தி அமைக்க :—
(1) இராமனை இராவணன் கொன்றன்.
(2) சீதைக்கு மனைவி இராமன்.
(3) இராமனுக்குத் தம்பி அர்ச்சுனன்.

# 4. சீன யாத்திரிகன்

இந்திய நாடு மிகப் பழங்காலந்தொட்டு அதன் கலைக்கும் நாகரிகத்துக்கும் சமயவாழ்வுக்கும் பண்பாட்டுக்கும் பேர்பெற்ற ஒரு நாடாக இருந்தது. அதன் தென் கோடியிலிருக்கும் தமிழ் நாடும் பல வெளிநாட்டு மக்களால் பாராட்டப்பட்டு வந்தது. கிழக்கே சீனநாடு தொடங்கி மேற்கே ரோமநாடு நாடுவரையில் வாழ்ந்த பல அறிஞர்கள் மிகப் பழங்காலந்தொட்டு இந்தியாவில் சுற்றுப்பிரயாணம் செய்து பலப் பல அற்புதங்களைக் கண்டு எழுதி வைத்துச் சென்றிருக்கிறார்கள். அவர்களுள் ஒருவன் சீன நாட்டு யாத்திரிகனான 'யுவான்சுவாங்' என்பவன்.

சீனநாட்டுச் சமயம் பௌத்த மதமாகும். அச்சமயத்தைத் தோற்றி வளர்த்த பெருமை இந்தியாவுக்குத் தானே உண்டு. புத்தர் இந்தியாவில் பிறந்தார். பழங்காலத்தில் இந்நாட்டில் பல ஆயிரக்கணக்கான புத்த மடங்கள் இருந்தன. தம் சமயத்தலைவர் பிறந்த நாட்டைக் காண்பதற்காகவும், இங்குள்ள மடங்களில் உள்ள துறவிகளோடு கலந்து பழகுவதற்காகவும் வெளிநாட்டிலிருந்து பல சமயத் தலைவர்கள் இந்நாட்டுக்கு வந்து சென்றார்கள். சீன நாட்டிலிருந்தும் பலர் இங்குவந்தனர். அவர்களுள் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் ஹர்ஷ சக்ரவர்த்தி வாழ்ந்த காலத்தில் இந்நாட்டுக்கு வந்தவனே 'யுவான் சுவாங்' என்பவன்.

யுவான்சுவாங் இந்தியா வந்த அந்தக் காலத்தில் தற்போதுள்ளனபோன்று போக்கும் வரத்தும் அவ்வளவு எளிதாக இல்லை. எனவே அவன் மிகுந்த இன்னல்களுக்கு



பனிமலைக் கிடையில் சீனயாத்திரிகன்.

இடையிலேதான் வந்து சென்ருன். அவன் காலத்து சீன அரசர் இவனை வெளிநாட்டுக்குச் செல்ல வேண்டாமெனத் தடை விதித்தார். எனினும் இவன் புத்தர் பிறந்த நாட்டைக் காணவேண்டுமென்று ஆசை கொண்ட காரணத்தால் தனிமையாகக் குதிரை ஏறி, ஒருவரும் அறியாதபடி இரவோடு இரவாகச் சீனநாட்டு எல்லையைக் கடந்தான். பின் மத்திய ஆசியா வழியாக இந்தியா வந்து சேர்ந்தான். அவன் வழியில் பட்ட துன்பங்கள் அளவில. எல்லாத் துன்பங்களையும் 'இந்திய நாட்டைக் காணப்போகிருேம்' என்ற ஆசையினுல் பொறுத்துக்கொண்டு சோர்வு அடையாது இந்திய நாட்டு எல்லை வந்து அடைந்தான்.

இந்நாட்டு வடகோடியில் உள்ளது காஷ்மீர் இராஜ்ஜியம். அந் நாட்டுமன்னன் வந்த 'யுவான்சுவாங்' என்னும் இச்சீன யாத்திரிகனை வரவேற்று உபசரித்தான். வழி நெடுக மலர்தூவி, வாழ்த்தெடுத்து வந்தவனை வரவேற்றுச் சிறப்புச் செய்தான் அம்மன்னன். யாத்திரிகனும் சில காலம் அங்குத் தங்கி, அங்கிருந்த சமயவாதிகளோடு கலந்து பேசிப் பல உண்மைகளை அறிந்தான். தானும் உணர்த்தினன். அவன் காணவிரும்பிய சில புத்தமத நூல்களையும் அம்மன்னன் அவனுக்காகப் பல விடங்களிலிருந்தும் வரவழைத்துக் கொடுத்தான்.

இரண்டு ஆண்டுகள் காஷ்மீரில் தங்கி மேலும் இந்திய நாட்டுப் பகுதிகளைக் காணவிரும்பி, அம் மன்னனிடம் விடைபெற்றுக்கொண்டு 'யுவான்சுவாங்' தன் யாத்திரையைத் தொடர்ந்தான். அவன் வந்தகாலத்து 'நாலந்தா பல்கலைக் கழகம்' என்ற ஒரு பெருங் கல்வி நிலையம் தற்போ



நாலந்தா சிதைவு.

துள்ள கயா என்னும் நகரின் பக்கத்தில் சிறந்திருந்தது. அங்கு சென்று சீன யாத்திரிகன் சில ஆண்டுகள் தங்கி அங்கிருந்த பௌத்த அறிஞர்களோடு கலந்து பலவற்றைப் பற்றி ஆராய்ச்சி செய்தான். அவனது அறிவுத்திறன் கலந்த புகழ் பல்கலைக் கழகம் முழுவதும் பரவியது. சுற்றுப்புறங்களிலும் பரவியது. நாடாண்ட அரசர்கள் காதிலும் எட்டியது. பேரரசனுகிய ஹர்ஷன் காதிலும் பட்டது. எனவே அவ்வரசன் இப்பெரும் அறிஞனுகிய 'யுவான் சுவாங்'கைத் தன் அவையில் வந்து சிலகாலம் தங்கியிருக்குமாறு கேட்டுக்கொண்டான். ஆனுல் புலவர்களோடும் அறிஞர்களோடும் நாலந்தாவில் கலந்து ஆராய்ச்சி செய்துகொண்டிருந்த இவனுக்கு, அரசனது அழைப்பை ஏற்றுக்கொண்டு அவன் தலைநகராகிய கன்னேசிக்குச் செல்ல விருப்பமில்லை. மேலும் சில நாட்கள் அவன் நாலந்தாவில் தங்கினுன்.

அக்காலத்தில் தற்போது ஆசாம் என வழங்கும் இந்திய நாட்டு வடகிழக்கு மாகாணம் 'காமரூபம்' என்ற பெயரோடு விளங்கிற்று. அந் நாட்டை ஆண்ட குமரன் என்னும் மன்னனும் சீன யாத்திரிகனைத் தன்னிடம் வருமாறு அழைத்தான். ஆனுல் அவனுக்குச் செல்ல விருப்பமில்லை பின் குமரனது சீற்றமிகுந்த கடிதத்தால் யாத்திரிகன் வரவில்லையானுல் நாலந்தாவே நாசமுறும் என அறிந்த அதன் தலைவர் 'யுவான்சுவாங்கை' காமரூபநாட்டுக்கு அனுப்பிவைத்தார். அந்நாட்டு மன்னனுகிய குமரன் இந்து மதத்தைச் சார்ந்தவன். எனினும் புத்தமதத்தைச் சார்ந்த சீனயாத்திரிகனை அன்போடு வரவேற்று, தன்னுடன் இருத்திக்கொண்டு, அவனுக்கு வேண்டிய ஆராய்ச்சி நூல்களையும் கொடுத்துதவினுன். சிலகாலம் சீன யாத்திரிகன் அங்கு தங்கினுன்.

தான் அழைத்து வராத யாத்திரிகன் காமரூப நாட்டுக்குச் சென்றதை அறிந்தான் ஹர்ஷன். உடனே அந்நாட்டு மன்னனுக்கு அறிஞன் 'யுவான்சுவாங்கை' அனுப்பிவைக்கும்படிக் கடிதம் எழுதினான். குமரனோ 'தன் தலையைக்கொடுத்தாலும் கொடுப்பேனே அன்றி அவனை அனுப்பமாட்டேன்' என்று பதில் எழுதிவிட்டான். மறு படியும் ஹர்ஷனிடமிருந்து அவன் தலையை அனுப்புமாறு கடிதம் வந்தது. வேறுவழியின்றிக் குமரன் யாத்திரிகனை ஹர்ஷனிடம் அனுப்ப ஏற்பாடு செய்தான். அத்துடன் தானும் அவர்களோடு ஹர்ஷனைக் காணப் புறப்பட்டான். பல யானைகளும் பிற படைகளும் அணிசெய்யக் குமரனும் யுவான்சுவாங்கும் கங்கைக் கரைவழியே வங்காள நாட்டில் ஹர்ஷன் தங்கிக் காத்திருந்த ஓர் ஊரை வந்து அடைந்தனர்.

ஹர்ஷன் சீனயாத்திரிகனைக் காணப் பேரவாக் கொண்டிருந்தான். அவர்கள் இரவில் வந்து சேர்ந்தார்கள் என்று கேள்விப்பட்ட உடனேயே விடியும்வரைப் பொறுத் திராது அவ்விரவிலேயே அவர்களைச் சென்று கண்டான். பிறகு மறுநாள் காலையில் தன் தங்கை ராஜ்யஸ்ரீயுடனும் பிற அறிஞர் அமைச்சர்களுடனும் ஹர்ஷன் சென்று யாத்திரி கனையும் குமரனையும் வரவேற்றான். பின் அவர்கள் இரு வரையுமே அழைத்துக்கொண்டு கங்கைக் கரைவழியே ஹர்ஷன் தன் கன்னோசியை அடைந்தான்.

கன்னோசியில் ஹர்ஷன் சீனயாத்திரிகனுக்குப் பெருஞ் சிறப்புக்கள் பல செய்தான். நாடு முழுவதும் ஆட்களை அனுப்பி ஆங்காங்குள்ள அறிஞர், புலவர், சமயத்தலைவர் கள் எல்லோரையும் கன்னோசிக்கு வரப்பணித்தான். அனை வரும் ஒன்றுசேர்ந்து பல சமய உண்மைகளைப் பற்றியும் பிற கருத்துக்களைப் பற்றியும் ஆராய்ந்தனர். அனைவரும்

'யுவான்சுவாங்' கின் அறிவாற்றலையும் செறிந்த திட்பத்திறனையும் போற்றினர். ஒரு சிலர் அவன் மேல் பொருமைகொண்டு அவனுக்கும் அவனை ஆதரித்த ஹர்ஷனுக்கும் கூடக் கேடுசெய்யும் அளவுக்குத் துணிந்தனர். எனினும் ஹர்ஷனது அஞ்சா ஆணையால் அனைவரும் அஞ்சி ஒன்றும் செய்ய இயலாது நின்றனர். பல நாட்கள் விவாதங்கள் தொடர்ந்து நடைபெற்றன. பௌத்த சமயக் கொள்கைகள் பலவற்றை 'யுவான்சுவாங்' விளங்க உரைத்து அந்நெறியின் மேன்மையை விளக்கினன். சில காலம் அச்சீனயாத்திரிகன் ஹர்ஷனோடேயே தங்கியிருந்தான்.



ஹர்ஷனது ஆராய்ச்சி மண்டபம்.

இந்திய நாடு முழுவதும் காணவிரும்பிய அவனுக்கு ஒரே இடத்தில் மேலும் தங்க விருப்பமில்லை. அக்காலத்தில் தெற்கே தமிழ் நாட்டைச் சிறந்த பல்லவ மன்னனுன நரசிங்கப் போத்தரையன் காஞ்சியைத் தலைநகராக்கிக் கொண்டு ஆண்டுவந்தான். அந்நாட்டிலிருந்து வந்த யாத்திரிகர் மூலம் தமிழ்நாட்டுப் பெருமையைக் கேட்டறிந்த 'யுவான்சுவாங்' அந்நாட்டைக் காணவிரும்பி, ஹர்ஷனிடம் விடைபெற்றுப் புறப்பட்டான்.

தமிழ்நாட்டுக்கு வந்த சீன யாத்திரிகன் காஞ்சிபுரத்தில் பல நாட்கள் தங்கினுன். மன்னன் நரசிங்கன் அவனை வரவேற்றுச் சிறப்புக்கள் பல செய்தான். அக் காலத்தில் காஞ்சிபுரத்தில் பல பௌத்த மடங்களும் கோயில்களும் இருந்தன. பிற சமயத்தவர்களும் அங்கு இருந்தனர். அவர்களோடெல்லாம் யாத்திரிகன் கலந்து பழகிப் பல உண்மைகளை அறிந்துகொண்டான், நம் நாட்டுக் கலை வளத்தை அறிந்தான். காஞ்சிபுரத்தைப் பற்றிக் கருத்துக்கள் பலவற்றை எழுதிவைத்தான்.

தமிழ்நாடுவரை வந்த அவனுக்கு அருகிலுள்ள இலங்கைக்கும் செல்லவேண்டுமென்ற விருப்பம் உண்டாயிற்று. பல்லவர் துறைமுகப் பட்டினமாகிய மாமல்லபுரத்திலிருந்து கப்பலில் புறப்பட நினைத்தான். எனினும் அக்காலத்தில் இலங்கையிலிருந்து பல்லவனிடம் வந்திருந்த அரச வம்சத்தவன் ஒருவன் மூலம் இலங்கையில் அரசியல் குழப்பம் நேர்ந்திருப்பதை அறிந்தான். எனவே தான் செல்வதை நிறுத்திக்கொண்டான்.

பின் வடக்குநோக்கித் திரும்பலானுன் சீன யாத்திரிகன். வழியில் இருந்த பல சமய மடங்களையும் பிற இடங்களையும் கண்டுகொண்டே சென்றுன். சளுக்கிய நாட்டைக் கடந்து செல்கையில் அந்நாட்டு மன்னனுகிய இரண்டாம்

புலிகேசி என்னும் அரசன் 'யுவான்சுவாங்' கை வரவேற்றுச் சிறப்புக்கள் பல செய்தான். பின் வல்லவை முதலிய நாடு நகரங்களைக் கடந்து ஹர்ஷனது அவை அடைந்தான் யாத்திரிகன்.

யுவான்சுவாங் தன் தாய்நாடு விட்டுப் புறப்பட்டு பதினைன்கு ஆண்டுகள் கழிந்துவிட்டன. கி. பி. 629-ல் புறப்பட்டவன் கி. பி. 643-ல் திரும்பி கன்னேசி நாட்டுக்கு வந்து சேர்ந்தான். எனவே தன் தாய்நாடு செல்லவேண்டுமென்ற ஆசை அவனுக்கு உண்டாயிற்று. தன் விருப்பத்தை ஹர்ஷனுக்குத் தெரிவித்தான். ஹர்ஷனே அவனைத் தன்னேடேயே இருத்திக் கொள்ளக் கருதிப் பலவாறு தடுத்தான். எனினும் 'யுவான்சுவாங்' திட்டமாகப் போகவேண்டுமென முடிவுசெய்தபின் ஒன்றும் செய்ய முடியாதவனுகிப் பயணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான். காமரூப நாட்டு மன்னன் குமரனுக்கு ஆள் போக்கினன்.

நல்ல ஒருநாளில் ஹர்ஷனும் குமரனும் வழியனுப்ப சீன யாத்திரிகனை 'யுவான்சுவாங்' தன் தாய்நாடு நோக்கி வடக்கே பயணமானன். ஹர்ஷனும் குமரனும் பிரியா விடைபெற்றுப் பிரிந்தனர். யாத்திரைக்குத் துணையாகச் சேனை முதலியவைகளையும் ஹர்ஷன் கொடுத்தான். அவன் சேகரித்த சுவடிகள், பொருள்கள் முதலியவற்றைச் சுமந்துசெல்லக் குதிரைகளைக் கொடுத்தான். ஆட்கள் பலரையும் உடன் அனுப்பினன். பிரியா விடை பெற்றுப் பிரிந்தனர் இருவரும். எனினும் மூன்று நாட்களுக்குப்பின் ஹர்ஷனும் குமரனும் குதிரைகளின் மேலேறிச் சென்று மறுபடியும் வழியில் 'யுவான்சுவாங்' கைக் கண்டனர். சிலநாள் கலந்திருந்து பின் இறுதியாக விடைபெற்றுப் பிரிந்தனர்.

பெற்ற பெருஞ் சிறப்புக்களோடும், சுவடிகள், நல் கவிதைகள் பிறவற்ளுேடும், உடன்வந்த படைகளோடும் 'யுவான்சுவாங்' தன் நாடுநோக்கிச் சென்றுகொண்டே யிருந்தான். வழியிடையிருந்த சிந்து நதியைக் கடந்தான். ஆற்றைக்கடக்கும்போது உண்டான காற்ருல் அவன் கொண்டுசென்ற பொருளில் சில பழுதுற்றன. எனினும் அந்நாட்டு மன்னன் அவனே வரவேற்று, இழந்த பொருள் களேப் புதிதாக வருவித்துக்கொடுத்து வழியனுப்பினுன். வழியெல்லாம் கடந்து சீன யாத்திரிகன் யுவான்சுவாங் பதினேந்து ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் தன் தாய் நாடடைந்தான். அவனேச் செல்லவேண்டாமென்று முன் தடுத்த சீனப் பேரரசன் அவன் தாய்நாடு திரும்பியபோது 'யுவான்சுவாங்' கை வரவேற்று நாடு முழுவதுமே அவன் வரவைப் பெருவிழாவாகச் சிறப்புறச் செய்தான். அந்நாள் தொடங்கி இன்றுவரை சீனுவும் இந்தியாவும் கலேயிலும் சமயத் துறையிலும் பண்பாட்டிலும் வேறு பலவகைகளிலும் ஒன்றை ஒன்று பற்றிக்கொண்டே வாழ்ந்துவருகின்றன.

## கேள்விகள்

1. சீனர்கள் சமயம் யாது? அவர்கள் இந்தியாவைக் காணவிரும்பும் காரணம் யாது?
2. யுவான்சுவாங் எவ்வாறு இந்நாட்டுக்கு வந்தான்?
3. காஷ்மீரில் அவன் தங்கியகாலத்தில் பெற்ற சிறப்புக் கள் யாவை?
4. நாலந்தா பல்கலேக் கழகத்தின் சிறப்பென்ன?
5. காமரூப நாடு என்பது யாது? அது தற்போது எங்குள்ளது?
6. யாத்திரிகன் காமரூப நாட்டில் தங்கிய நாளில் நடந்த தென்ன?

7. ஹர்ஷன் யாத்திரிகனை எவ்வாறு வரவேற்ருன் ?
8. ஹர்ஷன் அவையில் நடந்த விவாதங்கள் எது பற்றியன ?
9. தமிழ் நாட்டில் யாத்திரிகன் எங்கு தங்கினுன் ? அக் காலத்தில் அந்நகர் எவ்வாறு இருந்தது ?
10. இலங்கைக்கு ஏன் யாத்திரிகன் செல்லவில்லை ?
11. திரும்பும் வழியில் யாத்திரிகன் எங்கெங்கு சென்ருன்?
12. யாத்திரிகன் இறுதியில் எவ்வாறு சென்ருன் ?
13. சிந்துநாட்டு மன்னன் யாத்திரிகனுக்குச் செய்த சிறப்புக்கள் யாவை ?
14. சீனநாட்டு மன்னன் யாத்திரிகனுக்குச் செய்த சிறப்புக் கள் யாவை ?

## பயிற்சி

1. சீனநாட்டுக்கும் இந்திய நாட்டுக்கும் உள்ள தொடர்பு களைக் கேட்டறிந்து ஒரு கட்டுரை வரைக.
2. நாலந்தா பல்கலைக்கழகப் பெருமையை அறிந்து சில வரிகள் எழுதுக.
3. யுவான்சுவாங் காலத்தில் இருந்த பல்லவர் நாட்டு நிலைமையை விளக்கிச் சில வரிகள் எழுதுக.
4. ஹர்ஷன், குமரன், யுவான்சுவாங் ஆகியோர் நட்புப் பற்றி ஒரு கட்டுரை வரைக.
5. யாத்திரிகன் வழியை விளக்கிச் சில வரிகள் எழுதுக.

## இலக்கணம்

(1) வந்தான், செல்கிருன், உண்பான்—இச்சொற் களுக்கு ஏற்ற ஏனைய காலங்களைக் குறிப்பிடுக.
(2) வேற்றுமைகள் எத்தனை? நான்கிற்கு மட்டும் உருபையும் உதாரணத்தையும் தருக.
(3) இடம் எத்தனை வகைப்படும் ?

(4) ஏற்ற சொற்களை அமைத்துச் சரியான வாக்கிய மாக்கு :—

(1) ஒரே இடத்தில் மேலும்——விரும்ப வில்லை.

(2) காமரூப நாட்டு——குமரனுக்கு——போக்கி ஞன்.

(3) கங்கைக்——வழி ஹர்ஷன்——அடைந்தான்.

(5) ஏற்ற வினைமுடிபு தருக :—

(1) ஹர்ஷனும் யுவான்சாங்கும் சென்ருன்.

(2) சீனயாத்திரிகன் ஹர்ஷனேடு தங்கியிருந்தேன்.

(3) யுவான்சுவாங் ஹர்ஷனிடம் விடை பெற்றுப் புறப்பட்டாய்.

# 5. கோதை

சங்கம் அமைத்துத் தமிழ் வளர்த்த பெருமையுடையது பாண்டிநாடு. இறையருட்பேறு பெற்ற சைவ, வைணவ அடியார் பலரைப் பெற்ற பெருமையும் அந்நாட்டிற் குண்டு. அத்தகைய சிறப்பு வாய்ந்த பாண்டிய நாட்டில் புத்தூர் என்ெருரு சிற்றூர் இருந்தது. அவ்வூரையடுத்துப் பெருங் காடு ஒன்று இருந்தது.

அக்காட்டில் வேடுவர் பலர் தம்குடும்பத்துடன் வாழ்ந்து வந்தனர். அவர்கட்குத் தலைவன் ஒருவன் இருந் தான். அவனுக்கு வில்லி, கண்டன் என்று இருவர் புதல்வர் இருந்தனர். ஒரு நாள் அவ்விருவரும் வேட்டை மேற் சென்றனர். அங்கே ஒரு பெரிய ஆலமரத்தினடியில் திரு மால் பள்ளிகொண்டிருத்தலைக் கண்டு வியந்து நின்றனர். அருகிலுள்ள ஒரு குகையில் பொருள் மிக இருத்தலையும் இறையருளால் உணர்ந்தனர்.

அவர்கள் அப்பெருஞ் செல்வத்தைக் கொண்டு, திருமகள் நாதனுக்குச் சிறந்த கோயிலொன்றை எடுப்பித்தனர். அக்கோயிலைச் சுற்றிப் பெரிய தொரு நகரையும் அமைத்தனர். பக்கத்து ஊரிலுள்ளோர் பலரையும் அங்கே குடியேறவும் செய்தனர். அது முதல் அவ்வூர் வில்லிபுத்தூர் என்று அழைக்கப்படலாயிற்று. அப்பெயரே 'ஸ்ரீ' என்னும் அடைமொழியைப்பெற்று, ஸ்ரீவில்லிபுத்தூர் என இப்போது வழங்குகிறது.

வில்லிபுத்தூரிற் குடியேறியவர்களுள், முகுந்தபட்டர் என்னும் மறையவரும் ஒருவர் ஆவர். அவர் கல்வி கேள்விகளிலே வல்லவர்; பூமகள் கேள்வனிடத்து நீங்காத பக்தியுடையவர். அவர் பதுமவல்லி என்னுங் கற்பரசியாரை மணந்து கொண்டு இல்லற வாழ்வை இனிது நடத்தி வந்தார். இவ்விருவரது அருந்தவப் பயனாக ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு விஷ்ணுசித்தன் என்று பெயரிட்டு வளர்த்து வந்தனர்.

விஷ்ணுசித்தர் தக்க பருவத்தில் கல்விகற்கத் தொடங்கினார். கொஞ்ச காலத்திற்கெல்லாம் அவருடைய உள்ளம் முழுவதும், வடவேங்கடமுடைய பெருமானைச் சார்ந்தது. ஆதலால் கல்வி கற்பதை நிறுத்திவிட்டார். இறைவனுக்குத் தொண்டு செய்வதிலேயே எப்போதும் ஈடுபட்டிருந்தார். எம்பெருமானுக்கு உவப்பான தொண்டு யாது என்று எண்ணமிடலானார்; முடிவில் எம்பெருமானுக்குச் சாத்துதற்குரிய இனிய மலர் மாலைகள் கட்டிக்கொடுத்தலே சிறந்த தொண்டென்று முடிவு செய்தார்.

அம்முடிவின்படிப் பெருநிலப்பரப்பொன்றை வளைத்து வேலியிட்டு நந்தவனமாக்கினார். நீர்ப்பூ, நிலப்பூ, கொடிப்பூ, கோட்டுப்பூ என்னும் நால் வகைப் பூக்களையும் பயிரிட்டு,

நாள்தோறும் அம்மலர்களைப் பறித்து மாலைகளமைத்து இறைவனுக்குச் சாத்தி மகிழ்ந்திருந்தார்.

அந்நாளில் வல்லபதேவன் என்னும் மன்னன் பாண்டி நாட்டை ஆண்டிருந்தான். அவன் கல்வி கேள்விகளில் வல்லவன் ; இறையன்பில் மிக ஈடுபட்டவன். ஒரு சமயம் அவன் அந்தமிலின்பம் அடையும் வழியறியப் பேராவல் கொண்டான். 'அவ்வுண்மைப் பொருளைக் கூறுவார் பெறுக' என ஒரு பொற்கிழியையும் தம் மண்டபத்தே தொங்கவிட்டான். "விஷ்ணுசித்தர், இறையருள் கூட்ட மன்னவனுக்கு உண்மைப் பொருளுணர்த்திப் பொற் கிழியையும் பெற்றுர். மன்னன் அவர்பால் மட்டற்ற அன்பும், பக்தியும் கொண்டு 'பட்டர்பிரான்' என்னும் சிறப்புப் பெயரையுந் தந்து போற்றிஞன்.

பட்டர்பிரான் ஒரு நாள் தம் நந்தவனஞ் சென்று மலர் கொய்து கொண்டிருந்தார். அப்போது உயர்ந்து, பரந்து வளர்ந்திருந்த திருத்துழாய்ச்செடியொன்றின் கீழ் ஒரு குழந்தை இருப்பதைக் கண்டார். அது பொற்பாவையே என்று கருதிய பட்டர் பிரான் 'அஃதங்கு எவ்வாறு வந் திருத்தல் கூடும்,' என்று எண்ணலாஞர். அப்போது குழந்தை தன் மழலை வாய் திறந்தழுதது. அது கண்ட பட்டர் 'அது பொற்பாவையன்று ; குழந்தையே' என் றெண்ணி, ஆர்வந் தழைக்க இரு கைகளாலும் எடுத்து மார்புற அணைத்துக்கொண்டார்.

'இக் குழவியை நோக்குங்கால் அழகே ஒரு வடி வெடுத்து வந்தாற் போன்றுள்ளதே ! பூமகளின் அவ தாரமோ ! அன்றிப் புவி மகளின் மறு வடிவமோ ! யாதும் அறியக் கூடவில்லையே ! திருத்துழாய்ச் செடி நிழற் கிடந்ததால் இஃது ஓர் தெய்வக் குழந்தையாதலே வேண் டும் ! ஆம் ! அன்று சனகனின் மகப்பேறற்ற குறையை நீக்க

வேண்டித் திருமகள் படைச்சாலில் கிடைக்கவில்லையா? அதுவே போல் என் குழந்தை யில்லாக்குறையை நீக்க வடபெருங்கோயிலுடையான் அருளிய குழந்தையே இது' என்று கூறிப் பெரு வியப்படைந்த பட்டர்பிரான், குழந் தையைக் கொண்டுபோய்த் தம் மனைவி கைக் கொடுத்து நிகழ்ந்தவற்றைக் கூறினர்.

குழந்தையைப் பெற்ற அவ்வம்மையார் அன்புப் பெருக்கால் முத்தமிட்டு மார்புற அணைத்துக் கொண்டார். பிள்ளைப்பேறற்ற தங்கட்கு அக்குழந்தை கிடைத்ததை நினைத்து, பிறவிக் குருடன் கண்பெற்ருலொப்ப மகிழ்பூத் தனர் இருவரும். அவர்கள் பாற் கருணை கூர்ந்த இறை யருளை எண்ணி எண்ணி வியந்தனர். பட்டர்பிரான் அக் குழந்தைக்குக் கோதை எனப்பெயரிட்டார்.

கோதையார் தம் குழவிப்பருவத்தில், தவழ்ந்தும் குறு நகைபுரிந்தும் பெற்ருேரை மகிழ்வித்தார்; பின்னர் குறு குறு நடந்தும், சிறுகை நீட்டியும்,மழலை மொழிந்தும், நெய்யுடை யடிசில் மெய்படவிதிர்ந்தும் அன்னை தந்தையர் அகங் களிக்கச் செய்தார். கோதையார் வளர வளர அவர் தம் அறிவும், இறையன்பும் உடன் வளரலாயின. இறைவனை எண்ணுந்தொறும், அவர்தம் திருநாமங் கேட்குந்தொறும் அகங்கனிந் துருகுவார். கண்ணன் கழலிணைகளே அவர் தம் உள்ளத்தாமரையில் கோயில் கொண்டருளின.

ஒரு நாள் பட்டர்பிரான் இறைவனுக்குச் சாத்துதற் குரிய மாலைகளைக் கட்டி வைத்து வெளியில் சென்றிருந் தார். அப்போது அங்கு வந்த கோதையார், அம்மாலைகளை எடுத்துத் தாம் அணிந்து கொண்டு, பெரியதோர் நிலைக் கண்ணுடியில் தன் அழகைக் கண்டு மகிழ்ந்தார். பின்னர் மாலைகளைக் கழற்றி முன் போலவே வைத்து விட்டார். இதை யறியாத பட்டர்பிரான் மாலைகளைக் கோயிலிற்

கொண்டு சேர்ப்பிக்க, இறைவனுக்கும் அவை சாத்தப் பெற்றன.

அன்று முதல் கோதையார் ஒவ்வொரு நாளும் இவ்வாறே செய்து வரலானார். ஒரு நாள் கோதையார் மாலையை யணிந்திருக்கும் போது, தற்செயலாகப் பட்டர் பிரான் அங்கு வந்தார். அருமைக் குழந்தையின் செயலைக் கண்டார். மனங்கலங்கினார். 'குழந்தாய்! இது பெரும் பிழையன்றோ! இதனை உள்ளத்தால் உள்ளுதலும் தீதன்றோ?' என்று கோதையாரைப் பார்த்துக் கூறினார். அந்த மாலைகளை ஆண்டவனுக்குச் சாத்த அனுப்பாதிருந்து விட்டார். அன்றிரவு, இறைவன் பட்டர்பிரான் கனவில் தோன்றி, 'அன்பரே! கோதையார் சூடிக்கொடுத்த மாலை



கோதை—சூடிக் கொடுத்தாள்.

களே நமக்கு விருப்பானவை,' என்றுரைத்து மறைந்தார். மறு நாள் முதல் கோதையார் சூடிக்கொடுத்த மாலேகளே இறைவனுக்கு அனுப்பப் பெற்றன. பட்டர் பிரான் கோதை யாரைப் பார்த்து 'நீ என்னே ஆண்டவளே' என்றுரைத்துப் போற்றினர். அது முதல் கோதையாருக்கு ஆண்டாள், சூடிக்கொடுத்த நாச்சியார் என்னும் பெயர்கள் வழங்க லாயின.

ஆண்டுகள் கழிந்தன. கோதையார் மங்கைப் பருவ மடைந்து எழில்பெற்று விளங்கினர். பட்டர் பிரான் அவர் தம் திருமணங் குறித்துச் சிந்திக்கலானர். இஃதறிந்த கோதையார் தந்தையாரை யணுகி, 'என்னுள்ளம் திரு வரங்கப் பெருநகரத்திறைவனேயே நாடியுளது. அவர்க் கன்றிப் பிறர்க் கென்னேப் பேசப் படில் வாழ இல்லேன்' என்றுரைத்தார். அது கேட்ட பட்டநாதர் 'இது யாதாய் முடியுமோ' என்றெண்ணி வாளாவிருந்தார். கோதையார் தம் ஆற்ருமை தீருமாறு திருப்பாவை, நாச்சியார் திரு மொழி ஆகியவற்றை அருளிச் செய்தார்.

திருவரங்கநாதர் பட்டர் பிரான் கனவில் தோன்றிக் கோதையாரைத் திருவரங்கத்திற்கு அழைத்து வருமாறு கூறினர். அவ்வாறே தம் கோயிற் பரிவாரமாகியுள்ளவர் கனவிலுந்தோன்றி, குடை, கவரி, விருதுகள், வாத்தி யங்கள் முதலிய சிறப்புக்களொடும் சென்று, கோதை யாரைப் பட்டநாதரொடும் அழைத்து வரப் பணித்தார். அன்றிரவே பாண்டியமன்னன் வல்லபதேவன் கனவிலுந் தோன்றி, ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று, கோதையாரை முத்துப் பல்லக்கில் ஏற்றித் திருவரங்கப் பெருநகர்க்கு அழைத்து வர அருளிச் செய்தார்.

மறுநாள் கோதையார் திருவரங்கம் செல்லத் தயா ரானர். அப்போது திருவரங்கக் கோயிற் பரிவாரமாந்தர்கள்

மாலை முதலியவற்றொடும் வந்து சேர்ந்தார்கள். பின்னர் மன்னனால் அனுப்பப்பெற்ற முத்துப் பல்லக்கும், தேர் முதலியனவும் வந்து சேர்ந்தன. அது கண்ட பட்டநாதர் கொண்ட மகிழ்ச்சிக்கோ ரெல்லையில்லை. கோதையாரும் தம்மை மறந்தவரானார். தோழியரால் அலங்கரிக்கப்பெற்று முத்துப்பல்லக்கி லேற்றப்பட்டார் அவர். எல்லோருந் திருவரங்கம் நோக்கிப் புறப்பட்டுச் சென்றனர்.

பட்டர்பிரான், கோதையார் முதலிய எல்லோருந் திருவரங்கத்தை யடைந்தனர். கோதையார் இவர்ந்து வந்த முத்துச் சிவிகை அழகிய மணவாளன் திருமண்டபத்தை யடைந்தது. மகளிர் சிலர், சிவிகையின் திரையை விலக்கினார்கள். கோதையார் பல்லக்கினின்றும் வெளிப்போந்தார். செங்கழுநீர் மாலை விளங்குங் கழுத்துடன் மலர் மகளெனப் பொலிந்த கோதையார் அழகிய மணவாளனருகிற் சென்றார். அவர்தம் காதளவோடிய கருவிழிகள், அரங்கநாதரது செவ்வரி பரந்த கண்களாகிய செந்தாமரை மலரிற் சென்று பொருந்தின. உடனே, கோதையார் அரவரசப் பெருஞ்சோதி உயர் வெள்ளை அணையை மிதித்தேறி, திருவரங்கத்தமுதனைத் தழுவிக்கொண்டு, அவன் திருமேனியுள் மறைந்தருளினார்.

## கேள்விகள்

1. வில்லிபுத்தூர் எனப் பெயர் வந்ததேன் ?
2. விஷ்ணுசித்தர் செய்த இறைபணி யாது ?
3. விஷ்ணுசித்தர் பட்டர் பிரானானதெவ்வாறு ?
4. கோதையார் பிறப்பின் வரலாறென்ன ?
5. குழந்தையை எடுத்துக் கொண்ட பட்டநாதர் கூறியன யாவை ?
6. கோதையார் தம் பெற்றோரை மகிழ்வித்த தெங்ஙனம் ?

7. சூடிக் கொடுத்த நாச்சியாரெனப் பெயர் வந்ததேன்?
8. கோதையார் மனவுறுதி நிறைவெய்திய தெவ்வாறு?
9. கோதையார் பாடியன யாவை?

## பயிற்சி

1. கோதையார் வரலாற்றைச் சுருக்கி, சுயசரிதமாக எழுதுக.
2. 'சூடிக் கொடுத்த நாச்சியார்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதுக.
3. திருப்பாவை, நாச்சியார் திருமொழியிலிருந்து இரண்டொரு பாடல்களை ஆசிரியர் மூலம் அறிந்து கொள்க.

## இலக்கணம்

(1) ஏற்ற ஆண்பாற் சொல்லைத் தருக :—
சென்றாள்
அரசி
ஆண்டாள்
மகள்.

(2) பிரித்து எழுதுக :—
அகங்கனிந்துருகுவார்
காதளவோடிய
அரவரசப் பெருஞ்சோதி.

(3) கீழ்வரும் சொற்களில் அமைந்த வேற்றுமைகளை மட்டும் குறிப்பிடுக :—
(1) கனவில் தோன்றிக் கோதையாரைத் திருவரங்கத்திற்கு அழைத்து வருமாறு கூறினர்.
(2) திருவரங்கத்தமுதனைத் தழுவிக்கொண்டு திருமார்பில் மறைந்தார்.
(3) கோதையாரைப் பார்த்துக் கூறினர்.

(4) கோடிட்ட இடங்களுக்கு ஏற்ற சொற்களை அமைக்க :—

(1) கோதையாரும் பட்டர்பிரானும் திருவரங்கம்—.

(2) அரசனும், கோயில் ஆணையாளரும் கோதையாரை—.

(3) குழந்தை மழலை வாய்திறந்து—.

(5) ஆகுபெயர் என்றால் என்ன ?

# 6. பாரி பறித்த பறி

## காட்சி 1.

(ஔவை வந்து சில காலம் பாரியோடும், கபிலரோடும் தங்கியிருந்தார். கடைசியில் ஊருக்குப் புறப்படும் நாளில்—)

**பாரி :**—ஏன் இன்னும் அவர்கள் வரவில்லை. இன்று காலை சீக்கிரமே வந்து விடுவதாகவன்றோ சொல்லிச் சென்றார்கள். ஒரு வேளை ஔவையார் ஊருக்குப் போவதாகச் சொன்னாரே ; அப்படியே போய் விட்டார்களா? இல்லை. அப்படி இருக்காது ; நம்மிடம் சொல்லாமலா போய் விடுவார்? ஒருவேளை சொன்னால் நான் அனுப்ப இடங்கொடுக்கமாட்டேன் என்று கருதி அப்படியே சென்றுவிட்டும் இருக்கலாம். எதற்கும் பொறுத்துப் பார்ப்போம்.

ஆம், ஏன் என் நெஞ்சம் இப்படிப் புலவர்கள் பால் ஓடுகின்றது? அந்த அம்மையாரோ, நாடெல்லாம் சுற்றி வரும் நல்லவர். நம் நாட்டில் மட்டும் இருங்களென்றால் அவர்கள் அதற்கு எப்படி இசைவார்கள்? தமிழ் நாட்டில்

ஒழுக்காறு வாழும் உயர்ந்த கவி வாணர்கள் எப்படி ஒரு இடத்தில் தங்கியிருப்பார்கள். உரிமையால் பறந்தோடிப் பாடிஆடும் பறவைகளுக்கும் இவர்களுக்கும் என்ன வேறு பாடு? இவர்களைக் கூட்டில் அடைப்பது போன்று ஒரே இடத்தில் தங்குக என வேண்டுவது தவறுதானே. ஆம்-தவறு தான். உணர்கின்றேன். என்றாலும் ஔவையைப் பிரிய முடியவில்லை. கடந்த சில நாட்களாக ஔவையும் கபிலனும் என் அருகிருந்து உணர்த்திய அந்த அன்பு மொழிகளை மறப்பதா? என்றென்றும், இல்லாவிட்டாலும் இன்னும் சில நாட்களுக்காவது ஔவையை இங்கு இருக்குமாறு வேண்டிக் கொள்வேன். அதோ, அவர்கள் வருகிறார்கள் (கபிலரும் ஔவையும் வருகின்றனர்) வாருங்கள் புலவர் மணிகளே!

**கபிலர் :**—அன்பிற் பாரி, நாங்கள் வரச் சற்று காலம் தாழ்த்தது. பொறுக்க.

**பாரி :**—புலவர் பெருமானே, அமருங்கள். மூதாட்டியாரே, எங்கள் பறம்பு மலையும் நாடும் தங்கட்கு ஏற்றதாக அமைகின்றன வன்றோ?

**ஔவை :**—ஆஹா, அதிலென்ன ஐயம்! என்றென்றும் இங்கேயே தங்கிவிடலாம் போல் தோன்றுகின்றதே. இயற்கைக்காட்சிகளும், இயற்கை வகையில் பெறும் உணவும், பிற இயற்கை நலங்களும், உடலையும் உயிரையும் ஒரு சேர ஓம்பி வளர்க்கின்றனவே.

**பாரி :**—ஆகவே நான் இனிக் கவல வேண்டியதில்லை.

**ஔவை :**—என்ன அப்படி? அப்போது இதுவரை கவலையில் இருந்தீர்கள் போலும்.

**பாரி :**—ஆம் அம்மையே. தாங்கள் சில நாட்களாக எங்களை விட்டுச் செல்லப் போவதாகக் கூறிக்கொண்டு

வருவதை எண்ண எண்ணக் கவலை தானே ஏற்படுகின்றது. இதுவரையில் கவலைகொண்டு தான் இருந்தேன். கற்றறிந்த விற்பனராகிய தங்களைப் போன்ற நல்லவரை விட்டுப் பிரிவதால் பெறும் கவலையை விட வேறு கவலை எனக்கு ஏது அன்னாய்? இதோ இன்று அந்த இயற்கை நலங்களை யெல்லாம் கண்டு, விளக்கி இங்கேயே இருக்கும் வகையில் தாங்கள் பேசியது என் கவலையைப் போக்கியது.

ஔவை :— மன்னா! உன் அறிவும் திருவும் வாழ்வதாக! எத்தனை இயற்கையும் எழிலும் பொருந்தியிருப்பினும் என்போன்ற பறக்கும் பறவைக்கு அவற்றை அனுபவிக்க ஏது நேரம்? இதோ இன்று நான் புறப்படுவதாகவே முடிவு செய்து வந்திருக்கிறேன்.

பாரி :— என்ன கொடுமையான சொற்கள்! அன்னாய், இன்னும் சில நாட்களாவது தாங்கள் இங்கு தங்கியிருப்பீர்களென எண்ணினேன். என் பொருட்டன்றியேனும், இதோ கபிலர் பெருமான் பொருட்டாகவாவது சில நாட்கள் தங்கியிருத்தல் நலமாகும். என்ன பெருமானே!

கபிலர் :— ஆம் மன்னா. நானும் அது பற்றித் தான் நெடு நேரம் பேசினேன். அதனாலே தான் நான் இங்கு வருவதற்குக்கூடக் காலம் தாழ்த்தது. நான் எவ்வளவு சொல்லியும் அவர்கள் இன்றே புறப்படவேண்டுமென்று முடிவு செய்து விட்டார்கள். பின் நான் என்ன செய்வது?

பாரி :— புலவர் பெருமானே, உணர்கின்றேன். அறிஞர்

கருத்து அதுவாயின் என் போன்ருரால் செய்ய என்ன இருக்கின்றது? அன்னையீர், தாங்கள் இன்றே புறப்பட வேண்டுமா?

ஔவை:—பாரி மன்ன, ஆம். வேறு என்ன செயவது? இதோ இந்தக் கபிலா உன்னிடம் நின்று விட்டது போன்று, நான் எப்படியோ அதிகமானிடம் அமைந்து விட்டேன். அவனைக்காண வேண்டுமென்ற அவா தூண்டுகின்றது. அவன் நாட்டில் அமைதியை நாட்ட நான் அருகிருந்து அடிக்கடி ஆவன செய்யவேண்டியுள்ளது. கபிலரை நீ பிரிந்தால் என்னுவாய்? அதே நிலையில் தான் இன்று என்னைப் பிரிந்து அதிகன் வருந்துவான். மன்ன, வேறு வகையாக எண்ண வேண்டாம். உன்னினும் அவன் உயர்ந்தவன் என்று கூறவில்லை. அல்லது உன்னிடம் என்மனம் பொருந்தாது என்று காட்டவில்லை. எப்படியோ, அதிகனது அரசியலில் எனக்குப் பங்கு ஏற்பட்டுவிட்டது. ஏற்பட்ட பணியை இடையூறின்றிச் செய்து முடித்தல் தானே தமிழா் கடன். அதுமட்டு மன்று. நேரே சென்று அதிகனைக்கண்டு, பிறகு வடநாடு செல்ல நினைத்துள்ளேன். தமிழ் நாட்டு வட வெல்லை வரையிற் சென்று வளம் காண வேண்டுமென்பது என் எண்ணம். நான் வடநாடு சென்று பல ஆண்டுகள் ஆயின. ஆகவே அதையும் மனதில் வைத்தே உடன் புறப்பட வேண்டும் என விழைகின்றேன்.

பாரி:— கபிலா் பெருமானே, அன்னையாருடைய முடிவு அது வாயின் நாம் என்ன செய்யக்கூடும்?

ஏதோ இன்னும் சில நாட்களாவது இங்கிருப்பார்களென எதிர்நோக்கினேன் ; பயனில்லை.

**கபிலர் :—** ஆம். பேசுவதில் பயனில்லை. அவர் செல்வதற்கு ஆவன செய்.

**பாரி :—** அப்படியே. இதோ அமைச்சர் மூலம் பொன்னும் மணியும் பிறவும் அம்மையாருக்கு அளிக்க ஏற்பாடு செய்கின்றேன். அவை வந்ததும் நானே கொடுத்துக் காலின் ஏழடி பின் சென்று வழிவிடுகின்றேன். புலவர் பெருமானே, நேரமாகிறது. உணவு கொள்ளலாமே

**கபிலர் :—** நன்று, (அனைவரும் செல்கின்றனர்).

## காட்சி 2

(காட்டிடத்தே தனிமையில் ஔவையார் பொன்னும் மணியும் கொண்டு செல்கிறார்.)

**ஔவை :—** என்ன அன்பு ? என்ன இனிமை ? இப்பாரியை விட்டுப் பிரியவே தோன்ற வில்லையே. எப்போதும் அவனிடமே இருந்துவிடலாம் போன்று தோன்றுகின்றதே. பொய்யா நாவிற் கபிலனும் அதனாற்றானே அப்படி அவனுடன் கலந்து உறைகின்றான். நான் அதிகனிடத்து விரைந்து செல்ல வேண்டும் என்பதற்காகத் தானே புறப்பட்டேன். இன்றேல் இன்னும் சில நாட்களாவது அவனுடன் தங்கியிருக்கலாமே. ஆஹா, அவன் கடைசியில் விட்டுப் பிரியும் காலத்து எப்படிக் கலங்கினான் ? அவனது அன்பு மழையில் நனைந்த என் உள்ளத்தே இன்னும் ஈரம் உலரவில்லையே. இதோ தெரி

கின்றதே அவன் மலை. ஆஹா, அந்த மலையில் தான் எத்தனை இயற்கை வளம்! இதைக் கபிலன்தான் எவ்வளவு அழகாகப்பாடியிருக் கிறான். அவன் பாட்டை மறுபடியும் எண்ணிப் பார்க்கலாம்:

ஒருசார் அருவி ஆர்ப்ப ஒருசார்
பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்
வாக்க வுக்க தேக்கட் தேறல்
கல்அலைத் தொழுகும் மன்னே பல்வேல்
அண்ணல் யானை மூவேந்தர்க்கு
இன்னான் ஆகிய இனியோன் குன்றே.

(புறம் 115)

ஆம். என்ன அழகிய பாடல். பகைவர்க்கு இன்னானா யினும் என்போன்ற புலவர்க்கு இனியவனாகிய அப்பாரியின் பறம்பைப் பாட இவரினும் சிறந்தபுலவர் யார் இருக்கிறார் கள்? தேன் பெருக்கெடுக்கும் சிறந்த மலை இதனினும் யாது உளது? பாரியும் கபிலனும் இப்பறம்பு மலையும் வாழ் வதாக! (தூரத்தே சிலர் வருகிறார்கள்) யாரது! இப்படி ஓடி வருகிறார்களே. கள்ளர் போல் தெரிகிறதே. கையில் கத்தி முதலியன. என்ன இது? பறம்பு நாட்டிலுமா—பாரி யின் அறவாழி ஆணை செலுத்தும் இந்த அரிய நாட்டிலு மா—இப்படிக்கொள்ளைக்காரர்கள்? இருக்காது.

(வேடுவர் அருகே வருகின்றனர்)

**ஒரு வேடு:**—ஏ பாட்டி! எங்கே போகிறே?

**ஔவை:**—யாரப்பா நீங்கள்? என்னை ஏன் கேட்கிறீர்கள்?

**மற்றொரு வேடு:**—பாட்டி! வேண்டுமென்றுதான் கேட் கிறோம். ஆமாம் நீ இப்போ எங்கேபோகிறே?

**ஔவை:**—நான் எங்கோ போகிறேன். எனக்கே தெரி யாதே.

வேடு :— பாட்டி, நல்லாயிருக்குதே நீ பேசறது. உனக்கே தெரியாத ஊருக்கு எதுக்காகப் போவணும் பாட்டி ?

ஔவை :—அதுதான் அப்பா எனக்கும் தெரியவில்லை.

வேடு :— தெரியவில்லையா? ஆமாம், அதோ ஒரு மூட்டை வச்சிருக்கிறயே அது என்ன ?

மற்றொரு வேடு:—பாட்டி, போட்டுக்க கொஞ்சம் வெத் தலை பாக்கு இருந்தா கொடேன்.

ஔவை :—வெற்றிலை பாக்கு என்னிடம் கிடையாதப்பா.

வேடுவ :— டே, அந்தப் பாட்டிக் கிட்டே அதெல்லாம் இருக்காது. நிறைய நகை யிருக்கும்.

மற்றொரு வேடு :—போடா பயித்தியம்! இந்தக் கிழத் திண்டே ஏதுடா நகை. ஐயோ பாவம் அது மாட்டும் போகட்டும். நமக்கு என்னத்துக்கு இந்த கிழவிக்கிட்ட விளையாட்டு.

வேடு :— பாட்டி, இந்த முடிச்சிலே என்ன வைச்சி ருக்கே பாட்டி ?

ஔவை :—அப்பா, அதுதான் எனக்கும் தெரியவில்லை.

வேடு :— பாட்டி, பாத்தியா பொய் சொல்றே. அதிலே வைச்சிருக்கிறதே உனக்குத் தெரியல்லே. அப்படியானு நீ ஏன் அதை எடுத்துண்டு போகணும்.

ஔவை :—அப்பா யாரோ முடிந்து கொடுத்தார்கள். கொடுத்ததை வேண்டாம் என்று சொல்லக் கூடாதே என்று எடுத்து வந்து விட்டேன்.

வேடு :— சாப்பாட்டு மூட்டையா யிருக்குமா ?

மற்றொரு வேடு :—அட பயித்தியமே, சாப்பாடு மூட்டை யல்லடா இது. இதில் ஏதோ நிறைய பணம் இருக்கத் தான் வேணும்.

ஔவை :—நீங்கள் யார்? ஏன் இது பற்றியெல்லாம் கேட்கிறீர்கள்?

வேடு :— நாங்களா? நாங்கள் இந்தக் காட்டிலே இருக்கிற வேடருங்கோ. எங்கள் தொழில் வழிப்பறி கொள்ளை. அதனுலேதான் உங்களிடம் இருக்கிறதையும் கொள்ளை அடிக்கலாம் என்று வந்தோம். உங்களைப் பார்த்தா ரொம்ப நல்லவங்களா தெரியுது. அதனுலே தான் பேசிண்டிருக்கோம்.

மற்ருெரு வேடு :—ஆமாம், பாட்டி, ஆமாம். வேறு யாராவது இருந்தா இந்நேரம் தப்பு திப்பு என்று இரண்டு போட்டு மூட்டையோடே ஓடி விட்டிருப்போம். நீங்க நல்லவங்களாயிருக்கிறதனுலே நல்லபடியே மூட்டை வாங்கலாம்னு முடிவு கட்டிட்டோம்.

ஔவை :—என்ன இது? பாரி ஆளும் இப்பறம்பு நாட்டிலுமா இந்தக் கொடுமை! நாகரிகம் வாய்ந்த பாரி மண்டலத்திலா இந்த அநாகரிகக் கொள்ளை! அவன் நாட்டில் பட்டினியால் வருந்துபவர் இருந்தால் அல்லவா கொள்ளை. அப்பா நீங்கள் ஏன் இப்படிக் கொள்ளை அடிக்கிறீர்கள்? உங்களுக்கு வேறுபிழைப்பே கிடையாதா.

வேடு :— உண்டு, உண்டு. என்றைக்காவது ஒரு நாளைக்குத் தேவையானுல் இப்படி வருவோம். ஆமாம், நாழியாகிறது கொடுங்கள் உங்கள் மூட்டையை.

ஔவை :—கொடுக்காவிட்டால் என்ன செய்வீர்கள்?



வழிப்பறி

**வேடு :—** கொடுக்காவிட்டால் கொள்ளை அடிக்கிறோம். எத்தனையோ விரோதிகளையெல்லாம் வெட்டி வீழ்த்திய எங்களுக்கு கிழவியாகிய உன்னை வீழ்த்துவதுதானா பெரிது.

**ஔவை :—** அப்போது என்னை விட மாட்டீர்களா?

**வேடு :—** பொருளைக்கொடுத்து விட்டால் உங்களை ஒண்ணும் செய்யமாட்டோம். (ஔவை சுற்றிப் பார்க்கிறார்.)

**வேடு :—** என்ன! நல்ல மாதிரி கேட்டால் கொடுக்க மாட்டீர்களா? யாராவது துணைக்கு வருகிறார்களா என்று பார்க்கிறீர்களா? அதெல்

லாம் ஒன்றும் கிடைக்காது. உம், கொடுங்கள் மூட்டையை. (மூட்டையைப்பற்றிக் கொண்டு வந்த கள்ளர் சென்று மறைகின்றனர் ஔவை தனிமையில்)

**ஔவை :**—என்ன கொடுமை இது! வயிற்றுக்குக் கஞ்சி யில்லாது வாடும் மக்களது அநாகரிக நாட்டி லன்றோ இது போன்ற கொள்ளையும், கொலை யும் நடக்கும். எல்லோருக்கும் வாழ வழி வகுத் து, இயற்கை நல்கும் இனிய உணவுப் பொருள் களோடு செயற்கையால் கை வருத்திப் பாடு பட்டால் விளையும் உணவுப் பொருள்களையும் மக்கள் பொருட்டு வாரி வழங்கும் வள்ளல் பாரி நாட்டிலுமா இந்தக் கொள்ளையும் கொடுமையும்? எங்கேயோ தவறு இருக் கிறது! பாரி மன்னன் தவறுடையவனாயின் அல்லவா அவன் நாட்டில் இத்தகைய கொடுமைகள் நிகழும். அவன் கொடியவ னென்று யார் சொல்லக்கூடும்! அத்தகைய தூய மன்னன் ஆளும் இந்த நாட்டிலும் கொள்ளை நடக்கிறது என்றால் இதன் உண் மையை அறியாது சொல்லலாகாது.

ஆமாம், நான் ஒரு பெருந்தவறு செய்தேன். எனக்கு ஏன் இத்துணைப் பொன்னும் மணியும்? வேண்டாத ஒன்றை—எனக்குத்தேவையில்லாத ஒன்றை—தேவை என்று எண்ணிக்கொண்டு, ஏன் அவற்றை நான் சுமந்து வரவேண்டும்? பறவையெனத் திரியும் புலவர் எனப்பேசிக் கொள்கிறோமே. பறவைக்கு இதுபோன்ற பற்று உண்டா? பிறகு ஏன் நான் அதைச் சுமந்தேன்? தன்னந் தனியளாய்ச் சுற்றித் திரியும் எனக்கு இந்தத் தொல்லையேன்? சென்ற

விடமெல்லாம் உணவுக்கு இத்தமிழ் நாட்டில் பஞ்சமில்லை. பிறகு வேறு என்ன வேண்டும்? எனக்கு என் பொருள் போனதும் ஒரு வகையில் நல்லது தான். அந்தமட்டும் அந்தக் கள்வர்கள் இந்த அளவோடு எனக்கு அறிவுறுத் தினர்களே!

ஆனல் பாரி நாட்டில் இந்தக் கொள்ளை நடப்பது எனக்குப் பிடிக்கவில்லை. என்னைப்போல் எத்தனை பேர் இந்தக் கள்வர் கையில் அகப்பட்டுக் கவலையுற்றனரோ! ஆகவே, உடனே திரும்பிச் சென்று எப்படியும் பாரிக்கு இக் கொடுமைகளை எடுத்துரைத்து இனியாவது கொள்ளை யும், கொலையும் நாட்டில் நிகழாதவாறு பார்த்துக் கொள்ளச் சொல்லவேண்டும். எந்த நாட்டில் கொள்ளை யும், கொலையும் மலிந்துள்ளனவோ, அந்தநாடு வேறு வகை களில் பெருநலன்கள் பெற்றிருந்தாலும் பயனில்லை. ஒரு குறையுமற்ற பாரியின் பறம்பு நாட்டிலே இச்சிறு குறை காண என் மனம் கவல்கின்றது. ஆம், உடனே திரும்பிச் சென்று பாரி மன்னனுக்கு இந்தக் கொடுமையை எடுத் துரைத்து, மேலும் இவ்வாறு நடைபெருதபடி தடுத்தல் வேண்டும்.

(திரும்பிச் செல்கின்ருர்.)

## காட்சி 3

**பாரி:—** (புன் சிரிப்போடு அமர்ந்திருக்கின்ருன். பக்கத் தில் கபிலர் இருக்கின்ருர். தூரத்தே ஔவை வருகிருர்)

யாரது? ஔவையாரா வருவது? புல்வர் பெரு மானே, அவர்கள் இன்னும் ஊருக்குச் செல்ல வில்லையா? அதோ வருகிருர்களே.

**கபிலர்:—** ஆம், அவர்கள் தான். ஆனால் அவர்கள் முன்னமே ஊருக்குப்புறப்பட்டுச் சென்றார்களே. (அருகில் வர) வாருங்கள், வாருங்கள், உட்காருங்கள்.

**ஔவை:—** உட்காருகிறேன். ஒரு முக்கியமான பொருளைப் பற்றிப் பேசிச் செல்லவே தங்களிடம் வந்தேன். நீங்கள் இருவரும் ஒன்றாயிருப்பது நன்றாகி விட்டது. (உட்காருகிறாள். இருவரும் அமர் கின்றனர்.)

**பாரி:—** என்ன அப்படிப்பட்டது? ஆமாம், தாங்கள் கொண்டு சென்ற பொருள்கள் எங்கே?

**ஔவை:—** பொருள்களா? அவை யாருக்குத் தேவையோ அவர்களைச் சென்று சேர்ந்தது. அதுபற்றித் தான் நானும் உங்களோடு பேச வந்தேன்.

**கபிலர்:—** அம்மையே, என்ன இது? தாங்கள் சொல்லு வது ஒன்றும் விளங்கவில்லையே.

**ஔவை:—** அப்பா, நான் நீங்கள் கொடுத்த பொன்னையும் பொருளையும் எடுத்துக் கொண்டு போகும் வழி யில் நடந்த ஒரு செயல் பற்றிக் குறிப்பிடவே இங்கு வந்தேன். உன் பறம்பு மலைச் சாரலி லுள்ள இனிய காட்டு வழியே நான் நடந்து கொண்டிருந்தேன். எங்கிருந்தோ சில வேடுவர் வந்து என்னிடம் ஏதேதோ பேசினர். என்னிடம் உள்ள பொருளை அவர்கள் எப் படியோ அறிந்திருக்கத்தான் வேண்டும். இல்லாவிட்டால் அவர்கள் ஏன் என்னிடம் வரப்போகிறார்கள்?

**பாரி:—** அந்தோ! பிறகு?

**ஔவை:**—பிறகு என்ன? வந்தவர்கள் ஏதேதோ பேசி என்னிடமிருந்த அந்த முடிச்சைக் கொள்ளை கொண்டு சென்று விட்டனர்.

**கபிலர்:**— என்ன, கொள்ளை கொண்டா? இப்பறம்பு நாட்டிலுமா கொள்ளை நடக்கிறது? பாரி ஆளும் நேரிய ஆட்சியிலா கொள்ளை? இல்லை, இதில் ஏதோ சூது கலந்திருக்கிறது. ஆராய வேண்டும்.

**பாரி:**— (புன்சிரிப்போடு) பெரியீர்! மன்னிக்க வேண்டும். எனது நாட்டிலும் கொள்ளை நடக்கிறது என்பதை என்னாலேயே நம்பமுடியவில்லையே. அன்னாய், வருந்த வேண்டா. நான் எப்படியும் கொள்ளைக்காரரைக் கண்டுபிடித்து உங்கள் முன் கொண்டு வந்து நிறுத்துகிறேன்.

**ஔவை:**—எனக்கு இது பற்றி ஒன்றும் வருத்தம் இல்லை. ஆனால் உனது அற நாட்டிலும் இம்மறநெறி இன்னும் வாழ்கிறதே என்பதை எண்ணித் தான் நான் வருந்துகின்றேன். நாடு நாடாக இருக்க வேண்டுமானால் எல்லோரும் எல்லாச் செல்வமும் எய்த வழி காணவேண்டும். தனி ஒருவனும் உணவில்லை என்று வாடலாகாது. இவையெலாம் நீ அறிந்தவையே. முல்லையின் வாட்டங் கண்டதும் தேரைக் கொடுத்த உனக்குப் பிற உயிர்களின் வாட்டத்தை நான் விளக்க வேண்டியதில்லை. மன்னா, எனினும் இக்குறை தோன்றிய காரணத்தையும் நீ ஆராய வேண்டும்.

**பாரி:**— அன்னாய், கபிலர் பெருமானே, மன்னிக்க வேண்டும். இக்கொள்ளையை நான் விட்டு விட

வில்லை. ஆராய்ந்து, அன்னையார் வருவதன் முன்பே கொள்ளை செய்தவரைக் கொள்ளைப் பொருள்களுடன் கொண்டு வந்துள்ளேன். (பணியாளனைப்பார்த்து) அப்பா அந்த இரண்டு கொள்ளைக்காரரையும் அழைத்து வா. (இரு கொள்ளைக்காரரும் முடிச்சுடன் முகங் கவிழ்ந்து முன் வந்து நின்றனர்.)

**பாரி:—** அம்மையீர், இவர்கள்தானே தங்களது முடிச்சைக் கொள்ளை அடித்தவர். இதோ, இதுதானே தங்கள் முடிச்சு

**ஔவை:—** ஆகா! பாரிமன்ன! நின் கொற்றம் வாழ்வதாக! எப்படி நீ இக்கொள்ளையை அறிந்து அவர்களைக் கைப்பற்றியதோடு பொருளையும் நான் வந்து கூறுவதற்கு முன் கொண்டு வந்து விட்டாய். உன் அறமே அறம். இத்துணைத் திறம்பட ஆணை செலுத்தும் நீ அக்கொள்ளை அடியோடு நாட்டிலேயே கால் கொள்ளாத வழித்தொலைத்து விட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்.

**கபிலர்:—** பாரி மன்ன! இது என்ன செயல்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே.

**பாரி:—** அன்னாய், புலவரே! இதற்கெல்லாம் காரணம் நானே.

**கபிலர்:—** நீயா? எப்படி?

**ஔவை:—** குடிகள் குற்றத்தை தன் மேற்கொள்ளும் கொற்றவனன்றோ பாரி. எனவே, அக்குற்றத்தையும் தன்மேல் ஏற்றிச் சொல்கின்றான். உன் நேரிய வழி அறிந்தேன். ஆமாம், இவர்கள் எப்படி அகப்பட்டார்கள்.

பாரி :— அன்னாய், இதற்கு நானே காரணம் என்று கூறினேன். ஆம், என் நாட்டில் மறந்தும் இது போன்ற கொள்ளைகள் நடக்காது என்று உறுதி கூறுகிறேன். ஆனால் இந்தக் கொள்ளைக்கூட்டத்திற்கு நானே தலைவன். அன்னாய், மன்னிக்க வேண்டும். தாங்கள் என்னோடு சில காலம் இருங்கள் என்று வேண்டியும் விரைந்து புறப்படவே இந்த ஏற்பாட்டினைச் செய்தேன். வழியில் தங்கள் பொருளைப்பறித்து வந்தால் தாங்கள் எப்படியும் திரும்பி வந்து அறமுரைத்து, இன்னும் சில காலமாவது தங்குவீர்கள் என்ற



பாரி மகளிரோடு ஔவை.

உறுதியோடு நானே இக்கொள்ளைக்கு ஏற்பாடு செய்தேன். இதோ நிற்பவர் வேறு யாரு மல்லர். தங்களைக் கொள்ளை கொள்ள யாரை அனுப்புவது. இந்த இருவரில் இவர் எனது அமைச்சர், மற்றவரோ எனது சேனைத்தலைவர். (இருவரும் மேல் உடை களைந்து இயற்கைத் தோற்றத்தோடு வணங்குகின்றனர்.) இவர் களையே தங்களிடம் அனுப்பினேன். நான் செய்வது தவறு என்பதை அறிவேன். என்ரு லும் உங்களை விட்டு நீங்க விரும்பாத என் ஆசையினுல் அவ்வாறு செய்தேன். புலவர் பெருமானே! இது பற்றித் தங்களிடம் கூட ஒன்றும் கூறவில்லை. என்னை மன்னிக்க வேண்டுகின்றேன். தாங்கள் இத்தகைய செய லுக்கு ஒருப்பட மாட்டீர்கள் என்பதை நான் அறிவேன் ; என்ருலும் என் அவாவினுல் இக் கொடுந்தொழிலைச் செய்தேன். அன்னுய், தாங்கள் கொடுக்கும் தண்டனை எதுவாயினும் ஏற்றுக்கொள்ளுகிறேன். (விழுந்து வணங்கு கிருன். ஔவையார் தூக்கி நிறுத்தி)

**ஔவை :—** அப்பா, உன் அன்பின் எல்லை கண்டேன். அந்த அன்பின் ஆழத்தை அறியாத நான் உடனே புறப்பட்டது எனக்கு வருத்தத்தை அளிக் கின்றது. உன் அருமைச் செல்வியரோடு இன் னும் சில நாள் இருப்பதாக இதோ முடிவு செய்து விட்டேன். புலவர் பெருமானே, உமது மன்னன் அன்பே அன்பு.

**பாரி :—** அன்னையீர் தாங்கள் இன்னும் சில நாள் இருப் பதை எண்ண மகிழ்கின்றேன். பெருமானே,

நம் வாழ்வு இன்னும் சிறப்புற்றது. அன்றுய் தாங்கள் அந்தப்புரம் சென்று என் அருமை மகளிரோடு இருக்க வேண்டுகின்றேன்.

**ஔவை :—** நல்லது, அப்படியே செய்கிறேன் (போகிருர்)

**பாரி :—** புலவர்பெரும! தங்களைக் கலக்காது செய்த இச்செயலை மன்னிக்க வேண்டுகின்றேன்.

**கபிலர் :—** மன்னிக்க என்ன இருக்கிறது? இச்செயல் உலகம் உள்ளளவும் நீ தமிழ் மீதும் தமிழ்ப் புலவர் மீதும் கொண்ட அன்பையன்றோ காட்டிக் கொண்டிருக்கும். நல்லது நான் சென்று வருகிறேன். (இருவரும் பிரிகின் றனர்.)

## கேள்விகள்

1. ஔவையாரும், கபிலரும் வரக்காணுத பாரி எண்ணியதென்ன?
2. தான் தகடூர் செல்லவேண்டுமென்பதற்கு ஔவையார் கூறிய காரணங்கள் யாவை?
3. தகடூர் செல்லப் புறப்பட்ட ஔவையார் தம்முள் எவ் வெவற்றை எண்ணிக்கொண்டே செல்லுகின்ருர்?
4. ஔவையார் காட்டின் வழிச் செல்லும்போது நடந்த தென்ன?
5. ஔவையார் ஏன் மீண்டும் பாரியிடஞ் சென்ருர்?
6. பாரியை மீண்டும் கண்ட ஔவையார் கூறியன யாவை?
7. அதற்குப் பாரி தந்த பதில் என்ன?
8. உண்மை யறிந்த ஔவையார் கூறியதென்ன?

## பயிற்சி

1. இப்பாடத்திலிருந்து அறிந்து கொள்ளும் பாரியின் குண நலன்களைத் தொகுத்து எழுதுக.

2. இப்பாடத்திலிருந்து பண்டைத் தமிழ்ப் புலவர்களைப் பற்றி நாமறிந்து கொள்ளுவதை எழுதுக.
3. ஔவைக்கும் வேடுவர்க்கும் நடந்த உரையாடலை உன் சொந்த நடையில் எழுதுக.
4. இப் பகுதியை நன்கு பயிற்சி செய்து கொண்டு உங்கள் மாணவர் கழகக் கூட்டத்தில் நடிக்கவும்.

## இலக்கணம்

(1) கீழ்வருஞ் சொற்கள் நிலைமொழியோடு புணரும் பொழுது அடையும் மாறுதலைக் கவனி :—
தேன் + குடம் = தேக்குடம்
ஔவையை + பிரிய = ஔவையைப்பிரிய
அன்பில் + பாரி = அன்பிற்பாரி
தேக்கள் + தேறல் = தேக்கட் தேறல்
(2) விளி வேற்றுமைக்கும், ஆறும் வேற்றுமைக்கும், எழுவாய் வேற்றுமைக்கும் ஒவ்வோர் உதாரணம் தருக.
(3) வினா எத்தனை வகைப்படும்? உதாரணம் தந்து விளக்குக.
(4) கந்தன் வள்ளியை மணந்தான். இதில் எழுவாய், பயனிலை, செயப்படுபொருளைக் கண்டுபிடி.
(5) மனம்—மணம்; பனி—பணி; கொல்லை—கொள்ளை; அறம்—அரம்; மறம்—மரம்; எழுத்து வேறுபாட்டால் அடையும் பொருள் மாற்றத்தைக் கண்டு, எல்லாச் சொற்களுக்கும் பொருள் தருக.
(6) கீழ்வரும் தொடர்களுக்கு ஏற்ற வினைச் சொற்கள் அமைக்க :—
மாட்டைக் கந்தன்——.
மாணவரும் ஆசிரியரும்——.
நாளங்காடியில் காய்கறிகள்——.

# I கடவுள் வாழ்த்து.

## 1. திருவாசகம்—மாணிக்கவாசகர்

பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்துநீ
பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ஒளி பெருக்கி உலப்பிலா
ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த செல்வமே
சிவபெரு மானே
யான்உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

## 2. நாலாயிரம்—குலசேகரர்

பாராளும் படர்செல்வம் பரதன்நம்பிக்கே அருளி
ஆராஅன்பு இளையவனோடு அருங்கானம்
அடைந்தவனே
சீராளும் வரைமார்பா திருக்கண்ண புரத்தரசே
தாராளும் நீள்முடியென் தாசரதி தாலேலோ.

## 3. தமிழன்னை திருப்பள்ளி எழுச்சி—அ. மு. ப.

வேங்கடம் குமரியின் விரிந்திடு அமிழ்தே
விளம்பிய இனிமையின் சிகரமாம் கொழுந்தே
யாங்குடைப் புலவர்கள் பயின்றிடு கனியே
பண்புடன் பாரினில் பரந்திடு பரப்பே !
தீங்ககல் நலனுறு செந்தமிழ்த் தேவி
தீஞ்சுவைப் பாதரு சீருடைச் செல்வி !
ஓங்கிய புகழுடை உத்தம நிதியே
உயர்தமிழே பள்ளி எழுந்தரு ளாயே.

# II நீதிப் பகுதி

## நன்னெறி—சிவப்பிரகாசர்

1. நீக்கம் அறும்இருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கின் அவர்பெருமை நொய்தாகும்—பூக்குழ
நெல்லின் உமிசிறிது நீங்கிப் பழமைபோல் [லாய்
புல்லினும் திண்மைநிலை போம்.

2. உள்ளம் கவர்ந்தெழுந்து ஓங்குசினம் காத்துக்
கொள்ளும் குணமே குணமென்க—வெள்ளம்
தடுத்தல் அரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ விளம்பு.

3. தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதாது உலகில்
நிறையிருளை நீக்கும்மேல் நின்று.

4. இன்சொலால் அன்றி இருநீர் வியன்உலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே—பொன்செய்
அதிர்வளையாய்! பொங்காது அழற்கதிரால் தண்
கதிர்வரவால் பொங்கும் கடல். [ணென்

5. எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந்து என்றுஅவன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ—பைந்தொடீ!
நின்று பயன்உதவி நில்லா அரம்பையின்கீழ்க்
கன்றும் உதவும் கனி.

6. நல்லோர் வரவால் நகைமுகங்கொண்டு இன்புறீஇ
அல்லோர் வரவால் அழுங்குவர்—வல்லோர்
திருந்தும் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்தும் சுழல்கால் வர.

7. முனிவினும் நல்குவர் மூதறிஞர் உள்ளக்
கனிவினும் நல்கார் கயவர்—நனிவிளைவில்
காயினும் ஆகும் கதலிதான் எட்டிபழுத்து
ஆயினும் ஆமோ அறை.

# III கதைப் பகுதி

## சிங்கமும் முயலும்

குறுமுயல் சிங்கந் தன்னைக்
கொன்ற தொன்றுண்டே தென்னில்
செறியுமோர் காட்டி லேயோர்
சிங்கமுண்டு அந்தக் காட்டில்
உறுவிலங் கனைத்தும் வேட்டை
யாடியூன் மிகவுந் தின்று
வெறிகொடு திரியும் நாளில்
விலங்கெலாம் ஒருங்கு கூடி, 1

" ஆணிளஞ் சிங்கமே! உன்
அடவியில் விலங்கை யெல்லாம்
வீணிலே கொல்ல வேண்டா;
விதத்தினில் தினமொன் ருக
ஊணுனக் களிப்போம்," என்ன,
உண்மையாக் கொண்டு சிங்கம்
ஆணையும் இட்டொவ் வொன்ருய்
அருந்தியங் கிருக்கும் நாளில், 2

தனிமுய லொன்றுக் கோர்நாள்
தன்முறை வருத லோடும்
" இனியது விடாது நம்மை
எனினுமோர் எடுப் பெடுத்து

வினையை யிப்போது செய்து
வென்றுநாம் உய்ந்தோ மாகில்
நனிவிலங் கனைத்தும் உய்யும்;
நமக்குநற் புகழுண்டு," என்றே, 3

கருதியச் சிங்கத் தன்னின்
கடும்பசி வேளை தப்பி
வருதலும் முயலை நோக்கி
"மன்னன் நம்பசி வேளைக்குப்
பெருமத வேழ மேனும்
பிந்துவ தில்லை; பிந்தி
வருவதேன்! உரை நீ" என்று
மனந்தனிற் சினந்து கூற, 4

"ஐய! நின் பசிவே ளைக்கே
அடியனேன் வந்தேன்; ஆங்கோர்
வெய்ய சிங்கத்தைக் கண்டு
வெருவியங் கொளித் திருந்தேன்;
பையவே சிங்கம் ஆங்கோர்
பருமுழை புகுந்த பின்னர்த்
துய்யவுன் பக்கல் வந்தேன்
சுவாமி!" என் றிறைஞ்சி நிற்க, 5

சிங்கம் "நா மல்லால் வேறோர்
சிங்கம் நீ கண்டா யாகில்
அங்கதைக் காட்டுவா" என்று
அழைத்தலும் அழைத்துப் போயோர்
பங்கமும் புனலும் சேர்ந்த
பாழ்ந்துர வதனைக் காட்ட,
அங்கதை யெட்டிப் பார்த்து
அதனிழ லுருவந் தோன்ற, 6

தன்னரு நிழலைத் தானே
சத்துரு வென்று பாய்ந்து
துன்னுபங் கத்த முந்தித்
துளங்கியே யுயிரி ழந்தது
என்னலால் உபாயத் தாலே
யாவையும் வெல்லலாம் என்று
இன்னமோர் நண்டு கொக்கை
ஈர்ந்ததோர் கதையுஞ் சொல்லும். 7

# IV பல்சுவைப் பகுதி

## 1. கம்பர்—ஏகம்பவாணனைப் பாடியது.

வாணன் புகழ்க்கெல்லை வாழ்த்துவோர் நாவெல்லை
வாணன் செயத்தெல்லை மண்எல்லை—வாணன்
படைக்கு எல்லை திக்கெல்லை பைந்தமிழ்தேர் வாணன்
கொடைக்கெல்லை ஏற்பவர்தம் கோள்.

## 2. கம்பர்—தன்னை ஆதரித்த சடையப்ப வள்ளலைப் பாடியது.

மோட்டுளருமை வாவிபுக முட்டுவரால் கன்றென்று
வீட்டளவு பால்சொரியும் வெண்ணெயே—நாட்டில்
அடையா நெடுங்கதவும் அஞ்சலென்ற சொல்லும்
உடையான் சடையப்பன் ஊர்.

## 3. காளமேகப் புலவர்—ஈஏற மலை குலுங்கப் பாடியது.

வாரணங்க ளெட்டும் மகமேருவும் கடலும்
தாரணியும் எல்லாம் சலித்தனவால்—நாரணனைப்
பண்வாய் இடைச்சி பருமத்தினுல் அடித்த
புண்வாயில் ஈமொய்த்த போது.

### 4. காளமேகப் புலவர்—சிவனடியாருக்கு ஆறு நூலை அளிக்கப் பாடியது.

சங்கரர்க்கு மாறுதலை சண்முகர்க்கு மாறுதலை
ஐங்கரர்க்கு மாறுதலை யானதே—சங்கைப்
பிடித்தோர்க்கு மாறுதலை பித்தாநின் பாதம்
பிடித்தோர்க்கு மாறுதலை பார்.

### 5. வரதுங்கராம பாண்டியன்—சகோதர ஒற்றுமை பற்றிப் பாடியது.

*செஞ்சுடரின் மைந்தனையும் தென்இலங்கை*
வேந்தனையும்
பஞ்சவரில் பார்த்தனையும் பாராதே—மிஞ்சு
விரதமே பூண்டிந்த மேதினியை ஆண்ட
பரதனையும் இராமனையும் பார்.

## குறிப்புரை

### வாழ்த்துப் பகுதி.

**திருவாசகம்**

மாணிக்கவாசகர்: மதுரையடுத்த திருவாதவூரிற் பிறந்தவர். திருவாதவூரர் எனவும் அழைக்கப்படுவர். அரிமர்த்தன பாண்டியனிடம் அமைச்சராயிருந்தவர். இவர் பாடிய திருவாசகம், திருக்கோவையார் எட்டாந் திருமுறையாக வகுக்கப் பெற்றுள்ளன.

சாலப் பரிந்து = மிக்க அன்பு பாராட்டி
ஊன் = மாமிசம், (தசை)
உலப்பிலா = அழிதலில்லாத
புறம் புறம் திரிந்த = எப்போதும் உடனிருந்த
சிக்கென = உறுதியாக

## நாலாயிர திவ்யப்பிரபந்தம்

குலசேகரப் பெருமாள்: சேரநாட்டு மன்னர் வரிசையில் பிறந்தவர். அடியவர் பக்தியில் சிறந்தவர். உளமுருகத் திருமாலைப்பாடிய பன்னிரு ஆழ்வாருள் ஒருவர்.

படர் செல்வம் = வழிவழியாக வருகின்ற அரசாட்சி
நம்பி = ஆண்களுக்குள்ளே சிறந்தவன்
ஆரா அன்பு = நிறைந்த அன்பு
இளையவன் = தம்பியாகிய இலக்குவன்
கானம் = காடு
சீராளும் = இலக்குமி தங்கும்
வரை = மலை
தாராளும் = மாலை சூட்டப்பெற்ற
தாசரதி = தசரத புத்திரனாகிய இராமன்

திருக்கண்ணபுரம் தஞ்சை மாவட்டத்துள்ள நன்னிலம் புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கில் உள்ளதொரு சிறந்த வைணவத் திருப்பதி.

## மொழியரசி

அ. மு. பரமசிவானந்தம்: இப்பாடநூலின் ஆசிரியர்.

விளம்பிய = சொல்லிய
சிகரம் = உச்சி
பாங்கு = சிறப்பு
பண்புடன் = சிறப்பொடு
பாரினில் = உலகினில்
தீஞ்சுவைப்பா = இன்சுவை மிக்க பாக்கள்

# நீதிப் பகுதி

## நன்னெறி

சிவப்பிரகாசர் : காஞ்சியிற் பிறந்தவர். வீர சைவ மதத்தினர். துறைமங்கலம் என்னும் ஊரில் பெரும் பாலும் வாழ்ந்திருந்தார். நால்வர் நான்மணிமாலை முதலிய சிற்றிலக்கியங்களும், பிரபுலிங்க லீலை முதலிய காவியங் களையும் இயற்றியுள்ளவர்.

1. குழல் = கூந்தல்
   நீக்கம் அறும் = பிரிதல் இல்லாத
   புணர்ந்தாலும் = முன்புபோல் ஒன்று சேர்ந்தாலும்
   நொய்து = அற்பம்
   புல்லினும் = ஒன்று சேர்ந்தாலும்
   திண்மை = (முளைப்பதற்கேற்ற) வலிமை

2. கவர்ந்து = தன் வசப்படுத்திக் கொண்டு
   தடம் கரை = விசாலமான, பெரிய கரை
   அரிதோ = அருமையோ

3. தீர்வு உள்ளார் = தீர்த்துக்கொள்ள நினையார்
   தளர்ந்து = மனம் இரங்கி
   விழுமியோர் = மேலோர்

4. இருநீர் வியன் உலகம் = பெரிய கடல் சூழ்ந்த பரந்த உலகம்
   வன்சொல் = கடுஞ்சொல்
   அதிர் = ஒலிக்கின்ற
   அழல்கதிர் = வெம்மை மிக்க சூரியன்
   தண்ணென் கதிர் = குளிர்ச்சி மிக்க சந்திரன்

5. எந்தை = என் தந்தை
நல்கூர்ந்தான் = வறுமையடைந்தான்
பைந்தொடீ = பசும் பொன்னாலாகிய வளையலை யணிந்த பெண்ணே
நில்லா = நிலைபெற்றிராமல் அழிந்து விடுகின்ற
அரம்பை = வாழை

6. இன்புறீஇ = இன்பமடைந்து
அல்லோர் = தீயோர்
அழுங்குவர் = மனம் வருந்துவர்
வல்லோர் = கல்வியில் வல்லவர்
தேமா = இனிய மாமரமானது
திருந்தும் = அழகுற்றிருக்கும்
சுழல் கால் = வாடைக்காற்று

7. முனிவு = கோபம்
உள்ளக் கனிவிலும் = மன மகிழ்ச்சியுள்ளபோதும்
நனிவிளைவு இல் = நன்றாய் முற்றிப் பழுக்காத
கதலி = வாழை
அறை = சொல்லுவாயாக

## கதைப் பகுதி

### பஞ்ச தந்திரம்—வீரமார்த்தாண்டதேவர்

1. குறு முயல் = சிறிய முயல்
செறியும் = (மரங்கள்) அடர்ந்த
உறுவிலங்கு = வாழுகின்ற விலங்குகள்
ஊன் = மாமிசம்

2. அடவி = காடு
ஊண் = உணவு
ஆணை = கட்டளை
அருந்தி = உண்டு

3. எடுப்பெடுத்து = தந்திரத்தைக் கைக்கொண்டு
நனி = மிகுதி
உய்யும் = பிழைக்கும்

4. தப்பி = தவறி
வேழம் = யானை
சினந்து = கோபித்து

5. வெய்ய = கொடிய
வெருவி = அஞ்சி
பைய = மெல்ல
பருமுழை = பெரிய குகை
துய்ய = தூய்மையான ; சிறந்த
இறைஞ்சி = வணங்கி

6. பங்கம் = சேறு
புனல் = நீர்
துரவு = கிணறு

7. சத்துரு = பகைவன்
துன்னு = நிறைந்த
துளங்கி = நடுக்கமுற்று
உபாயம் = தந்திரம்
ஈர்ந்தது = அறுத்தது

## தனிப் பாடல்

1. வாணன் = ஏகம்ப வாணன்
எல்லை = அளவு
நா = நாவினின்று தோன்றும் சொல்
திக்கு = திசை
தமிழ்தேர் = தமிழ் ஆராய்ச்சி யுடைய
கோள் = ஆற்றல்

2. மோட்டு எருமை = வலிமிக்க எருமை
வாவி = குளம்
வீட்டளவும் = வீடு செல்லும்வரை
வெண்ணெய் = திரு வெண்ணெய் நல்லூர்
நெடுங் கதவு = பெரிய கதவு

3. வாரணங்கள் எட்டும் = எட்டுத்திக்கு யானைகளும்
தாரணி = பூமி
சலித்தன = குலுங்கி வருத்தமுற்றன
நாரணன் = நாராயணன் = திருமால் (கண்ணன்)
பண்வாய் = பண்பாடும் வாயினையுடைய
புண்வாய் = புண்ணினிடத்தில்

4. ஆறுதலை = ஆறாகிய கங்கை தலையிலே உள்ளது
மாறுதலை = மாறுபட்ட யானைத்தலை உள்ளது
மாறுதலை = பல பிறவிகளிலேயும், மீன், ஆமை, சிங்கம் போன்ற பல மாறுபட்ட தலைகள் உள்ளமை அல்லது ஆறுகள் சேரும் கடல் இருப்பிடமாக உள்ளமை
ஆறுதலைபார் = பிறவித் துன்பத்தினின்று நீங்கி இளைப்பாறத்தக்க வீடுபேற்றைப் பெற அருள் செய்வாயாக

5. செஞ்சுடரின் மைந்தன் = சூரியன் மகனாகிய சுக்ரீவன்
இலங்கை வேந்தன் = இராவணன்
பார்த்தன் = அருச்சுனன்
பாராதே = பார்த்து நடவாமல்
மிஞ்சு விரதமே பூண்டு = மேலான உறுதிகொண்டு
மேதினி = பூமி

# அருஞ்சொற் பொருள்

## காவிரி

சான்று—எடுத்துக்காட்டு
எழில்—அழகு
கிளை—பிரிவு
புனிதம்—தூய்மை
அண்மையில்—அருகில்
ஆரவாரம்—பேரொலி
வான்—மேகம் (முகில்)

## காந்தருவ தத்தை

அரியணை—அரசபீடம்
ஆற்ருது—தாளாமல்
நாடி—நெருங்கி
சேதமுருது—பழுதுபடாது
வியப்பு—ஆச்சரியம்
பணியாட்கள்—வேலையாட்கள்
யாழ்வினை—யாழ்ப்போட்டி
சுயம்வரம்—தானே தேர்ந்தெடுக்கும் திருமணம்
பகைமை—மாறுபட்ட உள்ளம்
வாளா—ஒன்றும் கூருமல்
தேற்றி—ஆறுதல் கூறி, (மனதைத் திருத்தி)
உடைந்தது—ஆற்ருது போனது

## ஆறுமுக நாவலர்

மரபு—குலம்
உண்டி—உணவு
புறச் சமயம்—மற்றக் கொள்கை

குன்றுவது—குறைவது
அழுக்காறு—பொறாமை
பிணிக்கும்—ஒன்றுபடுத்தும்
ஆதீனம்—நன்னெறிகளைக் கூறும் மடாலயம்
வித்தியாசாலை—கலைபயில் கூடம்
ஆற்றல்—செயல் முடிக்கும் வன்மை
கைவரப் பெற்றவர்—தேர்ச்சி பெற்றவர்
பேறு—செல்வம், (பாக்கியம்)

## சீன யாத்திரிகன்

பண்பாடு—ஒழுக்கமுறை
இன்னல்—துன்பம்
சோர்வு—தளர்ச்சி
அவை—சபை
சீற்றம்—சினம்
பேரவா—மிகுந்த விருப்பம்
வரப்பணித்தான்—வரும்படி ஆணையிட்டான்

## கோதை

அடியார்—தொண்டர்
பள்ளி—படுக்கை
இறையருள்—கடவுள் கிருபை
மறையவர்—வேதம் ஓதி உணர்ந்தவர்
அடைமொழி—மொழிமுன் கூறும் புகழ்ச்சொல்
பூமகள்—திருமகள்
ஈடுபட்டு—மனம் ஒன்றுபட்டு
உவப்பான—மகிழ்ச்சியான
கோட்டுப்பூ—கொம்பில் பூக்கும் பூ
அந்தமில் இன்பம்—முடிவில்லாத இன்பம்
பேராவல்—மிக்க விருப்பம்
கண்பெற்று லொப்ப—கண் பெற்றது போல்

அடிசில்—உணவமுது
மெய்பட விதிர்த்தும்—உடலில்பட உதிர்த்தும்
அகம்—உள்ளம்
சாத்துதற்கு—சூட்டுவதற்கு
அரவரசன்—பாம்புக்கெல்லாம் அரசனை ஆதி சேடன்
அணை—படுக்கை

## பாரி பறித்த பறி

ஒழுக்காறு—ஒழுக்கவழி
கவல—கவலைப்பட
ஓம்பி—போற்றி
மன்னன்—அரசன்
பணியை—வேலையை
மறம்—அறமல்லாத வழி
கால்கொள்ள—நிலைத்துநிற்க

# நமது தமிழ் வாசகம்

## இரண்டாம் புத்தகம்

### பொதுப் பகுதி

ஆசிரியர்
சென்னை பச்சையப்பன் கல்லூரித் துணைத்தமிழ்ப் பேராசிரியர்
அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட்.

மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட்
மதராஸ் பம்பாய் கல்கத்தா லண்டன்
1954

# முன்னுரை

இந்தியா விடுதலை பெற்றபின் தாய்மொழியானது கல்வித் திட்டத்தில் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றுவிட்டது. தத்தம் மொழியை வளர்க்க வேண்டும் என்ற ஆர்வம் அவ்வப்பகுதியில் உள்ள மக்கள் உள்ளத்தில் உண்டாயிற்று. சென்னை அரசாங்கத்தார் மக்கள் ஆர்வத்தை அறிந்து, இப்பகுதியில் உள்ள மொழிகளை வளர்க்க வழி பல வகுத்தனர். அவற்றுள் ஒன்று பாடநூல்களைத் திருத்தி அமைக்கும் முறை.

தமிழ்ப்பாடதிட்டத்தை அமைப்பதற்காக சென்னை அரசாங்கத்தார் 1951-ஜூன் 26ம் நாள் ஒரு திருந்திய முறையை சென்னை கெஜட்டில் பிரசுரம் செய்தனர். அதில் உயர்தர பாடசாலைகளின் முதல் மூன்று பாரங்களில் தமிழ்ப் பாடம் பொது, சிறப்பு என இருவகையாகப் பிரிக்கப்பட்டு, அவ்வவற்றிற்கு உரிய அமைப்புகளும் விளக்கப்பட்டன. அத்திட்ட முறைப்படி இதுவரை தமிழ்ப் பாடநூல்கள் வெளி வருகின்றன.

சென்னை மாக்மில்லன் கம்பெனியார் அப்பாடதிட்டத்தின் அடிப்படையில் முதல் மூன்று பாரங்களுக்குத் தமிழ் நூல்கள் வெளியிட விரும்பினர். அவர்தம் விருப்பமே இந்த நூற்றொகுதியாக வருகின்றது. மூன்று பாரங்களுக்கும் பொது, சிறப்பு என்ற தனித்தனிப்பகுதிகள், அரசியலார் வரம்பு கடவாத வகையில் அமைக்கப்பட்டு வெளிவருகின்றன. இப்பாடநூல் வரிசை மாணவர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்ற துணிபுடையேன்.

பாடசாலைகளின் தலைவர்களும், தலைமை ஆசிரியர்களும், தமிழாசிரியர்களும் இந்த நூற்றொகுதியை ஏற்று ஆதரிக்கக் கேட்டுக்கொள்ளுகிறேன். இத்துறையில் என்னை ஊக்கிய மாக்மில்லன் கம்பெனியாருக்கு என் நன்றி.

ஆசிரியன்.

# பொருளடக்கம்


| பாடம் | | பக்கம் |
|---|---|---|
| 1. | குமரிக் காட்சி | 5 |
| 2. | நெசவுத் தொழில் | 11 |
| 3. | அசோகன் | 22 |
| 4. | இராமலிங்க அடிகள் | 36 |
| 5. | ஜகதீச சந்திரபோஸ் | 45 |
| 6. | காஷ்மீரம் | 54 |
| 7. | கம்பரும் சடையப்ப வள்ளலும் | 65 |
| 8. | முன்னேற்றப் பாதை | 73 |
| 9. | ஆனந்தரங்கப்பிள்ளை | 84 |
| | கடவுள் வாழ்த்து | 95 |
| | நீதிப் பகுதி | 96 |
| | கதைப் பகுதி | 101 |
| | பல்சுவைப் பகுதி | 105 |
| | குறிப்புரை | 107 |
| | அருஞ்சொற் பொருள் | 118 |


---

*பாரதியாரின் பாடல்கள் அரசாங்கத்தின் அனுமதி பெற்று சேர்க்கப் பட்டுள்ளன. அனுமதிக்கு அரசாங்கத்திற்கு நன்றி.*

# 1. குமரிக் காட்சி

குமரி என்னும் போதே தண்டமிழ் நாட்டுத் தென் கோடிமுனை உள்ளத்தே தோன்ற நிற்கும். 'வட வேங்கடந் தென் குமரி' என்று தமிழ் நாட்டெல்லையைப் பண்டைப் பெரியோர் வரையறுத்தனர். குமரி என்பது பண்டைநாளில் எதைக் குறித்ததென நாம் திட்டமாக அறியாது போயினும் இன்று குமரி முனை நம் எதிர் நிற்கின்றது. அக்குமரியிடத்துத் தென்கோடியில் சென்று சேர்ந்தவுடனேயே உள்ளத்தே பல்வேறு எண்ணங்கள் பற்றுவது இயல்பு. எனவே குமரிக்காட்சி என்பது தண்டமிழ் நாட்டுத் தனிப் பெருங்கோடியில் உள்ள கன்னியாகுமரியின் கடற்கரைக் காட்சியே யாகும்.

இந்தியத் தீபகற்பத்திற்குத் தெற்கே தமிழகத்திற்குத் தலைசான்ற தென் எல்லையாக உள்ளது குமரிமுனையாகும். 'குமரியொடு வடவிமயத் தொருமொழி வைத்துலகாண்ட' என்பது இளங்கோவடிகளது சிலப்பதிகாரத்து அடியார்க்கு நல்லார் உரைத் தொடக்கமாகும். இக்குமரி முனையே அன்றும் இன்றும் தமிழ் நாட்டுத் தென் எல்லையாகச் சிறந்துள்ளது என அறிகிறோம். கீழ்த்திசையில் வங்காள விரிகுடாவும், மேற்கில் அரபிக்கடலும், தெற்கில் இந்து மகா சமுத்திரமும் ஒன்றி இயையும் காட்சி எண்ணருங் காட்சியாக இலங்குகின்றது.

நானும் என் உடன் வந்த நண்பரும் திருவனந்தபுரத்துச் சிறப்பையெல்லாங் கண்டு குமரி முனை குறித்துப் புறப்பட்டோம். நாகர்கோயில் வழியாகக் குமரிக் கரைக்குச் சரியாக நான்கு மணிக்கு வந்து சேர்ந்தோம். நீல நிறக்




குமரி முனை.

கடல் எவ்விடத்தும் விளங்கியது. இயற்கையன்னை இன் கொலு வீற்றிருந்தாள். குமரித் தெய்வமும் ஆண்டே கோயில் கொண்டிருந்தாள். கன்னியென்னும் பேரரசி கடற் கரையில் கன்னியாகவே காட்சியளித்துக் கவினுற விளங் கினாள். பொற்பார் கோயில் பொலிவுற இருந்தது.

இருவரும் கடற்கரையை அணுகினோம். அலையொலி யும் அழகியலும் எங்கள் காதையும் கருத்தையுங் கவர்ந்தன. எத்திசை நோக்கினும் இனிய கடற் காட்சி; எம்மருங்கு நோக்கினும் சிறந்துள்ள பொன்னிறக் காட்சி. மேலைக் கடலில் சூரியனது ஒளிபட அக்கடல் முழுதும் வெள்ளித் தகடாய் விளங்கியது. இக் காட்சியைக் கண்ட எங்கள் உள்ளம் நீராட நினைந்தது. அதனையும் முடித்தோம்.

பின்னர் குமரிக்கரையில் தெற்கு நோக்கிச் சிறிது நேரம் அமர்ந்தோம். அம்மம்ம! என் சிந்தனையில் தோன்றிய

எண்ணங்கள் தாம் எத்தனை! 'இந்து மாக்கடலே! எங்கள் தமிழ் நாட்டை—பழம் பெரு நாட்டை—யாண்டொளித்தாய்?' என்ற சொற்கள் எழுந்தன. ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன் விளங்கிய நாற்பத்தொன்பது தமிழ் நாடுகளை ஏன் கொள்ளை கொண்டாய் என்ற கேள்வி எழுந்தது. 'பல துளிப் பெருக்குடன் பண்புடனமைந்த பஃறுளியென்னும் பழைய ஆறு எங்கே? குமரி என்னும் பொன் கொழித்த ஆறு எங்கே? ஈடெடுப்பற்றிருந்த அழகுள்ள குமரிமலை எங்கே? திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளும், குன்றம் எறிந்த குமரவேளும் ஒருங்கிருந்து தமிழாய்ந்த தலைச் சங்கம் திகழ்ந்த தென்மதுரை எங்கே? தொல்காப்பியரும் அருந்தமிழ் அகத்தியனும் இன்னும் பலரும் இடைச் சங்கத்தே வீற்றிருந்து தமிழ் வளர்த்த கபாடபுரம் எங்கே? ஏழ் தெங்கநாடு, ஏழ் முன்பாலை, ஏழ் பின்பாலை, ஏழ் குன்ற நாடுகள் எங்கே?

கிழக்கே ஆஸ்திரேலியா முதல் மேற்கே மடகாஸ்கர் தீவு வரையில் பரவியிருந்த லெமூரியா கண்டம் எங்கே? எம்மிடமிருந்தெடுத்த இயல், இசை, நாடகத் தமிழ் எங்கே? கண்போன்ற கன்னித் தமிழ் எங்கே? எண்ணரிய இலக்கியம் எங்கே?' இவ்வாறெல்லாம் என் உள்ளம் எண்ணி ஏங்கித் துடித்தது. வடிவே லெறிந்த வான்பகை பொருதகாரணமோ எம் நாட்டைக் கொண்டது என எண்ணினேன். ஏழ்கடலையும் வற்றச்செய்த எம் தலைவன் உன்னைத் தடுக்காது விட்டானே எனத் தளர்ந்தேன்.

'தமிழைக்கொண்ட நீயாவது தமிழ் மணம் வீசலாகாதா? ஏ! பேதாய்! கருங்கடலே! உறங்காத அலை உனக்கு உண்டான காரணம் என்ன? ஓயாது வயிறலைக்கும் உன் கொடுமைதான் என்ன? இவற்றிற்கெல்லாம் காரணம் இருத்தல் வேண்டும். ஆம். எம் கலையையும்,

வீரத்தையும், நாகரீகத்தையும், நலத்தையும் பிறவற்றை யுங் கொள்ளை கொண்டாய். அது கண்டு அலறிய தமிழர் எத்துணையர்? மனமடிந்தார் எத்தனை பேர்? ஆயிர மாயிரம் ஆண்டுகளாக உள்ள தமிழர் இட்ட சாபம் வீண் போகுமா! அச்சாப மெல்லாம் திரண்டு ஓயா அலையாகவும் மாயா ஒலியாகவும் உன்னை வந்து அடைந்தனபோலும்' என்று கடலை நோக்கிக் கூறினேன். 'இன்று எம் பழந்தமிழ் நாடும், பழந்தமிழ்க் கலையும் இருப்பின் குமரியொடு வடவிமயத் தொரு மொழி வைத்து உலகாண்டிருப்போமே! எம் நிலை இன்று மற்றவர் கண்டு நகைக்கத் தக்கதாக இருக் கின்றதே! இது உன் செயலால் அல்லவா? அங்கிய நாட்டார் அஞ்சி ஒதுங்கி அரண் பெற்று நின்ற பெருஞ் சிறப்பு உன்னால் அன்றோ ஒழிந்தது. உன் செயல் இன்றேல் இன்று நாங்கள் உலகை ஆள்வோமே! தமிழ்நாட்டிடம், தமிழ் மொழியிடம்,—தமிழ் மக்களிடம் நீ கொண்ட கோபந்தான் என்னையோ', என்றெல்லாம் எண்ணி எண்ணி ஏங்கினேன்.

கன்னிக் கரையில் குமரியின் கோயில் காட்சி யளித் தது. கீழ் முகத் தெய்வமாகக் குமரி அன்னை கருங்கடலைக் கையமர்த்தி யுள்ளாள். அவ்வமயம் 'நீலத் திரைக்கடல் ஓரத்திலே நின்று நித்தம் தவம் செய் குமரி யெல்லை', என்ற பாரதியார் பாடல் என் உள்ளங் கவர்ந்தது. குமரித் தெய்வம் தவநிலை கொண்டு கடலைக் கையமர்த்தி நின்றாள். அத் தெய்வநிலை தாண்டிக் கடல் வராது எனத் திடங் கொண்டேன். ஒரு புறம் கோயிற் காட்சியும், முப்புறமும் கடற் காட்சியும் என் உள்ளத்தையும், உணர்வையுங் கொள்ளை கொண்டன. அதற்குள் மாலை நேரமும் வந்து விட்டது. வெள்ளித் தகடென விளங்கிய மேல் கடல் பொற்றகடெனப் பொலியலாயிற்று. ஐம்புலன்களும் அவ்

வியற்கைக் காட்சியில் திளைத்திருந்தன. சிந்தனை இறைவனது இயற்கை உருவில் சென்றது. கண்கள் அவன் இயற்கைக் காட்சியைக் கண்டன. அவ்வியற்கை இறைவனுக்கு வந்தனை செலுத்தினேன். வாய் அவ்வியற்கையைப் போற்றியது. கருங்கடல் சிறப்புமிக்க பெருங்கடலாய் நின்றது. சிறு குன்றம் எதிரில் திகழ்ந்தது. இக் கடற் காட்சி! இயற்கை இறைவன்தன் உயிர் நிலையை எனக்களித்தது. செந்தாமரைக் காட்டினை ஒத்து மாலை வெய்யில் விளங்கிற்று. பிறவா யாக்கைப் பெரியோனாகிய இயற்கை இறைவனே யாண்டும் காட்சியளித்தான். என் உளமும், சொல்லும், செயலும் எல்லாம் அவ்வியற்கையில் இரண்டறக் கலந்தன. அங்கிருந்தபடியே வெண் மணலையும், சிவந்த வானையும், கருங்கடலையும் மாறிமாறி நோக்கினேன். கதிரவனும் மேற்கடலிற் குளித்தனன். யான் அன்று கண்ட காட்சியும், அடைந்த இன்பமும் மிகப் பெரியனவாகும். இயற்கை எழில் குன்றாத இளங் குமரி முனை என்றும் நின்று சிறப்பதாக என வாழ்த்தினேன்.

## கேள்விகள்

1. இப்பாடத்துள் குமரி யென்பது எதனைக் குறிக்கின்றது?
2. குமரி முனை யாண்டுளது ?
3. குமரியிற் கூடும் கடல்கள் யாவை ?
4. எவற்றைக் கடல் கொண்டதாகக் கூறப்பட்டுள்ளது?
5. கடலின் அமைதியற்ற நிலைக்குக் கற்பிக்கப்படும் காரணம் யாது ?
6. குமரியின் மாலைக் காட்சி எவ்வாறு விளக்கப்பட்டுளது ?

## பயிற்சி

1. குமரிக் கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னுடு பற்றி ஆசிரியரிடம் கேட்டு அறிந்துகொள்.
2. 'குமரிக் கண்டம்' என்னும் நூல் கிடைத்தால் முழுவதையும் படிக்கவும்.
3. குமரிமுனை பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

## இலக்கணம்

(1) சுட்டு எத்தனை வகைப்படும்? இப்பாடத்திலுள்ள சுட்டுக்களைக் காண்க.

(2) வினு என்ருல் என்ன? இங்கு வினுவைக் குறிக்கும் வார்த்தைகள் யாவை?

(3) '*லெமூரியா கண்டம் கடலால் அழிந்தது.*' இதற்கு எழுவாய், பயனிலை செயப்படு பொருளைக் காண்க.

(4) 'கடல் பல நாடுகளை அழித்தது.' இங்கு இரண்டாம் வேற்றுமை எந்தப் பொருளில் வந்தது?

(5) கீழ்வருவனவற்றைத் தனித்தனிச் சொற்களாகப் பிரித்தெழுது:—

'குமரியொடு வட விமயத்தொரு மொழி வைத் துலகாண்ட'

'நீலத்திரைக் கடலோரத்திலே நின்று நித்தம் தவஞ் செய் குமரியெல்லை.'

## 2. நெசவுத் தொழில்

நம் நாட்டில் மிகப் பழங்காலத்திருந்தே நடைபெற்று வரும் கைத்தொழில்களுள் நெசவு மிகவும் சிறந்ததாகும். இதனிலும் சிறந்ததாகச் சொல்லக் கூடியது உழவுத் தொழில் ஒன்றே. பிற எல்லாத் தொழில்களும் நெசவுத் தொழிலுக்குப் பிற்பட்டனவே. நம் நாட்டு நெசவுத் தொழில் மிகப் பழமை வாய்ந்தது; மேலை நாடுகளெல்லாம் ஆடைச் சிறப்பை அறியாத அக்காலத்திருந்தே நடந்து வருவது; தற்காலத்தில் இயந்திரத்தின் உதவியினாலும் நடைபெறு வது; நம் நாட்டு மூலப்பொருளாகிய பஞ்சைக் கொண்டே நடைபெறுவது; மூலதனமே தேவையில்லை யென்று சொல்லத்தக்க வகையிலே நடைபெறக்கூடியது; உற் பத்திப் பொருளைப் பிறநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யக் கூடியது; எந்த விதமான தீங்கும் அற்ற தொழிலாகவும் உள்ளது; பல்லாயிரக் கணக்கான மக்களின் வாழ்க்கைக்கு வழியாக இருப்பது இந்நெசவுத்தொழில். முற்காலத்தே நம் நாட்டில் தான் நெசவு சிறந்த நிலையில் இருந்திருக் கிறது. மகளிர் பலரும் நூல் நூற்கும் தொழிலில் ஈடு பட்டிருந்தனர் என்பதை நம் இலக்கியங்களே எடுத்துக் காட்டுகின்றன. எத்தனையோ வகைவகையான ஆடை கள் நெய்திருக்கின்றனர். பகலில் அணிந்து கொள்ளு தற்கு ஏற்ற ஆடைகளும், இரவில் அணிந்து கொள்ளுதற் கேற்ற—மெல்லிய—மிக மெல்லிய ஆடைகளும் நெய் தனர் என்றும் அறிகிறோம். பருத்தி ஆடையேயன்றிப் பட்டாடையும், எலி மயிரினால் செய்த ஆடையும் கூட நெய்யப்பட்டதென்றும் அறிகிறோம்.



ஒரு பெண் நூல் நூற்கிருள்.

நம் நாட்டில் நெய்யப்பெற்ற ஆடைகளுள் மிக மெல்லிய மல்துணியும், மஸ்லின் துணியும் மிகவும் உயர்ந் தனவா யிருந்திருக்கின்றன. டாக்கா மஸ்லின் மிகவும் பெயர் பெற்றது. பதினேழாம் நூற்ருண்டில் தாவருணியர் என்னும் ஒரு பிரெஞ்சு யாத்திரிகர் இந்தியாவிற்கு வந்தி ருந்தார். இந்தியாவில் அப்போது நடைபெற்ற நெசவுத் தொழிலைப் பற்றி அவர் கூறுவதாவது: 'பாரசீக மன்ன னின் தூதன் ஒருவன் இந்தியாவிற்கு வந்திருந்தான். அவன் மீண்டு சென்று தன் தலைவனுன பாரசீக மன்னனைக் கண்டான். அப்போது தான் இந்தியாவிலிருந்து கொண்டு வந்திருந்த தேங்காய்க் குடுக்கை ஒன்றைக் கொடுத்தான். அது முத்தும் பவளமும் பதிக்கப் பெற்று உயர்ந்த வேலைப்

பாடுடையதாயும், கண் கவர் வனப்பினதாயும் இருந்தது. அது கண்ட மன்னன் மிக்க வியப்படைந்தான். பின்னர் அக் குடுக்கையைத் திறந்தான். அதனுள் அறுபது முழ நீளமுள்ள மஸ்லின் ஆடை இருந்தது. அது மிக மிக நுண்ணியதாக இருந்தது. சிலந்தி செய்த வலையோ என்று ஐயுறுமாறு அவ்வளவு நுண்ணிய இழைகளால் நெய்யப் பெற்றிருந்தது. கண்ட மன்னன் கண்கள் அகல விரிந்தன; இமைத்தலையும் மறந்தன. அவனடைந்த வியப்பிற்கோ ரெல்லையில்லை.' இந் நிகழ்ச்சிக் குறிப்பிலிருந்தே நம் நாட்டுத் துணியின் சிறப்பினையும், அதனை மேலை நாட்டார் வாங்கியணிந்தமையையும் நன்கறியலாம். அழிந்து பட்ட ரோமப் பேரரசு கணக்கற்ற பொருளை வாரி வாரிக் கொடுத்து இந்தியத் துணிகளை வாங்கியதாகத் தெரிகின்றது. அந்த அளவிற்கு அவர்கள் இந்தியாவில் நெய்யப் பட்ட துணிகளை விரும்பியணிந்தனர் எனத் தெரிகின்றது.

மேலும் எல்லா ஐரோப்பிய நாடுகளிலுமே இந்தியத் துணிகளுக்கு அதிக செல்வாக்கிருந்திருக்கின்றது. பிரெஞ்சு நாட்டினர் இந்தியத் துணிகளையே விரும்பி வாங்கி அணிந்தனர் என்பதற்கு, இந்திய வரலாற்றைத் தெளிவாக விளக்கக்கூடிய அரிய நாட்குறிப்பை எழுதி வைத்துச் சென்ற, புதுவை ஆனந்தரங்கப்பிள்ளை பிரெஞ்சு நாட்டுடன் செய்த துணி வியாபாரமே போதிய சான்றாகும். ஆங்கில நாட்டினரும் இத் துணிகளையே மிகவிரும்பி, அதிகப் பொருள் கொடுத்துப் பெற்று, அணிந்து மகிழ்ந்தனர். இந்தியத் துணியே அவர்கள் கொண்ட நாகரீக அணி. டாக்கா மஸ்லினே அவர்தம் செல்வப் பெருக்கிற்கு ஓர் அத்தாட்சி. இரண்டு முழ அகலமுள்ள மல்துணி ஒரு மோதிரத்திற்குள் நுழையக் கூடிய நுண்மையுடையதாயிருந்ததோடு, கண்களைக் கவரும் சாயந்தோய்க்கப்பெற்று

உள்ளத்து உவகை யுண்டாக்கக் கூடியதாயிருந்த தெனின், இந்தியத் துணிகள் ஆங்கிலேயரின் உள்ளத் தைக் கவர்ந்ததில் வியப்பென்ன?

இவ்வளவு சிறந்த நிலையில் இருந்த இந்தியக் கைத்தறி நெசவு இறந்து பாழ்பட்டதேன்? இது எளிதில் புரியாத ஒன்ருகவே காணப்படும். பத்தொன்பதாம் நூற்ருண்டி லேதான் இத்தொழில் வீழ்ச்சியடையத் தொடங்கியது. இந்நாட்டிலிருந்த சிற்றரசர்களும் பேரரசர்களும் தங்களுக் குள் பகை கொண்டு, போர் செய்ய நாடெங்கும் பெருங் குழப்பம் ஏற்பட்டது. அத்துடன் வாணிபத்தின் பொருட்டு மேலைநாட்டாரது புறப்பகையுஞ் சேர்ந்து கொண்டு நாட்டையும், நாட்டு மக்களையும் பெருந்தொல்லைக் குட்படுத்தியது. இதனுல் அரசர்கள் ஆண்டியாயினர்; குறு நில மன்னர்களோ வெறு நிலமு மற்ற மக்களாயினர். அந்நிலையிற் பொது மக்களின் நிலை சொல்லுந் தரத்ததோ? இல்லை. இக்குழப்பத்தால் உலகறிய வாழ்ந்த நெசவுத் தொழிலின் வாழ்வுக்கும் தாழ்வு வந்துற்றது.

இங்கிலாந்து மக்கள் இந்தியத் துணிகளையே விரும்பி வாங்கியதே, அந்நாட்டுக் கம்பளித் தொழிலுக்கு ஆபத் தாக முடிந்தது. அது பொருத கம்பளித் தொழிலாளர் இந்திய நாட்டுத்துணிகளை இறக்குமதி செய்யக்கூடா தெனக் கிளர்ச்சி செய்தனர். வெற்றியும் பெற்றனர். இந்திய நெசவுத் தொழிலின் வீழ்ச்சியில் இது முதற்படி யாகும். அடுத்தபடியாக இங்கிலாந்தில் ஏற்பட்ட தொழிற் புரட்சியும் முக்கிய காரணமாயிற்று. எப்படியெனில் இயந்தி ரங்களைக் கொண்டு நூற்கவும், நெய்யவும் தொடங்கிய தால், மிக நேர்த்தியான துணிகளையும் பெரிய அளவிற்குக் குறைந்த செலவில் உற்பத்தி செய்து இந்தியாவிற்கு அனுப்பிவைத்தனர். இதனுல் இந்தியத் துணிகளுக்கு

இந்தியாவிலேயே தேவையில்லாமற் போய்விட்டது. இது வீழ்ச்சியின் இரண்டாவது படியாகும்.

மேலை நாட்டார் இயந்திர முறையில் நல்ல இலாபம் பெறுவதைக் கண்ட நம் நாட்டு முதலாளிகளும் பம்பாய் போன்ற இடங்களிலே நூல் ஆலை, நெசவாலை முதலிய பல ஆலைகளையும் ஏற்படுத்தி ஏராளமாகத் துணிகளை உற்பத்திசெய்து, குறைந்த விலைக்குக் கொடுத்தனர். மேல் நாட்டு ஆலைத்துணிகளால் நம் நாட்டுக் கைத்தறித்துணித் தொழிலை அடியோடு அழிக்க முடியவில்லை. ஆனால் நம் நாட்டு ஆலைகள் அதைச் செய்து முடித்து விட்டன. உதாரணமாக மேலை நாட்டு ஆலைகள் யாவும், உயர்ந்த (மெல்லிய) நூலாடையையே உற்பத்திசெய்து அனுப்புகின்றன. இதனால் நம் நாட்டுக் கை நெசவால் உற்பத்தி செய்யப்படும் குறைந்த எண்ணுடைய தடித்த நூலாடைக்கு எவ்வித போட்டியும் இல்லை. இந்திய ஆலைகள் குறைந்த எண் நூல் துணியையும் உற்பத்தி செய்து இந்திய நெசவுத் தொழிலுக்குப் பெரிய தீங்கை விளைத்துள்ளன. இது கைத்தறிநெசவு வீழ்ச்சியின் இறுதி நிலையாகும். முதலாவதாக இந்தப் போட்டி நீக்கப்படவேண்டும். இந்தப் போட்டியை நீக்குவதற்கு ஒரே ஒரு வழிதானுண்டு. அதாவது உயர்தர நூலாடைகளை ஆலைகள் நெய்வதென்றும், ஏனைய முரட்டுத் துணிகளை யெல்லாம் கைத்தறிகளே உற்பத்தி செய்து கொள்வதென்றும் ஒரு உடன்படிக்கை செய்து கொண்டு அதன்படி நடந்து கொண்டால், கைத்தறித் துணிகளுக்கு நல்ல தேவை ஏற்பட்டுக் கைத்தறித் தொழில் முன்போல் நல்ல நிலையில் இருக்க வழியுண்டு.

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இந்திய நாட்டில் பெருங் கிளர்ச்சி ஏற்பட்டது: அதாவது நாட்டு விடு



கைத்தறியில் ஆடை தயாரித்தல்.

தலைக் கிளர்ச்சி. அக் கிளர்ச்சியின் அடிப்படையாக அந்நிய நாட்டுத் துணியை விலக்கி நம் நாட்டுத் துணியையே அணிவதென்ற கருத்து நாடு முழுவதும் பரவி வளர்ந்தது. இந்தக் கருத்தை மகாத்மா காந்தி மிகவும் உறுதியாகக் கொண்டிருந்ததால் மேலும் வளர்ந்து உறுதி பெறலாயிற்று. இதனால் கைத்தறி நெசவிற்கு ஒரு சிறிது வளர்ச்சி ஏற்படத் தொடங்கியது. மேலும் ஆலைகளில் ஏதோ குறிப்பிட்ட வகையான துணியைத்தான் ஆக்கமுடியுமே யன்றி, தனிப்பட்டவரின் தேவைக்கேற்றபடி செய்ய இயலாது. ஆனால் கைத்தறியில் அது போன்று செய்து ஒவ்வொருவருடைய விருப்பத்தையும் நிறைவேற்றலாம். பல நுட்பமான வேலைகளைச் செய்வதற்கும் இயந்திரத் தறி பயன்படாது; கைத்தறியில் தான் அது முடியும். ஆலையில்

நெய்யப்பெற்ற துணிகளைக் காட்டிலும் கைத்தறித்துணிகள் உறுதியானவை; நீண்ட நாட்களுக்கு உழைக்கக் கூடியவை என்பதும் ஓரளவிற்கு உண்மையாகும். இது போன்றவற்றால் இப்போது கைத்தறி நெசவு வளரத் தொடங்கியுள்ளது.

நம் நாட்டில் இப்போது ஏறக்குறைய இருபத்தெட்டு லக்ஷம் கைத்தறிகள் உள்ளன. இதன் துணை கொண்டு தம் வாழ்க்கையை நடத்தும் மக்களின தொகை சுமார் ஒன்றரைக் கோடியாகும். தற்போது நம் நாட்டுக் கைத் தறிகளெல்லாம், ஏறக்குறைய மொத்தம் உள்ள தறிகளில் முக்காற்பங்கு தறிகள், பருத்தி ஆடைகளையே நெய் கின்றன. எஞ்சியுள்ள தறிகளில் பட்டாடைகளும், செயற் கைப் பட்டாடைகளும், கம்பள ஆடைகளும் நெய்யப் படுகின்றன. ஒரு தறியில் ஒரு மாதத்தில் இருபது இராத்தல்



ஒரு பருத்தி இயந்திரசாலையில் நூல் நூற்கும் இடம்.

நூலைக் கொண்டு சராசரிக்கு அறுபது முதல் நூறு கஜம் வரையில் துணி உற்பத்தி செய்யலாம். இத்துணி முரடானதாயிருந்தால் அளவு குறைவாகவும், மெல்லியதாயிருந்தால் அதிகமாகவும் உற்பத்தி செய்யலாம். இப்போது நாட்டில் பல வகையான கைத்தறிகள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. இவற்றினுதவியால் நாட்டில் உபயோகப்படுத்தப்படும் வேட்டிகள், சேலைகள், துண்டுகள், மேலாடைகள், சட்டைத் துணிகள், விரிப்புகள், கைத்துண்டுகள், கைலிகள், லுங்கிகள் முதலிய யாவும் உற்பத்தி செய்யப்படுகின்றன. இதன் மூலமாக நம் நாட்டிற்குத் தேவையாயுள்ள வேட்டிகளில் நாற்பது சதவிகிதம் கொடுக்க முடிகின்றது. கைலி, லுங்கி, கைத்துண்டுகள் போன்றவை ஏராளமாக வெளி நாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன. ஆண்டுதோறும் ஏறக்குறைய ஐந்து முதல் ஏழரைக்கோடி ரூபாய் பெறுமானமுள்ள துணிகள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

இவ்வாறு புத்துயிர் பெற்று வரும் கைத்தறி நெசவிற்கு உதவி செய்ய இந்திய அரசாங்கமும் முன் வந்து 'அனைத்திந்தியக் கைத்தறிக் கழகம்' (All India Handloom Board) ஒன்றை ஏற்படுத்தி, வேண்டும் உதவிகளைச் செய்து வருகிறது. இக்கழகம் ஆப்பிரிக்கா, ஐரோப்பா, கிழக்காசியா முதலியவிடங்களிலுள்ள நாடுகளில் நம் நாட்டுக் கைத்தறித்துணிகளை விற்பனை செய்ய எல்லா ஏற்பாடுகளையும் செய்துள்ளது. கைத்தறித்துணிகளின் ஏற்றுமதியை அதிகரிப்பதற்காக சிங்கப்பூர், இரங்கூன், கொழும்பு, பாக்தாது ஆகிய நகரங்களில் விற்பனை நிபுணர்களை நியமித்துள்ளது. மேலும் ஏடன், கராச்சி, சிட்டகாங்கு, இரங்கூன், பாங்காக், கொழும்பு, சிங்கப்பூர் முதலிய வெளி நாட்டு முக்கிய நகரங்களில் சில்லறை விற்

பனைக் கடைகளையும் ஏற்படுத்தியுள்ளது. இன்னும் இயன்ற வகைகளிலெல்லாம் அது முயன்று கைத்தறித் தொழிலை உயர்த்தப் பாடுபடும்.

மேலும் இந்திய அரசாங்கம் கைத்தறித் தொழிலுக்குச் சில பாதுகாப்புகளைக் கொடுத்துள்ளது. நாட்டிற்கு வேண்டிய சாயந்தோய்த்த துணிகள், சேலைகள் முதலியவற்றை நெய்யும் உரிமையைக் கைத்தறிகளுக்கே ஒதுக்கியுள்ளது. நாட்டில் புதிய நெசவு ஆலைகளை ஏற்படுத்தக் கூடாதெனச் சட்டமியற்றித் தடுத்துள்ளது. அவ்வாறு ஏற்படுத்துவதானால் பற்பல கட்டுப்பாடுகட் குட்பட்டே புதிய நெசவு ஆலைகளை ஏற்படுத்த முடியும். எல்லா நூல் ஆலைகளும் தாங்கள் உற்பத்தி செய்வதில் ஒரு குறிப்பிட்ட அளவு நூலைக் கைத்தறிகளுக்கு ஒதுக்கிக் கொடுத்துவிட வேண்டும் எனவும் திட்டம் செய்திருக்கிறது. இதனால் 1948-ல் கைத்தறிகளுக்கு மாதந்தோறும் கிடைத்த நூலின் அளவு 65000 பேல்கள் ஆகும். இதுவே 1953-ல் 72000 பேல்களாக உயர்ந்துள்ளது. இந்த நூலைக் கொண்டு 12000 லட்சம் கஜம் துணி உற்பத்தி செய்யக்கூடும் எனவும், ஐந்தாண்டுத் திட்டத்திற் குறிப்பிட்டுள்ளபடி 1955-56-ல் 17000 லட்சம் கஜம் துணி உற்பத்தி செய்யக் கூடும் எனவும் நம்பப்படுகிறது. நம் நாட்டிலுள்ள எல்லாக் கைத்தறிகளுக்கும் தட்டில்லாமல் நூல் கிடைக்குமானால் மாதந்தோறும் 220 கோடி கஜம் துணி உற்பத்திசெய்ய முடியும்.

மேலும் அரசாங்கம் பொருளாதாரத் துறையிலும் உதவி செய்ய முன் வந்துள்ளது. கைத்தறிக் கூட்டுறவுக் கழகங்களுக்கு, பங்குத்தொகை மூலதனமாக ரூபாய் இருபது லக்ஷமும், வியாபார மூலதனமாக ரூபாய் ஒரு கோடியும் வட்டியில்லாக் கடனாகக் கொடுத்துள்ளது. 1949-ல்

கைத்தறி வளர்ச்சி நிதி (Handloom Development Fund) ஒன்றை ஏற்படுத்திப் பத்து லக்ஷ ரூபாய் ஒதுக்கி வைத்தது. 1952-ல் அத்தொகையுடன் ரூபாய் ஐந்து லக்ஷம் சேர்க்கப்பட்டது. இந்நிதியிலிருந்து இது வரையும் ரூபாய் பதினான்கு லக்ஷம் வரை, கைத் தறிகளுக்கு நன்கொடையாகக் கொடுக்கப்பட்டுள்ளது. இன்னும் கைத் தறிப் பாதுகாப்புக்கென்று மில் துணி கஜம் ஒன்றுக்குக் காலணு வீதம் வசூலிக்கப்படுகிறது. இவ்வாறு வசூலிக் கப்பட்ட தொகையிலிருந்து இதுகாறும் மூன்று கோடி வரை கைத்தறி வளர்ச்சிக்காகக் கொடுக்கப்பட்டுள்ளது.

இப்போதுள்ள நிலையில் பொது மக்கள் கைத் தறியையே ஆதரிக்க முன் வந்துள்ளனர். நெசவாளரும் சோம்பலின்றி உழைக்க முன் வந்துள்ளனர். அவர்கட்கு உதவியாகக் கைத்தறிக் கூட்டுறவியக்கமும் உழைத்து வருகிறது. அரசாங்கமும் எல்லாவகையாலும் கைத்தறியை ஆதரித்து அதன் வளர்ச்சிக்குப் பாடுபடுகிறது. ஆதலால் நம் நாட்டுக் கைத்தறி நெசவு முன்னிருந்த உயர்நிலையை அடையும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

## கேள்விகள்

1. கைத்தொழில்களை எவ்வெவ் வகையாகப் பிரிக்க லாம் ?
2. நம் நாட்டுக் கைத்தறித் தொழிலின் சிறப்பியல்புகள் யாவை ?
3. நம் நாட்டுத்துணி பற்றிப் பிரெஞ்சு யாத்திரிகர் கூறிய தென்ன ?
4. மேலை நாட்டினர் நம் நாட்டுத் துணியையே விரும்பின ரென்பதனை எவ்வா றறிகிறோம் ?

5. நம் நாட்டு நெசவுத் தொழிலின் வீழ்ச்சிக்குரிய *காரணங்கள் யாவை ?*
6. நெசவாளர்களிடம் காணப்பட்ட குறைகள் யாவை ?
7. கைத்தறிக் கூட்டுறவுக் கழகங்களின் இன்றியமை யாமை என்ன ?
8. நம் நாட்டுத் துணிகளின் ஏற்றுமதியை அதிகரிக்க என்னென்ன ஏற்பாடுகள் நடைபெறுகின்றன ?
9. கைத்தறிக்கென அரசாங்கம் கொடுத்துள்ள சலுகை கள் யாவை?
10. கைத்தறி வளர்ச்சிக்காக அரசாங்கம் செய்யும் பொருளுதவிகள் யாவை ?
11. தற்போது கைத்தறி நெசவு அடைந்துள்ள வளர்ச்சி யாது ?

## பயிற்சி

1. நெசவு என்பது பற்றியும் கைத்தறி நெசவு தற்போது அடைந்துள்ள வளர்ச்சி பற்றியும் கட்டுரைகள் எழுதுக.
2. அண்மையிலுள்ள கைத்தறித்துணிக் கடைகளுக்கு ஆசிரியருடன் சென்று அங்குள்ள துணிகளைப் பற்றிய விவரங்களை அறிந்து கொள்ளுக.
3. கைத்தறி பற்றி வெளிவரும் இதழ்களை நூல் நிலையத் திலிருந்து பெற்றுப் படிக்கவும்.

## இலக்கணம்

(1) 'நம் இலக்கியங்களே எடுத்துக் காட்டுகின்றன.' இவ்வாக்கியம் எந்தப்பாலால் முடியப் பெற்றிருக் கின்றது ?

(2) இருக்கின்றன, இருந்தது—எவ்வெக் காலங்களேயும் பாலினேயும் கொண்டுள்ளன ?

(3) 'நாடு' எத்தொடர்க் குற்றியலுகரம் ?

(4) உள்ளம், நெசவு, மனிதன் இவற்றிற்கு இரண்டாம் வேற்றுமை உருபை விரித்து வாக்கியங்கள் அமைக்க.

(5) ஒருமை முடிவிற்கு இப்பாடத்திலிருந்து இரண்டு உதாரணம் தருக.

(6) அவர்கட்கு, இருபத்தெட்டு இரண்டையும் பிரித்தெழுது.

(7) ஐந்து பால்களுக்கும் இப்பாடத்திலிருந்து உதாரணம் தருக.

## 3. அசோகன்

(அசோகன் தனது அரச அவையில் வீற்றிருக்கின்ருன். அமைச்சரும் பிறரும் சூழ்ந்திருக்கின்றனர்.)

அசோ :— அமைச்சர்களே ! நமது நாட்டு மக்கள் நலம் கருதிச் செய்யவேண்டிய இவ்வாண்டின் பணிகளே யெல்லாம் செய்து முடித்துவிட்டீர்களா ?

**அமைச் :—** அரசே ! நின் கொற்றம் வாழ்வதாக ! தங்கள் கருத்தறிந்து மக்கள் மன வாட்டம் போக்கி, நாட்டில் வளமும் வாழ்வும் செழிக்க வழிகள் என்னென்னவென்பதை ஆராய்ந்து நம் பணியியற் றலேவர்கள் நன்கு செய்து முடித்துவிட்டனர். நாட்டில் பசியும் பிணியும் நீங்கி மக்கள் வளமும் அமைதியும் பெற்று வாழ்கின்றனர்.

வழிவழியாக வரும் தங்கள் மௌரிய வம்சம் தழைப்பதாக!

**அசோ:—** ஆம். மௌரிய வம்சம்தான். நான் பிறந்த வம்சத்தில் என் முன்னோனை சந்திரகுப்தன் சிறக்க வாழ்ந்தான். அவன் புகழ் இப் பரத கண்டமுழுதும் பரவி நின்றது. அவன் புகழ் கெடாத வகையில் நானும் அரசநெறி தவருது நடக்க முயலவேண்டும்.

**சேனைத் தலைவர்:—** அரசே! சிறக்க நின் வாழ்நாள்! தங்கள் ஆணையின் வழி இந்நாடு முழுவதும் சிறக்க வேண்டும் என்பது எங்கள் ஆசை. அதற்காக நமது சேனைகள் எல்லாம் தயாராக உள்ளன. தாங்கள் விரும்பின் ஒரே ஆண்டில் இந்நாடு முழுவதையும் தங்கள் ஆணையின் கீழ்க் கொண்டுவந்துவிடுவர் சேனைத் தலைவர்.

**அசோ:—** சேனைத்தலைவரே! உங்கள் விருப்பம் நல்லது தான். எனினும் நாம் நமது நாடுபெருக்க வேண்டும் என்ற தன்னலத்தால் பிற நாட்டின்மேல் படையெடுத்துச்சென்று பலரைக் கொன்று வெற்றி பெறவேண்டுமா? வலிய வந்தாலன்றி நாமே படையெடுத்தல் அவ்வளவு நல்லதன்று என நினைக்கிறேன்.

**அமைச்:—** அரசர் பெரும! சேனைத்தலைவர் ஒன்றைக் கருத்தில் வைத்துத்தான் அவ்வாறு பேசுகின்ருர் என எண்ணுகின்றேன். வலிய ஒரு போர் நம் தலைவாசலில் வந்து நிற்கின்றது. சந்திரகுப்தர் நாள் தொடங்கி நேற்றுவரை நம்மோடு நட்பாக இருந்த கலிங்கநாட்டு வேந்தன் இப்போது ஏதோ சில வேற்று

வேந்தர்களோடு கலந்து, தங்கள் பேரும் புகழும் கேட்டுப் பொறாமை கொண்டு தங்கள் மேல் படை எடுக்கப்போவதாக நம் நாட்டு ஒற்றர்கள் உரைத்தார்கள். அவர்கள் படையெடுக்குமுன்பு நாமே சென்று அவ்வரசனை அடக்கவேண்டும் என்ற குறிப்பையே சேனைத் தலைவர் குறித்தார் எனக் கருதுகின்றேன்.

அசோ:— ஆ! அப்படியா? கலிங்க வேந்தனுக்கு நாமொன்றும் கொடுமை நினைக்கவில்லையே!

சே. தலை:—அரசர் பெரும! அதை எண்ணித்தான் நானும் வாடுகிறேன். நட்பாளனாக இருந்தவன், தாங்கள் ஒரு தீங்கும் நினைக்காத இந்நிலையில் மாறுபடுவானேன்? அவனுக்குச் சிறந்த பாடம் கற்பிக்க வேண்டும் என்பது என் ஆசை.

அமைச்:— அரசே! அவன் சில தூதுவர்களை அனுப்ப ஏற்பாடு செய்துகொண்டிருப்பதாகவும் நமது ஒற்றர்கள் கூறினர். ஆகவே அவர்கள் வருவதன் முன்னமே, நாம் அஞ்சிக் கிடக்கின்றோம் என்பதில்லாமல் படையெடுத்து அவனை அடக்கவேண்டுவது கடமையாகும்.

அசோ:— கடமை—ஆம். (சற்றுச் சிந்தித்து) ஆம்—அரசர் கடமைதான். நல்லது உங்கள் விருப்பப்படியே கலிங்கம் நோக்கி ஆள்போக்குங்கள். போர்ப்பறை முழக்குமின்! புகழ்பொருந்திய நம் படைவலிமை காட்டும் நாள் வந்தது போலும்.

இருவ:— அவ்வாறே! வளர்க நின் கொற்றமும் வாழ்வும்.

## காட்சி 2

(கலிங்கப்போர் நடைபெற்றுப் போர்க்களத்தே இருவர்தம் சேனைகளிலும் பல உயிர்கள் ஒழிந்தன. போர்க்களத்தே பல உடலங்கள் வீழ்ந்து கிடக்கின்றன. கலிங்க மன்னனும் தோற்ருன். அசோகன் தன் வெற்றி குறித்து அமைச்சரோடும் சேனைத் தலைவரோடும் போர்க்களத்தைச் சுற்றி வருகின்ருன்.)

**அசோ:—** அமைச்சரே! இது என்ன கொடுமை! இத்தனை உயிர்களா மடிந்துள்ளன?

**அமைச்:—** அரசர் பெரும! போர் என்ருல் அவ்வளவு எளிமையான தன்றே. இந்தப் போரில் பகை



கலிங்கப் போர்க்களம்—அசோகனது போர் நிறுத்த முடிவு.

வர்கள் எளிமையில் தோற்கடிக்கப்பட்டார்கள். அதனுல் உயிர்ச்சேதம் மிகக்குறைவு. பல பெரும் போர்களில் நினைக்க முடியாத எண்ணிக்கையில் உயிர்கள் மாண்டு மடிவதைக் கண்டிருக்கிறேனே. அரசர் பெரும! இதுபற்றித் தாங்கள் கவலற்க. போர் என்றுல் உயிரிழப்பின்றி யாகுமா?

ஆசோ:— அமைச்சரே! சேனைத்தலைவரே! அரசர் என்றுல் போர். போர் என்றுல் பல உயிர் மடிவது. இதுதானே அரசாங்க வாழ்வு. பிற உயிர்களைக் கொன்று குவித்து, அதனுல் வரும் வெற்றியைக் கொண்டாடுவதோ வீர வாழ்வு. வேண்டேன் இந்த அரசவாழ்வு.

அமைச்:— அரசர் பெரும! தாங்கள் இவ்வாறு கூறுவது முறையன்று. அரசநெறியும் அதுவன்று. வலியவரும் பகைவனைப் போரில் எதிர்த்து வெற்றி காணுவிடின் அரசநெறி ஏது? போர் அரச கருமங்களிலெல்லாம் தலையாயதன்றே. மாற்றுன் வலியும் தன் வலியும் ஆராய்ந்து போர் தொடுத்து வெற்றி வீரனுக விளங்குபவனன்றே அரசனுவன். தங்கள் ஆண்மையைத் தரணி அறியும். இந்தப் போர்க்களத்தைக் கண்டு தாங்கள் தளர்தல் முறையன்று.

சே. தலை:—அரசர் பெரும! அமைச்சர் கூறிய அனைத்தும் உண்மையே! வரலாறு காட்டுவதும் அதைத் தானே. போர் என்றுல் உயிரிழப்பு இன்றியாகுமா? போரின்றேல் அரசநெறி யெங்கே? வீரமும் போரும் இன்றேல் மாற்றுர் நம்மைக்

கோழையென மதித்து நசுக்க வழி செய்வார்கள். சந்திரகுப்தமௌரியர் தம் வீரத்தால் உண்டான இந்தப் பேரரசு நிலைத்து வாழ வேண்டுமாயின் வேறு வழி என்ன ?

**அசோ :—** வேறு வழி என்ன ? நல்ல கேள்வி ! சேனைத் தலைவரே ! வேறுவழி யில்லையா ? போரினால் தான் மக்களை அடக்க முடியுமா ? (சிந்தித்து) நாம் நம்ப முடியாது ? அன்பினால் உலகையெல்லாம் கட்டி ஆளலாம் என்று சமயத் தலைவர்கள் கூறியுள்ளார்களே. அந்த அன்பு அரச நெறிக்குப் பயன் படாதா ? போரின்றிப் பகைவரையும் ஒன்றுக்க முடியாதா ?

**அமைச் :—** அரசர் பெரும ! முடியும் ! பகைவர் மனித உள்ளத்தோடு இருந்தால் அது முடியும்தான். ஆனால் மனிதன் பார்வைக்கு மட்டும் மனிதனாகத் தோன்றி உள்ளத்தில் மிருகமாகவன்றே மாறிக்கொண்டு வருகின்றான். அந்த மிருக உள்ளத்தை அன்பால் திருத்த முடியும்என்பது இயலாதென்றே கருதுகின்றேன்.

**அசோ :—** ஏன் இயலாது ? எண்ணிப்பாருங்கள். மனத்தாலும் மற்றவர்களுக்குத் தீங்கு எண்ணாது, எல்லோரையும் அன்புளத்தால் ஒத்து நோக்கினால் இயலாததும் உண்டோ ? கொடிய வன விலங்குகளையும் வசப்படுத்தும் நிலை நாட்டில் இல்லையா ! பாவம் ! சந்தர்ப்ப வசத்தால் தம்நிலை கெட்டு மனிதன் மிருகமாகின்றான் என்றால் அதன் பயன் போரா ! அதனால் இவ்வளவு உயிர் இழப்பா !—வேண்டாம். இனி போரே வேண்டாம்.

அமைச் :— அரசர் பிரானே! தாங்கள் கூறுவது உண்மை தான். மனிதன் மனிதனாக வாழ்ந்தால் போர் வேண்டாம்தான். ஆனால் அவன் மிருக மாகும்போது போர் வேண்டாது அமைதி காணும் அன்பு உள்ளங்கள் உலகில் வாழ முடியாதே!

அசோ :— ஏன் வாழ முடியாது? நான் வாழ்ந்து காட்டு கிறேன். அதில் நான் வெற்றி பெறுவேன் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. அன்றி வீழ்ந்தாலும் நான் மகிழ்வேன். ஆனால் என் நம்பிக்கை வீண்போகாது என்ற உறுதி எனக்கு உண்டு. சேனைத் தலைவரே! நம் சேனை அப்படியே இருக்கட்டும். ஆனால் இனிப் போர் வேண்டாம். நாட்டில் அமைதி காண நல்ல அன்பு முறையை மேற்கொள் வோம். இக் கலிங்கப்போர் நமக்கெல்லாம் ஒரு படிப்பினையாக அமையட்டும்.

சே. தலை :—அரசர் பிரானே! தாங்கள் கூறிய அனைத்தும் உண்மையே. ஆனால் பகைவர் வலியவந்து படையெடுத்தால்?

அசோ :— படையெடுத்தால்—ஏன் அந்த ஐயம்? இனி ஐயத்துக்கு இடம் வேண்டாம். நாம் உண்மை யில் அன்புகொண்டு வாழ்ந்தால் பகைமை ஏது? பின் படையெடுப்புத்தான் ஏது? உலகில் அவ்வாறு யாரும் வாழவில்லையே என்று நீங்கள் கூறலாம்? நான் வாழ உறுதி கொண்டுவிட்டேன். இனி எந்த நாட்டின் மீதும் படை யெடுப்பதில்லை. நாடுகள் அன் பால் ஒன்றுபட வேண்டும். ஆணையாலும்

போராலும் சட்டத்தாலும் நாடுகள் ஒன்றுபட மாட்டா! பட்டாலும் நெடுங்காலம் ஒன்றி வாழமாட்டா! நான் அன்பு வழி நாடுகளை ஒன்று படுத்துகின்றேன். போர் வேண்டாம்! நாடு திரும்புங்கள்.

**இரு:—** அப்படியே! அரசே! வளர்க நின் செங்கோல்.

## காட்சி 3

(நாடு திரும்பும் வழியில் காடு. பல பௌத்தத் துறவிகள் தங்கியுள்ளனர். அசோகன் அவர்களோடு உரையாடுகிறான்.)

**அசோ:—** அடிகளே! அரசர் குடும்பத்தே பிறந்தும், எல்லா வாழ்வையும் வேண்டாம் என்று வெறுத்து, உலகம் இன்பத்தைப் பெறவேண்டிப் பாடுபட்ட அண்ணல் புத்தரின் வாழ்வு அறிந்தேன். கொலையும் கொடுமையும் நிறைந்த இவ்வுலகிலும் மக்கள் அமைதியாக வாழ வழிகாண முயன்ற அண்ணலின் புகழ் உலகில் என்றும் நிலைபெறும் என்பது உறுதி. அடிகளே நீங்கள் அவ்வண்ணலின் அறவுரைகளை உலகெங்கணும் பரப்பி வருவதை அறிந்தேன். அவற்றின் அடிப்படை யாது?

**அடிகள்:—** அரசே! நெடுங்காலம் வாழ்வாயாக! புத்த தருமத்தின் அடிப்படை என்னவென்றால், 'எல்லாரும் இன்புற்றிருக்க நினைத்து, அந்த நினைவின் வழியே செயலாற்றுவது' தான். எல்லா உயிர்களையும் ஒத்து நோக்கி, எவ்வுயிர் வருந்தினும் அவ்வருத்தம் தன் வருத்தமே என்று கருதி அதை நீக்க விரைவதே மனிதப் பண்பு. மனிதனை அப்

பண்புள்ள மனிதனுக வாழ விடுவதே புத்த தருமம். இந்நெறி உலக மெங்கணும் ஓங்கு மாயின் உலகமே அமைதியுறும். அது வரையில் போரும் கொலேயும் பிற கொடுமைகளும் தான்.

அசோ :— அடிகளே ! நான் தாங்கள் கூறுவதை உணர்ந்தேன். நான் கலிங்கப் போரிலே வெற்றி பெற்றுத் திரும்புகிறேன். அந்தப் போர்க் கொடுமையைக் கண்டு, நான் இனிப் போரே செய்யப் போவதில்லே என்ற உறுதி கொண்டேன். அன்பா லன்றி ஆணேயால் உலகை ஆளப்போவதில்லே என்று முடிவு செய்தேன். என் முடிவுக்குத் தங்கள் சமயநெறி அரண் செய்கிறது.

அடிகள் :— அரசே ! உன் முடிவு பற்றி முன்னமே நாங்கள் அறிவோம். அதனுல்தான் உன்னேச் சில காலம் இங்கு தங்கிச் செல்லவேண்டுமென்று கேட்டோம். நீயும் தங்கி எங்கள் நெறி அறிந்தாய். இந்நெறி இனி உலகெலாம் பரப்ப வேண்டுவது உனது கடமையாகும்.

அசோ :— அடிகளே ! அறிந்தேன். எல்லாரும் இன்புற்றிருக்கும் நல்ல தெய்வ நெறியைப் பரப்புவதன்றி உலகில் வேறு நான் செய்யவேண்டுவது என்ன இருக்கின்றது. இன்றே புத்தர் தம் அடிகளேப் போற்றி அப்பணியினே மேற்கொள்கின்றேன். அவரது அற வாழி உலகெங்கும் சிறக்க என் வாழ்நாளேப் பயன் படுத்துகின்றேன். வாழ்க அற வாழி !

அனேவரும் :— வாழ்க ! வாழ்க !

## காட்சி 4

(நெடு நாளைக்குப்பின் புத்த சமயத்தை நாட்டில் பரப்பிப் பெரு நிலப்பகுதியைத் தனதாக்கிச் சக்ரவர்த்தியானபிறகு, அசோகன் அரியணையில் வீற்றிருக்கின்றான். பல புத்தசமய அடிகளும் வீற்றிருக்கின்றார்கள். உடன் பிறந்த சகோதரி சங்க மித்திரை அருகிலிருக்கின்றாள்.)

அசோ:— அடிகளே! அமைச்சரே! பெரியோர்களே! உலகில் அன்பினால் அமைதி காண முடியும் என்று கண்டோம். பரந்த பாரத நாட்டிலே போரின்றி அறநெறி போற்றினோம். என் ஆசை இன்னும் சற்று விரிகின்றது. உலகெல்லாம் இவ்வன்புநெறி ஓங்கவேண்டுமென நினைக்கின்றேன்.



சாஞ்சியில் அசோகர் நாட்டிய தூண்.

அடிகள் :— அரசர்க் கரசே! வரலாறு கண்டறிய முடியாத ஒரு பெரும் செயலை நீ இன்று நிலைநாட்டி விட்டாய். நீ நிலைநாட்டியுள்ள சாஞ்சியி லுள்ள பெருங்கம்பம் என்றென்றும் உன்புகழ் பாடிக்கொண்டிருக்கும். அதில் பொருத்தி யுள்ள உன் அறவாழி—தருமசக்கரம்—உலகம் உள்ளளவும் உன் நாட்டின் ஆட்சிக் கொடி யில் இடம் பெற்றிருக்கும். இதுவரை ஆணை செலுத்திய யாரும் இப்பரதகண்டத்தில் இவ் வளவு பெரிய நிலப்பரப்பைத் தம் அடிக்கீழ் கொண்டவர் இலர். நீ அன்பினுலே அகன்ற நிலப்பரப்பைக் கொண்டு சக்ரவர்த்தியானுய். அத்துடன் எல்லாரும் துன்பமற்று வாழும் இப் பௌத்த நெறியை உன் நாட்டு எல்லை யில் ஒளிபெறச் செய்தாய். உன் நாட்டு எல்லைக்கு அப்பாலுள்ள சேர சோழபாண்டியர் ஆளும் தமிழ் நாட்டிலும் அறவாழி சிறந்து நிற்கின்றது. உன் அறநெறி வாழ்வதாக!

அசோ :— அடிகளே! தாங்கள் கூறிய அனைத்தும் உண்மையே. எனினும் 'தாம்பெற்ற இன்பம் வையகம் பெறவேண்டும்' என்பதுதானே தரும நெறி. நம் புண்ணிய நாடு பெற்ற அந்த அறநெறியை உலகெலாம் பெறவேண் டாமா? ஆகவே கடல் கடந்தும் நம் சம யத்தைப் பரப்பத் திட்டமிட்டேன். தங்கள் ஆசி தேவை.

அடிகள் :— அரசே! உன் கொள்கை சிறந்ததே. ஆனல் நாடு கடந்து தொண்டாற்ற நல்ல அன்பர்கள் வேண்டாமா?

சங்கமித் :— அடிகளே! அண்ணு! அதற்காக ஒன்றும் கவலையுற வேண்டா. நான் பெண் என்று ஒதுக்க வேண்டா. இதோ புத்தர் பெருமான் பொன்னொளி பரப்ப நான் எங்நாடு சென்றும் தொண்டாற்ற முன்னிற்கின்றேன். இது உறுதி.

அமைச் :— அரசர்க் கரசே! அடிகள் பெரும! நெடுநாள் இந்த அமைச்சர் பணியில் உழன்றது போதும். அந்த அறப்பணிக்கு என்னையும் உரியவனாக்கிக் கொள்ளுங்கள்.

மற்றவர் :— அனைவருமே முன்னிற்கின்றோம்.

அசோ :— அடிகளே! கண்டீர்களா நம்மவர் பணியாற்ற விரும்பும் பண்பை. நல்லநெறி பரப்பப் பின் அடைவாரும் உண்டோ? இன்றே திட்டம் வகுக்க வேண்டும்.

அடிகள் :— ஆம் அறிந்தேன். நாங்களும் உடன் புறப்படுகின்றோம்.

அசோ :— (தன் தங்கையை நோக்கி) அம்மா! உன்னை உடன்பிறந்தவளாக நான் பெற்ற பேறே பேறு. நீ அண்மையிலுள்ள இலங்கை நாட்டில் சென்று புத்தர் தம் அறவாழி ஓங்கச்செய். அடியார்களும் வருவார்கள்.

சங்கமித் :— அப்படியே அண்ணு! என்னை அறப்பணிக்கு ஆளாக்கிய உன் புகழ் வாழ்க.

அசோ :— அமைச்சரே நீரும் தக்கவரோடு கிழக்கே சீன நாடு சென்று புத்தரின் செம்மைப் பணியில் தலைநின்று சிறப்பீர். மற்றவர்களையும் பிற நாடுகளுக்கு அனுப்பும் ஏற்பாடுகளை விரைந்து செய்யுங்கள்.

**அமைச் :—** அப்படியே செய்கின்றோம். அண்ணல் ஏவிய வழி கடல்கடந்து உலகெங்கணும் சென்று புத்தர்தம் அறநெறியைப் போற்றி வளர்ப் போம். நின் கொற்றம் வாழ்க!

**அவை :—** வாழ்க அசோகன்! வாழ்க அன்புநெறி! வளர்க அற வாழி!

## கேள்விகள்

1. அசோகன் எந்தக் குலத்தில் பிறந்தவன்? அவன் முன்னோருள் ஒருவன் பெயரை எழுதுக.
2. விருப்பமில்லாதிருந்தும் அசோகன் கலிங்கத்தின் மேல் ஏன் படையெடுத்தான்?
3. கலிங்கப் போர்க்களம் எவ்வாறு இருந்தது?
4. போர்க்களம் கண்ட அசோகன் என்ன கூறினான்?
5. போர்க்களத்தில் அவன் கொண்ட முடிவு என்ன?
6. புத்த தருமம் எதை அடிப்படையாகக் கொண்டது?
7. புத்த தருமத்தை அறிந்த அசோகன் என்ன செய் தான்?
8. அசோகன் ஸ்தூபி எந்த இடத்தில் கட்டப்பட்டது?
9. இலங்கை சென்ற அசோகன் சகோதரி யார்?
10. புத்த தருமம் நாட்டில் எவ்வாறு பரப்பப்பட்டது?

## பயிற்சி

1. சாஞ்சி ஸ்தூபியைப்பற்றி அறிந்து அதுபற்றிச் சில வரிகள் எழுதுக.
2. புத்தர் வரலாற்றை அறிந்து சுருக்கி எழுதுக.
3. புத்தமதம் உலகில் பரவிய விதத்தைச் சுருக்கி எழுதுக.

## இலக்கணம்

(1) வேற்றுமை எத்தனை வகைப்படும்? அதில் எட்டாம் வேற்றுமைக்கு என்ன பெயர்? அதற்கு உதாரணம் தருக.

(2) வியப்புச்சொல் (வியப்பிடைச்சொல்) இங்கு எவ்விடத்தில் வந்துளது?

(3) இடுகுறிப் பெயருக்கு இரண்டு எடுத்துக்காட்டு தருக.

(4) தொழிற் பெயர் என்றால் என்ன?

(5) வீரன் என்ற சொல்லைக்கொண்டு எட்டு வேற்றுமைக்கும் ஏற்ப உருபு அமைத்துக் காட்டு.

(6) ஆகுபெயர் எத்தனை வகைப்படும்? அதில் இடவாகு பெயருக்கு ஓர் எடுத்துக்காட்டு தருக.

(7) அரசன் வாளால் வெட்டினான்;
அரசனை வாளால் வெட்டினான்;

இவ்விரண்டிற்கு முள்ள வேறுபாடு என்ன?

(8) தேய்ந்த அம்பு;
தினவெடுக்கும் தோள்;
மாண்ட வீரர்.

இவ்வாக்கியங்களில் முதல் மொழிக்கு என்ன பெயர்? இறுதி மொழிக்கு என்ன பெயர்? ஏன் அவை அப் பெயர்களைப் பெற்றன?

# 4. இராமலிங்க அடிகள்

தமிழ் நாட்டில் அடியார்களது பாடல் பெற்ற தலங்கள் பல உள்ளன; அவற்றுள் சிதம்பரம் என்னும் தலமும் ஒன்ருகும். இத்தலம் கொள்ளிடம் என்னும் பேராற்றின் வடக்கில், தென்ஞர்க்காடு மாவட்டத்தில் உள்ளது. இத்தலம் தில்லை எனவும் தில்லை நகர் எனவும் வழங்கப்பெறும். இத்தில்லை நகருக்கு மேற்கில் ஒரு காத தூரத்தில் மருதூர் என்னும் சிற்றூர் ஒன்று உள்ளது.

மருதூரில் இராமைய பிள்ளை என்பார் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் கருணீகர் குலத்தைச் சேர்ந்தவர். கருணீகர் என்பவர் கிராமங்களில் கணக்கு வேலை பார்ப்பவராவர். இராமைய பிள்ளை கல்வியறிவிற் சிறந்தவர். நல்லொழுக்கம் மிக்கவர். சிவபெருமானிடத்தே நீங்காத அன்புகொண்டவர். தன் இல்லத்திற்கு வரும் அடியார் எல்லோருக்கும் அமுதுபடைக்கும் நியமம் பூண்டவர். தாம் பசித்திருப்பினும் அடியார் பசித்திருக்க ஆற்ருதவர். இவர் கிராமக் கணக்கு வேலையையும், ஆசிரியத் தொழிலையும் மேற் கொண்டிருந்தார். அவற்றில் வரும் வருவாயைக் கொண்டு மகிழ்வொடும், மனநிறைவொடும் வாழ்ந்து வந்தார்.

இராமைய பிள்ளைக்கு அவர் பெற்ருேர் நல்ல பெண்ணை மணமுடித்து வைத்தனர். அவர் சில காலம் இல்லறத்தில் வாழ்ந்தார். ஆனல் அவ்வம்மையார் விரைவிற் காலன் வயப்பட்டார். மீண்டும் மணஞ் செய்து கொண்டார். அந்த இரண்டாம் மனைவியும் இறந்து விட்டனர். இவ்வாறு இராமைய பிள்ளையின் மனைவியர் ஒருவர் பின்

ஒருவராக ஐவர் மறைந்தனர். அதன் பின்னர் சென்னைக்கு வடக்கிலுள்ள பொன்னேரியைச் சேர்ந்த சின்னம்மை என்னும் பெண்ணை மணந்து கொண்டார். இவ்வம்மையார் இரு ஆண் குழந்தைகளையும், இரு பெண் மக்களையும் பெற்றெடுத்தார். அவர்கள் முறையே சபாபதி, பரசுராமன், சுந்தரம்மாள், உண்ணுமுலையம்மாள் என்று பெயரிடப் பெற்றனர்.

ஒரு நாள் இராமைய பிள்ளை தம் அலுவலை முன்னிட்டு வெளியிற் சென்றிருந்தார். அன்று நண் பகலில் சிவனடியார் ஒருவர் அவர் வீட்டிற்கு வந்தார். அவரைக் கண்ட சின்னம்மையார், சிவபெருமானையே கண்டாலொத்த அன்புபெருக அவரை வழிபட்டு உபசரித்தார். இத்தகைய சிறந்த சிவனடியாரைக் காணும் பேற்றைத் தம் கணவர் பெறவில்லையே எனவும் வருத்தமுற்றார். அடியாரை அழைத்து அகமும் முகமும் மலர்ந்து உபசரித்து விருந்திட்டார். அடியாரும் விருந்துண்டு பசிதீரப் பெற்றார். சின்னம்மையாருக்குத் திருநீறு வழங்கி, ‘ஆண்மகவு பிறப்பதாக’ என வாழ்த்திச் சென்றார்.

வெளியிற் சென்றிருந்த இராமைய பிள்ளை வந்தவுடன், சின்னம்மையார் நடந்தவை கூறக்கேட்டு அளவிலா மகிழ்வடைந்தார். சிவயோகியார் கூறிச் சென்றபடியே சின்னம்மையார் கருத்தரிக்கப் பெற்றார். பத்துத் திங்களும் கழிந்தன ; 1823-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 5-ம் நாள் ஞாயிற்றுக்கிழமை யன்று அவ்வம்மையார் ஓர் ஆண் மகவைப் பெற்றெடுத்தார். பெற்றோர் இக் குழந்தைக்கு இராமலிங்கம் எனப் பெயரிட்டு வளர்த்து வந்தனர்.

இராமலிங்கர் தாம் பிறந்த ஆறும் மாதத்திலேயே தம் அருமைத் தந்தையைப் பிரிந்தார். இரண்டொரு திங்கள்



இராமலிங்கர்

*Courtesy* S. I. S. S. W. P. Society Ltd.

கழிந்த பின்னர், குடும்பத்தில் மூத்தோராகிய சபாபதிப் பிள்ளை, எல்லோரையும் அழைத்துக் கொண்டு பொன்னேரியிலுள்ள தம் பாட்டியார் வீட்டிற்கு வந்து சேர்ந்தார். சில நாட்களுக்குப் பிறகு குடும்பத்துடன் சென்னையை யடைந்தார்.

காஞ்சீபுரம் வித்வான் சபாபதி முதலியாரவர்கள் அப்போது சென்னையில் இருந்தார்கள். ஆதலால் சபாபதிப்

பிள்ளை, முதலியாரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்று வல்லவரானுர். தாமும் தம் தந்தையாரைப் போன்றே ஆசிரியத் தொழிலை மேற்கொண்டார். அத்துடன் புராணப் பிரசங்கமும் செய்து வருவாராயினுர். இவற்றிற் கிடைத்த ஊதியத்தைக் கொண்டு தம் குடும்பத்தை நன்கு காப் பாற்றி வந்தார். இதற்கிடையில் இவருக்குத் திருமணமும் நடைபெற்றது. இல்வாழ்வும் நல்வாழ்வாக வளர்ந்தது.

அக்காலத்து இராமலிங்கர் கல்வி கற்கும் பருவத்தை யடைந்தார். அதுபோது சபாபதிப்பிள்ளையே தம் தம்பி யார்க்குத் திவாகரம், நிகண்டு, சதகம், அந்தாதி முதலிய நூல்களைக் கற்பித்து வரலாயினுர். ஆனுல் இராமலிங் கருக்கோ கல்வியில் சிந்தனை செல்லவில்லை. தம் கையிற் கிட்டிய நூல்களைப் படிப்பார். ஆலயங்கட்குச் செல்லுவார். உள்ளமுருகிக் கண்ணீர் வாரக் கடவுளை வழிபட்டு நிற் பார். எவ்வளவு நேரம் ஆயிற்றென்று அறியாமலும் கடவுள் தியானத்திலே ஆழ்ந்து விடுவார். நினைவு வந்த பின்னரே வீடு திரும்புவார். எப்பொழுதும் அவர் உள்ளம் இறைவன் திருவடிகளிலேயே பதிந்து கிடக்க லாயிற்று.

தம்பியாரின் உண்மைநிலை யுணராத சபாபதிப்பிள்ளை அவரைச் சற்றுக் கண்டிப்பாகவே நடத்தத் தொடங்கினுர். அதுகண்ட அவர் மனைவியார் மனம் வருந்தினுர். தம் அண்ணியாரின் மன வருத்தங் கண்ட இராமலிங்கர் தம் வீட்டின் மேன் மாடியிலேயே தங்கிப் படிப்பதாகக் கூறினுர். அங்கே அவர் கண்ணுடியின் முன்னர் விளக்கேற்றி இறை வனைச் சிந்திப்பதிலேயே காலங் கழிக்கலானுர். இதனை யறியாத சபாபதிப்பிள்ளை, தம் தம்பியார் கவலையுடன் கல்வி பயிலுவதாக எண்ணி மகிழ்வடைந்தார். இராம லிங்கர் மாலை வேளைகளில் மட்டும் கந்தசாமிக் கோயி

லுக்குச்சென்று, உளமுருகிப் புகழ்மாலை பாடி வணங்கி வரலானார்.

சபாபதிப்பிள்ளை புராணப் பிரசங்கம் செய்வது வழக்கம் என்று முன்னர் கூறினோ மல்லவா? அவர் அவ்வாறு புராணப் பிரசங்கம் செய்யும் போது ஏடு படிப்பதற் கென்று ஒருவரை ஏற்பாடு செய்திருந்தார். அவர் ஒரு அம்மையார் ஆவர். ஒரு சமயம் உடல் நலிவால் அவ்வம்மையார் வரவியலாது போயிற்று. வேறு ஏடு படிப்போரும் கிடைக்கவில்லை. ஏடு படிப்போரின்றிப் பிரசங்கம் செய்தல் சபாபதிப் பிள்ளைக்கு இயலாது. இந்நிலையில் செய்வதறியாது தயங்கினார். அப்போது சபாபதிப்பிள்ளையின் துணைவியார் இராமலிங்கரைப் படிக்குமாறு கேட்க, அவரும் சிறிதும் சிந்தியாமலே ஒப்புக்கொண்டார். அன்றிரவு பிரசங்கமும் தொடங்கியது. இராமலிங்கரும் மிகவும் பழக்கமானவர் போல் பாட்டுக்களை வாசித்தார். அவருடைய குரலினிமையும், சொல்விளக்கமும் எல்லோருடைய உள்ளத்தையுங் கவர்ந்து கொண்டன. பிரசங்கம் முடிந்து வீட்டிற்கு வந்ததும், சபாபதிப்பிள்ளை இவற்றையெல்லாம் தம் மனைவியிடங்கூறி மிகவும் மகிழ்ந்தார்.

ஒரு சமயம் சபாபதிப்பிள்ளை காய்ச்சலால் வருந்திக் கொண்டிருந்தார்; எழுந்திருக்கவும் முடியாமல் அவ்வளவு கடுமையான நோய் வாய்ப்பட்டிருந்தார். ஆதலால் தாம் பிரசங்கம் செய்து வரும் செட்டியாருக்குச் செய்தி தெரிவித்து வரும்படி இராமலிங்கரை அனுப்பினார். இராமலிங்கர் சென்றபோது, புராணங் கேட்பதற்காக அதிக மக்கள் வந்திருந்தனர். அவர்கள் எல்லோரும் ஒருமுகமாக இராமலிங்கரையே பிரசங்கம் செய்யச் சொல்லி வேண்டிக் கொண்டார்கள். இவரும் தயங்காமல் பிரசங்கம் செய்தார். இவர் சொற்பொழிவைக் கேட்ட மக்கள் எல்லோரும் இவர்

தம் திறமை கண்டு மிகவும் வியந்தனர். செட்டியாரும் தொடர்ந்து இராமலிங்கரே பிரசங்கம் செய்யுமாறு ஏற்பாடு செய்தார்.

இராமலிங்கரது சொற்பொழிவைக் கேட்க வேண்டுமென்ற பேரவா சபாபதிப்பிள்ளைக் குண்டாயிற்று. ஆதலின் ஒருவரும் அறியாமற் சென்று ஒரு ஒதுக்கிடத்திருந்து கேட்டார். தன்னையே நம்பக்கூடாதவரானார். ஏடில்லை; எனினும் சொற்பொழிவில் தடையில்லை. கூறும் பாடல் கட்கோ கணக்கில்லை. ஆதலின் முருகன் அவதாரமே இராமலிங்கர் என்றெண்ணித் தம் மனைவியிடமும் கேட்டது கூறி வியந்தார். அது முதல் இராமலிங்கருக்கு வீட்டில் மரியாதையும், உபசரிப்பும் அளவு கடந்து நடந்தன. அதனை விரும்பாத அடிகளார் வீட்டுத் தொடர்பை ஓரளவிற்கு வரையறுத்துக் கொண்டு திருவொற்றியூர் சென்று இறைவனை வழிபட்டு வரலானார். அவ்வாலயத்துள்ள முருகப் பெருமானைத் தம் குருநாதராகக் கொண்டு அங்கேயே நெடு நேரம் தியானத்தி லாழ்ந்திருப்பார். அப்போதிருந்து தான் இராமலிங்கர் பாடல்கள் இயற்றத் தொடங்கினார்.

இவ்வாறு ஆலய வழிபாட்டிலேயே இராமலிங்கர் தம் காலத்தைக் கழித்து வந்தார். ஆண்டுகள் ஆயின. மணப் பருவமும் வந்தது. அவருக்குத் திருமணம் செய்யக் கருதிய சபாபதிப்பிள்ளை முதலியோர் அக்கருத்தை அவருக் கறிவித்தனர். அவர் அதற்கு ஒரு சிறிதும் உடன்படவில்லை. எனினும் தம் தந்தையார் சொற்படி திருமணத்திற்கிசைந்த திருஞான சம்பந்தர் வரலாற்றை எடுத்துக்காட்டி அவரை இசைவித்தனர். இராமலிங்கரின் தமக்கை மகளையே மணமும் முடித்தனர். ஆயினும் இராமலிங்கர் இல்லற நெறி நில்லாது தம் போக்கிலேயே இருந்து வந்தார். அப்போது அவர் தாயாராகிய சின்னம்மையாரும் மறைந்தார்.

இராமலிங்கரின் இளைய தமையனார் பரசுராமப்பிள்ளை என்பவர். அவர் நோய் வாய்ப்பட்டு உடல் மிகவும் மெலிந்து போனார். இராமலிங்கர் அவரை அழைத்துக் கொண்டு சிதம்பரம் சென்று நடராசப் பெருமானை வணங்கச் செய்தார். அத்துடன் சீர்காழி, புள்ளிருக்கும்வேளூர், பூம் புகலூர், திருவாரூர் முதலிய தலங்களுக்கும் அழைத்துச் சென்று இறைவனை வணங்கச் செய்தார். அத் தலயாத்திரைக்குப் பின்னர், தமது பிறப்பிடமாகிய மருதூருக்கு அருகிலுள்ள கருங்குழிக்கு வந்தார். அங்கு பரசுராமப் பிள்ளை இம்மண்ணுலக வாழ்வை நீத்தார். அடிகளார் அவ்வூரிலேயே தியான நெறியி லாழ்ந்தார். அவ்வமயம் மயிலையில் சபாபதிப்பிள்ளையும் மறைந்த செய்தி வந்தது. அதைக் கருத்திற் கொள்ளாமலே தம் நெறியிலேயே நின்று விட்டார்கள் அடிகள்.

கருங்குழிக் கருகிலுள்ள மேட்டுக்குப்பம் என்னும் சிற்றூரில் யோகத்திலிருக்கும் அடிகளார் இறைவடிவை ஒளிவடிவமாக் கண்டு, உணர்வு பெற்று அருட்பெருஞ் சோதி அகவலைப் பாடியருளினார்கள். பின்னர் வடலூர் என்னும் பார்வதி புரத்தில் ஞான சபை ஒன்று கட்டுவிக்கக் கருதி, அதன் தரைப் படத்தையும் வரைந்து தந்தார்கள். அதன்படியே நாற்பது காணி கொண்ட நிலப்பரப்பில், அங்கிருந்து பார்த்தால், தில்லைக் கோபுரங்கள் தெரியுமாறுள்ள விடத்தே எண்கோண வடிவில் சபை கட்டி முடிக்கப்பெற்றது. அதனுள் ஒரு நிலைக் கண்ணாடியும், இறை ஒளிவடிவானவன் என்பதற்கறிகுறியான தூங்கா மணி விளக்கும் அமைக்கப்பெற்றன. இச்சபை எச்சமயத் தவர்க்கும், எக்குலத்தவர்க்கும் பொதுவாயிருந்து, அடிகளாரின் சமரசக் கொள்கையை இன்றும் மக்களறியச் செய்து வருகின்றது. அடிகளார் தம் ஐம்பத்து மூன்று

மாண்டில் மேட்டுக்குப்பத்திலேயே இவ்வுலக வாழ்வைத் துறந்து மறைந்தார்.

'இறைவன் ஒளி வடிவினன்; அன்புக் குருகும் அருள் தன்மையினன்; அன்பு நெறி ஒன்றே அவனை அடையும் நெறி; எம்மதமும் சம்மதமே' என்பனவே இராமலிங்கர் உலகிற் குணர்த்திச் சென்ற உண்மைகள். அவர் பாடிய பாடல்கள் யாவும் தொகுக்கப் பெற்று, ஆறு திருமுறை களாக வகுக்கப் பெற்று 'அருட்பா' என்று வழங்கப்படு கின்றன.

## கேள்விகள்

1. சிதம்பரம் எங்குளது? அதன் வேறு பெயர்கள் யாவை?
2. இராமைய பிள்ளையின் சிறப்பியல்புகள் யாவை?
3. இராமைய பிள்ளையின் மனைவியர் பற்றி நாமறிவ தென்ன?
4. சின்னம்மையார் அடியார்க் கமுதிட்ட வரலாறு யாது?
5. இராமலிங்கரின் உடன் பிறந்தோர் யாவர்?
6. இராமலிங்கர் கல்வி கற்ற வரலா றென்ன?
7. சபாபதிப்பிள்ளை இராமலிங்கரிடம் மகிழ்ச்சியும் வியப் புங் கொள்ளுமாறு நடந்த நிகழ்ச்சிகள் யாவை?
8. இராமலிங்கரின் இல்வாழ்க்கை பற்றி நாமறிவ தென்ன?
9. ஞானசபையின் வரலாறும், அமைப்பும், சிறப்பும் யாவை?

## பயிற்சி

1. இராமலிங்கர் வரலாற்றை அவரே கூறுவது போல் எழுதுக.

2. ஆசிரியர் வழி திருவருட்பாவிலிருந்து சில பாடல்களைக் கற்றுக் கொள்க.

3. மனுமுறை கண்ட வாசகம், சீவகாருணிய ஒழுக்கம் ஆகியவற்றை நூல் நிலையத்திலிருந்து பெற்று ஆசிரியர் உதவியுடன் படிக்கவும்.

## இலக்கணம்

(1) பொதுப் பால் எனப்படுவது என்ன ?

(2) புகழ்மாலை—என்ன தொகை ?

(3) கீழ்வருவன வற்றைப் பிரித்து எழுது :—

ஏடில்லை ;
பாடல்கட்கோ ;
எண்கோணம்.

(4) 'இரண்டாம் வேற்றுமை உருபும், நான்காம் வேற்றுமை உருபும் வரும் பொழுது மெய்யெழுத்து மிகும்' என்பதற்கு இப்பாடத்தின் துணை கொண்டே உதாரணம் தருக.

(5) கீழ் வருவன வற்றிற்கு இலக்கணம் தருக :—

மனைவி
மக்கள்
மரம்
மா.

(6) பண்புச் சொல் என்றால் என்ன ?

# 5. ஜகதீச சந்திர போஸ்

கிழக்கு வங்காளத்தைச் சேர்ந்த டாக்கா நகருக் கருகில் விக்ரம்பூர் என்னும் சிற்றூர் ஒன்று உண்டு. அங்கு தான் உலகப் புகழ்பெற்ற தாவர நூலறிஞர் ஜகதீச சந்திர போஸ் தோன்றினர். 1858-ம் ஆண்டு நவம்பர் மாதம் முப்பதாம் நாளன்று அவர் பிறந்தார். போஸ் விக்ரம்பூரில்



ஜகதீச சந்திர போஸ்

பிறந்தாலும், அங்கிருந்து ஏறக்குறைய முப்பத்தைந்து கல் தொலைவிலுள்ள பரித்பூர் என்ற ஊரில்தான் வளர்ந்தார்.

ஜகதீசரின் தந்தையார் பகவன் சந்திர போஸ் ஆவர். அவர் அரசாங்கத்தில் உயர்ந்த உத்தியோகத்தில் இருந்தவர். அவர் பரித்பூரில் அலுவலில் இருந்ததால்தான் ஜகதீசர் அங்கே வளர்ந்து வந்தார். பகவன் போஸ் பல நற்குணங்களும் ஒருங்கமையப் பெற்றவர்; உயர்ந்த நோக்கமும், விரிந்த மனப்பான்மையும் உள்ளவர். தாய் நாட்டிடத்தும், தாய் மொழியிடத்தும் மிக்க பற்றுள்ளங் கொண்டவர். ஏழை எளியவரிடத்து இரக்கங் காட்டும் இனிய குணம் அமைந்தவர். கல்வி வளர்ச்சியில் மிகவும் ஊக்கங் கொண்டவர். எந்த நாடும் கல்விப் பெருக்கம் ஒன்றினால்தான் முன்னேற முடியும் என்ற உறுதியான நம்பிக்கையுடையவர். வாழ்க்கையின் குறிக்கோள் செல்வத்தைச் சேர்ப்பதன்று; நாட்டுப்பணியே என்று எண்ணி அதற்கான வகையில் முயன்று பணியாற்றி வந்தார்.

எல்லோரும் ஆங்கிலக் கல்வியைப் போற்றி வளர்த்த காலம் அது; தாய் மொழியை ஓரளவிற்கு அலட்சியம் செய்த காலம் அது. ஆங்கிலத்தால் விளையும் நன்மையை அறியாதவர் அல்ல பகவன் போஸ்; எனினும் தன் மைந்தனை வங்காளிப் பள்ளிக்கே அனுப்பிவைத்தார். அவ்வாறு அவர் செய்ததற்கு இரு காரணங்கள் உண்டு. ஒன்று ஜகதீசர் இளமையிலேயே தாய் மொழிப்பற்று உடையவராதல் வேண்டும் என்பது; மற்றொன்று அவர் எளியவர்கள் வீட்டுப் பிள்ளைகளுடனும் நன்கு பழகி அருளுள்ளம் உடையராதல் வேண்டும் என்பது. பகவன் போஸ் எண்ணியபடியே ஜகதீசர் அவ்விரு நன்மைகளையும் அடைந்து அதன்வழி தன் நாட்டின் மேன்மையையும் பண்பாட்டையும் அறிந்துகொண்டார்.

ஜகதீசர் தம்முடைய ஐந்தாவது வயதில் பரித்பூரி லுள்ள வங்காளிப் பள்ளியில் சேர்க்கப்பட்டார். நாள் தோறும் முறையாகச் சென்று தம் படிப்பில் மிகவும் ஊக்க மாகக் கற்றுவந்தார். பகலில் தாம் பார்க்கும் பொருள் களைப்பற்றி யெல்லாம், இரவில் தம் தந்தையார் வந்தபிறகு அவரிடம் கேட்பார். அவரும் ஒரு சிறிதும் அலுத்துக் கொள்ளாமல் ஜகதீசர் கேட்கும் கேள்விகள் எல்லாவற் றுக்கும் பதில்கூறி அவரது ஐயங்களைப் போக்குவார்.

வங்காளிப் பள்ளியில் ஐந்தாண்டுகள் பயின்ற பின்னர், ஜகதீசர் கல்கத்தாவிலுள்ள ஆங்கிலப் பள்ளி யொன்றில் சேர்க்கப்பட்டார். ஆனல் அங்கு அதிக நாள் பயிலவில்லை. மூன்று மாதங்கள் அங்கு பயின்ற பின்னர், அவர் கல்கத் தாவிலுள்ள ஸெயின்ட் ஸேவியர் பள்ளியிற் சேர்க்கப் பெற்ருர். அப்பள்ளியில் ஆங்கிலேயர் வீட்டுப் பிள்ளைகளே அதிக மிருந்தனர். ஆங்கிலேயர் தங்களை மிகவும் உயர் வாகவும், இந்தியர்களைத் தாழ்வாகவும் எண்ணியிருந்த காலம் அது. ஆதலால் ஜகதீசருக்கும், பிற பள்ளித் தோழர் கட்கும் அதிக நட்பு ஏற்படாமற் போயிற்று. இருப்பினும் ஜகதீசர் மிகவும் ஊக்கமாகப் படித்து 1880-ம் ஆண்டில் பி. ஏ. பட்டம் பெற்ருர்.

ஜகதீசர் சிறுவராயிருந்தபோது பகவன் போஸ் அவருக்கு ஒரு மட்டக் குதிரை வாங்கிக் கொடுத்திருந் தார். ஜகதீசர் அதில் ஏறிச்செல்லக் கற்றுக்கொண்டார். பரித்பூரில் குதிரைப் பந்தயம் நடப்பது உண்டு. ஒரு நாள் ஜகதீசர் தம் குதிரை மீதேறிக்கொண்டு அப்பந்தயத்தைப் பார்க்கச் சென்ருர். சிறுவர் மட்டக் குதிரையின்மேல் வருவதைப் பார்த்த மக்களிற் சிலர் அவரையும் பந்தயத் திற் கலந்துகொள்ளுமாறு ஊக்கமூட்டினர். இவரும் குதிரையைத் தட்டி விட்டார். மட்டக் குதிரையும் நாற்

காற் பாய்ச்சலில் மற்றப் பெரிய குதிரைகளைத் தொடர்ந்து ஓடிற்று.

மட்டக் குதிரையின் மேலுள்ள சேணத்தில் கால்வைத்துக் கொள்வதற்குரிய படிகள் இல்லை. ஆதலால் தான் கீழே விழுந்து விடாதபடி, ஜகதீசர் தம் முழங்கால்களால் சேணத்தை இறுக்கிப் பிடித்துக் கொண்டார். அதனால் அவர் கால்கள் தேய்வுற்று இரத்தம் ஒழுகலாயிற்று. எனினும் விடாது குதிரையைச் செலுத்திப் பந்தயத்தை முடித்தார். சிறுவரின் ஊக்கத்தையும், தளர்வின்மையையும் கண்ட மக்கள் ஆரவாரஞ் செய்து, உண்மையிலேயே அவரைப் பாராட்டினார்கள். 'தனக்கு ஊறு நேர்ந்தாலும் தான் மேற்கொண்ட செயலை விடாது முயன்று முடிக்க வேண்டும்' என்ற அவரது உள்ளக் கருத்தை இச் செயல் நன்கு விளக்குகிறதல்லவா ?

ஜகதீசர் கல்கத்தாவிற் படித்தபோது ஒரு சிறு வீட்டில் தங்கியிருந்தார். அடிக்கடி வெளியிற் சென்று இயற்கைக் காட்சிகளைக் கண்டு வருவார். அவ்வியற்கைப் பொருள்களில் ஏதோ பெரிய உண்மைகள் அடங்கியிருப்பதாகக் கருதுவார். அவர் வீட்டைச் சுற்றிலும் கொஞ்சம் இடம் இருந்தது. அதை ஒரு தோட்ட மாக்கினார். அதில் நல்ல செடிகளைப் பயிராக்கி அழகாக வைத்திருந்தார். தம்முடைய ஓய்வு நேரத்தை யெல்லாம், தோட்டவேலையிலேயே செலவு செய்து வந்தார். இதுவே அவர் பிற்காலத்தில் உலகப் புகழ்பெற்ற தாவர நூலறிஞராக வருவதற்கு முதற்படியா யமைந்தது எனக் கொள்ளுதல் மிகப் பொருத்தமானதேயாம்.

ஜகதீசர் பல்கலைக் கழகப்பட்டம் பெற்றவுடன் இங்கிலாந்து சென்று ஐ. ஸி. எஸ். தேர்வுக்குப் படிக்கவிரும்பினார்; அதன் வழி கலெக்டர் வேலை பார்க்கவேண்டும்

என்னும் பெரு விருப்பும் அவருக்கு உண்டாயிற்று. ஆனால் தந்தையார் பகவன் போஸ் அதை விரும்பவில்லை. ஜகதீசர் ஒரு சிறந்த அறிஞராகவும், பரோபகாரியாகவும ஆக வேண்டுமென்பதே அவர் விருப்பம். ஆதலால் ஜகதீசர் விஞ்ஞானம், அல்லது மருத்துவம் பயிலுவதானால் இங்கிலாந்து செல்லலாம் என்று முடிவாகக் கூறிவிட்டார். ஜகதீசரும் தம் தந்தையின் விருப்பப்படியே இங்கிலாந்து சென்று மருத்துவக்கலை பயிலுவதென முடிவு செய்தார்.

ஜகதீசர் இங்கில்ாந்து செல்ல ஏற்பாடாகியது; ஆனால், வேண்டிய அளவிற்குப் பொருள் கையில் இல்லை. அதனால் இங்கிலாந்து செல்லுதல் தடைப்படும்போல் இருந்தது. இதனை அவர்தம் அன்னையார் அறிந்தார். தம் அருமை மகனை அணுகினார். தம் நகைகளை விற்றுப் பணந் தருவதாகவும், ஜகதீசர் இங்கிலாந்து செல்வதற் கான ஏற்பாடுகளைச் செய்யுமாறும் கனிவுடன் கூறினார். பிரயாணத்திற்கான எல்லா ஏற்பாடுகளும் நடந்தேறின. ஜகதீசர் பம்பாய் சென்று அங்கிருந்து கப்பலேறி இங்கி லாந்திற்குப் புறப்பட்டார். கப்பலிற் செல்லும்போது அவர் உடல் நலம் மிகவும் பாதிக்கப்பட்டது. எனினும் மிகவும் உறுதியுடன் இங்கிலாந்து சேர்ந்தார்.

ஜகதீசர் இங்கிலாந்து சேர்ந்தவுடன், லண்டன் நகரி லுள்ள மருத்துவக் கல்லூரியிற் சேர்ந்து மருத்துவக் கல்வி பயிலலானார். 'ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட் டொன்றாகும்' என்ற அறிஞர் சொற்படி அவர் எண்ணிய தொன்றும் நடந்ததொன்றுமாயிற்று. ஜகதீசர் மருத்துவக் கலையைப் பயிலுங்கால் அவ்வூரின் தட்ப வெப்பநிலை அவர் உடலுக்கு ஏற்றதாயில்லாமையின் காய்ச்சல் நோய் அவரைப் பெரிதும் வருத்தியது. ஆதலால் இடமாற்றம் வேண்டியது இன்றியமையாததாயிற்று. வேறு வகை

யில்லாததால் ஜகதீசர் அப்படிப்பை நிறுத்திவிட்டு, கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த கிறிஸ்துவக் கல்லூரியிற் சேர்ந்து அறிவியல் துறையில் பி. ஏ. பட்டம் பெற்றார். அடுத்த ஆண்டிலேயே லண்டன் பல்கலைக் கழகத்தில் பி. எஸ்ஸி. பட்டமும் பெற்றார். இங்கு இருந்த காலத்தில் பல பேரறிஞர்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பும் ஜகதீசருக்குக் கிடைத்தது. அதுவே அவரது பிற்கால உயரிய வாழ்க்கைக்கு அடிப்படையா யமைந்தது எனலாம்.

ஜகதீசர் 1885-ம் ஆண்டில் இந்தியா திரும்பிவந்தார். வந்தவுடன் கல்கத்தா மாகாணக் கல்லூரியில் பௌதிகப் பேராசிரியராக அமர்ந்தார். ஜகதீசர் மாணவர்கட்குப் பாடஞ்சொல்லிக் கொடுப்பதுடன் ஆராய்ச்சியிலும் ஈடுபட்டார். முதன் முதலில் மின்சார அலைகளைப்பற்றி ஆராய்ச்சி செய்யத் தொடங்கினார். தம் ஆராய்ச்சிக்கேற்ற சிறந்த கருவிகள் இல்லையாயினும் உள்ள கருவிகளைக்கொண்டே அரிதின் முயன்று உழைத்து ஆராய்ந்து வந்தார். பத்தாண்டு உழைப்பிற்குப்பின் குறுகிய மின்சார அலைகளைப்பற்றிக் கண்டுபிடித்துக் கட்டுரைகள் எழுதினார். அதனை எல்லா மேனாட்டு அறிஞர்களும் போற்றிப் புகழ்ந்தனர். அக்கட்டுரை லண்டனிலுள்ள ராயல் கழகத்தாரால் வெளியிடப்படும் பத்திரிகையில் இடம் பெற்றது. ஜகதீசரின் ஆராய்ச்சித் திறமையைக் கண்ட லண்டன் பல்கலைக் கழகத்தார் அவருக்கு அறிஞர் பட்டத்தையும், கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தார் எம். ஏ. பட்டத்தையும் அளித்தார்கள்.

ஜகதீசரின் ஆராய்ச்சித் திறன் நாளும் வளர்ந்தது. லண்டனிலுள்ள ராயல் கழகத்தில் வந்து பேசுமாறு அக்கழகத்தார் அழைத்தார்கள். இந்திய அரசாங்கமும் அவர்

மேல்நாடு சென்று வருதற்கான உதவியைப் புரிந்தது. அதன்படியே ஜகதீசர் இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி முதலிய மேல் நாடுகட்குச் சென்று பல அரிய ஆராய்ச்சிச் சொற்பொழிவுகளைச் செய்தார். அங்கிருந்த அறிஞர் பலரும் ஒருமுகமாக இவர்தம் திறமையைப் போற்றிப் புகழ்ந்தார்கள். இவ்வாறு மேல் நாட்டு அறிஞர் பலருடைய போற்றுதலைப் பெற்று ஜகதீசர் 1897-ல் இந்தியா வந்து சேர்ந்தார்.

இந்தியா திரும்பிய பிறகு ஜகதீசர் மின்சார அலைகளைப் பற்றி மேலும் ஆராயத் தொடங்கினர். அதன் பயனாக மின்சாரத் தந்திக் குறிப்புக்களைக் கம்பியின் உதவியில்லாமலே ஆகாயத்தின் உதவி மூலம் அனுப்பமுடியும் என்று கண்டுபிடித்து உலகுக் கறிவித்தார். இதை அவர் விரும்பி யிருந்தால் வியாபார முறையில் பயன்படுத்திக் கொண்டு கோடி கோடியாகப் பொருள் திரட்டியிருக்கலாம். அவ்வாறு பொருள்தர அமெரிக்காவும், இங்கிலாந்தும் முன் வந்துங்கூட ஜகதீசர் அதனை விரும்பாது அவ்வாராய்ச்சியை உலகப் பொதுப் பொருளாக்கி உலக மக்கள் எல்லோருக்கும் பெருந் தொண்டராயினர்.

இவ்வாறு ஆராய்ச்சி செய்துகொண்டிருந்ததன் பயனாக உலோகப் பொருள்களும் அயர்ச்சி யடைகின்றன எனக் கண்டுபிடித்தார். அதிலிருந்து தாவரங்களும் உணர்ச்சியுடையன என்பதைக் கண்டுபிடித்தார். நம்மைப்போலவே செடி கொடிகட்கும் இருதயம் இருக்கின்றது; இவற்றின் துடிப்பும் சமயத்திற்கேற்ப வேறுபடுகின்றது என்ற உண்மையையுங் கண்டுபிடித்தார். இந்த வேறுபாட்டினைக் காட்டும் 'கிரஸ்கோகிராப்' (Crescograph) என்னும் அரும்பெரும் கருவியைக் கண்டுபிடித்தார். இக்கருவி அறிவியல் துறையில் கண்டுபிடிக்கப்பட்ட அற்பு

தங்களில் ஒன்றென்றே கூறல் வேண்டும். இக்கருவியின் துணைக்கொண்டு தாவரமும் மக்களைப்போலவே எல்லா வகையிலும் வாழ்ந்துவருகின்றன என்பதை அறிந்து கொள்ள முடியும்.

இதன் பின்னர் ஜகதீசர் பலமுறை மேனுடுகளுக்குச் சென்று தம் ஆராய்ச்சி பற்றிய அரிய விரிவுரைகளை நடத்திப் பேரும் புகழும் பெற்றுத் திரும்பினுர். இந்தியர்களுடைய முன்னேற்றத்திற்குத் தன்னுல் ஆனவகையில் உழைத்தார். ஆசிரியர்கள் உரிமையும் சிறப்பும் அளித்துப் போற்றப்படவேண்டியவர்கள் என்பதை எடுத்துக் காட்டினுர். தம்மிடம் பயின்ற மாணவர்கட்கு ஆசிரியராயிருந்த தன்றி வழிகாட்டியாகவும் உதவினுர். இத்தகைய உலகப் புகழ்பெற்ற அறிவியற் புலவர் ஜகதீச சந்திர போஸ், 1937-ம் ஆண்டு நவம்பர் 23-ம் நாள் திடீரென மாரடைப்பால் இவ்வுலக வாழ்வைத் துறந்து புகழுடல் பெற்ருர்.

## கேள்விகள்

1. பகவன் போஸின் சிறப்பியல்புகள் யாவை?
2. வங்காளிப் பள்ளியில் சேர்ந்ததால் ஜகதீசர் அடைந்த நன்மைகள் யாவை?
3. ஜகதீசர் கலந்து கொண்ட குதிரைப் பந்தயத்தின் விவர மென்ன?
4. கல்கத்தாவில் இருந்தபோது தம் ஓய்வு நேரத்தை ஜகதீசர் எவ்வாறு கழித்தார்?
5. ஜகதீசர் மேல்நாட்டுக் கல்வி பயின்ற வரலாறென்ன?
6. ஜகதீசரின் ஆராய்ச்சியின் முதற்படி யாது?
7. தாவரங்களைப்பற்றி ஜகதீசர் கண்டுபிடித்தன யாவை?

## பயிற்சி

1. 'ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டொன்றாகும்' இம் முது மொழியை ஜகதீசர் வாழ்க்கையிலிருந்து விளக்குக.
2. 'ஜகதீசரின் உலகப் புகழ்பெற்ற ஆராய்ச்சிகட்கு அவர்தம் தந்தையாரே காரணம்.' இதனை விளக்கி ஒரு கட்டுரை எழுதுக.
3. ஜகதீசரின் தாவரம் பற்றிய ஆராய்ச்சியின் அதிக மான கருத்துக்களை ஆசிரியரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுக.

## இலக்கணம்

(1) கீழ்வருஞ் சொற்களைச் சேர்த்தெழுது :—

மூன்று + பத்து + ஐந்து
இரக்கம் + காட்டும்
நம்பிக்கை + ஊட்டும்
அருள் + உள்ளம்
நாடு + அறிஞர்.

(2) ஸெயின் சேவியர் பள்ளியிற் சேர்க்கப்பட்டார் ; முழங்கால்களால் சேணத்தை இறுகப் பற்றிக் கொண்டார் ;
பல புதிய செடிகளைப் பயிராக்கினார் ;
இவ்வாக்கியங்களிலுள்ள வேற்றுமை யுருபுக்களை யும் அவைகள் எவ்வெவ் வேற்றுமைகளைச் சாரும் என்பதையும் எழுதுக.

(3) பெயர்ச்சொல், வினைச்சொல்—இவைகளுக்கு இப் பாடத்திலிருந்து இரண்டிரண்டு எடுத்துக் காட்டு தருக.

(4) உடம்படு மெய் என்றால் என்ன ?

# 6. காஷ்மீரம்

ஆண்டுதோறும், ஆண்டுத் தேர்வுக்குப் பின்னர் விடுமுறை விடப்படுகிறது. பள்ளிக்கூடங்களில் கோடை காலத்திலேயே விடுமுறை விடப்படுவதால், அது கோடை விடுமுறை என்றழைக்கப்படுகிறது. அவ்விடுமுறை நாட்களைக் கழிப்பதற்குப் பலர் பல இடங்களுக்குச் செல்லுகிறார்கள். சில மாணவர் தங்கள் சொந்த ஊர்களுக்குச் செல்லுகிறார்கள். சிலர் உறவினர் ஊருக்குச் செல்லுகிறார்கள். ஆசிரியர்களிற் சிலர் குற்றாலம் போன்ற கோடைக்காலத் தங்குமிடங் கட்குச் செல்லுகிறார்கள். சிலர் புராதன நகரங்கள், மலைகள் முதலிய விடங்கட்குச் செல்லுகிறார்கள். அதிக செல்வமுடையவர்கள் காஷ்மீருக்குச் செல்லுகிறார்கள்.

காஷ்மீரம் நம் இந்தியாவின் வடமேற்கில் இமயமலைச் சரிவில் அமைந்துள்ளது. இது கடல் மட்டத்திலிருந்து ஏறக்குறைய ஆறாயிரம் அடி உயரத்தில் உள்ளது. ஜீலம் நதி பாயும் மிகப் பரந்ததொரு சமவெளியே உலகப்புகழ் பெற்ற காஷ்மீர் நாடாக உள்ளது. இதில் நாற்புறமும் உயர்ந்த மலைகளைக் கொண்டுள்ள காஷ்மீர் பள்ளத்தாக்கு சிறந்த இடமாகும். இது எண்பது மைல் நீளமும், சுமார் இருபத்தைந்து மைல் அகலமும் உள்ளதாயிருக்கிறது. இதன் வடக்கில் உள்ள இமயமலைப் பகுதியில் உயர்ந்த பல சிகரங்கள் உள்ளன. அவற்றுள் மிக உயர்ந்த சிகரம் ‘காட்வின் ஆஸ்டின்’ என்பதாகும். இதன் உயரம் 28250 அடியாகும். இதைவிட உயர்ந்த சிகரம் எவரஸ்டு தான். இச் சமவெளியின் நாற்புறமும் அடுக்கடுக்கான

மலைத் தொடர்கள் உள்ளன. அவையாவும் பனி படர்ந்து மிக அழகிய காட்சியைத் தருகின்றன. இச் சமவெளி செழிப்பும், இயற்கை எழிலும் பெற்று விளங்குகின்றது.

காஷ்மீரைப் பற்றி வழங்கும் புராதனமான ஒரு கதை உண்டு. அது வருமாறு :—இப்போது காஷ்மீரமாக உள்ள பகுதி முழுவதும் ஒரு காலத்தில் ஒரு பெரிய ஏரியாக இருந்ததாம். அவ்வேரியில் கொடிய வேதாளம் ஒன்று வசித்து வந்ததாம். அவ்வேதாளம் அருகிலிருக்கும் ஊரிலுள்ள மக்களையெல்லாம் கொன்று தின்று வாழ்ந்தது. அவ்வேதாளத்தால் அங்கிருந்த மக்கள் அடைந்த துன்பம் பொறுக்க முடியாததாயிருந்தது. காசியபர்என்னும் முனிவர் ஒருவர் அம்மக்கள் படுந்துன்பத்தைப் பொருதவராகி அவர்களிடம் மிகவும் இரக்கங்கொண்டார். அம்மக்களது துன்பத்தைப் போக்குமாறு சரிகா (Sharika) என்னும் இறைவியை நோக்கித் தவஞ்செய்தார். அத் தெய்வம் அவர் செய்த கடுந்தவத்தை ஏற்றுக் கொண்டு, ஒரு மைனுவாக வடிவெடுத்து வந்தது ; ஒரு சிறு கூழாங்கல்லை அவ்வேரியிற்போட்டது. அச்சிறு கல் ஒரு பெரு மலையாக வளர்ந்தது ; வேதாளத்தை அதன் கீழ் ஆழ்த்தி நசுக்கிக் கொன்றுவிட்டது. காசியபர் அம்மலையை ஓரிடத்தில் பிளந்து, அதன் வழியே ஏரித் தண்ணீர் முழுவதும் வடிந்து போகும்படிச் செய்தார். அம் முனிவரது தவ வலிமையால் அந்நாட்டு மக்கள் இனிதே வாழலாயினர். அதனுல் அந்நாடு ‘ காசியபமீர ’ என்று அவர் பெயராலேயே வழங்கப்பட்டது. அப் பெயரே பிற்காலத்தில் காஷ்மீர் என்று ஆயிற்ரும்.

இந்நாட்டைப் பல இந்து, முகம்மதிய மன்னர்கள் ஆண்டு வந்திருக்கின்றனர். இந்நாட்டை யாண்ட இந்து மன்னர்களில் லலிதாதித்யன் என்பவன் மிகவும் சிறந்தவன். இவன் பக்கத்து நாடுகளான பஞ்சாப், மத்திய

ஆசியா முதலியவற்றின் பகுதிகளை வென்று தன் நாட்டுடன் சேர்த்துக் கொண்டான். இவனே மிகப் பழமையானதும், இப்போது அழிவுற்று, காஷ்மீர் நாட்டின் கலைத்திற னுக்கு எடுத்துக்காட்டாக விளங்குவதுமான மருதாந்தர் (Martand) கோயிலைக் கட்டியவன். கி. மு. மூன்ரும் நூற்ருண்டில் அசோகன் இந்நாட்டைக் கைப்பற்றினன். அவனே காஷ்மீரின் தலை நகரமாகிய ஸ்ரீநகரை ஏற்படுத்தி ஞன். அசோகன் காலத்தில் தான் அங்கு புத்த மதம் பரவலாயிற்று. அங்கங்கே பற்பல மடங்களும் கட்டப் பட்டன.

பதினைந்தாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் சுல்தான் ஜைனுல் அப் தின் (Sultan Zainul-ab-din) என்பான் காஷ்மீரை ஆண்டிருந்தான். அவன் மிகவும் பொறுமையும், பிழை பொறுக்கும் தன்மையும் உடையவன். அதன் பின் பதினரும் நூற்ருண்டில் அக்பர் அந்நாட்டைக் கைப் பற்றிக் கொண்டார். அது முதல் இஸ்லாம் மதமும் அங்கு பரவத் தொடங்கியது. ஜஹாங்கீரும் அவர் குமாரஞன ஷாஜஹானும் இந்நாட்டின்மேல் மிக்க பற்றுள்ளங் கொண்டிருந்தனர். ஆதலின் ஆண்டின் பெரும்பகுதியை இங்கேயே கழிப்பது வழக்கம். அவ்வாறு அவர்கள் அங்கே தங்கியிருந்ததால் கண்ணுக்கினிய காட்சிதரும் பல நந்த வனங்களை ஏற்படுத்தினர். அவையெல்லாம் இன்று மொக லாயர் தோட்டங்கள் (Moghul Gardens) என்ற பெய ரொடும் சிறந்து விளங்குகின்றன.

இந்நாட்டு மக்களிற் பெரும்பாலரும் ஒரே இனத்த வரேயாவர். இந்நாட்டுத் தட்ப வெப்பம் மிகவும் நன்ருயி ருப்பதால் இவர்கள் உயரமாயும், அழகாயும் இருக்கின்ற னர். யாவரும் சிறந்த பழக்க வழக்கமுடையவர்கள். பொறுத்துக்கொள்ளும் தன்மையும், விட்டுக் கொடுக்கும்

உயர்ந்த மனப்பான்மையும் உடையவர். அழகுபடப் பேசுந் திறமை வாய்ந்தவர்கள். இயற்கை யழகை நாடோறும் பருகுபவர்களாதலின், அழகிய நிறங்களில் மிக்க விருப்புடையவர்கள். ஆதலின் பல வண்ணங்களமைந்த பொருள்களை இயற்றுவதில் கைதேர்ந்தவர்களாயுள்ளனர்.

காஷ்மீரம் சிறந்த இயற்கை வனப்புடையது. ஆதலின் அந்நாட்டு மக்களை அந்த இயற்கை எழிலில் ஈடுபடச் செய்து விட்டது. ஆதலால் அவர்கள் அழகை மிகுதியும் விரும்புகின்றனர். அதன் பயனாகத் தங்கள் கையிற் கிடைக்கும் எப்பொருளையுந் தங்கள் தொழில் திறனைக் கொண்டு அழகுமிக்க சிறந்த பொருள்களாக மாற்றி விடுகின்றனர். அந்நாட்டு மக்களின் தொழில் திறனையும், கலைச் செல்வத்தையுங் காணவேண்டுமானால் அந்நாட்டுச் சால்வைகளே தக்க சான்று பகர்ந்து நிற்கும். அந்தச் சால்வைகள் மிகவும் உயர்ந்த ஆட்டு ரோமங்களினால் நெய்யப் பெற்றவை. அவ்வாறு நெய்யப்பெற்ற பிறகே அதில் பலவித வேலைப்பாடமைந்த, கண்ணைக் கவரும், கலைத் திறமையை விளக்கும் பூ வேலைகளைச் (Embroidery) செய்து முடிக்கின்றனர். இவை முற்காலத்தில் ஐரோப்பா முதலிய மேல் நாடுகளில் மிகவும் விரும்பி வாங்கப் பெற்றன. இப்போதும் அப்படியேதான். ஆனால் இந்தியாவிலேயே அவற்றிற்கு அதிக தேவை ஏற்பட்டுள்ளது. இத்துடன், மரவேலை, பலவித உலோக வேலைகள், தையல் வேலை, பூ வேலை, நெசவு முதலிய பல தொழில்களும் இங்கு நடைபெறுகின்றன.

காஷ்மீரம் மிகவும் செழிப்பான பிரதேசம். ஆதலால் அங்கு நெல்லும் கோதுமையும் மிகுதியாக விளைகின்றன. நல்ல தட்ப வெப்பமும், நீர்வசதியும் இருப்பதால் எல்லா வகையான காய்கறிகளும், இனிய சுவை மிக்க பழவகை

களும் மிகுதியாகக் கிடைக்கின்றன. பழங்களும், காய்கறிகளும் வெளிப்பிரதேசங்களுக்கு மிகுதியாக அனுப்பப்படுகின்றன. மலை நாடாயிருப்பதுடன், நிலவளமும் இருப்பதால் கண்ணுக்கினிய பல வண்ணங்களுடைய, நறுமணம் நிறைந்த மலர் வகைகள் ஏராளமாகப் பயிராகின்றன. நாடு முழுவதும் மலைப்பகுதியாகவும் அடர்ந்த காடுள்ளதாயும் இருப்பதால் பல வகையான மிருகங்களும் அதிகமாகக் காணப்படுகின்றன. ஜீலம் நதிக்கரையில் உயர்தர உரோமந்தரும் ஆடுகளும் அழகிய மான்களும் மிக்குள்ளன.

காஷ்மீரத்தில் உள்ள மக்கள் நெடுங்காலமாகவே நல்ல பண்பாடு உள்ளவர்களாக இருந்திருக்கிறார்கள். இந்தியாவிலிருந்த எல்லா மதங்களும் அங்கு இடம் பெற்றிருந்திருக்கின்றன. இந்துமதம், பௌத்தமதம், முகம்மதிய மதம் ஆகியவை பண்டு தொட்டே இருந்திருக்கின்றன. பிற்காலத்தில் கிறிஸ்தவ மதமுங்கூடப் பரவியுள்ளது. அந்நாட்டில் சிற்பம், ஓவியம் முதலிய கலைகள் செழித்திருந்தன. அங்குள்ள கோயில்கள், மடங்கள், மசூதிகள் ஆகியவைகளே இவற்றை நன்கு விளக்குகின்றன. அக்கட்டிடங்களெல்லாம் கட்டப்பெற்றுப் பல நூற்றுண்டுகளாகியுங்கூட இன்றும் பெரும்பாலன நன்னிலையிலேயே இருக்கின்றன. அங்குள்ள கடும் வெப்பம், தாங்குதற் கரிய குளிர், மழை, பனி, புயல் இவற்றையெல்லாம் வென்று அவை நிலைபேறுயுள்ளன. அதிலிருந்தே அக்காலத்திய வேலைத்திறனையும், உறுதிப்பாட்டையும் நன்குணரலாம். ஸ்ரீநகரத்திலுள்ள பழமையான சங்கராச்சாரியார் கோயிலொன்றே அம்மக்களது சிற்ப ஓவியக் கலைத் திறனை விளக்கப் போதிய சான்றாகும்.

ஸ்ரீ நகரம், காஷ்மீரத்தின் தலைநகரமாகும். இந்நகரம் இரு மலைகளுக்கிடையே அமைந்து இயற்கை எழில்

நிறைந்து விளங்குகின்றது. கி. மு. மூன்றும் நூற்றுண்டில் காஷ்மீரத்தை அசோகர் கைப்பற்றியபோது அவரால் உண்டாக்கப்பட்டது இந்நகரம். ஏறக்குறைய இருநூறுயிரம் மக்கள் இதில் வாழுகிறுர்கள். இது காஷ்மீருக்குத் தலைநகரமாயிருப்பதன்றி நடுநாயக நகரமாகவும் அமைந்



ஸ்ரீநகரின் ஒரு பகுதி

துள்ளது. அந்நாட்டுப் பண்பாடு, கலைத்திறன் ஆகிய எல்லாவற்றையும் அந்நகரத்திலேயே காணலாம். காஷ்மீரத்தின் உயிர் நாடியாகிய ஜீலம் நதி இந்நகரின் நடுவே ஓடி, நகரத்தையே இரண்டாகப் பிரித்து விடுகிறது; அத்துடன் நகரின் அழகினையும் அதிகரிக்கச் செய்து விடுகிறது. இந் நதியால் பிரிக்கப்பட்ட நகரம் ஆங்காங்கே ஆற்றின் குறுக்கே கட்டப்பட்டுள்ள ஏழு பாலங்களால் இணைக்கப்படுகின்றது. இந்த நதியில் படகில் சென்றால் நகர் முழுவதையும் அதன் இயற்கை எழிலுடன் கண்டு களிக்கலாம். செல்லும்போதே இருமருங்கிலும் உள்ள மாடமாளிகைகள், அரசாங்க அலுவலகங்கள், கோயில்கள், மடங்கள், மசூதிகள் முதலிய எல்லாவற்றையும் ஒருசேரக் காணலாம். இத்தகைய காட்சி வேறெந்த நகரிலுங் காணவியலாத தொன்றாகும்.

இந்நகரிலுள்ள சங்கராச்சாரியார் கோயில் மிகப் புராதனமான ஒரு கற்கோயில்; அந்நாட்டு மக்களின் கலைத்திறனை எடுத்துக் காட்டுவது. இக்கோயில் ஆயிரம் அடி உயரமுள்ள ஒரு மலையுச்சியிற் கட்டப்பட்டுள்ளது. ஆதலால் இங்கிருந்து பார்த்தால் நகரம் முழுவதும் தெரியும். இந்நகரில் சிறந்ததொரு பொருட்காட்சிச்சாலை யுள்ளது. இதில் அந்நாட்டு மக்களின் பழமையான பண்பாடு, கலைத்திறன் முதலியவற்றை விளக்கும் பொருள்கள் யாவும் மிகவும் பத்திரமாகப் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன. இது ஜீலம் நதியின் இடது கரையில் அமைந்துள்ளது.

அக்பர், ஜஹாங்கீர், ஷாஜஹான் முதலிய மொகலாய மன்னர்கள் இங்கு பல தோட்டங்களை ஏற்படுத்தினார்கள் என்று பார்த்தோம். அவையெல்லாம் இந்நகருக்கருகிலேயே அமைந்துள்ளன. நிஷாத் பாக், ஷாலிமார் பாக், நஸீம் பாக் முதலியன அந்நந்தவனங்களுட் சில. இவையாவும்

மலைப்பகுதியில் அமைந்துள்ளதால் இயற்கை யெழிலும் செயற்கையழகும் ஒரு சேரப் பொருந்தப் பெற்றுக் கண் கொள்ளாக் கவின் கொண்டு விளங்குகின்றன. நந்த வனங்களிலமைந்துள்ள நீரூற்றுக்கள் இவற்றின் அழகி னுக்கு அழகு செய்வதாயுள்ளன.



தால் ஏரி

நகரிலிருந்து கொஞ்ச தூரத்தில் தால் ஏரி (Dal Lake) என்னும் மிகப்பெரிய ஏரியொன்றுள்ளது. இது ஐந்து மைல் நீள்மும், இரண்டு மைல் அகலமும் உள்ளது. நாற்புறத்திலும் அடுக்கடுக்காக உயர்ந்துள்ள மலைத்தொடர்களாற் சூழப் பெற்றிருக்கின்றது. அம்மலைத் தொடர்கள், நீர் மட்டத்தி லிருந்து நான்கு, ஐந்து ஆயிரம் அடிவரையும் உயர்ந்துள் ளன. அங்குள்ள நந்தவனங்களிலுள்ள நீரூற்றுக்களி லிருந்து வரும் நீர்ப்பெருக்கு முழுவதும் இவ்வேரியிலேயே வந்து சேருகின்றது; அங்கங்கே தாமரைபடர்ந்திருப்பது ஏரிக்கு அதிக அழகைத் தருகின்றது. இங்கு நீந்துதல், தண்ணீரில் விளையாடும் போலோ விளையாட்டு, மீன் பிடித் தல் முதலியன சிறந்த பொழுது போக்குகளாம். இதனை யடுத்துச் சிறந்த ஆரோக்கிய வாசஸ்தலங்கள் அமைந்துள் ளன. மேலும் அங்கு ஒரு மிகப்பெரிய நல்ல தண்ணீர் ஏரியும் உள்ளது. ஜீலம் நதி அதில் உட்புகுந்து வருவதாலேயே அது அவ்வாறுள்ளது. இவ்வாறு காஷ்மீர் பல வகையான எழில்களையும் பெற்றுச் சிறந்து விளங்குகின்றது.

இங்கு செல்லுவோர் முதலில் இயற்கைக் காட்சியில் ஈடுபட்டுத் திளைக்கலாம். ஏரியிலும், ஆற்றிலும் படகு களிற் செல்லலாம்; படகிலேயே தங்கியிருப்பதாயினும் அதற்கென் றமைக்கப்பெற்ற படகு வீடுகளிலேயே தங்கி யிருக்கலாம். ஆராய்ச்சிக்காரர்கள் அங்குள்ள கோயில் முதலியவற்றை ஆராய்ந்து வரலாறு, சிற்பத்திறன் முதலிய வற்றை அறிந்து மகிழலாம். இயற்கையறிவுக் கலைஞர்கள் அங்குள்ள பலவண்ண மலர்ச்செடிகள், கொடிகள், மரங்கள் முதலியவற்றைக் கொண்டு ஆராய்ச்சி நடத்தி மகிழலாம். நுண்கலைவல்லவர்கள் அங்கு நெய்யப்படும்—பின்னப் படும்—சால்வைகள், விரிப்புக்கள், உலோக வேலைப்பாட மைந்த பொருள்கள் முதலியவற்றை ஆராய்ந்தறிந்து மகிழ



ஸ்ரீநகரில் ஓர் இயற்கைக் காட்சி

லாம். விளையாட்டில் விருப்புள்ளோர் அங்குள்ள போலோ முதலிய விளையாட்டுக்க ளயர்ந்து மகிழலாம். இவை எதனை யும் விரும்பாதவர்கூட அங்குள்ள ஆரோககிய வாசஸ் தலங்களில் தங்கி உடல் வலிவு பெறலாம். இத்துணைச் சிறப்பு வாய்ந்த காஷ்மீரம், ஒரு கோடை காலத் தங்கு மிடமாகவோ அல்லது விடுமுறைக்குச் சென்று தங்குமிட மாகவோ இருப்பதில் என்ன வியப்புள்ளது! இது 'பூலோக சொர்க்கம்' என்றும் 'ஆசியாக் கண்டத்தின் விளையாட் டிடம்' என்றும் அழைக்கப்படுவதிலும் ஒன்றும் வியப் பில்லை யல்லவா!

## கேள்விகள்

1. விடுமுறையை எங்தெந்த வகையிற் கழிக்கலாம் ?
2. காஷ்மீரின் இயற்கை யமைப்பென்ன ?
3. காஷ்மீரைப்பற்றி வழங்கும் புராதனக் கதை யாது ?
4. காஷ்மீரை யாண்ட மன்னர்களில் நாமறிந்தவர் யாவர் ?
5. காஷ்மீரில் பல சமயங்களும் இருந்தன வென்பதை எவ்வா றறிகிறோம் ?
6. காஷ்மீர் நாட்டு மக்களின் சிறப்பியல்புகள் யாவை ?
7. ஸ்ரீநகர் பற்றி நாமறிவன யாவை ?
8. காஷ்மீரிலுள்ள பெரிய ஏரியின் சிறப்பென்ன ?
9. காஷ்மீருக்கு வழங்கும் பிற பெயர்கள் யாவை ? அவை பொருந்துவ தெவ்விதம் ?

## பயிற்சி

1. தேசப்படத்திலிருந்து காஷ்மீர் இருக்குமிடம், இயற்கையமைப்பு முதலியவற்றை அறிந்துகொள்க.
2. காஷ்மீருக்குப் போய் வந்தது போன்று ஒரு கட்டுரை எழுதுக.
3. 'காஷ்மீரின் இயற்கை எழில்' என்னுந் தலைப்பில் ஒரு கட்டுரை எழுதுக.

## இலக்கணம்

(1) 'காஷ்மீர் இந்தியாவின் வடமேற்கில் இமயமலைச் சரிவில் அமைந்துள்ளது': இச் சொற்றொடரில் அமைந்துள்ள வேற்றுமைகளைக் குறிக்க.

(2) மரம்—மறம் ; அரம்—அறம் ; இரக்கும்—இறக்கும் ; இவைகளுக்குப் பொருள் தருக.

(3) அ+ஏரி; இள+அரசு; இவைகளைச் சேர்த்தால் அங்கு தோன்றும் புதிய எழுத்திற்கு என்ன பெயர்?

(4) நாடு, ஆறு, செல்லு, புழு, மலை, அரசு—இவைகளில் குற்றியலுகரத்தையும்; முற்றியலுகரத்தையும் பிரித்து எழுது. அல்லன இருப்பின் அதையும் காட்டு.

(5) காஷ்மீரம் என்ன பெயர்?

(6) நந்தவனங்களை ஏற்படுத்தினர்.
காஷ்மீரைக் கைப்பற்றினான்.
இவ்விரண்டாம் வேற்றுமைகள் எவ்வெப் பொருள்களில் வந்துள்ளன?

(7) மான்; ஆடு—இவைகளுக்கு ஆண்பாற் பெயரும், பெண்பாற் பெயரும் தருக.

(8) போலி என்றால் என்ன?

(9) வினை முற்று என்றால் என்ன? அதற்கு நான்கு உதாரணம் தருக.

(10) மரங்கள் வளர்ந்தன: இது என்ன வினை? இதற்கு வேறு வினை தருக.

## 7. கம்பரும் சடையப்பவள்ளலும்

கம்பர் தமிழ் நாட்டு வரலாற்றில் அழியாத இடம் பெற்று விட்டார். கம்பரைப்பற்றியோ அவர் எழுதிய இராமாயணத்தைப்பற்றியோ அறியாத தமிழர்கள் இருக்க மாட்டார்கள். 'கம்பன் பிறந்த தமிழ்நாடு' என்று பாரதியார் புகழ்ந்தபடி அக்கம்பர் பிறந்ததனாலே தமிழ்நாட்டின் புகழ் உயர்ந்தது என்னலாம். உலகம் போற்றும்படியான ஒரு பெரிய இலக்கியத்தைச் செய்த சிறப்புத்தான் அவரை என்றும் வாழச் செய்கிறது.

வடமொழியில் வால்மீகி என்ற பேரறிஞர் இராமனது வரலாற்றை நன்கு விளக்கமாக எழுதியிருக்கிறார். அதைத் தமிழில் மொழி பெயர்க்கின்ற வாய்ப்பு கம்பருக்குக் கிடைத்தது. அதை வெறும் மொழிபெயர்ப்பு நூலாக மட்டும் ஆக்காமல், அக்கதையைக்கொண்டு, தமிழ்நாட்டுப் பண்பாடு, வாழ்க்கைமுறை முதலியவற்றிற்கு ஏற்பப் புதிய தனி இலக்கியம் என்று சொல்லும்படி அழகாகப் பாடிவிட்டார் கம்பர். அந்தப் பாடல்கள்தான் அவரை என்றும் வாழச்செய்யும் சாவாமருந்தாக அமைந்துவிட்டன.

கம்பரது இளமைப் பருவத்தைப் பற்றிப் பல கதைகள் நாட்டில் வழக்கத்தில் உள்ளன. அவர் திருவெண்ணெய்நல்லூர் சடையப்பவள்ளலால் ஆதரிக்கப்பெற்றவர் என்பது அவர் இராமாயணத்தாலேயே விளங்குகிறது. கம்பர் சோழ மன்னனிடத்தும் சேர மன்னனிடத்தும் கூடச் சிற்சில ஆண்டுகள் தங்கி வாழ்ந்தார் என்று கதைகள் வழங்குகின்றன. அவர் அவ்வப்போது பாடியதாகத் தனிப்பாடலில் வரும் பாடல்களில் சில அவரது வாழ்க்கையை ஓரளவு காட்டுகின்றன. என்றாலும் அவரது இராமாயணத்தைக்கொண்டு நோக்கும்போது அவருக்கும் சடையப்பவள்ளலுக்கும் இருந்த தொடர்பே நன்கு விளக்கும். சடையப்ப வள்ளலையும், அவரது குடியையும் பற்றிப் புகழ்ந்ததுபோன்று வேறு எந்த மன்னரையும் அவர்தம் இராமாயணத்தில் கம்பர் புகழவில்லை.

கம்பரை இளமையில் ஆதரித்தவர் சடையப்பவள்ளல் ஆவர். அவர் ஊர் திருவெண்ணெய்நல்லூராகும். அது தற்போது தென்னார்க்காட்டுக் கோட்டத்தே அதே பெயரோடு விளங்குகிறது. அந்த ஊரில் சிறந்த வேளாண் குடியிலே பிறந்தவர் சடையப்பவள்ளல். அவர் காலத்தில் வாழ்ந்த ஒரு புலவர் பாடலால் அவர் தந்தையார் பெயர்

சங்கரமுதலியார் என்று தெரிகிறது. சடையப்பர் இளையவராய் இருக்கும்போதே கம்பர் அவர் வீட்டுக்கு வந்துவிட்டதாகக் கூறுவர். அவர் பள்ளிக்குச் செல்லும்போது கம்பர் அவருடைய நூல்களை எடுத்துச் செல்லும் பணியில் ஈடுபடுத்தப்பட்டதாகக் கதையுண்டு. பின் பள்ளிக்கூடத்தின் பக்கத்தே இருந்த கம்பங் கொல்லையைக் காத்த காலத்தில் காளியின் வரம்பெற்ற காரணத்தால் 'கம்பன் புலவன் ஆனன்' என்று கூறுவர். பின் இளமையில் பழகிய அதே நட்புமுறையில் கம்பர் சடையப்பவள்ளலோடு நெருங்கிப் பழகி, பலகாலம் அவரோடு வாழ்ந்தார் என்று கூறுவர்.

சடையப்பர் தன் பிற்காலத்தில் பல புலவர்களை ஆதரித்திருக்கவேண்டும். வந்த விருந்தினரை வரவேற்று உபசரித்து வழிகூட்டி அனுப்பிவிட்டு, பின் எந்த விருந்து வருமோ என்று எதிர்நோக்கி ஆவலோடு காத்துக்கொண்டிருந்தவர் அவர் என்பது இரண்டொரு பாடல்களால் விளங்குகின்றது. அவர் வீட்டை எப்போதும் மூடியது கிடையாதாம். எந்த வேளையிலும் விருந்தாளிகள் வருவார்கள் என்று பணியாளர்கள் திறந்த கதவோடு எதிர் நோக்கியிருப்பார்கள் போலும். வருந்தி வருகின்ற மக்களை ஏற்றுக்கொண்டு, அவர்களுக்கு உண்டான துன்பங்களைப் போக்கி, அஞ்சலென்று அடைக்கலம் தந்து ஆதரிக்கின்ற சிறந்த பண்பாடு அவரிடம் பொருந்தியிருந்தது. '**அடையா நெடுங்கதவும் அஞ்சலென்ற சொல்லும் உடையான் சடையப்பன் ஊர்**' என்று அவரை ஒரு புலவர் பாராட்டியுள்ளமையால் சடையப்பரது கொடைத்தன்மை நன்கு விளங்குகின்றதல்லவா!

கம்பர் இவரது கொடைத்தன்மையைப் பலவாறு பாராட்டியுள்ளார். இவரது வேளாண்தொழிலைப் பார்த்து

மகிழ்ந்தபின்தான் கம்பர் ஏர் எழுபது பாடியிருக்கவேண்டும். சடையப்பர் நிறையப் பண்ணைகளை வைத்து உழவுத் தொழிலை நடத்திவந்தார் என்பது 'பண்ணைவெண்ணைச் சடையன்' என்ற தொடரால் நன்கு தெரிந்துகொள்ளலாம். கம்பர் சடையப்பரது அருங்குணங்களைப் பாராட்டிய தோடல்லாமல், அவரது உழவுத் தொழிலையே சிறப்பித்துப் பாடக் கருதித்தான் 'ஏர் எழுபது' என்ற நூலைப் பாடினார் என்பது பொருந்தும்.

கம்பர் இவரது கொடைத் திறனையும் இவரை வந்து பாடிய, வறுமையில் வாடிய மக்களது பசி நீக்கத்தையும் ஒரு இடத்தில் நன்கு எடுத்துக் காட்டுகிறார். நாகபாசப் படலம் என்பது கம்ப இராமாயணத்து யுத்த காண்டத்தில் வருகின்ற ஒரு பகுதி. அதில் இராவணன் மகனாகிய இந்திரசித்து 'நாகபாசம்' என்ற ஒரு அம்பை பகைவர் மேல் ஏவுகின்றான். அதனால் அனைவரும் கட்டுண்டு வீழ்ந்துவிட்டனர். பின் சஞ்சீவியால் அவர்களது மயக்கம் நீங்கப்பெறுகிறது. இந்தக் காட்சி கம்பருக்கு சடையப்பர் முன் வறுமையால் வாடிவந்தோரது பசியின் நீக்கத்தை நினைவூட்டுகிறது. சடையப்பரை நாடிவந்த நல்ல நூல் பயின்ற புலவர்களிடத்தும், இனிய சொற்பெருக்காற்றும் அறிஞர்களிடத்தும், எவ்வாறு அவர் தம் துன்பங்கலந்த பசி நீங்கப் பெறுமோ அதுபோன்று, அந்த அரக்கனாகிய இந்திரசித்துவின் நாகபாசமும் அகன்றது என்று அழகாகக் கூறுகின்றார்.

'தேசங்கலந்த மறைவாணர் செஞ்சொல்
அறிவாளர் என்றிம் முதலோர்
பாசம் கலந்த பசிபோல் அகன்ற
பதகன் துரந்த உரகம்'

என்பது கம்பராமாயணப்பாட்டு. இதனால் கம்பர் எவ்வாறு

சடையப்ப வள்ளலோடு கூடவே இருந்து, அவர் புலவரையும் பிறரையும் ஆதரித்ததைக் கண்டு மகிழ்ந்தார் என்பது நன்கு தெரிகிறதல்லவா ?

இவ்வாறு ஏழைகளோடு ஏழையாக இருந்து, அவர்களது துயரங்களைக் கண்டு அவற்றை நீக்கிய சடையப்பர் அவர் காலத்து வாழ்ந்த தமிழ்நாட்டு வேந்தர்களாலும் நன்கு போற்றப்பட்டார் என்று அறிகின்றோம். ஒரு காலத்தில் தமிழ்நாட்டு மூவேந்தர்களையும் இவர் விருந்துக்கு அழைத்தாராம். மூவரும் வந்து இவர் அளித்த விருந்தை உண்டு, இவருக்குத் 'திரிகர்த்தராயன்' என்ற சிறப்புப் பெயர் அளித்ததாகவும் ஒரு கதை கூறுகின்றது.

இத்தகைய பேரும் புகழும் சீரும் சிறப்பும் வாய்ந்த சடையப்பவள்ளல் அளித்த உணவே கம்பரை இராமாயணம் பாடவைத்தது என்பதை அவரே எடுத்துக் காட்டுகின்றார். கம்பர் இராமாயண அரங்கேற்றம் திருவரங்கத்தில் நடைபெற்றதாகச் சிலர் கூறுவர். எனினும் 'இராமாவதாரப்பேர்......மாக்கதை சடையன் வெண்ணெய் நல்லூர் வயின் தந்ததே' என்று கம்பரே கூறியதனால் அவ்வரங்கேற்றம் திருவெண்ணெய்நல்லூரிலேயே நடைபெற்றிருக்க வேண்டும் என்று முடிவு செய்வது பொருத்தமாகும்.

இராமாயண அரங்கேற்ற காலத்து நடைபெற்றதாக வழக்கத்தில் உள்ள ஒரு கதை, கம்பர் சடையப்பரிடம் கொண்டிருந்த மதிப்பை நன்கு விளக்குவதாகும். இராமாயணத்தில் கம்பர் சடையப்பரை அடிக்கடி புகழ்ந்து பாடியிருந்தாராம். அரங்கேற்றத்துக்கு வந்திருந்த பலரும் கடவுள் அவதாரமாகிய இராமனது வரலாற்றைப் பாடும் நூலில் இவ்வளவு அதிகமாக மனிதனைப் புகழ்தல் தக்கது அன்று என்று கூறினார்களாம். சுமார் நூறு பாடலுக்கு

ஒருமுறை கம்பர் அவரைப் புகழ்ந்திருப்பார் போலும். சபையிலுள்ளோர் ஆயிரம் பாட்டுக்கு ஒருமுறை புகழ்ந்தால் போதும் என்று கூறினார்களாம். உடனே கம்பர் சபையை நோக்கி 'நான் சடையப்பரைப்போல் நூற்றுக்கு ஒருவராவது உலகில் இருப்பார்கள் எனக்கருதி நூற்றுக்கு ஒன்றுல் புகழ்ந்தேன். நீங்கள் கூறுவதன்படி சடையப்பரைப் போன்று ஆயிரத்துக்கு ஒருவர்தான் இருப்பார்கள் என்று தெரிகின்றது. எனவே உங்கள் வாக்குப்படி அவர் புகழ் இன்னும் மேலோங்குகிறது' என்று சொல்லி அவ்வாறு ஆயிரத்துக்கு ஒருமுறை புகழ்ந்தாராம். இது கதையாக இருந்தாலும் நடந்ததாக இருந்தாலும் கம்பர் சடையப்பரிடம் கொண்ட மதிப்பையல்லவா இது எடுத்துக் காட்டுகிறது.

ஒரு காலத்தில் கம்பர் வீட்டுக்குச் சடையப்பவள்ளல் சென்றுராம். கம்பர் தன்மகன் அம்பிகாபதிக்குத் திருமணம் செய்தார். அதற்கு நாட்டிலுள்ள பல மன்னர்களும் புலவர்களும் மற்றவர்களும் திரளாக வந்திருந்தார்கள். வந்தவர்களை வரவேற்று உபசரிப்பதில் முனைந்திருந்த கம்பர் பலருக்கு இடையில் சடையப்பர் வந்ததைக் கவனிக்கவில்லை போலும். வந்தவர் எங்கோ ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டார் போலும். அதைக் கவனித்த அருகிருந்தவர்கள், கம்பரிடம் ஓடிச்சென்று சடையப்பர் வந்து ஒரு மூலையில் உட்கார்ந்திருப்பதைக் கூறினார்களாம். ஆனல் கம்பர் அதற்காக அவசரமோ ஆத்திரமோபடாது, 'நல்லது அங்கேயே உட்காரட்டும். நான் அவரை வைக்கும் இடத்தில் வைக்கிறேன்' என்று கூறினாராம். அதன்படியேதான் உலகமுள்ளளவும் அழியாதிருக்கின்ற தன் இராம காதையில் சடையப்பரை உயர்ந்த இடம் தந்து அதில் இருத்தித் தன்னைப்போல் அவரையும் என்றும் வாழவைத்தார் என்று

தெரிகின்றது. இதுவும் கர்ணபரம்பரைக் கதையாயினும் இதனாலும் கம்பர் சடையப்பரிடம் கொண்டிருந்த அன்பும் மதிப்பும் நன்கு விளங்குகிறதல்லவா !

மேலே கண்ட கதையின்படியே கம்பர் சடையப்பரை வைக்கவேண்டிய உயர்ந்த இடத்தில் வைத்துவிட்டார். இராமாயணத்தில் பத்து இடங்களுக்குமேல் சடையப்பரைப் புகழ்ந்ததோடல்லாமல் இறுதியாக வருகின்ற இராமனது முடிசூட்டு விழாவில் சடையப்பர்தம் குடிப்புகழ் என்றென்றும் விளங்குமாறு அமைத்துத் தம் கவியை முடிக்கின்றார் கம்பர். இராமன் காட்டைவிட்டுப் பதினான்கு ஆண்டுகள் கழித்து நாட்டுக்குச் செல்கின்றான். அங்கு அயோத்தியில் பட்டாபிஷேகம் சிறக்க நடைபெறுகிறது. அவ்விராமனது உயர்ந்த அரியணையை அனுமன் தாங்குகிறான். அங்கதன் உடைவாள் ஏந்தி இராமன் புகழ்பாடி நிற்கின்றான். பரதன் வெண் கொற்றக்குடை தாங்குகின்றான். இலக்குவனும் சத்துருக்கனும் இருபக்கத்திலும் இருந்து சாமரை வீசுகின்றார்கள். பக்கத்தில் சீதையும் வீற்றிருக்கின்றாள். சபை நிறைந்திருக்கின்றது. வசிட்டன் இராமனுக்கு முடி சூட்டவேண்டிய கட்டம் வந்தது. முடியினை நல்லவர் ஒருவர் வாழ்த்தி எடுத்துக் கொடுக்கவேண்டும். அதற்குத் தக்கவர் சடையனது நல்ல பண்புவாய்ந்த குலத்து முன்னோர்களே என்று முடிவு கட்டுகின்றார் கம்பர். அதன் படியே சடையனது குலத்தோர் எடுத்து வாழ்த்திக் கொடுக்க, அந்த முடியை வாங்கி வசிட்டன் புனைந்தான் என்று வைக்கவேண்டிய இடத்தில் கம்பர் சடையப்ப வள்ளலை வைத்துவிட்டார். எனவே இருவரும் இன்றும் வாழ்கின்றனர் ; என்றும் வாழ்வர். கம்பர் பாட்டை நீங்களும் அறிந்துகொள்ளுங்கள். இதோ தருகிறேன்.

'அரியணை அனுமன் தாங்க
அங்கதன் உடைவாள் ஏந்த
பரதன் வெண்குடை கவிக்க
இருவரும் கவரி வீச
விரைசெறி குழலி ஓங்க
வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி'

## கேள்விகள்

1. கம்பர் இராமாயணத்துக்கு முதல் நூலாக அமைந்தது யாது? அதைக் கம்பர் எவ்வாறு மொழி பெயர்த்து எழுதினார்?
2. திருவெண்ணெய்நல்லூர் எங்குள்ளது? அதில் வாழ்ந்த வள்ளல் யார்?
3. கம்பருக்கும் சடையப்பருக்கும் எவ்வாறு தொடர்பு உண்டாயிற்று?
4. சடையப்பர் ஊரின் சிறப்பு யாது? அதனால் சடையப்பர் புகழ் எவ்வாறு விளங்குகிறது?
5. கம்பர் ஏர் எழுபது பாடக் காரணம் என்ன?
6. கம்பர் சடையப்பரது கொடையை எவ்வாறு விளக்குகிறார்?
7. கம்பஇராமாயணத்தில் சடையப்பரைப் புகழ்ந்ததைப் பற்றி வழங்கும் கதை யாது? அதனால் அறிவது யாது?
8. சடையப்பரைக் கம்பர் 'வைக்குமிடத்தில் வைப்பதாக' எங்கு சொன்னார்? அதன் கருத்து என்ன?
9. கம்பர் நன்றியுள்ளவர் என்பதை விளக்குக.

## பயிற்சி

1. கம்பர் கவிபாடும் புலமை பெற்ற கதையை அறிந்து சுருக்கி எழுதுக.
2. சடையப்பரது கொடைச்சிறப்பைப் பத்து வரிகளுள் எழுதுக.

## இலக்கணம்

(1) காணலாம், விளங்குகின்றது, எடுத்துக் காட்டுகின்றது—இச்சொற்களுக்கு ஏனைய காலங்களைக் கூறுக.

(2) வாழ வைக்கும் ;
சாவா மருந்து ;
இங்கு பெயரெச்சம் எது, வினை எச்சம் எது என்பதை எழுதி, ஏன் அப்பெயர் பெற்றது என்பதையும் விளக்குக.

(3) நன்கு, கட்டு, காடு, தந்து—இவைகளுக்குக் குற்றியலுகரத் தொடர்களைக் கூறு.

(4) காரணச் சிறப்புப் பெயர் என்ருல் என்ன ? அதற்கு இப்பாடத்திலிருந்தே ஓர் உதாரணம் தருக.

(5) சென்றுவிட்டார், நடந்தது—இவைகளுக்குப் பகுதியை (முதனிலைச் சொல்) எடுத்துக் காட்டு.

# 8. முன்னேற்றப் பாதை

உலகம் மிக விரைவாக முன்னேறிக் கொண்டு வருகிறது ; ஒவ்வொரு ஆண்டும் முன்னேறிக் கொண்டே வருகின்றது. இதை எல்லோரும் கூறுவர் ; ஒத்துக் கொள்ளுவர், ஆனல் எந்த வகையில், எந்த அளவில், எவ்விடத்தில் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது என்று வின

விஞல் அதற்குச் சரியான விடை கிடைக்காது. சிலர் விஞ்ஞானத்தில் முன்னேறியிருப்பதாகக் கூறுவர் ; சிலர் பொருளாதாரத்தில் முன்னேறியிருப்பதாகக் கூறுவர்; வேறு சிலர் பண்பாட்டில் முன்னேறியிருப்பதாகக் கூறுவர். ஆராய்ந்து பார்க்கின் இவ்வாறு கூறுவதெல்லாம் பொழுது போக்கு வேதாந்தமே யன்றி வேறன்று என்பது விளங்கும். இவர்கள் கூறும் முன்னேற்ற மெல்லாம் மக்கள் தொகையில் மிகக்குறைந்த அளவினர் அடைந்துள்ள முன்னேற்றமே யன்றிப் பிறிதில்லை.

முன்னேற்றம் அடைந்தது உலகம் என்று கூற வேண்டுமாஞல் உலகினரில் பெரும் பான்மையோர் முன்னேற்றம் அடையவேண்டும். அதாவது ஏறக்குறைய உலகமக்களில் எண்பது சதவிகிதமாவது முன்னேற வேண்டும். அப்போது தான் உண்மையிலேயே உலகம், உலகமக்கள்—முன்னேற்றம் அடைந்ததாகக் கூறமுடியும். மக்கள் தொகையில் மிகக் குறைந்த அளவினராயுள்ள, படித்தவர்களும், பணக்காரர்களும், பதவியிலுள்ளவர்களும் மாத்திரம் ஒரு சிறிது முன்னேற்றம் அடைந்து விட்டால் உலகமே முன்னேறி விட்டதாகக் கூறமுடியாது. ஏழை எளியவர்கள் வாழ்க்கையில் முன்னேற்றம் ஏற்படவேண்டும். அவர்கள் வாழ்க்கைத் தரம் உயரவேண்டும் ; அவர்தம் செல்வ நிலை உயர்தல் வேண்டும்; அவர் தம் வாழ்க்கை செம்மை நிலையடையவேண்டும். அப்போதுதான் உலகம் முன்னேறியதாகக் கூறமுடியும்.

நம் நாட்டு மக்களிற் பெரும்பாலோர் யாவர்? எங்குள்ளவர்? என்ற கேள்விகளைக் கேட்டால், பெரும்பாலோர் ஏழைகள், கிராமவாசிகள், என்ற விடை கிடைக்கும். இதன் காரணம் யாது? நம் நாடு கிராமங்களாலேயே ஆகியது. எத்திசை நோக்கிஞலும் கிராமமே காணப்

படும். நகர்ப்பகுதி மிக மிகச் சுருங்கியது. இங்கொன்றும் அங்கொன்றுமாக விரல்விட்டு எண்ணக் கூடிய அளவில் சுருங்கிய எண்ணிக்கை யுடையனவாகவே யுள்ளன. ஆதலால் நம் நாடு முன்னேற வேண்டுமானால், நம் நாட்டுக் கிராமங்கள் முன்னேற வேண்டும்; கிராம மக்களின் வாழ்க்கையில் முன்னேற்றம் ஏற்படவேண்டும். அப்போது தான் நம் நாடு முன்னேற்றம் அடைந்ததாகக் கூற முடியும்.

அவ்வாறாயின் இப்போது உடனடியாகக் கிராமங் களுக்குச் செய்யவேண்டுவன யாவை? அவை எல்லோருக் கும் தெரிந்தது தான். முதலாவதாகக் கிராமத்தை அடை வதற்கு ஒரு செம்மையான சாலை; அங்குள்ளோர் நோயற்று



திருந்திய தெருவும் திருந்தாத தெருவும்

நல்வாழ்வு வாழவும் நோய் வராமற்றடுக்கவும், வந்த நோயைப் போக்கவும் ஒரு மருத்துவசாலை; எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும் எனக்கூறும் முதுமொழியின் பொருளாகிய கல்வி கற்பிக்க ஒரு பள்ளிக்கூடம்; குடிக்க, குளிக்க ஏற்ற நீர்வசதிகள்; இவைகளை முதலில் அமைத்தல் வேண்டும். அடுத்தபடியாக உணவுப்பொருளைப் பெருக்கு தற்கேற்ற விவசாய வளர்ச்சிக்கு வேண்டிய உதவிகளைச் செய்தல். மேலும் மக்கள் அறிவு வளரத்தக்க சாதனங்களாகிய, வாசகசாலை, நூல் நிலையம், வானொலி முதலியவை அமைத்தல்; இவை யாவும் செம்மைபெறச் செய்து விட்டால் நம் நாட்டுக் கிராமங்கள் விரைவில் முன்னேற்றம் அடையும் என்பதில் ஐயமில்லை.

இவ்விதம் கிராமங்கள் முன்னேற்றம் அடைவதற்குச் செய்யக் கூடியன யாவை? அவை செய்து முடிக்கப் பெறும் வகைகள் யாவை? இது போன்ற செயல்களையெல்லாம் அரசாங்கத்தாரே செய்து முடித்தல் வேண்டும் என்பர். ஆனால் அது சரிதானா என்பது சிந்திக்கத்தக்கது. கடந்த முப்பதாண்டுகளாக அரசியலார் இம்முயற்சியில் ஈடுபட்டிருந்தனர். ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு அரசாங்க இலாகாவை அச் செயலை மேற்கொள்ளச் செய்தனர். அவர்களும் தக்க வகை முயன்றனர். எனினும் எந்த விதமான பயனும் ஏற்படவில்லை. பொருள் செலவழிந்ததைத் தவிர வேறெவ்வித நலனுங் காணமுடியவில்லை.

இவ்வாறு முப்பதாண்டாக, மிக்க பொருட் செலவு செய்து, அரசாங்கத்தார் முயன்றும் பயன் காண முடியாததேன்? அதற்கு மக்கள் ஒத்துழைப்பு இல்லாமையே காரணமாகும். அரசாங்க அதிகாரிகள் மாத்திரம் இவ்வேலையை மேற்கொண்டதால் அவர்கள் தம் போக்கில்—

அரசாங்க அதிகாரத்தின் பலத்தை வைத்துக்கொண்டு— காரியங்களை நடத்தி வந்தார்கள். தாங்கள் எந்தக் காரியத்தை யாருக்காகச் செய்கிறார்களோ அந்தக் காரியத்தில் அனுபவம் வாய்ந்த, அதற்குப் பொறுப்புள்ள மக்களைக் கலந்தாலோசியாமல் அலட்சியம் செய்தனர். பொது மக்கள் ஒத்துழைப்பு இல்லாததால், அரசியலதிகாரிகளும் அவர்கட்குக் கீழுள்ளோரும் தத்தம் கருத்திற்கேற்றவாறு முயன்று தோல்வியுற்றனர். காலப்போக்கில்தான் இதனை அரசாங்கம் உணர்ந்தது. ஆதலால் பொது மக்களின் ஒத்துழைப்புடனும், உதவியுடனும் இதைச் செய்து முடிப்பது என்ற முடிவுக்கு வந்தனர். அதன் பயனாகத்தான் சமூகநலத் திட்டம் (Community Project) என்ற சிறந்த திட்டமும் தீட்டப்பட்டது. இந்திய அரசாங்கத்தார் வகுத்த ஐந்தாண்டுத் திட்டத்திலும் இது முக்கியமான இடம் பெற்றுள்ளது.

இத்திட்டத்தின்படி முதன் முதலாகச் சில வட்டாரங்களைத் தேர்ந்தெடுத்துள்ளனர். இப்போது ஏறக்குறைய ஐம்பத்தைந்து வட்டாரங்களில் இம்முயற்சி நடைபெற்று வருகிறது. ஒரு முன்னேற்ற வட்டாரம் (Project Area) மூன்று பெரும் பகுதிகளாகப் (Development Blocks) பிரிக்கப்பட்டுள்ளது. பின்னர் அவையும் ஐந்தைந்து கிராமங்களைக் கொண்ட சிறு சிறு தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இவற்றைக் கவனிப்பதற்கெனக் கிராம ஊழியர்கள் (Village Level Worker) பயிற்சி தரப்பெற்று நியமிக்கப்பட்டுள்ளனர். ஒவ்வொரு வட்டாரமும் ஏறக்குறைய 450 முதல் 500 சதுர மைல் பரப்பளவுள்ளதாகவும் 150,000 ஏக்கராக்கள் சாகுபடி நிலத்தைக் கொண்டதாகவும், 300 கிராமங்களைக் கொண்டதாகவும், 200,000 மக்களைக் கொண்டதாகவும் உள்ளது.

இந்த முன்னேற்றத் திட்டத்தில் முதன்மையான இடம் பெறுவது உழவும், அதன் தொடர்பான செயல்களுமேயாம். முதலாவதாக உழப்படாமல் இருக்கும் நிலங்களையெல்லாம் விவசாய நிலமாக்குதல். புதிய முறைகளைக் கையாண்டு விளைவை அதிகரிக்கச் செய்தல், நல்ல உரங்களைத் தயார் செய்யும் முறைகளைக் கற்றுக் கொடுத்து அதன்படி உரம் தயாரித்து வயல்களுக்கிட்டு நல்ல பயனை அடையும்படிச் செய்தல். உழவுக்கு முக்கியமான கால் நடைகளை நன் முறையில் பராமரித்தல், நல்லஇனக் காளைகளைக் கொண்டு வந்து பாதுகாத்து அதன் வழி நல்ல உயர்ந்த இன மாடு களைப் பெருக்குதல், இவைகளே விவசாய சம்பந்தமான



கிராமத்தில் பலர் சேர்ந்து சாலை அமைத்தல்

செயல்கள். இவற்றையெல்லாம் கண்காணித்து வர ஒரு விவசாய அதிகாரி ஒவ்வொரு கிராமத் தொகுதிக்கும் நியமிக்கப்படுவார். அவர் இவற்றுடன் கூட்டுறவு இயக்க வளர்ச்சிக்கான முயற்சிகளையும் செய்து வருவார்.

இரண்டாவதாக சாலைகள் ஏற்படுத்துதலும், செப்பனிடுதலும். இப்போது பல கிராமங்களுக்குச் செல்லுவதற்கு ஏற்ற சாலைகளே யில்லை. இரண்டொரு கிராமங்களை இணைக்கக்கூடிய சாலைகள் இருந்தாலும் அவை நல்ல நிலையில் இருப்பதில்லை. ஆதலால் சாலைகள் இல்லாத இடங்கட்குச் சாலைகள் ஏற்படுத்துவதும், முன்னே சாலைகள் உள்ள இடங்களில் அவைகளைச் செப்பஞ் செய்தலும் முக்கியமான வேலையாகும்.

அடுத்தபடியாக உள்ளது கல்வி. தொடக்க நிலை, உயர்நிலைக் கல்வியை வளர்ச்சியடையச் செய்வதும், தொழிற்கல்வியைப் பரப்புவதுமே முக்கிய நோக்கமாகும். பள்ளிக்கூடங்கள் இல்லாத ஊர்களில் பள்ளிகள் ஏற்படுத்தப்படும். முன்னரே பள்ளிக்கூடம் உள்ள ஊர்களில் அக் கல்விநிலை வளர்க்கப்படும். சீர்திருத்தம்பெற்ற அல்லது முன்னேற்றம் அடைந்துள்ள கைத்தொழில்களைக் கற்றுக் கொடுப்பதற்காகத் தொழிலாளிகட்கு சலுகைகள் காட்டப் படுவதோடு பொருளுதவியும் செய்யப்படும். முதியோர் கல்வித் திட்டமும் சேர்க்கப்பட்டு, அவர்களும் கல்வியறிவு பெறும் வழியை ஏற்படுத்தலாம்.

அடுத்தபடியாக சுகாதார வசதிகள் கவனிக்கப்படும். வீடுகள் நெருக்கமாக உள்ள கிராமங்களில் புதிய வீடு கட்டுதற்கேற்ற இடங்கள் கண்டு பிடிக்கப்பட்டு வீடுகள் கட்ட ஏற்பாடு செய்யப்படும். வீடுகளையும், வீட்டுப் புறங்களையும், வெளியிடங்களையும் சுத்தமாக வைத்துக் கொள்ள வழி வகைகள் செய்யப்பட்டு எல்லா மக்களும் அதைப்

பின்பற்றுகிறார்களா என்பது கவனிக்கப்படும். கழிவுப் பொருள்களையெல்லாம், (மலம், மூத்திரம், சாணம்) கண்ட இடத்தில் போடாமலிருப்பதற்குத் தக்க ஏற்பாடு செய்யப் படும். இதனால் பல தொத்து நோய்கள் தடுக்கப்படும். குடி தண்ணீர் வசதி நன்முறையி லமைக்கப்படும். இவ்வாறு பல வகையாலும் நோய்கள் ஏற்படாதபடி தடுக்க வழி செய்யப் படும். மேலும் நோய் ஏற்பட்டால் அவைகளை நீக்குவதற் காக மருத்துவசாலைகளும், இடம் பெயரும் மருத்துவ சாலைகளும் (Mobile Hospital) ஏற்படுத்தப்படும்.

இறுதியாக எல்லாமக்களுக்கும் வேலை கிடைக்கும் படிச் செய்ய முயற்சி எடுக்கப்படும். இப்போது சாகுபடி செய்யாமல் தரிசாகக் கிடக்கும் நில மெல்லாம் பயிர்த் தொழிலுக்கு ஏற்றதாக்கிப் பயிரிடப்பெறும். இதனால் பல ருக்கு வேலை ஏற்படுவதுடன் உணவுப் பெருக்கமும் ஏற் படும். புதிய புதிய வீடுகள் கட்டப்படுவதிலும் சிலருக்கு வேலை கிடைக்கலாம். சாலைகள் போடுதல், செப்பனிடுதல் முதலியவற்றிலும், ஆறு, குளம், ஏரி இவைகளைச் செப் பனிடுவதிலுமாகப் பலருக்கு வேலை கிடைக்கலாம். மேலும் பல சிறு கைத் தொழில்களை—குடிசைக் கைத் தொழில் களை—ஏற்பாடு செய்து எல்லோருக்கும் வேலையும், ஊதியமும் கிடைக்க ஏற்பாடு செய்யப்படும். செலவினங் களில் சிக்கன முறையுங் கற்பிக்கப்படலாம். இந்த வகை களிலெல்லாம் மக்கள் பொருளாதார முன்னேற்றத்திற்கு வழிகள் வகுக்கப்படும்.

இவற்றையெல்லாம் தக்க வகையில் நடத்தி வைக்க ஒரு அமைப்பு வேண்டுமல்லவா? அத்தகையதாகிய, அதற் கென்றே பயிற்றப்பெற்றோர்களைக் கொண்ட செம்மை யான அமைப்பு ஒன்றும் ஏற்படுத்தப்பட்டுள்ளது. ஒவ் வொரு சமூக நலத் திட்ட வட்டாரத்திற்கும் ஒவ்வொரு

வட்டார அதிகாரி (Project Executive Officer) நியமிக்கப் படுவார். அவருக்கு உதவியாக மேற்பார்வையாளர்களும், (Supervisors) கிராம ஊழியர்களும் (Village Level Workers) நியமிக்கப்படுவார்கள். இவர்களின் தொகை ஒவ்வொரு வட்டாரத்திற்கும் ஏறக்குறைய நூற்றிருபத்தைந்தாக இருக்கும். இவர்களுக்கெல்லாம் பயிற்சியளிப்பதற்கென்று, நம் நாட்டில் முப்பது பயிற்சி நிலையங்கள் ஏற்படுத்தப்பட் டுள்ளன. ஒவ்வொரு பயிற்சி நிலையத்திலும் எழுபதின்மர் பயிற்சியளிக்கப்படுகின்றனர். மேலும் விவசாய இலாக்கா அதிகாரிகளும் அங்கங்கே தங்கி, திருந்திய முறையில் பயிரிடுவதற்குக் குடியானவர்களைப் பயிற்றுவார்கள். இவைகளை நிறைவேற்றுவதில் மாத்திரம் பொது மக்கள் பங்கெடுத்துக் கொண்டால் போதாது. அத்திட்டத்தை வகுப்பதிலும் அவர்கள் கலந்து கொண்டால்தான் நன் முறையில் திட்டங்களை வகுத்து. எளிதில் அவைகளை நிறைவேற்றமுடியும். ஆதலால் ஊர்மக்கள் அடங்கிய குழு ஒன்று அங்கங்கே அமைக்கப்பட்டு, அதனுடன் கலந்து ஆலோசித்தே எல்லாத் திட்டங்களும் வகுக்கப்பெற்று நிறைவேற்றப்பெறும்.

இத்திட்டத்தை நிறைவேற்றுவதற்கென ஐந்தாண்டுத் திட்டத்தில் தொண்ணூறு கோடி ரூபாய் ஒதுக்கப் பட்டுள்ளது. இத்தொகை பத்து ஆண்டுகளிற் செலவிடப் படும். இதற்கான செலவினைச் செய்வதில் ஒவ்வொரு நாட்டு அரசாங்கமும் (State Government) மத்திய அர சாங்கமும் பங்கு கொள்ளும். கொஞ்ச தொகை கடனாக வும், எஞ்சிய தொகை உதவி நிதியாகவும் (Grant) கொடுக்கப்படும். இதில் ஒரு சிறிய தொகையை, வெளி நாட்டு உதவி கொண்டும் தரப்படும். அரசாங்கத்தா ருடைய செலவிலேயே திட்டம் முழுவதும் நிறைவேறி விடு

மென்பது இயலாததாம். ஆதலின் பொதுமக்களும் உதவ முன்வரவேண்டும். அவருள் நிதி மிகுந்தவர் பொருள் தரலாம். ஏனையோர் தங்கள் உடல் உழைப்பைத் தந்து உதவலாம். எந்த வகையிலாவது பொது மக்கள் உதவினுல் தான் இத்திட்டம் முற்றும் நிறைவேறும். இதனை நன்குணர்ந்த பொதுமக்கள் இதில் ஆர்வங்காட்டி, சாலை போடுதல், கிணறு, குளம் செப்பனிடுதல் முதலியவற்ருல் தங்கள் உழைப்பையும், ஒத்துழைப்பையும் தந்து வருகிருர் கள். இக்கொள்கை மேலும் மேலும் வளருமானுல் இத் திட்டம் பூரண வெற்றி பெற்று மக்கள் முன்னேற்றம் அடைவது உறுதி.

## கேள்விகள்

1. நாட்டு முன்னேற்றமாவது யாது ?
2. தற்காலத்தில் அடைந்துள்ளதாகக் கூறப்படும் முன் னேற்றம் யாது ?
3. கிராம முன்னேற்றமே உலகமுன்னேற்றமாவதெவ் வாறு ?
4. அரசியலார் இதுகாறும் செய்த முயற்சிகள் பலனளி யாததேன் ?
5. ஒரு முன்னேற்ற வட்டாரத்தின் அமைப்பு யாது ?
6. அதன் அதிகாரிகள் யாவர் ?
7. முன்னேற்றத்திட்டத்தில் இடம் பெற்றுள்ளன யாவை ?

## பயிற்சி

1. சமூக நலத் திட்டம் பற்றி ஆசிரியர் வழி முழு விவரத்தையும் அறிந்து கொள்க.

2. இத்திட்டத்தால் விளையும் நன்மை குறித்து ஒரு கட்டுரை எழுதுக.
3. இத்திட்டத்தின் ஏதாவது ஒரு பகுதியை எடுத்துக் கொண்டு நாடகமாக நடிக்க முயற்சிக்கவும்.

## இலக்கணம்

(1) கீழ்வருவனவற்றிற்குப் பெயர்ச்சொல் தருக :—
செம்மை
கறுமை
நட்பு
பண்பு.

(2) உம்மைத் தொகைக்கு இப்பாடத்திலிருந்தே உதாரணம் தருக.

(3) யா, ஏ என்னும் எழுத்துக்கள் வினாவிற்கு வரும் என்பதை இப்பாடத் துணைகொண்டு விளக்குக.

(4) புணர்ச்சியில் வல்லின ஒற்றெழுத்து மிகுந்ததற்கு நான்கு உதாரணங்கள் தருக.

(5) 'உரம்' இடுகுறிப் பெயரா? காரணப் பெயரா? விளக்குக.

(6) 'காளை', இதற்குப் பெண்பாற் பெயரைத் தருக.

(7) எல்லாமக்களுக்கும் வேலை கிடைக்கும்படிச் செய்ய முயற்சி எடுக்கப்படும்.

தரிசு நிலத்தையெல்லாம் பயிர்த் தொழிலுக்கு ஏற்றதாக்கி

முதல் வாக்கியத்திற்கும், இரண்டாவது வாக்கியத்திற்குமுள்ள வேறுபாடு என்ன? எடுக்கப்படும், ஏற்றதாக்கி—இவைகள் என்ன வென்று கூறப்படும்?

(8) ஒரு சொல்லின் காலத்தைக் குறிப்பதற்குப் பெயர் என்ன?

## 9. ஆனந்தரங்கப்பிள்ளை

பதினேழாம் நூற்றுண்டின் இறுதியில் மார்ட்டின் (F. Martin) என்பவர், பிரெஞ்சுக் கவர்னராகப் புதுச் சேரியை ஆண்டு வந்தார். அவர் காலத்தில் புதுச்சேரி ஓரளவுக்கு விருத்தியடையத் தொடங்கியது. மேலும், 'புதுச்சேரியில் குடியேறும் இந்தியர்களுடைய பழக்க வழக்கங்கள், சமயக் கொள்கைகள் இவைகட்கு எவ்வித இடையூறும் ஏற்படுத்தப்பட மாட்டா' என்னும் அறிக்கை யையும் வெளியிட்டார். அது கண்ட பலர் தம் குடும்பத் துடன் புதுச்சேரியிற் குடியேறினர். மார்ட்டினுக்குப் பிறகு அப்பதவிக்கு வந்த ஹெபர்ட் (Hebert) என்பார், 'புதுச் சேரியிலுள்ளவர்கள் தத்தம் விருப்பம் போல் வியாபாரம் செய்து கொள்ளலாம்,' எனவும் அறிவித்தார்.

அக்காலத்தில் நைனியப்பப்பிள்ளை என்பாரொருவர் சென்னையில் வியாபாரஞ் செய்திருந்தார். அவர் மேற் கூறிய செய்தி கேட்டுப் புதுச்சேரிக்கு வந்து சேர்ந்தார். முதன்முதலில் அரசாங்கத்தாரிடமிருந்து வெற்றிலை, புகை யிலை ஆகிய இரு பொருள்களையும் விற்கும் உரிமையைப் பெற்றுக்கொண்டு அதற்குரிய அரசாங்கக் குத்தகைத் தொகையையும் கொடுத்து வியாபாரஞ் செய்யத் தொடங்கி ஞர். பின்னர் துணி விற்பனையையும் அவ்வாறே மேற் கொண்டு நடத்திஞர். கொஞ்சங் கொஞ்சமாக அரசாங் கத்தாரின் அன்பையும், ஆதரவையும் பெற்றுவந்தார்.

அப்போது பிரெஞ்சு அரசாங்கத்தாரிடம் கொஞ்சம் பவழம் இருந்தது. அதனை நல்ல விலைக்கு விற்க முடியாத தால் பல வகையிலும் முயன்றுகொண்டிருந்தனர்

நைனியப்பப்பிள்ளை முன்னின்று அதை நல்ல இலாபகர மான விலைக்கு விற்றுக்கொடுத்தார். அது கண்டு மிகவும் மகிழ்ந்த அரசாங்கத்தார் அவரைத் துவிபாஷியாக நிய மித்தனர். இந்துக்கள் பெருகி, வியாபாரம் செய்துவந்த அந்த நாளில், ஒரு இந்தியராகிய இந்து மதத்தினரைத் துவிபாஷியாக நியமித்தது மிகவும் நலமாயிருந்தது. அக் காலத்தே தனக்குத் துணையாயிருக்கும்படி, தன் மைத்து னர் திருவேங்கடப்பிள்ளையை நைனியப்பப்பிள்ளை, புதுச் சேரிக்கு வரவழைத்துக் கொண்டார்.

திருவேங்கடப்பிள்ளை என்பவர் சென்னையைச் சேர்ந்த பிரம்பூரில் வாழ்ந்தவர். தம் மைத்துனராகிய நைனியப்பப் பிள்ளையின் அழைப்பின்பேரில் புதுச்சேரி வந்து சேர்ந்தார். வந்து சேர்ந்த அவர் பின்னர் புதுச்சேரியிலேயே நிலையாகத் தங்கிவிட்டார். அவர் புதுச்சேரி வருவதற்கு முன்னர் கி. பி. 1709-ல் அவருக்கு ஒரு ஆண் மகவு பிறந்தது. அக் குழந்தைதான் பிற்காலத்துச் சிறந்து விளங்கிய ஆனந்த ரங்கப்பிள்ளையாகும்.

புதுச்சேரி வந்து சேர்ந்த திருவேங்கடப்பிள்ளை தம் மைத்துனர் நைனியப்பப்பிள்ளைக்கு உதவியாக இருந்து காரியங்களைக் கவனித்து வந்தார். 1714-ல் புதுச்சேரியி லிருந்த இந்துக்களுக்கு, அவர்தம் மதப் பழக்க வழக்கம் சம்பந்தமாகச் சில தீங்குகள் இழைக்கப் பெற்றன. அது கண்டு பொறுத திருவேங்கடப்பிள்ளை, மிக்க முயற்சி யுடன் எதிர்த்துப் போராடினர். அதன் காரணமாகப் பொது மக்களுடைய அன்பையும், ஆதரவையும் பெற்றார். அது கண்ட பிரஞ்சிந்திய வியாபாரக் குழுவினர் அவரைத் தங்கள் துணைத்தரகராக நியமித்துக்கொண்டனர். அத ளுற் பொதுமக்களிடையே தங்கள் செல்வாக்கையும், வியாபாரத்தையும் வளர்த்துக்கொள்ள முடியும் என்றெண்

ணினர். அவர்கள் நினைத்ததும் சரியாயிற்று. வியாபாரம் பெருகலாயிற்று. திருவேங்கடப்பிள்ளை நாட்டுமக்களுக்கும் வியாபாரக் குழுவினருக்கும் இடையேயிருந்து வியாபாரம் மேன்மேலும் வளரச்செய்து வந்தார். அவரது முயற்சி, உழைப்பு அதனால் தங்களுக்கேற்பட்ட நன்மை முதலியவற்றையெல்லாம் சீர்தூக்கிப் பார்த்த பிரெஞ்சு அரசியலார் அவரைத் திவானாக நியமித்தனர். அப்பதவியை அவர் மிகத் திறம்பட வகித்துச் செயலாற்றி வந்தார்.

திருவேங்கடப்பிள்ளை, துணைத் தரகராயிருந்தபோதும், திவானாக இருந்தபோதும், அவருடைய குமாரரான ஆனந்தரங்கப்பிள்ளையும் உடனிருந்தார். அவர் கூர்த்த மதியுடையவராதலினால் பலவகையிலும் தம் தந்தையாருக்குத் துணைபுரிந்து வந்தார். அதனால் அவர் வியாபாரம், அரசியல் ஆகிய பல துறைகளிலும் சிறந்த அறிவையும், அனுபவத்தையும் பெற்றார். அத்துடன் தமிழ், தெலுங்கு, ஆங்கிலம், பிரெஞ்சு முதலிய மொழிகளிலும் வல்லவரானார். இவையாவும் அவரைப் பிற்காலத்தே உயர் பதவிக்குக் கொண்டுவந்ததோடு அல்லாமல் அவற்றைத் திறம்பட நடத்திப் பேரும் புகழும் அடையுமாறும் செய்தன. திருவேங்கடப்பிள்ளைக்குப் பின்னர் கனகராய முதலியார் என்பவர் திவானாக இருந்தார். அவருக்குப் பின்னர் கி. பி. 1746-ல் ஆனந்தரங்கப்பிள்ளை திவானாக நியமிக்கப் பெற்றார்.

ஆனந்தரங்கப்பிள்ளை திவானாக வந்தது முதல், பொது மக்களுக்கும், பிரெஞ்சுக் குழுவினருக்கும் நன்மை செய்வதிலேயே நாட்டங் கொண்டிருந்தார். இருவருக்குமிடையே நல்லுறவை உண்டாக்க மிகுதியும் பாடுபட்டு உழைத்தார். பொது மக்களுக்கும் அரசாங்கத்தாருக்கும் ஏதாவது

கருத்து வேறுபாடு ஏற்படுமானல் அரிதில் முயன்று அவற்றையெல்லாம் தீர்த்துவைத்து அவர்களுக்கிடையே நல்லுறவை ஏற்படுத்தி வைத்தார். ஆனந்தரங்கப்பிள்ளை, பிரெஞ்சு அரசியல் அரங்கத்தில் தோன்றிய பல அரசியல் நிபுணர்களோடும் நெருங்கிப் பழகினர். அவர்கட்கு வேண்டும்போது அரிய ஆலோசனைகளைக் கூறி வந்தார். அதனல் அரசியலாருக்கு அவரிடம் பெருமதிப்பு ஏற்பட்டது. இவ்வாறு அவர் மக்கள் நலங்கருதியும், அரசாங்கத்தார் நலங்கருதியும், சமூகத்துறை, வியாபாரத்துறை, அரசியற்றுறை ஆகிய எல்லாத் துறைகளிலும் ஈடுபட்டு உழைத்து வந்தார்.

ஆனந்தரங்கப்பிள்ளையின் அறிவாற்றல்களைக் கண்ட நம் நாட்டு மன்னர்கள் அவரிடம் பெருமதிப்புக் கொண்டனர். அவசியமான போதெல்லாம் அவருடைய ஆலோசனையைக் கேட்டு அதன்படி நடக்கலாயினர், அவருக்குப் பரிசும், பட்டமும், பதவிகளும் தந்து சிறப்பித்தனர். முஸபர்ஜங்கு என்னும் சிற்றரசர் அவருக்கு மூவாயிரம் குதிரைகளைக் கொடுத்து, 'மன்சுபேதார்' என்னும் உயர்ந்த பட்டத்தையும் வழங்கினர். கொஞ்சகாலத்திற்குப் பிறகு அவர் செங்கற்பட்டுக் கோட்டைக்குத் தளபதியானர். பின்னும் கொஞ்சகாலத்திற்குப் பிறகு அவர் செங்கற்பட்டு மாவட்டம் முழுவதற்கும் ஜாகீர்தாரராக நியமனம் செய்யப் பெற்றர். இவற்றல் அவர் புகழ் பெருகுவதாயிற்று. பிரெஞ்சுக்காரர் ஆட்சியிலிருந்த மக்களேயன்றிப் பிறரும் அவரை வணங்கிப் போற்றும் நிலை உண்டாயிற்று. பொது மக்களிடையேயும், சிற்றரசர்களிடையேயும் ஆனந்தரங்கப் பிள்ளைக்கிருந்த செல்வாக்கைக் கண்ட பிரெஞ்சுக் கவர்னர் டியூப்ளே, அவரையே இந்திய மக்களின் தலைவராக நியமனஞ் செய்துவிட்டார்.

பிரெஞ்சு அரசாங்கத்தில் எவருக்கும் இல்லாத உரிமை இவருக்கு அளிக்கப்பட்டிருந்தது. பல்லக்கில் மேளவாத்தியத்துடன் கவர்னர் மாளிகையுட் செல்லவும், தங்கப்பிடியிட்ட கைத்தடி வைத்துக்கொள்ளவும், பாத ரட்சையுடன் கவர்னர் மாளிகை புகவும் உரிமை அளிக்கப் பட்டிருந்தது. மேலும் நாட்டு மக்களிடையே ஏற்படும் சாதாரண வழக்குகளை விசாரித்து நீதி வழங்கும் உரிமை யும் அவருக்கே கொடுக்கப்பட்டிருந்தது. அக்காலத்தில் ஊர்ச் சாவடிகளே பொது நீதி மன்றங்களாக இருந்துவந் தன. ஆனந்தரங்கப்பிள்ளை நாள்தோறும் அங்குச் சென்று, அன்றன்று விசாரிக்கப்பட வேண்டிய வழக்குகளை யெல் லாம் விசாரித்து, நன்கு ஆராய்ந்து இரு சாராரும் ஒப்பும் வகையில் நீதி வழங்குவார். நாள்தோறும் டியூப்ளே காலை உணவருந்தியதும் ஆனந்தரங்கப்பிள்ளையை வரவழைத்து நாட்டுச் செய்திகள் அனைத்தையும் கேட்டறிந்து கொள்ளு வார். இவரும் அரசியல் சம்பந்தமாகவும், வியாபார சம்பந்தமாகவும், சமூக சம்பந்தமாகவும் உள்ள முக்கிய மான நிகழ்ச்சிகளைச் சொல்லுவதன்றி அத்துறைகளைப் பற்றிய ஆலோசனைகளையும் கூறுவார். கவர்னரும் அவை களை யெல்லாம் அப்படியே ஏற்றுக்கொண்டு நடக்கும் அளவிற்கு அவரிடம் நம்பிக்கையும், மரியாதையும் கொண்டிருந்தார்.

ஆனந்தரங்கப்பிள்ளை அக்காலத்திலிருந்த சிற்றரசர் களைப் பற்றி நன்கு தெரிந்து வைத்திருந்தார். அதிலும் தென்னாட்டுச் சிற்றரசர்களுடன் தொடர்பும், நட்புங் கொண்டிருந்தார். ஒவ்வொரு அரசரைப் பற்றியும் நன்கு தெரிந்து கொண்டிருந்ததால் அவரவர் சம்பந்தப்பட்ட காரியங்களை எப்படிச் சிக்கல் இல்லாமல் முடித்து வைக்க லாம் என்பதறிந்து அவற்றை யெல்லாம் தீர்த்துவைத்து

உதவினர். எங்கெந்த அரசருக்கு எவ்வெவற்றில் பிரியம் என்பதைக்கூடத் தெரிந்துகொண்டிருந்தார். ஒரு சமயம் ஒரு அரசருக்கு அழகிய புரவிகளையும், மற்றொருவருக்குச் சிறந்த நாய்களையும் வேறொருவருக்கு மிக உயர்ந்த வாசனைப் பொருள்களையும் டியூப்ளேயின் மூலமாகப் பரிசாக அனுப்பும்படிச் செய்தார். மேலும் அந்தந்த நாட்டுச் செய்திகளையும் சரிவர அறிந்து உடனுக்குடன் தனக்கு அறிவிக்கத்தக்க நம்பிக்கையான மனிதர்களை அங்கங்கே அனுப்பி வைத்திருந்தார். அதனால் நாட்டின் பல பகுதிகளில் நடைபெறும் ஒவ்வொரு முக்கியமான நிகழ்ச்சியும் உடனுக்குடன் அவருக்குத் தெரிந்துவிடும்; அதற்கேற்ப அவர் நடந்துகொள்ளுவார். பிரஞ்சு அரசாங்கத்திற்கும் ஆலோசனைகள் கூறித் தக்கவாறு நடக்கச் செய்வார். ஆதலால் அரசாங்கத்திற்கும், மக்களுக்கும் எல்லா வகையிலும் நன்மை யேற்படலாயிற்று.

அரசியலில் ஆனந்தரங்கப்பிள்ளை பெரிதும் திறம் படைத்தவரா யிருந்தது போலவே போர் முறையிலும் வல்லவரா யிருந்தார். பிரெஞ்சுக்காரருக்கும் ஆங்கிலேயருக்கும் நடந்த போர்களி லெல்லாம் இவரே முன்னின்று ஆலோசனை கூறி வெற்றியடையச் செய்தார். முதன் முதலில் பகைவரது ஒற்றர்கள் பிரெஞ்சு எல்லைக்குள் புகாதபடி செய்துவிட்டார். இரண்டாவதாகச் சிற்றரசர்கள் பிரெஞ்சுக்காரர்களுக்கு விரோதமாகக் கிளம்பாதபடியும் பார்த்துக்கொண்டார். போர் நடக்குங்கால் அவ்வப்போது வேண்டிய உணவுப்பொருள்கள், படைக்கலங்கள் முதலிய யாவும் முட்டின்றிப் போய்ச் சேரும்படிக் கவனித்துக் கொண்டார். தானே நேரிற் போர்க்களம் சென்றும் போர் வீரர்களை ஊக்கி நன்றாகத் தீரத்துடன் போர் புரியச் செய்தார். இவ்வாறெல்லாம் முயன்று, தன்

ஊேயே நம்பியிருந்த பிரெஞ்சுக்காரருக்கு வெற்றி தேடிக் கொடுத்தார்.

இவர் போர் முறையில் எவ்வளவு தீரராக இருந்தாரோ அதைவிடப் பன்மடங்கு அருளுள்ளம் படைத்தவராயுமிருந்தார். ஒரு சமயம் பகைவர்களாகிய ஆங்கிலேயருக்குச் சொந்தமான ஊர்களையெல்லாம் அழித்துவிட டியூப்ளே எண்ணி, அதை ஆனந்தரங்கப்பிள்ளையிடம் தெரிவித்தார். அவர் அதை அடியுடன் மறுத்தார். ஆங்கிலேயராகிய பகைவருக்காக எவ்வித தீமையும் அறியாத ஏழை மக்களுக்குத் தீங்கு செய்வது எவ்வகையிலும் பொருந்தாது என்பதை விளக்கிக் காட்டினார். டியூப்ளேயும் அந்த ஊர்களை அழிக்கவேண்டியதன் இன்றியமையாமையை விளக்கிக் காட்டி, அம்மக்களுக்கு எவ்வித தீங்கும் வராத வகை, தம் வீரர்கள் நடந்துகொள்வது உறுதி என்றும் கூறினார். அப்படியானல் அவ்வேழை மக்களுடைய வீடுகளைக் கொளுத்திவிட்ட பிறகு அதனால் ஏற்படும் நஷ்டத்தை ஈடுசெய்யவாவது வேண்டும் என்று ஆனந்தரங்கப்பிள்ளை வாதாடினார். இறுதியில் வேறு வழியின்றி டியூப்ளேயும் ஒத்துக்கொண்டார். இதுபோன்று அவர் ஏழை எளியவர் பால் அன்பு கொண்டு அவர்கள் நலனுக்காகப் போராடிய நிகழ்ச்சிகள் பலவாகும்.

அரசியல், போர்முறைகளில் நுண்ணறிவும் திறனும் பெற்றிருந்ததை யொப்பவே ஆனந்தரங்கப்பிள்ளை வணிகத் துறையிலும் நுண்ணறிவு பெற்றிருந்தார். தம் அறிவுத் திறமையினால் வாணிகத்தைப் பெருக்கிக்கொண்டதுடன் தன் வியாபாரத்தின் பொருட்டு, 'ஆனந்தப் புரவி' என்னும் ஒரு சிறந்த கப்பலையும் வைத்துக் கடல் கடந்தும் வாணிகம் செய்துவந்தார். இவர் செய்தவற்றுள் துணி வியாபாரமே மிகச் சிறந்ததாகும். பதினாறு, பதினேழாம்

நூற்றாண்டுகளில் நம் நாட்டுக் கைத்தறித் துணிகள் மேல் நாட்டினரால் மிகவும் விரும்பி உபயோகிக்கப்பட்டன. இதனை நன்குணர்ந்த ஆனந்தரங்கர் துணி வியாபாரத்தை மேற்கொண்டார். புதுச்சேரியிலும், அதனையடுத்த இடங்களிலும் நெய்யப்பெற்ற தூய வெண்மையான துணிகள் 'தென்னாட்டுத் துணிகள்' என்று வழங்கப்பட்டன. பரங்கிப் பேட்டையிலும் அதனையடுத்த விடங்களிலும் நீலந் தோய்த்த சிறந்த துணிகள் நெய்யப்பெற்றன. சென்னையிலும் அதன் சுற்றுப் பக்கங்களிலும் சாயந் தோய்த்த நூற்களைக்கொண்டு ஒருவகைத் துண்டுகள் நெய்யப்பட்டன. அவை 'சென்னைக் கைத்துண்டுகள்' என்றே வழங்கப் பட்டன. இவ்வகைத் துண்டுகள் மேல்நாட்டு அரச குடும்பத்தினராற்கூடப் பெரிதும் விரும்பிப் பயன்படுத்தப் பட்டன. சென்னை, காஞ்சீபுரம் முதலிய இடங்களில் மிகவும் நேர்த்தியான, அச்சுக் குத்தப்பட்ட துணிகள் ஏராளமாக உற்பத்தி செய்யப்பட்டன. இவற்றையெல்லாம் மேல் நாட்டினர் மிகவும் விரும்பி வாங்கிப் பயன்படுத்தினர். இதனை நன்குணர்ந்திருந்த ஆனந்தரங்கரும் இவற்றை நியாயமான விலைகொடுத்து வாங்கிக் கப்பல் கப்பலாகப் பிரெஞ்சு நாட்டிற்கு அனுப்பி மிகப் பெரிய இலாபத்தையும் அடைந்தார்.

ஆனந்தரங்கப்பிள்ளை செல்வத்தைத் தேடியது போலவே, தரமறிந்து செலவுசெய்வதிலும் சிறந்திருந்தார். ஏழை எளியவர் அவர்பாற் சென்றால் வெறுங்கையுடன் வர விடமாட்டார். புலவர் பெருமக்களுக்கோ எனின் தகுதிக் கேற்ப வாரிவாரி வழங்கும் வள்ளலா யிருந்தார். ஒரு சமயம் பசியுடன் வந்த புலவருக்கு ஓர் இலை நிறையப் பொன்னையும் உணவுடன் வழங்கி மகிழ்ந்தார். இவர்மேல் இயற்றப் பெற்ற தனிப்பாடல்கள் பல. அவை இற்றைநாளிற் கிடைத்

தில. அச்சேருத 'ஆனந்தரங்கக் கோவை' என்று அவர் மேற்பாடிய ஒரு நூலும் உளது. இலக்கண விளக்க ஆசிரியர் வைத்தியநாத தேசிகர் மகனுர் சதாசிவ தேசிகர் இயற்றியது அது. ஆனந்தரங்கரின் அவையில் அரங்கேற்றப் பெற்ற நூல்களும் உள வென்று தெரிகின்றது. அத்துடனின்றி ஆனந்தரங்கர் பல அறச்சாலைகளை ஏற்படுத்தி ஏழைகளுக்கு உணவிட ஏற்பாடு செய்திருந்தார். அவற்றுள் இரண்டொன்று இன்றும் உள்ளன.

இவற்றை யெல்லாம்விட 'இவரியற்றிய பெருந்தொண்டு—என்றும் மறையாத தொண்டு—ஒன்று உள்ளது. அதுதான் அவர் எழுதிவைத்த நாட்குறிப்புகள். அவரது நாட்குறிப்பிலிருந்து அக்காலத்திருந்த நாட்டு நிலை, மக்கள் நிலை, சுதேச மன்னர்கள் நிலை, ஐரோப்பிய வர்த்தகக் குழுவினர் நிலை, அவர்களுக்கிடையே ஏற்பட்ட பூசல்கள், அதன் முடிவுகள் ஆகிய பலவும் தெளிவாக விளங்குகின்றன. நம் நாடு வந்துசென்ற பிற நாட்டு யாத்திரிகர்களது குறிப்புக்களைவிட இவை மிகவும் பயனுடையனவா யுள்ளன. அவை யாவும் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப்படுகின்றன. இதுகாறும் பதினறு பகுதிகள் வெளிவந்துள்ளனவெனத் தெரிகின்றது.

இத்தகைய அரும்பெரும் செயல்களை இயற்றிய அவர் செங்கற்பட்டுச் சேஷாத்திரிப் பிள்ளையின் மகளாகிய மங்கைத் தாயாரம்மையாரை மணந்துகொண்டார். அவர்கட்கு முறையே ஐயாசாமி, அண்ணுசாமி என்னும் ஆண் மக்களும், பாப்பா, காளத்தி, இலட்சுமி என்னும் பெண் மக்களும் பிறந்தனர். இப்போதும் அவர் மரபில் வந்தவர்கள் அவருடைய புதுச்சேரி வீட்டில் வாழ்ந்து வருகிறுர்கள். இத்துணை வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த ஆனந்தரங்கப்

பிள்ளை 1761-ம் ஆண்டில் புதுவையிலேயே பூதவுடல் நீத்துப் புகழுடல் பெற்றார்.

## கேள்விகள்

1. புதுச்சேரிக் கவர்னர்கள் பொது மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதிகள் யாவை?
2. நைனியப்பப்பிள்ளையைப் பற்றி நாமறிவதென்ன?
3. திருவேங்கடப்பிள்ளை திவானின் வரலாறு யாது?
4. ஆனந்தரங்கப்பிள்ளை முதலிற் பெற்ற பரிசு, பட்டம், பதவி யாவை?
5. ஆனந்தரங்கர் பெற்ற சிறப்புரிமைகள் யாவை?
6. ஆனந்தரங்கரின் போர்த் திறன் எத்தகையது?
7. மேலை நாடுகட்கனுப்பப் பெற்ற நம் நாட்டுக் கைத்தறித் துணிகள் யாவை?
8. ஆனந்தரங்கருக்கும் புலவர்கட்கும் இருந்த தொடர்புகள் யாவை?
9. ஆனந்தரங்கரின் நாட்குறிப்பின் சிறப்பென்ன?

## பயிற்சிகள்

1. நூல் நிலையத்திலிருந்து ஆனந்தரங்கப்பிள்ளை வரலாற்றை விளக்கும் நூலை வாங்கிப் படிக்கவும்.
2. இந்தியாவிலுள்ள பிரெஞ்சுக்காரர்களுக்குச் சொந்தமான இடங்களை யெல்லாம் தேசப்படப் புத்தகத்தைப் பார்த்துத் தெரிந்துகொள்.
3. ஆனந்தரங்கப்பிள்ளை வரலாற்றை அவரே கூறுவது போல் எழுதுக.
4. தற்காலப் பிரஞ்சிந்திய ஆட்சி முறையைப் பற்றி ஆசிரியரிடம் கேட்டுத் தெரிந்துகொள்.

## இலக்கணம்

(1) 'நான்'—இதற்கேற்ற மற்ற இரண்டு இடப்பெயர்களையும் எழுதுக.

(2) வந்தார், சென்றோம், போனீர்—இம் முற்றுகளுக்கு ஏற்ப இடப்பெயரை அமைத்து எழுது.

(3) ஆனந்தரங்கப்பிள்ளையும் வந்தார்—இங்கு வந்த உம்மைக்கு என்ன பெயரிடவேண்டும்?

(4) திருவேங்கடம்+பிள்ளை; நைனியப்பன்+பிள்ளை—இவ்விரண்டையும் சேர்த்து எழுதி அடையும் மாறுதலையும் காண்க.

(5) அவர்கள்+கு; அரசு+இயல்+துறை; அதற்கு+ஏற்ப—இச்சொற்களைச் சேர்த்து எழுது.

(6) தேடி
நடக்க
அழகிய
போர்புரிய.
இவ்வெச்சங்களுக்கு ஏற்ற சொல்லை அமைத்து முற்றுவித்து இதில் பெயரெச்சம் எது, வினையெச்சம் எது என்று கண்டுபிடி.

(7) 'புகழுடல்' இது உவமையா? உருவகமா? இரண்டிற்குமுள்ள வேறுபாடு என்ன?

# செய்யுள் பகுதி

## கடவுள் வாழ்த்து

1. தாயுமானவர்

துய்யன் தண்ணருள் வடிவினன் பொறுமையால் துலங்கும்
மெய்யன் என்றுனை ஐயனே அடைந்தனன் மெத்த
நொய்யன் நுண்ணிய அறிவினன் ஒன்றை நூறுக்கும்
பொய்யன் என்றெனைப் புறம்விடின் என்செய் வேன் புகலாய்.

2. குலசேகரர்

மீன்நோக்கும் நீள்வயல்சூழ் வித்துவக் கோட்டம்மா என்
பால்நோக்கா யாகிலும் உன்பற்றல்லால் பற்றில் லேன்
தான்நோக்காது எத்துயரம் செய்திடினும் தார் வேந்தன்
கோல்நோக்கி வாழும் குடிபோன்று இருந்தேனே.

3. பாரதியார்

வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ் மொழி
வாழிய வாழியவே !
வானமளந்த தனைத்தும் அளந்திடு
வண்மொழி வாழியவே !
ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி
இசைகொண்டு வாழியவே !

எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே !
சூழ்கலி நீங்கித் தமிழ்மொழி ஓங்கித்
துலங்குக வையகமே !
தொல்லை வினைதரு தொல்லை அகன்று
சுடர்க தமிழ் நாடே !

## நீதிப்பகுதி

### 1. திருக்குறள்

1. தனக்குஉவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. (1—7)
2. அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது. (1—8)
3. விசும்பில் துளிவீழின் அல்லால் மற்றுஆங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது. (2—6)
4. குணம்என்னும் குன்றுஏறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது. (3—9)
5. ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல். (4—3)
6. அறத்தான் வருவதே இன்பம்; மற்றுஎல்லாம்
புறத்த; புகழும் இல. (4—9)
7. அன்பொடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்பொடு இயைந்த தொடர்பு. (8—3)
8. அன்பின் வழியது உயிர்நிலை; அஃதுஇலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு. (8—10)
9. அகன்அமர்ந்து ஈதலின் நன்றே முகன்அமர்ந்து
இன்சொலன் ஆகப் பெறின். (10—2)

10. அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின். (10—6)

11. காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. (11—2)

12. தினைத்துணை நன்றி செயினும், பனைத்துணையாக்
கொள்வர் பயன் தெரிவார். (11—4)

13. நன்றே தரினும் நடுவுஇகந்து ஆம்ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல். (12—3)

14. யாகாவார் ஆயினும் நாகாக்க ; காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (13—7)

15. ஒழுக்கம் விழுப்பம் தரலால் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். (14—1)

16. ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ். (16—6)

17. அழுக்கற்று அகன்றாரும் இல்லை ; அஃதுஇலார்
பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல். (17—10)

18. அறன்அறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறன்அறிந்து ஆங்கே திரு. (18—9)

19. ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு. (19—10)

20. பயனில்சொல் பாராட்டு வானை 'மகன்' எனல்
'மக்கட் பதடி' எனல். (20—6)

21. தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும். (21—2)

22. மறந்தும் பிறன்கேடு சூழற்க ; சூழின்
அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு. (21—4)

23. பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயன்உடை யான்கண் படின். (22—6)

24. மருந்தாகித் தப்பா மரத்துஅற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின். (22—7)

25. வறியார்க்குஒன்(று) ஈவதே ஈகை; மற்றுஎல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து. (23—1)

26. ஒன்றா உலகத்து உயர்ந்த புகழ்அல்லால்
பொன்றாது நிற்பதுஒன்று இல். (24—3)

27. வசைஒழிய வாழ்வாரே வாழ்வார்; இசைஒழிய
வாழ்வாரே வாழா தவர். (24—10)

28. அருட்செல்வம் செல்வத்துட் செல்வம்; பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள. (25—1)

29. அருளிலார்க்கு அவ்வுலகம் இல்லை; பொருள் இலார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு. (25—7)

30. பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று. (30—7)

31. புறம்தூய்மை நீரான் அமையும்; அகம்தூய்மை
வாய்மையால் காணப் படும். (30—8)

32. சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி 'இனம் என்னும்'
ஏமப் புணையைச் சுடும். (31—6)

33. இன்னா செய்தாரை ஒறுத்தல்; அவர்நாண
நன்னயம் செய்து விடல். (32—4)

34. தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை. (33—7)

35. தூஉய்மை என்பது அவாஇன்மை; மற்றுஅது
வாஅய்மை வேண்ட வரும். (37—4)

36. எனைத்தானும் நல்லவை கேட்க; அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். (42—6)

37. அறிவுடையார் ஆவது அறிவார் ; அறிவுஇலார்
அஃது அறிகல்லா தவர். (43—7)

38. நல்இனத்தின் ஊங்கு துணையில்லை ; தீயினத்தின்
அல்லல் படுப்பதூஉம் இல். (46—10)

39. எண்ணித் துணிக கருமம் ; ' துணிந்தபின்
எண்ணுவம் ' என்பது இழுக்கு. (47—7)

40. ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
கருதி இடத்தால் செயின். (49—4)

41. முயற்சி திருவினை யாக்கும் ; முயற்றின்மை
இன்மைப் புகுத்தி விடும். (62—6)

42. விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் ; நிரந்துஇனிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின். (65—8)

43. எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின். (67—6)

44. இல்லாரை எல்லாரும் எள்ளுவர் ; செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு. (76—2)

45. முகம்நக நட்பது நட்பன்று ; நெஞ்சத்து
அகம்நக நட்பதே நட்பு. (79—6)

46. அற்றால் அளவறிந்து உண்க ; அஃதுஉடம்பு
பெற்றான் நெடிதுஉய்க்கும் ஆறு. (95—3)

47. பெருக்கத்து வேண்டும் பணிதல் ; சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு. (97—3)

48. அற்றம் மறைக்கும் பெருமை ; சிறுமைதான்
குற்றமே கூறி விடும். (98—10)

49. நச்சப் படாதவன் செல்வம், நடுவூருள்
நச்சு மரம்பழுத்து அற்று. (101—8)

50. சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் ; அதனால்
உழந்தும் உழவே தலை. (104—1)

## அறநெறிச் சாரம்—முனைப்பாடியார்

1. **கீழ்மகன் அறிவுரை கேளான்**

வைகலும் நீருள் கிடப்பினும் கல்லிற்கு
மெல்லென்றல் சால அரிதாகும்—அஃதேபோல்
வைகலும் நல்லறம் கேட்பினும் கீழ்கட்குக்
கல்லினும் வல்லென்னும் நெஞ்சு.

2. **நடுநிலை காணுதல்**

காய்தல் உவத்தல் அகற்றி ஒருபொருட்கண்
ஆய்தல் அறிவுடையார் கண்ணதே—காய்வதன் கண்
உற்றகுணம் தோன்றா தாகும் உவப்பதன்கண்
குற்றமும் தோன்றாக் கெடும்

3. **சினம் போக்கிக் குணம் கொள்க**

உயிரும் உடம்பும் பிரிவுண்மை உன்னிச்
செயிரும் சினமும் கடிந்து—பயிரிடைப்
புற்களைந்து நெற்பயன் கொள்ளும் ஒருவன்போல்
நற்பயன் கொண்டிருக்கற் பாற்று.

4. **கல்வியின் தேவை**

எப்பிறப் பாயினும் ஏமாப்பு ஒருவற்கு
மக்கட் பிறப்பில் பிறிதில்லை—அப்பிறப்பில்
கற்றலும் கற்றவை கேட்டலும் கேட்டதன்கண்
நிற்றலும் கூடப் பெறின்.

5. **தற்புகழ்ச்சி கூடாது**

பலகற்றோம் யாமென்று தற்புகழ வேண்டா
அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையும் காக்கும்
சிலகற்றார் கண்ணும் உளவாம் பலகற்றார்க்கு
அச்சாணி அன்னதோர் சொல்

6. **பொறுமை சிறந்தது**

எள்ளிப் பிறர்உரைக்கும் இன்னுச்சொல் தன் நெஞ்சில்
கொள்ளி வைத்தால்போல் கொடிதெனினும்— மெள்ள
அறிவென்னும் நீரால் அவித்தொழுக லாற்றின்
பிறிதொன்றும் வேண்டா தவம்.

7. **அறம் ஆற்றல் சிறந்தது**

ஒன்ருக நல்லது உயிர்ஓம்பல் ஆங்கதன்பின்
நன்ருய்ந்து அடங்கினுர்க்கு ஈத்துஉண்டல்— என்றிரண்டும்
குன்ருப் புகழோன் வருகென்று மேலுலகம்
நின்றது வாயில் திறந்து.

## கதைப்பகுதி

**பாரதி வாழ்வு** :—அ. மு. பரமசிவானந்தம்

1. சிறந்திடு வளம் நிறைந்த செம்மையாம் பதியில் இந்த
விரிந்திடு புவனம் உய்ய வீரமே சிறந்து ஓங்க
அறந்தழைத்து அருள் கொழிக்க ஆண்டவன் அருள் நிலைக்க
பறந்திடத் தீமை யாவும் பறந்திடப் பழியும் கூடே

2. வந்தவ தரித்தான் நம்மை வாழ்விக்க வந்த மெய்மைச்
சுந்தர நாதன் சொற்பேர் **சுப்பிர மணியன்** மேலே
அந்தரர் முழங்க அன்னை அரும்வயி றகன்று இந்த
நந்தமிழ் உலகம் வந்தான் **நற்சின்ன சாமி** மைந்தன்

3. அந்தணன் குலத்தோனுக அவதரித் ததனுல் அன்னை
தந்தையும் அவற்கு வேண்டும் சாற்றிடு கடன் முடித்தார்

வந்தவன் தமக்கு அந்த வாய்ப்பட்டம் வேண்டாம் என்றே
முந்திவந் தனைவ ருக்கும் மொழிந்துயர் வழியை ஈந்தான்

4. தாயினை மூன்றி ரண்டு தனிப்பரு வத்தே நீத்த
சேயனும் இளமை தன்னில் தித்திக்கக் கவிபு னைந்து
மேயின அடிக ளெல்லாம் வேண்டிய இடத்த மைத்து
ஆயதன் அறிவைக் காட்டி அருவிளை யாடல் செய்தான்

5. கவிபுனை திறத்தைக் கண்ட கற்றறி புலவர் பல்லோர்
நவின்றிடு கூட்டம் ஒன்றில் நன்றெனப் புவியி சைக்க
உவகையின் கரையை நண்ணி உயர்ந்திடு பாரதிப் பேர்
அவன்தனக் களித்தார் அண்ணல் அன்று தொட் டதைத் தரித்தான்

(வேறு)

6. இவ்வாறு பதினைந்தாண் டெய்தியபின் இவரினிய
மெய்வாய்மைத் தந்தையரும் மிளிர்கடையம் திருப் பதியில்
உய்வாராய்ச் செல்லப்பா உயர்பெயராய் உடையவரின்
மெய்வாழ்வின் பயனுய மென்மொழியை மணனேர்ந் தார்

7. வேதியர்தந் திருமுறையால் வேதநெறி வழிமுறை யால்
ஓதியதோர் நியதியினுல் உயர்மணமும் உவகையுடன்
காதலனும் காதலியும் கருத்தமைக்க நிறைவேற்றி
மாதருடன் இவனிருக்க மனங்களித்தார் தந்தையரும்

8. மனங்கனிந்த தந்தையரும் மறுவாண்டே மேலுலகை
மனம்விழைந்து உடன்அகன்றார் மனம்வருந்தி நம்மவனும்
இனம்பொறுக்கக் கடனாற்றி இன்பநிறை மெய்க் காசித்
தனிப்பதிக்குச் செல்வதற்கே தானும்உடன் புறப் பட்டான்

9. வடகாசிப் பதியடைந்து வண்தமிழாங் கில்லையெனும்
திடமான கொள்கையினால் சேர்ந்தபுகழ் ஆரியத்தை
நெடிதான விரைவதனில் நிகரில்லா வகைபயின்று
திடமான மனதுடனே தன்பதிக்கு விரைந்தணைந்தான்

10. ஆண்டுசில நாளிருந்து அழகியமா சென்னைநகர்
வேண்டியகன் றங்குறைந்து விரிந்ததமிழ்ப் பத்திரிகை
நீண்டதொரு ஆயுளுடை நேர்சுதேச மித்திரனின்
தூண்டியநற் றுணைத்தலைவன் எனச்சின்னாள் துளங்கி நின்றான்

11. இவ்வாறு நிகழ்பொழுதில் இருஞ்சிறையைப் பலரை டையும்
ஒவ்வாத மாறுதலும் உதித்திடலும் நம்தலைவன்
செவ்வான மதியமெனத் திகழ்ந்திடுதல் வேண்டு தலால்
இவ்வாழ்வு தனைவிட்டு எழிற்புதுவைப் பதியடைந் தான்

12. புதுவை நகர் தனிலமர்ந்து புரிந்தபல தமிழ்த்தாயின்
விதவிதமாம் இன்னலங்கள் மேவும்வண்ணம் ஆற்று வித்தான்
மதுவெனவே மனம்களிக்கும் மாண்கவிகள் மாநிலத்து
இதுஇதுவே நிகர்க்குமென இயற்றியிசை இயற்றி யிட்டான்

(வேறு)

13. கருங்கடற் றிரைகள் கணக்கிலா தனவாய்க்
காண்தொறும் இன்பமே பயக்கும்
பெரும்பயன் தருநற் புதுவைமா நகரின்
பேரெழில் கூறிடின் அடங்கா
திருவமர் பதியில் செல்வநம் கவிஞன்
தீமையே அற்றதோர் மனத்தான்
ஒருமையும் பன்மை உண்மையும் ஒருங்கே
ஓங்கிடப் பலகலை வகுத்தான்

14. சொந்தநற் பதியைக் கண்டிடல் வேண்டித்
தூண்டிய மனத்துடன் புதுவை
நன்னகர்த் தாண்டி நாடிடக் கடலூர்
நல்லவன் அவனையே கைதி
என்னவே அழைத்தார் இவனுமே சென்றான்
என்னினும் விடுதலை யடைந்து
முன்னினும் பல்வேறு இன்பமெய்க் கவிகள்
மூண்டிடத் தன்னகர் அடைந்தான்

15. ஓர்சில நாட்கள் உறைந்தவண் அகன்று
உயர்ந்திடு சென்னையில் விருப்ப
மீர்வது கொண்டு மெலிந்த நல்யாக்கை
மென்மையும் நோக்கிடாது அன்பு
ஈர்வது தன்னால் இன்பமாய்ச் சென்னை
எய்தியே முன்புரிந்தது போல்
சீர்முறைத் தொண்டைச் செம்மையாய் ஏற்றுச்
சிறப்புடன் இயற்றிடு நாளில்

16. ஆயிரத் தோடு ஒன்பது நூறு
அமைந்ததோடு இருபதின் ஒன்று
மேயதோ ராண்டின் மேலொரு எட்டோடு
ஆகிய மதியமும் சேர

தூய ஒன்றோடு துதைத்ததோர் பத்தும்
  தோன்றிய நாளிலே கவிஞன்
தீயதென் றுலகை எண்ணியோ ஏனோ
  தீர்ந்தனன் தீர்ந்தனன் கண்டீர்

17. இருபதாம் நூற்றாண் டின்றமிழ்க் கவியாம்
  இன்பநல் ஊற்றுமா மென்றே
ஒருவரோ பல்லோர் உளத்தமைத் தேத்தும்
  உத்தமன் உலகினை அகன்றான்
பெருமையே தந்தான் ! பெற்றனள் அன்னை !
  பெற்றனர் உயர்ந்திடு மக்கள் !
அருமையாய் வாழ்வாள் அழகுடன் பொலிவாள்
  அன்புடன் வளர் தமிழ்த்தாயே !

## பல்சுவைப் பகுதி

### 1. அந்தகக்கவி வீரராகவ முதலியார்

இம்பர்வா னெல்லை யிராமனை யேபாடி
  என்கொணர்ந்தாய் பாணாநீ என்றாள் பாணி
வம்பதாங் களபமென்றேன் பூசு மென்றாள்
  மாதங்க மென்றேன் யாம்வாழ்ந்தோ மென்றாள்
பம்புசீர் வேழமென்றேன் தின்னு மென்றாள்
  பகடென்றே னுழுமென்றாள் பழனந் தன்னைக்
கம்பமா வென்றே னற்களியா மென்றாள்
  கைம்மா வென்றேன் சும்மா கலங்கினாளே.

### 2. இராமச்சந்திரக் கவிராயர்

கல்லாத வொருவனைநான் கற்றா யென்றேன்
  காடெறியு மறவனை நாடாள்வா யென்றேன்
பொல்லாத வொருவனை நானல்லா யென்றேன்
  போர் முகத்தை யறியானைப் புலியே றென்றேன்

மல்லாரும் புயமென்றேன் சூம்பற் றேளை
　　வழங்காத கையனைநான் வள்ள லென்றேன்
இல்லாது சொன்னேனுக் கில்லை யென்றான்
　　யானுமென்றன் குற்றத்தா லேகின் றேனே !

## 3. ஔவையார்

பெரியது கேட்கின் எரிதவழ் வேலோய்
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு
நான்முகன் கரியமால் உந்தியில் உதித்தோன்
கரிய மாலோ அலைகடற் றுயின்றோன்
அலைகடல் குறுமுனி யங்கையில் அடக்கம்
குறுமுனியோ கலசத்திற் பிறந்தோன்
கலசமோ புவியிற் சிறுமண்
புவியோ அரவினுக் கொருதலைப் பாரம்
அரவோ உமையவள் சிறுவிரல் மோதிரம்
உமையோ இறைவர் பாகத் தொடுக்கம்
இறைவரோ தொண்ட ருள்ளத் தடக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே.

## 4. சத்திமுற்றப்புலவர்

நாராய் நாராய் செங்கால் நாராய்
பழம்படு பனையின் கிழங்குபிளந் தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்
நீயுநின் மனைவியுந் தென்றிசைக் குமரியாடி
வடதிசைக் கேகுவீ ராயின்
எம்மூர்ச் சத்திமுற்றத்து வாவியுள் தங்கி
நனைசுவர்க் கூரைக் கனைகுரற் பல்லி
பாடுபார்த் திருக்கு மெம்மனைவியைக் கண்டு
எங்கோன் மாறன் வழுதி கூடலில்
ஆடை யின்றி வாடையில் மெலிந்து

கையது கொண்டு மெய்யது பொத்திக்
காலது கொண்டு மேலது தழீஇப்
பேழையு ளிருக்கும் பாம்பென வுயிர்க்கும்
ஏழை யாளனைக் கண்டனம் எனுமே.

**5. இராமசாமிக் கவிராயர்**

முன்னொரு வூரின் பேரா முதலெழுத் தில்லா விட்டால்
நன்னகர் மன்னர் பேரா நடுவெழுத் தில்லா விட்டால்
கன்னமா மிருகத் தின்பேர் கடையெழுத் தில்லா விட்டால்
உன்னிய தேனின் பேரா மூரின்பேர் விளம்பு வீரே.

# குறிப்புரை

## வாழ்த்துப் பகுதி

**தாயுமானவர் :** இவர் தஞ்சை மாவட்டத்திலுள்ள திருமறைக்காட்டி லிருந்த கேடிலியப்பப் பிள்ளையின் குமாரராவர். தமிழ், வடமொழி இரண்டிலும் நல்ல தேர்ச்சியுடையவர். அக்காலத்தில் தமிழ்நாட்டை யாண்டிருந்த விசயரங்க சொக்கநாத நாயகர் என்பாரிடத்தில் அரசாங்கப் பணியை அவர் வேண்டுகோளின்மேல் ஏற்றுநடத்தி வந்தார். அரசன் இறந்த பின்னர் இராமநாதபுரத்தை யடுத்துள்ள தேவை என்னும் ஊரின் கண் தங்கியிருந்தார். அக்காலத்தே மணம் செய்து கொண்டார்; ஓர் ஆண் மகவும் பிறந்தது. மனைவியார் இறந்த பின்னர் தம் ஞான குருவான மௌனசாமிகள் கருத்துப்படித் துறவறம் பூண்டிருந்து இறையடி சேர்ந்தார்.

துய்யன் = பரிசுத்தன்
துலங்கும் = விளங்கும்
நொய்யன் = அற்பன்
புறம் விடின் = பாது காவாவிடின்

**குலசேகரர் :** இவர் கொல்லி நகர்க் காவலராகப் பிறந்து, அரசு செலுத்தித் திருமாலன்பில் திளைத்திருந்தார். ஒரு சமயம் 'இராமன் இராட்சதர்களோடு போர்புரியத் தன்னந் தனியனாய்ச் சென்றான்' என்று பாகவதர் சொல்ல, உடனே தன் சதுரங்க சேனையையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டார். அது கண்ட அமைச்சர்கள் எதிரே வந்து 'இராமன் இராட்சதர்களை வென்று மீண்டான்,' என்று சொல்ல இவரும் மீண்டார். ஒரு சமயம் அமைச்சர்கள் திரு வாபரணத்தை எடுத்து மறைத்து விட்டு, அடியார்கள் மேற் பழிசுமத்த, அஃதறிந்த குலசேகரர் உண்மையை வெளிப்படுத்தி, அரசாங்கத்தில் வெறுப்புற்றுத் தம் மைந்தர்க்கு முடிசூட்டித் திருவரங்கம் சேர்ந்து வாழ்ந்து இறையடி சேர்ந்தார்.

நீள்வயல் = பெரிய வயல்
என்பால் = என் பக்கம்
பற்று = பிடிப்பு, ஆதாரம்
கோல் = செங்கோல், அரசு

**பாரதியார் :** தேசீயகவி சுப்பிரமணியபாரதியார்

நிரந்தரம் = எப்போதும்
வண்மொழி = வளம் சிறந்த மொழி
கலி = துன்பம், வறுமை
தொல்லை = பழமை, துன்பம்
சுடர்க = விளங்குக

## நீதிப்பகுதி

### திருக்குறள்

1. உவமை = ஒப்பு
   தாள் = பாதம்
   அரிது = இயலாது

2. ஆழி = கடல்
அந்தணன் = அருள்வடிவான இறைவன்
பிற = பிறவாகிய பொருளும் இன்பமும்

3. விசும்பு = ஆகாயத்தின் கண்ணுள்ள மேகம்
துளி = மழைத்துளி (விசும்பு : ஆகுபெயர்)

4. குணம் = துறவு, மெய்யுணர்வு, அவாவின்மை முதலிய நற்குணங்கள்
வெகுளி = கோபம்
கணம் = நொடிப் பொழுது
காத்தல் = தடுத்தல்

5. ஒல்லும் வகையால் = தம்மாலியன்ற விதத்தால்
அறவினை = அறமாகிய நல்வினை
ஓவாதே = ஒழியாமல் (எப்போதும்)

6. அறத்தான் வருவதே = இல்லறத்தோடு பொருந்தி வருவதே
மற்ற எல்லாம் = அவ்வின்பத்தோடு பொருந்தாது வருவன எல்லாம்
புறத்த = இன்பத்துக்குப் புறம்பான துன்பமாம்

7. ஆருயிர் = பெறுதற்கரிய மக்களுயிர்
என்போடு இயைந்த = உடம்போடு உண்டாகிய
அன்போடு இயைந்த வழக்கு = அன்போடு பொருந்துவதற்கு வந்த நெறியின் பயன்

8. அன்பின் வழியது = அன்பு முதலாக அதன் வழி நின்ற உடம்பே
உயிர்நிலை = உயிர் உள்ள உடம்பாகும்
என்பு = எலும்பு

9. அகன் அமர்ந்து = மனம் உவந்து
முகன் அமர்ந்து = இன்முகம் உடையவன் ஆகி

10. அல்லவை = பாவங்கள்
தேய = குறைய

நல்லவை = நன்மை பயக்குஞ் சொற்கள்
நாடி = ஆராய்ந்து

11. காலத்தினல் செய்த = அழிவு நேர்ந்துழிக் காலம் அறிந்து செய்த
நன்றி = உபகாரம்
ஞாலத்தின் = (அளவான்) இந் நில வுலகத்தைக் காட்டிலும்

12. தினைத்துணை = தினை யளவான (மிகச் சிறிய அளவு)
நன்றி = உபகாரம்
பனைத்துணை = பனை யளவு (மிகப் பெரிய அளவு)

13. நன்றே தரினும் = நன்மையையே தந்தாயினும்
நடுவு இகந்து = நடுநிலை யொழிந்து நிற்றலால்
ஆம் = உண்டாகின்ற
ஆ ம = செல்வம்
அன்றே = அப்பொழுதே

14. இழுக்கு = குற்றம்
சோகாப்பர் = துன்புறுவர்

15. விழுப்பம் = சிறப்பு
ஓம்பப்படும் = பாதுகாக்கப்படும்

16. ஒறுத்தல் = தண்டித்தல்
பொன்றுந் துணையும் = உலகம் அழியும் வரையும்

17. அழுக்கறு = (அழுக்காற்றை) பொருமையைச் செய்து
அகன்ருர் = பெரிய ராயினர்
அஃதில்லார் = அவ்வழுக்கா றில்லாதார்
தீர்தல் = நீங்குதல்

18. வெஃகா = பிறர் பொருளை விரும்பாத
திரு = திருமகள் (செல்வம்)
திறன் அறிந்து = தகுதி யறிந்து

19. ஏதிலார் = அன்னியர் ; பகைவர்
மன்னும் உயிர் = நிலைபேறுடைய உயிர்

20. பயன் இல் சொல் = பயனில்லாத சொற்களை
பாராட்டுவானை = பல காலுஞ் சொல்லுவானை
மகன் எனல் = மகன் என்று சொல்லற்க
மக்கட்பதடி எனல் = மக்களுள் பதர் எனக் கூறுக

21. தீயவை = தீவினைகள் ; கொடுஞ் செயல்கள்
தீய பயத்தல் = துன்பந் தருதல்

22. பிறன்கேடு = மற்றவர்க்குக் கேடுபயக்கும் வினையை
சூழற்க = எண்ணு தொழிக
அறம் = அறக் கடவுள்

23. பயன்மரம் = எல்லோர்க்கும் பயன்படும் மரம்
உள்ளூர் = ஊர் நடுவே
பழுத்தற்றால் = பழுத்ததை யொக்கும்
நயன் உடையார் கண்படின் = ஒப்புரவு செய்வாரிடத்தே உண்டாகுமாயின்

24. மருந்தாகி = எல்லாவுறுப்பும் பிணிதீர்க்கும் மருந்தாகி
மரத்தற்றால் = மரத்தினை யொக்கும்
பெருந்தகையான் = ஒப்புரவு செய்யும் பெருந்தன்மையுடையவன்

25. வறியார் = ஒரு பொருளும் இல்லாதார்
குறியெதிர்ப்பு = அதே அளவான பதிலுதவி
நீரதுடைத்து = தன்மையுடையது

26. ஒன்று = தனக்கு இணை யில்லாத
பொன்றுது = அழியாது

27. வசை = பழி
இசை = புகழ்

28. அருட்செல்வம் = அருளால் வரும் செல்வம்
பூரியார் = இழிந்தார்

29. அவ்வுலகம் = வீட்டுலகம்
இல்லாகி யாங்கு = இல்லாததைப் போல

31. புறந்தூய்மை = வெளி உடலினது சுத்தம்
அகம் = உள்ளம்
வாய்மை = உண்மை

32. சேர்ந்தாரைக் கொல்லி = நெருப்பு
இனம் = துறவோர்க்குத் துணையாக வுள்ள அருள் பொறை, ஆசாரம் முதலியன
ஏமம் = பாதுகாவல்
புணை = தெப்பம்

33. இன்னா = துன்பம்
ஒறுத்தல் = தண்டித்தல்
அவர் நாண = அவர் வெட்கும்படி
நல் நயம் = இனிய பயக்கும் நன்மைகள்

34. தன்உயிர் நீப்பினும் = தன் உயிர் நீங்கிப் போமாயினும்

35. தூஉய்மை = மனத்தூய்மையாகிய அழுக்கறுத்தல்
அவாவின்மை = எப்பொருளிலும் ஆசையின்மை
வாய்மை = உண்மை
வேண்டுதல் = எப்போதும் பயிலுதல்

36. எனைத்தானும் = சிறிதள வாயினும்
நல்லவை = உறுதிப் பொருள்களை
அனைத்தானும் = அச்சிறிய அளவாகவாவது
ஆன்ற பெருமை = நிறைந்த பெருமை

37. ஆவது = பின்னர் வரவிருப்பதனை
அறிவர் = முன்னதாகவே அறிந்து கொள்ளக் கூடியவர்

38. நல்லினம் = சான்றோர்
ஊங்கு = மிக்க

தீயினம் = கீழோர்
அல்லல் = துன்பம்

39. எண்ணி = ஆராய்ந்து
துணிக = தொடங்குக
கருமம் = செயல்
இழுக்கு = குற்றம்

40. ஞாலம் கருதினும் = உலகமுழுவதையுந்தானே ஆள எண்ணினும்
கைகூடும் = இயலும்
காலங் கருதி = தக்க காலத்தை அறிந்து

41. திரு = செல்வம்
இன்மை = வறுமை
முயற்று இன்மை = முயற்சி இல்லாமை

42. தொழில் = சொல்லப்படுங் காரியங்களை
நிரந்து = நிரல்படக் கோத்து
ஞாலம் = உலகம்
கேட்கும் = ஏற்றுக்கொள்ளும்

43. எண்ணிய = அடைய விரும்பிய பொருள்களை
எய்துப = அடைவர்
திண்ணியராகப் பெறின் = ஏற்ற மனவுறுதி உடையவராயிருந்தால்

44. இல்லார் = செல்வமில்லாதவர்
எள்ளுவர் = இகழுவர்

45. முகம்நக = உள்ளத்தானன்றி முகம் மாத்திரமே மலரும் வகை
நெஞ்சத்தகம் நக = அன்பால் உள்ளமும் மலர

46. அற்றால் = முன்னர் உண்ட உணவு அற்றுப் போனால்
நெடிது = நெடுங்காலம்
உய்க்கும் ஆறு = செலுத்துதற்குரிய வழி

47. பெருக்கத்து = பொருட் பெருக்கமுடைய போது
சிறிய சுருக்கத்து = செல்வங் குறைந்த நல்குரவு உள்ள போது
உயர்வு = நற்பண்புகள் குறையாதிருத்தல்

48. அற்றம் = மறைக்கத் தக்கன (அவமானம் முதலியன)
பெருமை = பெருமை யுடையார்
சிறுமை = சிறுமை யுடையார்

49. நச்சப்படாதவன் = மற்றவரால் விரும்பப்படாதவன்
நச்சு = நஞ்சு

50. சுழன்றும் = பல தொழில்களைச் செய்து திரிந்தும்
ஏர்ப்பின்னது = உழுதொழி லுடையார் வழியதாயிற்று
உழந்தும் = பலவாறு வருத்த முற்றும்

## அறநெறிச்சாரம்

1. வைகலும் = நாள்தோறும்
மெல்லென்றல் = மென்மைத்தன்மை யடைதல்
சால அரிதாகும் = ஒரு சிறிதும் இல்லை
நல்லறம் = சிறந்த அறநூல்களை
கீழ்கட்கு = கயவர்களுக்கு
வல்லென்னும் = கடினமானதா யிருக்கும்

2. காய்தல் = வெறுப்பு
உவத்தல் = விருப்பு
அகற்றி = நீக்கி
ஆய்தல் = ஆராய்தல்
தோன்றாக் கெடும் = தோன்றாது மறையும்

3. பிரிவு உண்மை = பிரிவது தவறாது
உள்ளி = அறிந்து
புல்களைந்து = களை போக்கி
செயிர் = மயக்கம் ; குற்றம் ; சினம், கோபம்

கடிந்து = நீக்கி
நற்பயன் கொண்டு = இன்பத்துக் கேதுவான நல்வினையை மேற்கொண்டு

4. எப்பிறப்பாயினும் = வேறு எந்த வகைப் பிறவியானலும்
ஏமாப்பு = இன்பந் தருவது
பிறிது இல்லை = வேறு இல்லை

5. அலர் கதிர் = பரந்த கிரணங்களையுடைய
ஞாயிறு = சூரியன்
அச்சாணி யன்ன = இன்றி யமையாத,
சொல் = உறுதி பயக்கும் சொல்

6. எள்ளி = இகழ்ந்து
இன்னச் சொல் = கடுஞ்சொல்
கொடிது = துன்பந் தருவது

7. ஒன்றுக நல்லது = ஒப்புயர்வற்றுச் சிறந்தது
ஆய்ந்து = அற நூல்களை நன்கு ஆராய்ந்து
அடங்கினர் = ஐம்புல னடக்கிய பெரியோர்
ஈத்து = உண்டி முதலியன கொடுத்து
இரண்டும் = இரண்டினலும்
குன்றுப் புகழோன் = குறையாத சிறப்பினையுடையவனை

## கதைப்பகுதி

### பாரதி வாழ்வு

புவனம் = உலகம்
உய்ய = பிழைக்க
அவதரித்தான் = பிறந்தான்
அந்தரர் = தேவர்
கடன் = உபநயனம் முதலியன

நீத்த = இழந்த
சேயன் = மகன்
கவி புனை திறம் = செய்யுளியற்றும் ஆற்றல்
உவகை = மகிழ்ச்சி
நண்ணி = சேர்ந்து
மிளிர் = விளங்குகின்ற
மணம் நேர்ந்தார் = மணம்செய்து கொண்டார்
மதியம் = மாதம்

## பல்சுவைப் பகுதி

1. இம்பர் = இப்பூவுலகம்
வான் = தேவருலகம்
எல்லை = தன் புகழுக்கு எல்லையாகக் கொண்ட
பாணி = பாணன் மனைவி
வம்பதாம் = புதிதாகிய
களபம் = யானை ; சந்தனம்
மாதங்கம் = யானை ; மிகுந்த பொன்
பம்புசீர் = மிக்க சிறப்பினையுடைய
வேழம் = யானை ; கரும்பு
பகடு = யானை ; எருது
பழனம் = கழனி
கம்பமா = யானை ; கம்பம்மாவு
கைம்மா = யானை
கலங்கினாள் = திகைத்தாள்

2. காடுஎறியும் = காட்டை வெட்டும்
மறவன் = வேடனை
நல்லாய் = நற்குண முடையவனே
புலியேறு = ஆண் புலி
மல் ஆரும் = மற்போர் புரியும்
சூம்பல்தோள் = தேய்ந்து ஒடுங்கிப் போன தோள்

வள்ளல் = இல்லை யென்னாது வாரிக் கொடுப்பவன்
இல்லாது = இல்லாத பொய்ப் புகழ்ச்சி
ஏகின்றேன் = செல்லுகின்றேன்

3. எரிதவழ் = வெம்மை பொருந்திய
நான்முகன் = பிரமன்
மால் = திருமால்
உந்தி = உந்திக் கமலம்; கொப்பூழ்
குறுமுனி = அகத்தியர்
கலசம் = கும்பம்
புவி = பூமி
அரவு = பாம்பு
உமை = பார்வதி
இறைவர் = சிவபெருமான்
தொண்டர் = சிவனடியார்

4. பழம்படு = கனி பொருந்திய
பவளம் = பவளம் போன்ற சிவப்பு
குமரி = கன்னியா குமரி
வாவி = குளம்
பாடு = நற்சொல்
மாறன் வழுதி = பாண்டியன்
கூடல் = மதுரை
வாடை = வடதிசைக்காற்று; குளிர் காற்று
மெய் = உடல்
பொத்தி = மூடிக்கொண்டு
பேழை = பெட்டி
உயிர்க்கும் = மூச்சு விடும்
ஏழையாளன் = எளியவன்

5. கன்னமா—விலங்கு = அருகம்புல் தின்னும் மிருகம்
விளம்பு = சொல்
மதுரை : துரை : மரை : மது—எனவே மதுரை என்னும் சொல் பற்றிய பாடல்

# அருஞ்சொற் பொருள்

**குமரிக் காட்சி**

பண்டை நாள்—முற்காலம்
ஒன்றி இயையும்—கூடிக்கலக்கும்
இலங்கியது—விளக்கமுற்றது
கவினுற—அழகு பொருந்த
விரிசடைக் கடவுள்—விரிந்த சடையையுடைய சிவ பெருமான்
குமரவேள்—முருகன்
வடிவேல்—வடித்துக் கூராக்கப் பட்டவேல்
அரண்—பாதுகாப்பு
கதிரவன்—சூரியன்

**இராமலிங்க அடிகள்**

அமுது—சாவா மருந்து. (நல்லுணவு)
நண்பகல்—நடுப்பகல்
பேற்றை—அடையும் நலன் (பாக்கியம்)
துணைவியார்—மனைவியார்
பேரவா—மிக்க விருப்பம்
இல்லற நெறி—இல்வாழ்க்கையின் ஒழுக்கம்

**ஜகதீச சந்திர போஸ்**

அருளுள்ளம்—இரக்க மனது
சேணம்—குதிரை ஏற்றத்திற்குரிய கால்பிடி
அணுகினர்—நெருங்கினர்

**காஷ்மீரம்**

சரிவில்—மலைச்சரிவில்
கலைத்திறன்—கலையின் வேலைப்பாடு

பருகுபவர்கள்—உண்பவர்கள்
இயற்கை எழில்—இயற்கை யழகு
நுண்கலை வல்லவர்—நுட்பக் கலைஅறிஞர்

**கம்பரும் சடையப்ப வள்ளலும்**

கோட்டம்—மாவட்டம்
வேளாண் தொழில்—உழவுத் தொழில்
அரியணை—அரச பீடம்
கவிக்க—சூட
இருவர்—பரத சத்துருக்கனர்
மௌலி—முடி

**முன்னேற்றப் பாதை**

செம்மை நிலை—செழிப்பு நிலை
உரம்—எரு
செப்பம்—அழகுத் திறம்
பெருக்கம்—மிகுதி
எழுபதின்மர்—எழுபதுபேர் (ஏழு பத்துப் பேர்)
செப்பனிடுதல்—சீர்திருத்தல்
தரிசுநிலம்—பயிரிடாநிலம்

**ஆனந்தரங்கப் பிள்ளை**

துவிபாஷியாக—இரு மொழி வல்ல மொழி பெயர்ப்பாளனாக
மன் சுபேதார்—அரசனுக்குக் கட்டுப்பட்ட மேலதிகாரி
புரவி—குதிரை
நீலம்—வான்நிறம் (கடல் நிறம்) Blue
பூசல்—குழப்பம்

# நமது தமிழ் வாசகம்

## இரண்டாம் புத்தகம்

### சிறப்புப் பகுதி

ஆசிரியர்
சென்னை பச்சையப்பன் கல்லூரித் துணைத்தமிழ்ப் பேராசிரியர்
அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட்.

மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட்
மதராஸ் பம்பாய் கல்கத்தா லண்டன்
1954

# முன்னுரை

இந்தியா விடுதலை பெற்றபின் தாய்மொழியானது கல்வித் திட்டத்தில் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றுவிட்டது. தத்தம் மொழியை வளர்க்க வேண்டும் என்ற ஆர்வம் அவ்வப்பகுதியில் உள்ள மக்கள் உள்ளத்தில் உண்டாயிற்று. சென்னை அரசாங்கத்தார் மக்கள் ஆர்வத்தை அறிந்து, இப்பகுதியில் உள்ள மொழிகளை வளர்க்க வழி பல வகுத்தனர். அவற்றுள் ஒன்று பாடநூல்களைத் திருத்தி அமைக்கும் முறை.

தமிழ்ப்பாடதிட்டத்தை அமைப்பதற்காக சென்னை அரசாங்கத்தார் 1951-ஜூன் 26ம் நாள் ஒரு திருந்திய முறையை சென்னை கெஜட்டில் பிரசுரம் செய்தனர். அதில் உயர்தர பாடசாலைகளின் முதல் மூன்று பாரங்களில் தமிழ்ப் பாடம் பொது, சிறப்பு என இருவகையாகப் பிரிக்கப்பட்டு, அவ்வவற்றிற்கு உரிய அமைப்புகளும் விளக்கப்பட்டன, அத்திட்ட முறைப்படி இதுவரை தமிழ்ப் பாடநூல்கள் வெளி வருகின்றன.

சென்னை மாக்மில்லன் கம்பெனியார் அப்பாடதிட்டத்தின் அடிப்படையில் முதல் மூன்று பாரங்களுக்குத் தமிழ் நூல்கள் வெளியிட விரும்பினர், அவர்தம் விருப்பமே இந்த நூற்றொகுதியாக வருகின்றது. மூன்று பாரங்களுக்கும் பொது, சிறப்பு என்ற தனித்தனிப்பகுதிகள், அரசியலார் வரம்பு கடவாத வகையில் அமைக்கப்பட்டு வெளிவருகின்றன. இப்பாடநூல் வரிசை மாணவர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்ற துணிபுடையேன்.

பாடசாலைகளின் தலைவர்களும் தலைமை ஆசிரியர்களும், தமிழாசிரியர்களும் இந்த நூற்றொகுதியை ஏற்று ஆதரிக்கக் கேட்டுக்கொள்ளுகிறேன். இத்துறையில் என்னை ஊக்கிய மாக்மில்லன் கம்பெனியாருக்கு என் நன்றி.

ஆசிரியன்.

# பொருளடக்கம்


| பாடம் | | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | தமிழ்ப் பெரியார் | .. .. | 5 |
| 2. | வாழை மரம் | .. .. | 17 |
| 3. | சேரன் செங்குட்டுவன் | .. .. | 27 |
| 4. | ஆபுத்திரன் | .. .. | 39 |
| 5. | தூது நடந்த மூதாட்டி | .. .. | 50 |
| 6. | பொங்கல் விழா | .. .. | 65 |
| | செய்யுள் பகுதி | .. .. | 73 |
| | நீதிப் பகுதி | .. .. | 74 |
| | கதைப் பகுதி | .. .. | 77 |
| | பல்சுவைப் பகுதி | .. .. | 79 |
| | குறிப்புரை | .. .. | 81 |
| | அருஞ்சொற் பொருள் | .. .. | 90 |


---

*பாரதியாரின் பாடல் அரசாங்கத்தின் அனுமதி பெற்று சேர்க்கப்பட்டுள்ளது. அனுமதிக்கு அரசாங்கத்திற்கு நன்றி.*

# 1. தமிழ்ப் பெரியார்

துள்ளம் என்பது ஒரு சிற்றூர்; அது சென்னையி லிருந்து பத்துக் கல் தூரத்தில் உள்ளது; செங்கற்பட்டு



*Courtesy: S. I. S. S. P. W. Society Ltd.,*

திரு. வி. கல்யாணசுந்தரனார்.

மாவட்டத்தைச் சேர்ந்தது. அவ்வூரில் விருத்தாசல முதலி யார் என்னும் ஒருவர் இருந்தார். அவர் தமிழிலக்கியப்

பயிற்சியும், இசைப் பயிற்சியும் உடையவர். ஆசிரியத் தொழிலேயும், வாணிபத்தையும் தம் வாழ்க்கைத் தொழில் களாகக் கொண்டிருந்தார். அவர், பச்சையம்மாள் என் னும் மங்கை நல்லாளே மணந்து இல்லறம் நடத்திவந்தார். அவ் வம்மையார் மூவர் மைந்தரையும், ஒரு மகளேயும் பெற்ற பின்னர் இவ்வுலக வாழ்வை நீத்தார். பின்னர் சின்னம்மை என்னும் பெண்ணரசியை, முதலியார் தம் இரண்டாவது மனேவியாகக் கொண்டார். இவர் நால்வர் மைந்தரையும், நால்வர் மகளிரையும் ஈன்றெடுத்தார். இச் சின்னம்மையார் திருவயிற்று வந்த நால்வருள் ஒருவரே தமிழ்த்தாயின் தவப்புதல்வரான தமிழ்ப் பெரியார் திரு. வி. கல்யாணசுந்தரனர். இவர் 1883-ம் ஆண்டில், துள்ளத் தில் பிறந்தார்; தம் முன்னேர்கள் திருவாரூரிற் பிறந்தவர் கள் ஆதலால் திரு என்னும் தொடரைத் தம் பெயர் முன்னர் அமைத்துக் கொண்டார்.

கல்யாணசுந்தரனர் அவர் தந்தையாருக்கு ஆருவது குழந்தை. அவருக்கு முன் பிறந்தவர் உலகநாதர் என்பவர் ஆவர். கல்யாணசுந்தரனர் அவரிடம்தான் அதிக பற்றுக் கொண்டிருந்தார். அவரும் கல்யாணசுந்தரனரிடமே பற்று மிக்குடையோரா யிருந்தார். இவ்விருவருமே அக்குடும்பத் துள் தமிழ் நாட்டிற்கு அறிமுகமானவர்கள். உலகநாதர் தம் தம்பியாரிடம் அதிக அன்புடையவரா யிருந்ததைப் போலவே மிக்க நன்மதிப்புடையவராயு மிருந்தார். இவ் விருவர்தம் அன்பின் பிணேப்பே இருவரையும் இறுதிவரை இணேபிரியாதிருக்கச் செய்தது.

கல்யாணசுந்தரனர் இளமையில் உடல் வளம் வாய்ந் தவராகவே இருந்தார். அறிவு செழித்தவராகவும் திகழ்ந் தார். பள்ளிப் பருவத்தை யடைந்ததும், பெற்ருேர் இவரைப் பள்ளிக் கனுப்பி வைத்தனர். அவரும் மிகவும் ஊக்கத்

துடன் படித்து வந்தார். ஒவ்வொரு வகுப்பிலும் எல்லாப் பாடங்களிலும் முதல்வராகவே விளங்கினர். நான்காண்டு கள் விரைந்து சென்றன. கல்யாணசுந்தரனும் ஐந்தாம் வகுப்பை எட்டிப் பிடித்தார். அப்போது பெரியதோர் இடர்ப்பாடு தோன்றியது. முடக்குவாத நோய் அவருடலைப் பற்றியது ; பாயும் படுக்கையும் ஆனார். பெற்றோரும் உள்ளம் உடைந்து நின்றனர். நோயும் இரண்டாண்டுகள் வரை அவரைப் பிரியாதிருந்து வருத்தி வந்தது. அவரும் மனத் தளர்ச்சி யடைந்தார். அதன் பின்னர் பற்பல மருத்துவ முயற்சிகளாற் சிறிது சிறிதாகக் குணமடையலானர். மீண்டும் பள்ளிக்குச் செல்லலாம் என்ற எண்ணமும் எழுந்தது.

அந்நிலையில் மற்றொரு பேரிடர் வந்துற்றது. அவர் தம் அருமைத் தந்தையார் விக்குள் நோய்க்கு ஆளானர் ; சிறிது நாட்களின் பின்னர் அன்னையாரும் வயிற்று நோயால் வருந்தி மருத்துவ மனையை யடைந்தார். இதற்கிடையில் அவர்தம் பாட்டனர்—விருத்தாசல முதலியாரின் தந்தை—இறைவனடி சேர்ந்தார். இன்னும் பல சொல்லொணுத் துன்பங்கள் ஒன்றன்மே லொன்றாய் வந்தடைந்தன. இவற்றால் பொருள் முட்டுப்பாடு ஏற்பட்டது. அதனால் உலகநாதரின் கல்வியும் முற்றுப் பெற்றது. கல்யாணசுந்தரனரைக் கண்காணிப்போரும், கவலையுடன் பாதுகாப்போரும் இலராயினர். ஆதலின் அவர் தம் மனம் போலச் சுற்றித் திரியலானர். மாட்டுப் பந்தயம், குதிரைப் பந்தயம், சிலம்பப் பயிற்சி முதலியவைகளில் ஈடுபடலானர். உலகநாதரோ ஓர் அச்சு நிலையத்தில் வேலைக் கமர்ந்தார். ஓரளவிற்கு ஊதியமும் வந்தது ; குடும்பத்திற்கும் பயனயிற்று.

கல்யாணசுந்தரனருக்குப் பதினைந்து வயதிருக்கலாம்; அப்போது குடும்பநிலை சிறிது சீர்பெற்றது. பெற்றோர்

அவரை மீண்டும் பள்ளியிற் சேர்த்தனர். இராயப்பேட்டையிலுள்ள வெஸ்லி மிஷன் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்து படிக்கத் தொடங்கினார். மீண்டும் அவருக்குக் கல்வியில் பெரு விருப்பம் ஏற்பட்டது; முன்னையினும் ஊக்கமாகப் பயின்றார். எல்லாப் பாடங்களிலும் முதலிடம் பெற்றார். ஆண்டு தோறும் பலப்பல பரிசுகளும் பெற்றார். அது கண்டு மகிழ்ந்த பள்ளிக்கூட நிர்வாகிகள் அவருக்கு உபகாரச் சம்பளம் அளித்து வந்தனர். இவ்வாறு ஒன்பதாம் வகுப்பு வரை முடித்துப் பத்தாம் வகுப்பிற் சேர்ந்து பயிலத் தொடங்கினார்.

அப்போது கதிரைவேற்பிள்ளை என்பார் வெஸ்லி பள்ளிக்கூடத் தமிழாசிரியராக வந்து சேர்ந்தார். அவர் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தவர்; தமிழிற் பெரும் புலமை வாய்ந்தவர். அவரது தோற்றப் பொலிவும், கல்வி நலனும், சொல்வன்மையும் கல்யாணசுந்தரனாரை ஒருங்கே கவர்ந்தன; அன்று முதல் தமிழார்வத்தால் விழுங்கப்பட்டவரானார். அவரைப்போல் தாமும் தமிழ்ப்புலமை பெற்றுத் திகழ்தல்வேண்டும் என்று உறுதி பூண்டுவிட்டார்.

கதிரைவேற்பிள்ளையவர்கள், இராமலிங்க அடிகளார் இயற்றிய அருட்பாவைக் குற்றங் கூறிக் கொண்டிருந்தார். அது பற்றி நீதிமன்றத்தில் வழக்கு நடந்துகொண்டிருந்தது. தம் ஆசிரியரிடத்துக் கொண்ட பற்றுள்ளத்தால் கல்யாண சுந்தரனாரும் வழக்கில் ஈடுபடத் தொடங்கினார். தாம் அரசாங்கத் தேர்வுக்குச் செல்லவேண்டுவதையும் பொருட்படுத்தாது வழக்கிலேயே தீவிரமாக ஈடுபட்டுவிட்டார். அத்துடன் தமிழ்ப் பற்றும், நாட்டுப் பற்றும், அவர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. பள்ளிப் படிப்பும் நிரந்தரமாக நிறுத்தப்பட்டது.

கல்யாணசுந்தரனார் பள்ளிக்கூடத்தினின்றும் நின்ற சில நாட்களின் பின்னர், விருத்தாசல முதலியார் விண்ணுல கடைந்தார். தந்தையின் பிரிவு மக்களை மிகவும் வாட்டியது. உலகநாதர், கல்யாணசுந்தரனார் இருவருக்கும் குடும்பப் பொறுப்பு அதிகரித்தது. கல்யாணசுந்தரனாரின் மிடுக்கும், துடுக்கும் இருந்தவிடந் தெரியாமற் பறந்து மறைந்தன. அவர் செய்யவேண்டிய முதற்கடமை என்னவென எண்ணினார். குடும்ப நலனுக்காகப் பொருள் தேட வேண்டுவதே முதற் பணியாக நின்றது. அவ்வாறு பொருளீட்டுதற்குத் தன்னைத் தகுதிப்படுத்திக் கொள்ள விரும்பினார். அதற்கெனக் கணக்கறிவியல் (Book-keeping) பயின்று தேர்வு பெற்றார்.

அவ்வாறு தேர்வு பெற்ற கல்யாணசுந்தரனார், அக்காலத்துச் சிறந்து விளங்கிய ஸ்பென்சர் கம்பெனியில் வேலையி லமர்ந்தார். அவ்வேலையைத் திறம்படச் செய்து வந்ததுடன், ஒய்வு நேரங்களில் தமிழிலக்கியங்களைப் பயின்றும், சமய நூற்களை ஆராய்ச்சி செய்தும் வந்தார். ஆங்காங்கே நடக்கும் இலக்கிய, சமய, அரசியற் கூட்டங்களுக் கெல்லாம் சென்று தம் அறிவை வளர்த்து வந்தார். இவ்வாறு இரண்டாண்டுகள் அமைதியாகச் சென்றன.

ஒரு சமயம் விபினசந்திரபாலர் என்னும் வட நாட்டறிஞர் சென்னை வந்திருந்தார். அவர் விடுதலை யியக்கத்தைச் சேர்ந்தவர் ; பெரிய பேச்சாளி; கடற்கரையில் ஒரு அரிய சொற்பொழிவு நிகழ்த்தினார். அதைக் கேட்டுக் கல்யாணசுந்தரனார் பெரு மகிழ்ச்சி யடைந்தார். அப்பேச்சு வெளியான செய்தித் தாளை வாங்கிச் சென்று தன்னொடு வேலைபார்க்கும் மற்றவர்க்கும் படித்துக்காட்டி விளக்கினார்; பாராட்டினார். இச்செய்தி அக் கம்பெனியின் உரிமையாளரான ஆங்கில முதலாளிக்கு எட்டியது. அது கேட்டுச்

சினங் கொண்ட அவர், கல்யாணசுந்தரனர் செயலேக் கண்டிக்கத் தொடங்கினர். ஊதியத்தினும் கொள்கையே பெரிதென மதித்த நம் பெரியார் உடனே அவ்வேலையை விட்டு விட்டு வெளியேறினர்.

குடும்ப நிலையையுங் கருதாது வேலையை விட்டு விட்டமைக்காக, உலகநாதர் தம் தம்பியை ஒரு சிறிதுங் கடிந்து கொள்ளவில்லை. அலுவல் தேடுவது பற்றியே இருவரும் சிந்தித்தனர். நண்பர் ஒருவர் உதவியுடன் அச்சகம் ஒன்றை ஏற்படுத்தலா மெனவும், கல்யாணசுந்தரனர் நூல்களெழுதி வெளியிடலா மெனவும் முடிவு கண்டனர். அதன் படியே குறிப்பிட்ட நண்பரையுங் கலந்தாலோசித்து எல்லா எற்பாடுகளும் செய்யப்பெற்றன. கல்யாணசுந்தரனரும், பெரியபுராணம், திருமந்திரம் முதலிய நூல்கட்குக் குறிப்புரை எழுதி வெளியிட்டார். அந்நூல்களைக் கற்ருர் பலரும் விரும்பி வாங்கினர். எனினும் போதிய ஆதரவு இன்மையின், பொருள் முட்டுப்பாடு காரணமாக அந்தக் கூட்டு முயற்சியுங் கைவிடப்பட்டது.

நம் பெரியார் இனி என்ன செய்யலாம் என எண்ணமிடலானர். அடிமை வாழ்வின்றித் தன் மதிப்புடன் செய்யக்கூடிய தொழில் ஆசிரியத் தொழில் ஒன்றேதான் என்று அவருள்ளத்திற் பட்டது. அதன்படியே ஆயிரம் விளக்கிற்கு அருகிலிருந்த வெஸ்லியன் பள்ளியில் ஆசிரியராக அமர்ந்தார். ஆறு ஆண்டுகள் அங்கே பணியாற்றி வந்தார். அக் காலத்தே மயிலே மகாவித்வான் தணிகாசல முதலியாரிடம் தமிழ் நூல்களையும், சைவ சாத்திரங்களையும் பாடங் கேட்டு வந்தார். அது போலவே அறிஞர் சிங்காரவேலுச் செட்டியாரிடம் டார்வின் கொள்கை, புத்தமதக் கொள்கை, பொது உடமைக் கொள்கை முதலியவை பற்றி விளக்கமாக அறிந்து கொண்டார். ஜைனம், பௌத்தம்,

இஸ்லாம், கிறிஸ்தவம் ஆகிய மதக் கோட்பாடுகளையும் நன்கு உணர்ந்தார். இவையன்றிச் சிறந்த பல ஆங்கில நூல் களையும் இரவு பகலாகக் கற்றுத் தேர்ந்தார். அக் காலத்தே தான் மணி. திருநாவுக்கரசு போன்ருருடன் சேர்ந்து சைவப் பிரசாரம் செய்து வந்தார். மேலும், மறைமலையடிகளார், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார டிகளார் ஆகியோர் நட்பைப் பெற்றதும் இக்காலத்தேதான்.

வெஸ்லியன் பள்ளியில் ஆசிரியரா யிருக்கும்போது 1912-ல் கமலாம்பிகையம்மையார் எனுங் கற்பரசியாரை மணஞ் செய்துகொண்டார். இல்லற வாழ்வும் செவ்வனே நடந்து வந்தது. இவ்விருவர்தம் இல்வாழ்க்கைப் பயனுக ஓர் ஆண் மகவும், ஓர் பெண் மகவும் தோன்றின ; எனினும் இல்வாழ்க்கை சிறக்கவில்லை. ஏன் ? இரு குழந்தைகளும் குழவிப் பருவத்திலேயே பெற்ருேரைத் தவிக்க விட்டுப் பிரிந்து விட்டனர். அது மட்டுமோ அல்லல்! இல்லை! இல்லை! அன்னை கமலாம்பிகையும் மணம் ஆன ஆருவ தாண்டிலேயே, தம் குழந்தைகளைத் தேடிச் செல்லுவார் போன்று மண்ணுலக வாழ்வைத் துறந்து மறைந்தார். பெரியாரின் இல்லறமும் நிரந்தரமாக விடை பெற்றுக்கொண்டது. மறுமணம் புரிந்து கொள்ளுமாறு எவ்வளவோ வேண்டியும் மறுத்து விட்டார். அது முதல் தாய் நாட்டையே தம் குடும்பமாகவும், நாட்டு மக்களையே தம் குடும்ப மக்களாகவும் கருதி நாட்டுப் பணியிலேயே முற்றும் ஈடுபடத் தொடங்கிவிட்டார்.

ஆயிரம்விளக்குப் பள்ளிப்பணியை 1918-ல் விட்டு விட்டார். பின்னர் இராயப்பேட்டை வெஸ்லி கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியராகப் பணியாற்றத் தொடங்கினர். ஒன்றரையாண்டுகளில் இதனையும் விட்டு விலகினர். 'தேச பக்தன்' என்ற நாளிதழின் ஆசிரியராக அமர்ந்து சிறந்த

தொண்டாற்றத் தொடங்கினர். அப்போது அவர் எழுதிய தலையங்கங்கள் எல்லோர் உள்ளத்திலேயும் பெரும் உணர்ச்சிப் புயலை உண்டாக்கிவிட்டன; தூயதமிழில் எழுதப்பெற்ற சுவை நிறைந்த இலக்கியக் கட்டுரைகளாகவும், அரசியல் அறிவுரைகளாகவும் அமைந்திருந்தன. இதில் இரண்டரை ஆண்டுகளே பணி புரிந்தார். பின்னர் தொழிலாளர் உதவியால் சாது அச்சுக் கூடத்தை நிறுவி 'நவசக்தி' என்ற வார இதழை வெளியிட்டு, அதன் வாயிலாகத் தம் தொண்டை முட்டின்றி நடத்தி வந்தார்.

இக்காலத்தேதான் வாடியா, அன்னிபெசண்டு அம்மையார் போன்றவரின் நட்புக் கிடைத்தது. அதன் பயனாகத் தொழிலாளர் சங்கத்தை ஏற்படுத்தினர். ஆசியா கண்டத்திலேயே அதுதான் முதல் தொழிலாளர் சங்கம். அச்சங்கம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ச்சிபெற்றது. அது கண்டு ஆட்சியாளர் கூட்டம் நடுங்கியது. பலவாருக இவரை எதிர்த்தது; எதற்கும் அஞ்சாமல் தம் பணியைத் தொடர்ந்து செய்து வந்தார். பக்கிங்காம் ஆலைக் கதவடைப்பு, துப்பாக்கிப் பிரயோகம், தொழிலாளர் பலி முதலிய பல இன்னல்களுக்கிடையேயும் அதனை விடாது நடத்தி வந்து, அச்சங்கத்திற்கு வெள்ளி விழாவும் நடத்தி வைத்தார். அக்காலத்தேதான் ஸர். பி. தியாகரராயர், பனகலரசர், டாக்டர் வரதராஜலு, ஈ. வெ. இராமசாமி முதலிய பெரியார்களுடன் நட்பேற்பட்டது. நீதிக்கட்சிக்கு மாறுபட்ட கொள்கையுடையவர் எனினும் இவருக்கு அரசாங்கத்தால் இடர்ப்பாடு வர விருந்தபோதெல்லாம், அவர்கள் தலையிட்டுத் தடுத்தார்கள். அதனை நம் பெரியாரே பலமுறை சொல்லிப் போற்றியதுண்டு. அரசியற் கொள்கையில் மாறுபட்டிருந்தாலும் தமிழன் என்றவுடன் எல்லா வேற்றுமைகளையும் மறந்துவிட்டு

அவனுக்கு உதவுதல் வேண்டும் என்பதே அவர்தம் தூய உள்ளங் கண்ட உண்மையாகும். அக்கொள்கையை அவர் தம் வாழ்நாளில் என்றுங் கடைப்பிடித்தே ஒழுகிவந்தார்.

நாடெங்கும் சென்று சொற்பொழிவுகள் ஆற்றினர். தூய தமிழிலே பேசி எல்லோர் உள்ளத்தையுங் கொள்ளே கொண்டார். எவ்வாறு எழுதுகிருேமோ அது போலவே மேடையில் பேசலாம்; பொது மக்கள் அறிந்து பாராட்டத் தக்கவகையிலே பேசலாம் என்பவற்றை முதன் முதலிலே மெய்ப்பித்துக் காட்டிய பெரியார் அவரேயாவர். 'ஆங்கிலத்தில் பேசுதலே மேல்; தாய்மொழியிற் பேச வராது' என்று சொல்லுவதே ஒரு சிறப்பு என்றெல்லாம் எண்ணிய எண்ணங்களில் மண்விழச்செய்து, தாய்மொழியாம் தமிழ் மொழியிலே,—தூயதமிழ்மொழியிலே,—எழுத்துநடை மொழியிலே பேசலாம்; மேடையிலே பேசலாம்; பொது மக்களேப் புரிந்து கொள்ளச்செய்யலாம்; அதுவே சிறந்த முறை என்று எண்ணுமாறும், பேசுமாறும் செய்து தனித் தமிழ் வளர்ச்சிக்கு அடி கோலிய பெருமை அப் பெரியாரையே சாரும். தம் அரிய, இனிய, செந்தமிழ்ச் சொற்பொழிவின் துணைகொண்டே தூய தமிழை வளர்த்தார்; அரசிய லுணர்ச்சியை வளர்த்தார்; சமயக் கருத்துக்களே வளர்த்தார்; தொழிலாளர் இயக்கத்தை வளர்த்தார்; சுருங்கச்சொல்லின் நம் நாட்டிற்கும் நாட்டு மக்களுக்கும் வேண்டுவன எல்லாவற்றையும் வளர்த்தார்.

கல்யாணசுந்தரனுர், இத்துணைப் பெரும் பணிகளுக் கிடையேயும் பல அரிய, ஒப்புயர்வற்ற செந்தமிழ் நூற்களே இயற்றித் தமிழ்த்தாய்க்கு அணிந்துள்ளார். இப் பெரியாரது நூற்கள் அவ்வக்காலத்தே தோன்றி, ஒரு வெறிபிடித்த உள்ளத்துடன் படித்துவிட்டு எறிந்துவிடக் கூடிய 'அற்பாயுட்' புத்தகங்கள் அல்ல. என்றும் நிலே

பேருயிருந்து தமிழன்னைக்கு அணி செய்வனவாம். முருகன் அல்லது அழகு, பெண்ணின் பெருமை, மனித வாழ்க்கையும் காந்தியடிகளும், தமிழ்த்தென்றல், பொதுமைவேட்டல், இராமலிங்கர் திருவுள்ளம், சைவத்தின் சமரசம் போன்ற அவர்தம் நூற்கள் யாவுமே தமிழர் ஒவ்வொருவர் வீட்டிலும் இருக்கவேண்டுவனவாம்: நாள் தவருமல் போற்றிக் கற்க வேண்டுவனவாம். தொடக்கத்தில் அரிய ஆராய்ச்சி நூற்களை உரைநடையில் எழுதியது போன்றே பிற்காலத்தே செய்யுள் நூற்கள் பல எழுதியுள்ளார். அவை எளிமையும் இனிமையும் மிக்கு, சொல்லழகும் பொருளாழமும் பெற்று, பயில்வோர்க்குப் பயிலுந்தொறும் புதுப்பொருள் பயந்து உள்ளத்திற்கு உவகை தருவனவா யுள்ளன. முதுமையிற் கண்ணொளி மறைந்தபோதும், உள்ளத்தொளியே துணையாகக்கொண்டு, 'முதுமை உளறல்,' 'இருளில் ஒளி,' 'அருகன் அருகே' போன்ற பல அரிய நூல்களைத் தந்திருக்கிருர்.

கல்யாணசுந்தரனுர் இளமையில் உடல் வளமும் உள்ளத் துடுக்கும் உடையவராயிருந்தார். ஆனுல் முதுமையிலோ மெல்லிய உடலும், அமைந்த உள்ளமும் உடையவரானுர். தம் தந்தையார் இறந்தவுடனே துடுக்குகள் மறையப் பொறுப்பும், பொறுமையும் உடையவரானுர்; மக்களும் மனைவியும் அடுத்தடுத்து மறையவே உலக வாழ்வின் நிலையாமை யறிந்து தம் வாழ்க்கைக்கும் உலகுக்கும் ஒரு தொடர்பும் இல்லை என்னும் பற்றற்ற உள்ளமுடையவரானுர். தம் அருமைத் தமையனுர் உலகநாதர் இறந்தவுடனே எல்லாவற்றையும் ஒதுக்கி, மனம் துறந்த முனிவரானுர்.

இப்பெரியாரது மணிவிழா பல கழகங்களாலும், பல நிலையங்களாலும் சிறந்த முறையில் ஏறக்குறைய ஓராண்டுக்

காலம் கொண்டாடப் பெற்றது. அக்காலத்தே அவரைப் புகழாத ஏடில்லை; போற்ருத உள்ளமில்லை; வாழ்த்தாத நாவில்லை. மணிவிழாவுக்குப் பின்னர் உடல் மிகவுந் தளர் வெய்தியது. சில ஆண்டுகட்குப் பின்னர் கண்ணொளியும் மறையத் தொடங்கியது. இதற்கிடையில் தொழிலாளர் வேலை நிறுத்தமும், தொழிலாளர் தலைவர் அந்தோணிப் பிள்ளை சிறைவாசமும் ஏற்பட்டன. அப்போது மீண்டும் நம் பெரியார் தொழிலாளர் தலைமைப் பதவியை ஏற்க, அரசியலார் அவரை இல்லச் சிறைவாசத்திற் குட்படுத்தி னர். அன்பும் அமைதியுமே உருவாகக் கொண்டு வாழ்ந்து வந்த அவர், நாட்டுமக்கள் அனைவரும் ஒருசேரக் கலங்கிக் கண்ணீர் சோர 1953-ல் தம் வினை முடித்து இயற்கை யடைந்தார். அவர் தம் சொற்பொழிவால், அரிய கட்டுரை யால், நூலால், தமிழ்நாட்டிற்கும், தமிழ்மொழிக்கும், தமிழ் மக்கட்கும் செய்ததொண்டு அளவிடற் கரியதாம். அவர் தம் செந்தமிழ் நூல்கள் யாவும், தமிழ் மொழி உள்ள வரை யும் நிலை பெற்றிருந்து அப்பெரியார்தம், பெயரையும், புகழை யும் நிலைக்கச் செய்யும் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை.

## கேள்விகள்

1. திரு. வி. க. வின் பெற்ரோர் யாவர் ?
2. அவர் உடன் பிறந்தோர் எத்துணையர் ?
3. அவர் கல்வி பயின்ற வரலா றென்ன ?
4. அவர் படிப்பு முற்றுப் பெருத தேன் ?
5. அவர் புரிந்த அலுவல்கள் யாவை ?
6. அவர் நடத்திய ஏடுகள் யாவை ?
7. அவர் கண்ட ஆசியப் பெருநாட்டு முதல் இயக்கம் யாது ?

8. அவர்தம் சொற்பொழிவின் திறம் யாது?

9. அவர்தம் நூற்சிறப் பென்ன?

## பயிற்சி

1. நூல் நிலையத்திலுள்ள அவர்தம் நூல்களுட் சில வற்றையாவது படிக்கவும்.

2. திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்பு கிடைக்குமானல் படிக்கவும்.

3. தொழிலாள ரியக்கம் பற்றி அவரே கூறுவது போல் எழுதவும்.

## இலக்கணம்

(1) ஆசிரியத் தொழிலையும், வாணிபத் தொழிலையும் தன் வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டிருந்தார். இவ்வும்மைகள் எப்பெயரிட்டுக் கூறப்படும்?

(2) கீழ் வருவனவற்றிற்குப் பண்புப் பகுதிகளை மட்டும் வரைக :—செழித்து ; நிலை குலைந்து ; செம்மை.

(3) பற்பல, மேலும் மேலும், வர வர—இவைகளுக்குப் பெய ரென்ன?

(4) கீழ்வரும் வினையெச்சங்களை முற்றுவிக்க :—

துறந்து.........

தொடங்கி.........

நடத்தி.........

செய்து.........

(5) பிரித்து எழுதுக :—

முட்டின்றி

நட்பேற்பட்டது

சொற்பொழிவு

அற்பாயுள்

பற்றற்ற.

(6) எதிர்ப் பதம் தருக :—

அழிந்தேன்
தாழ்வு
புரவலர்
மாறு படுதல்
துன்பம்.

# 2. வாழை மரம்

வாழை மரத்தை அறியாத தமிழன் இருக்கமாட்டான். வாழை அவன் வாழ்க்கையோடேயே கலந்துள்ளது. மிகப் பழங்காலம் தொட்டு இவ்வாழைமரம் தமிழ் மக்கள் இலக்கியத்திலும் இடம் பெற்றுள்ளது. தமிழர் தம் உண் கலன்களிலெல்லாம் வாழை இலேயே சிறந்ததாகப் போற்றப் படுகின்றது. வாழையின் ஒவ்வொரு பகுதியும் மனிதனுக் குப் பயன் படுகிறது. இவ்வாழையைத் தோட்டங்களிலும் வீட்டுப் பக்கங்களிலும் மக்கள் வைத்து வளர்ப்பதை நாம் காண்கின்ருேம். இவ்வாழை மணம் முதலிய நற்செயல் களுக்கெல்லாம் பயன்படுகிறது. வாழைப்பழம் இல்லாத விருந்தே இல்லே என்று கூடச் சொல்லிவிடலாம்.

வாழை வழிவழியாகத் தழைத்து வருகின்ற ஒரு மரம். இதற்கெனத் தனி விதை கிடையாது. அடியிலுள்ள கிழங்கையே தனது பிறப்பிடமாகக் கொண்டு புதுப்புது இளங்கன்றுகள் அரும்புவிட்டுத் தோன்றுவதைப் பார்க் கின்ருேம். ஒன்றின் அடி பற்றி மற்ருென்று தொடர்ந்து தொன்று தொட்டு வாழை இனம் வளர்ந்து வரும் காட்சியைக் காண்கின்ருர் இராமலிங்க அடிகள். ஆண்ட வனது அடியார் கூட்டமும் அப்படித்தான் ஒருவரை ஒருவர் பின்பற்றித் தொடர்ந்து வருவது என்பது அவர்

கண்ட உண்மை. இரண்டையும் ஒன்றுபடுத்திப் பார்க்கிறது அவரது அன்பு கனிந்த கவியுள்ளம். உடனே 'வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன் அன்றோ' என்று பாடுகின்றார்.

கடவுள் அடியவர்கள் மட்டுமன்றி வேறு பல புலவர்களும் இவ்வாழையைத் தம் தம் பாடல்களில் பாடியுள்ளனர். வாழை வளர்ந்து குலை தள்ளியபின் அம்மரத்தை முற்றிய காயுடன் வெட்டிச் சாய்ப்பதைப் பல புலவர்கள் கண்டிருக்கின்றார்கள். தான் பெற்றெடுத்த காய்களே தனக்கு இறுதியைத் தேடித் தரும் தன்மையை வாழையிடம் காண்கின்றார்கள். அதை உவமையாக வைத்து இல்லறத்



வாழைத் தோட்டம்.

துக்கு ஏற்காத பெண்களை ஒப்புப்படுத்திப் பார்க்கின்றார் ஔவையார். 'வாழைக்குத் தான் ஈன்ற காய் கூற்றம், கூற்றமே இல்லிற்கு இசைந்து ஒழுகாப் பெண்' என்று வாழையின் வாழ்க்கையை உவமையாக்கி உலகுக்கே இல்லற வாழ்வில் விளங்க வேண்டிய ஒரு உண்மையை எடுத்துக் காட்டுகின்றார். இக் கருத்துத்தான் 'நண்டு சிப்பி வேய் கதலி நாசமுறும் காலத்துக் கொண்ட கரு அளிக்கும்' என்ற அடிகளாலும் விளங்குகின்றது.

இன்னும் இந்த வாழை இலையும் கனியும் பிறவும் எவ்வெவ்வாறு மக்களுக்கு உதவியாக இருந்தன என்று சங்க காலம் தொடங்கிப் பல புலவர்கள் பாடியுள்ளார்கள். சிலப்பதிகாரம், சிந்தாமணி, பெருங்கதை முதலிய நூல்கள் இவ் வாழைக் கனியின் இனிமை பற்றியும் சிறப்புப் பற்றியும் பாடிப் பாராட்டியுள்ளன. சிலப்பதிகாரத்தில் கோவலனுக்குக் கண்ணகி யிட்ட விருந்தை விளக்கும் போது இளம் வாழைக் குருத்தை அறிந்து வைத்து விரித்துக் கழுவி அதில் உணவிட்டாள் என்று குறிக்கப்பட்டுள்ளது.

'மண்ணக மடந்தை மயக்கொழிப் பனள் போல்
தண்ணீர் தெளித்துத் தன்கையால் தடவிக்
குமரி வாழையின் குருத்துஅகம் விரித்து இங்கு
அமுதம் உண்க அடிகள்'

என்று கண்ணகி வேண்டியதாக இளங்கோவடிகள் கூறியுள்ளார். இன்னும் எத்தனையோ வகையில் இவ் வாழை சிறப்பித்துப் பேசப்பட்டுள்ளது. தமிழர்கள் வாழ்விலும், அவர் தம் வாழ்வு பற்றிய இலக்கியங்களிலும், வாழை நிலைத்த இடம் பெற்றுள்ளது என்பது யாவரும் கண்ட உண்மையாகும்.

இனி இவ்வாழையின் வளர்ச்சி பற்றியும் அதன் உபயோகம் பற்றியும் சிறிது சிந்தித்துப் பார்ப்போம். தமிழ்

நாட்டில் வாழை பெருந் தோட்டங்களாகக் காட்சி தருகின்றது. அத்துடன் சிறு சிறு அளவாக வீடுகளின் புறங்களிலே வாழை வளர்வதையும் நாம் பார்க்கின்றோம். வாழையைப் பல விவசாயிகள் வியாபாரப் பொருளாகவே பயிர் செய்கின்றார்கள். தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி மாவட்டங்களில் காவிரிக் கரையை அடுத்து நெடுக வாழைத் தோட்டங்கள் காணலாம். தமிழ் நாட்டு வெப்ப தட்ப நிலை வாழை மரத்துக்கு ஏற்றதாக அமைந்துள்ளது போலும். வெப்பமும் ஈரமும் கலந்த நிலையில்தான் வாழை பயிராகின்றது என்பதை நாம் அறிகின்றோம். வாழை பயிராவதற்கு மண் நல்ல உரம் பெற்றதாக இருக்கவேண்டும். வாழை எந்த மண்ணிலும் பயிராகும் என்றாலும் சத்தும் சாரமும் உள்ள மண்தான் வாழையை நன்றாக வளரச்செய்யும். வாழை எவ்வளவுக் கெவ்வளவு ஓங்கிப் பருத்து வளர்கின்றதோ அவ்வளவுக் கவ்வளவு சத்தும் சாரமும் அதன் அடியில் இருக்குமாயின், அதன் பயனாகிய குலையும் பருத்து நன்கு காய்க்கும். ஆகவே வாழை நல்ல பக்குவப்படுத்தப்பட்ட சத்துள்ள மண்ணில் பயிரிடப் பட வேண்டியதாகும்.

வாழைக்குத் தனியாக விதையென்று ஒன்று இல்லை. அதன் அடியிலுள்ள பருத்த கிழங்கே இளம் வாழைகளை உண்டாக்கும் விதைக் கிடங்காக அமைகின்றது. பருத்துக் குலை தள்ளிய வாழையின் அடிக்கிழங்கில் தோன்றும் இளம் வாழைக் கன்றுகளே பெயர்த்து வைக்கப்படுகின்றன. அவ் விளம் வாழைகளே பின் தாம் பருத்து மரமாகிப் பயன் தருகின்றன. எனவே வாழை இடைவிடாது ஒன்றைவிட்டு ஒன்று நீங்காது பற்றிப் பயிராகின்ற ஒரு மரமாகும்.

வாழைக்குப் பருவம் என்பதொன்றில்லை. ஆண்டு முழுவதும் அது பயிராகும். பயிரிடுபவன் பாடுபடும் அள

வுக்கு ஏற்றபடி அது நன்கு பயிராகிப் பயன் கொடுக்கும். எனினும் ஐந்தாண்டுக்கு ஒரு முறையேனும் கன்றுகளைப் பெயர்த்து வேறு இடங்களில் புதைத்துப் புதுப் புது இடங்களில் மாற்றி மாற்றிப் பயிர் செய்ய வேண்டும். ஒரு காலத்தில் இட்ட வாழைகள் யாவும் ஏறக்குறைய ஒரே சமயத்தில் பயன் தருமாதலால், பெரிய தோட்டக்காரர்கள் வாழையை வேறு வேறு மாதங்களில் நடத் தொடங்கி வருட முழுவதும் பயன் பெறுகின்ற வழியில் பயிரிடுவார்கள்.

மண்ணும் உழைப்பும் பொருந்துவதோடு வாழையைப் பயிரிடுவதன் முறையையும் காணவேண்டும். அதிகமாகக் கன்றுகளை நட்டால் நிறையப் பயன் பெறலாம் என்று நினைப்பது தவறு. மரத்தின் வளர்ச்சிக்கு ஏற்ப இடையில் தேவையான இடம் விடவேண்டும். குழிகளை அகலமாகவும் ஆழமாகவும் வெட்டிச் சில நாட்கள் விட்டு விடவேண்டும். பிறகு நல்ல வாழைக் கன்றுகளை நட்டு மண்ணை மூடி மண் கெட்டியாகுமாறு செய்ய வேண்டும். பிறகு அதற்குத் தேவையான அளவு நீர்ப் பாய்ச்சிக் கொண்டே வரவேண்டும். இடையிடையே மண்ணினைக் கொத்தி விடுதல் மிகவும் அவசியம். கன்று செழித்து வளரும் போது அடிக்கிழங்கி லிருந்து பல சிறு சிறு கன்றுகள் தோன்றும். ஒரு ஆண்டில் ஒரு கிழங்கிலிருந்து நாற்பதுக்கு மேற்பட்ட கன்றுகள் உண்டாவதைக் காணலாம். எனினும் தோட்டக்காரர்கள் அத்தனைக் கன்றுகளையும் வளரவிடுவதில்லை. இக் கன்றுகள் அதிகமாக வளர வளரத் தாய் மரத்தின் வளம் குறையும். அதனால் பயனாகிய காய்கள் சிறுத்து எண்ணிக்கை குறைவாக இருக்கும். வாழை பயிரிடுபவர்கள் பயன் கருதியே பயிரிடுகின்றார்கள். ஆதலால் நன்கு குலையாகும்படித் தாய் மரத்தை வளரவிட்டு,

தேவையான கன்றுகள் தவிர மற்றவற்றை அவ்வப்போது வெட்டிவிடுவார்கள்.

தமிழ் நாட்டில் வழங்கும் மற்றொரு பழமொழி மாண வர்கள் அறிந்ததுதான். 'இலைதின்னி காயறியான்' என்பது தான் அது. அதன் கருத்து என்ன? எப்படி அதிகமான கன்றுகளை வளர விட்டால் காயாகிய பயன் குறை கின்றதோ, அதைப் போன்றே வாழை இலைகளை அறுத்துக் கொண்டே வந்தால் அந்த மரத்தின் காய்கள் அளவிலும் எண்ணிலும் குறைந்து போகும். எனவேதான் இலையில் உண்ண விரும்புபவர்கள் காய்களைத் தின்ன முடியாது என்ற கருத்து உண்டாயிற்று. வியாபாரத்தின் பொருட்டுப் பயிரிடும் வாழைத் தோட்டக்காரர்கள் இலைகளைத் தோட் டங்களில் வெட்டமாட்டார்கள். இவ்வாறு வாழையை நன்கு பயிரிடும் மக்கள் தங்களுக்கும் மற்றவர்களுக்கும் ஒரு சேரப் பயனளித்து வருகின்றார்கள்.

இனி இவ்வாழையால் உண்டாகும் பயன்களைக் காண லாம். வாழையின் ஒவ்வொரு பாகமும் மக்களுக்கு உப யோகமாகின்றது. வாழைக்காய் கறியாக உதவுகின்றது. அக்காய் முற்றிக் கனியாயின் அது இனிய உணவாகிறது. பழவகைக் கென்றே சில வாழை வகைகள் பயிராகின்றன. அவை போன்றே கறிவகைக் கென்றும் சிலவகைகள் பயிராகின்றன. வாழைக் கனி தமிழ் மக்கள் வாழ்க்கையில் இன்றியமையாத கனியாகிவிட்டது. திருமணம் முதலிய சிறப்புக்களிலெல்லாம் வாழைப்பழம் முதலிடம் பெற் றுள்ளது. சாதாரண விருந்துகளில் கூட வாழைக்கனி உப யோகிக்கிறார்கள். செல்வர்கள் அன்றாட உணவுக்குப் பின் சிறந்த வாழைக்கனிகளை உண்கின்றனர். செல்வர்கள் மட்டுமன்றி நடுத்தர வாழ்க்கை வழி உள்ளவர்களும், ஏழை களும் கூட வாங்கி உண்ணும் கனி வாழை ஒன்றுதான்.

சாதாரண ஏழையும் கூட உணவோடு உணவாய் வாழைப் பழத்தைக் குறைந்த விலை கொடுத்து வாங்கி உண்பதைக் காண்கிறோம்.

வாழைக்காயும் மக்கள் விருந்துகளுக்குப் பயன்படும் கறிவகைகளுள் ஒன்று. 'மொந்தன்' என்ற ஒரு வகைக் காய்தான் கறிக்குச் சிறந்ததாகப் பயன்படுகிறது. அது பெரிய அளவாக இருக்கும். பெருங்குலைகளாகவும் இருக்கும். இனிய பழவகைகளுக்காகப் பூவன் வாழை, பச்சை வாழை, பேயன்வாழை 'என்பன போன்ற வகைகள் பயன் படுகின்றன.

காயும் பழமுமட்டுமன்றிப் 'பூ' வும் கறிவகைக்குப் பயன்படுகிறது. சிலர் அப்பூவைப் பயன் படுத்துவதில்லை. சிலர் ஒடிக்காது அப்படியே மரத்தில் விட்டு விடுவார்கள். எனினும் பெரும்பாலோர் அப்பூவினையும் கறியாக்கி உப யோகப் படுத்துவார்கள். பூ துவர்ப்புச் சுவை உடைய காரணத்தால் அதன் கறி சில நோய்களுக்குக் கூட மருந் தாக அமையும் என்று சொல்லுவார்கள்.

இவைகள் மட்டுமன்றி வாழைத்தண்டும் உணவுப் பொருளாகின்றது. அடிக் கிழங்கினை நீக்கி மற்றத் தண்டின் பெரும் பகுதியை மக்கள் கறியாக்கி உண்கின்றார்கள். மற்றும் வாழை இலையும் பட்டையும் கூட உண்கலன்களாக அமைகின்றன. எவ்வளவு சிறந்த விருந்தாக இருந்தாலும் வாழை இலை இல்லையாயின் அது சிறக்காது என்பார்கள். மண முதலிய காலங்களில் அதிக விலையாயினும் கூட வாழை இலையில்தான் விருந்து இடுவார்கள். சாதாரண மாகப் பெரு மரத்தின் பட்டைகளும் பூவின் மடல்களும் உலர்ந்த சரகும் உண்கலன்களாக அமைகின்றன.

வாழைப் பட்டையை நன்கு காயவைத்து அதி லிருந்து நார் உண்டாக்குகிறார்கள். அந்நார் மலர் தொடுக்

கவும் பிறவற்றிற்கும் பயன்படுகிறது. வாழை நாரிலிருந்து தற்காலத்தில் ஒருவித செயற்கைப் பட்டு தயாரிப்பதாக அறிகிறோம். இவ்வாறு வாழையின் ஒவ்வொரு பாகமும் மக்களுக்குப் பயன்படும் வகையில் இருந்து, முதலில் கண்டபடி கவிகளின் உவமையை விளக்க உதவும் ஒரு பொருளாக மட்டுமன்றி, வாழை தன் முழு உடலையும் மற்றவர்களுக்கு உதவி, உலகுக்கு மக்கள் பிறருக்காக வாழ வேண்டும் என்ற பெரு நீதியையும் எடுத்துக் காட்டுகிறது.

உணவாக உதவும் வாழையில் நிறைய உணவுச் சத்துக்களும் உள்ளன. தற்போது விஞ்ஞான அறிவில் ஆராய்ந்து கண்ட உயிர்ச் சத்துக்கள் பலவும் வாழையில் உள்ளன என அறிந்து கூறியுள்ளனர். மிகப் பழங் கால வைத்திய நூல்களிலும் வாழையின் காயும் கனியும் பூவும் பிஞ்சும் தண்டும் கிழங்கும் மக்கள் உணவுவகையில் கலந்து, அவர்களுக்கு வேண்டிய உயிர்ச் சத்தைக் கொடுத்து நோயில்லாது வாழ உதவுகின்றன என்று கூறியிருப்பதைக் காணலாம்.

இவ்வாழையில் பலவகை உண்டு, இலை பறிப்பதற்காக வென்றே ஒரு வகை வாழையைப் பயிரிடுவார்கள். அதற்கு இலை வாழை என்று பெயர். இன்னும் பழங்களுக்கென்றே பல வாழைகளைப் பயிரிடுவார்கள். பச்சை வாழை, பேயன் வாழை, பூவன் வாழை, மலை வாழை போன்ற பல அந்த வகையுள் அடங்கும். காய்வகைக் கென்றே பல வாழை வகைகள் உண்டு. மொந்தன் வாழை அந்த வகையைச் சேர்ந்தது. இரசதாளி, அரச வாழை, மட்டி வாழை, செவ் வாழை என்பன போன்ற பல வாழைகள் நம் நாட்டில் உள்ளன. மலையாள நாட்டின் சிறந்த பொருளாகிய நேந்திர வாழையைப் பற்றி அறியாதவர்கள் இருக்கமாட்டார்கள்.

இவ்வாறு பல வகைகளாகப் பிரிந்து, பல வகையில் மக்களினத்துக்கு உதவி வரும் வாழை தமிழ் நாட்டில் நெடுங்காலமாக நிலை பெற்று வாழ்ந்து வருகிறது. இனியும் என்றென்றும் வாழும். எல்லா மக்களோடும் தொடர்பு கொண்டுள்ள இவ்வாழையை வளர்க்க வேண்டுவது ஒவ்வொருவருடைய கடமையாகும். பெருந் தோட்டங்களில் வியாபாரத்தின் பொருட்டுப் பயிர் செய்ய முடியாவிட்டாலும், தங்கள் தங்கள் தோட்டங்களில் ஒன்றிரண்டு மரங்களையாவது வைத்து வளர்த்தல் வேண்டும். அதிக உழைப்பு வேண்டாததாய், பொருட் செலவு இல்லாததாய், நிறையப் பயன் அளிப்பதாய், மக்கள் வாழ்க்கையொடு தொடர்பு கொண்ட இவ் வாழையைப் போற்றி வளர்க்க ஒவ்வொருவரும் முன் வரவேண்டும்.

## கேள்விகள்

1. இராமலிங்கர் தன்னைப் பற்றிக் கூறும் போது வாழையை ஏன் ஒப்பிடுகிறார் ?
2. வாழை எவ்வெவ்வாறு உவமானப் பொருளாகப் பயன் படுகிறது ?
3. சிலப்பதிகாரத்தில் வாழை எவ்வாறு எங்கு பேசப் படுகிறது ?
4. வாழை பயிராவதற்கு உரிய நாடு யாது ?
5. வாழை எப்படிப் பயிரிடப் படுகின்றது ?
6. வாழைக்கும் மற்ற மரங்களுக்கும் பயிரிடுவதில் உள்ள வேறு பாடு என்ன ?
7. 'இலை தின்னி காயறியான்' என்றால் என்ன ? விளக்குக.
8. வாழையால் நாம் பெறும் பயன்கள் யாவை ?

9. வாழையின் ஒவ்வொரு பாகமும் நமக்கு எவ்வெவ்வாறு பயன்படுகின்றது ?
10. 'வாழையில் பலவகை உண்டு' சிலவற்றைக் கூறுக.
11. வாழையை நாம் வளர்க்கக் கடமைப்பட்டிருக்கிறோம். ஏன் ?

## பயிற்சி

1. வாழை உவமிக்கப் படுவதைப் பற்றி எடுத்து எழுதி விளக்குக.
2. வாழை பயிரிடும் வகை பற்றிக் கட்டுரை வரைக.
3. வாழையின் உபயோகங்களைச் சுருக்கி எழுதுக.

## இலக்கணம்

(1) கீழ் வரும் சொற்களுக்கு ஏற்ற வேற்றுமை யுருபை அமைத்துத் தொடராக்கு :—

(அ) கந்தன் மரம் வெட்டிப் பணம் விற்றான் ;
(ஆ) மரம் கிளை ஒடிந்து நிலம் விழுந்தது ;
(இ) களிறு பிடி காடு உறைந்தன.

(2) எழுத்து வேறுபாட்டால் வரும் பொருள் மாறுபாட்டை அறியக் கீழ் வரும் சொற்களுக்குப் பொருள் தருக:—

வேளை—வேலை ; கொள்ள—கொல்ல ; கல்—கள் ;
பல்லு—பள்ளு ; பல்லி—பள்ளி.

(3) கீழ் வரும் தொடர்களிலுள்ள ஆகுபெயர்களை எழுதுக.

(அ) உலகு இகழும்
(ஆ) கார் வந்தது
(இ) தாமரைப் பூ.

(4) உவமைக்கு இரண்டு எடுத்துக்காட்டை நீங்களே ஆய்ந்து எழுதி, விளக்கம் தருக.

(5) கந்தன் கால் ஒடிந்து விழுந்தான்—இதில் கந்தன் வினை எது? காலின் வினை எது?

(6) பால் இல்லா அஃறிணைப் பெயருக்கு இரண்டு உதாரணம் தருக.

## 3. சேரன் செங்குட்டுவன்

தமிழ் நாட்டைத் தொன்று தொட்டு முடியுடை மூவேந்தர்கள் ஆட்சி செலுத்திவந்தனர். தென் கோடியில் பாண்டியரும், வடக்கிலும் வடகிழக்கிலும் சோழரும், மேற்கில் சேரரும் ஆண்டுவந்தனர். மேற்குப் பகுதியில் உள்ள மலைநாட்டை ஆண்ட சேரமன்னர் வானோங்கிய மலையை ஆண்டமை பற்றி வானவர் என்றும் அழைக்கப்பெற்றனர். வானத்தை எல்லையாக உடைய மலைநாட்டு மன்னராகிய அவர்களை 'வான வரம்பர்' என்று புலவர்கள் பாடியுள்ளார்கள். அவர்கள் வீரமும் தாய்மொழிப் பற்றும் பிற நல்ல பண்புகளும் பொருந்தி ஆண்ட தமிழ் மன்னராவர். அவர்களுள் தலைசிறந்த மன்னனாகப் போற்றப்படுபவன் சேரன் செங்குட்டுவனே யாவன்.

செங்குட்டுவன் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் என்பவனுக்கும் நற்சோணை என்னும் அரசிக்கும் மகனாகப் பிறந்தவன் என்பர். இமயம் வரை படை எடுத்துச் சென்று அது வரையில் தன் நாட்டு எல்லையை நிலைநிறுத்தினமையின் அவன் தந்தை 'இமயவரம்பன்' என்று சிறப்பிக்கப் பெற்றான். செங்குட்டுவனுக்கு இளங்கோ என்ற தம்பி ஒருவரும் இருந்தார். அவரே உலகம் விரும்பிப் போற்றும் நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் என்ற சிறந்த இலக்கி

யத்தைச் செய்து தமிழ் உலகில் சிறந்த நிலைத்த புகழைப் பெற்றவ ராவர்.

இளங்கோவடிகள் சிறந்த சமணத் துறவியர் ஆவர். அவர் துறவைப்பற்றி வழங்கும் கதை ஒன்று உண்டு. ஒரு சமயத்தில் செங்குட்டுவனும் இளங்கோவும் தம் தந்தையோடு அரசமண்டபத்தில் அமர்ந்திருந்தனர். அது காலை வருவதை அறிந்துரைக்கின்ற ஒரு கணி அச்சபைக்கு வந்தான். வந்தவன் அரசிளங் குமரர் இருவரையும் நோக்கி மூத்தவனாகிய செங்குட்டுவன் இருக்க இளையவனே அரசனுக்குப் பின் அரியணை ஏறுவான் என்று கூறினான். அதைக் கேட்ட செங்குட்டுவன் உள்ளம் வருந்திற்று. உள்ளத்தின் வருத்தத்தை முகம் எடுத்துக் காட்டிற்று. அவன் அவ்வாறு வருந்துவதைக் கண்ட தம்பியாகிய இளங்கோவடிகள் அரச அவையில் எழுந்து அனைவரும் கேட்க ஒரு சூள் இயம்பினார். தன் அண்ணன் இருக்கத் தனக்குப் பட்டம் வரும் என்று கூறிய சோதிடனை வெறுத்தார். அவன் சொல் பொய்யாகும்படித் தான் அரச இன்பத்தை விரும்பாததோடு, உலக இன்பத்தையே விரும்பாமல் துறவியாகவே இருந்து மக்கட்பணி ஆற்றப்போவதாகச் சூள் உரைத்தார். அனைவரும் வியந்தனர். அவர் தம் சொற்படியே அன்றுமுதல் அரச அவையைவிட்டு நீங்கித் துறவியாகி, அத் தலைநகராகிய வஞ்சியின் குணவாயிற் கோட்டத்தில் இருந்து அறமாற்றி வந்தார்.

சேரன் செங்குட்டுவன் தந்தைக்குப்பின் பட்டம் எய்தினான். தன் தம்பியை நன்கு காப்பாற்றி அவர் மூலம் கலையையும் மொழியையும் வளர்த்து வந்தான். அவன் காலத்தில் தமிழ் நாட்டில் சோழ பாண்டியர் வலிகுன்றி இருந்தனர். அவனது தாய் மாமன் வழிவந்த சோழர் குலத்தோர்க்கும் அவர்களது பங்காளிகளுக்கும் சோழநாட்டில்

அடிக்கடி போர் நிகழ்ந்து கொண்டிருந்தது. செங்குட்டுவன் சோழ நாட்டிற்குச் சென்று போர் செய்து பகைவர்களைத் தோற்கடித்து, தன் மைத்துனச்சோழன் கிள்ளிவளவனை அந்நாட்டிற்கு அரசனுக்கினான்.

பின் தமிழ்நாட்டிலேயும் பிற இடங்களிலேயும் தமிழரைப் பழித்துரைத்தும், தமக்குள் மாறுபட்டும் இருந்த அரசர்களை யெல்லாம் வென்று பரந்த நிலப்பரப்பைத் தன தாக்கிக் கொண்டான்'. 'வடதிசையில் இமயத்தை எல்லை யாகக் கொண்டு தெற்கே குமரிமுனை வரையிலுள்ள முரசு முழங்கும் அரசர் கூட்டங்களையெல்லாம் போர்தொறும் தாக்கி வெற்றி கொண்டு சிறந்து விளங்கிய செங்குட்டு வன்' என்று அவனைப் பாடிய பரணர் நன்கு அவன் வீரத்தை எடுத்து விளக்குகின்றார்.

சேரன் செங்குட்டுவன் சிறந்த புலவர் பலரை ஆதரித்த வள்ளல். அவர்களுள் தலைசிறந்தவர் பரணர் என்பார் ஆவர். அவர் பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்தால் செங்குட்டுவனைப் பாடினர். பாடி 'உம்பற்காடு' என்ற நாட்டின் வரியைத் தமதாகப் பெற்றுக்கொண்டார். அத் துடன் தன் மகன் குட்டுவன்சேரல் என்பவனையும் செங் குட்டுவன் பரணரிடம் ஒப்படைத்து, கல்வி கேள்விகளில் வல்லவ னுக்குமாறு வேண்டிக்கொண்டான். சேரன் செங் குட்டுவன் மனைவி வேண்மாள் என்பவராவர். அவரும் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கியவர். அவர் அரச னுக்குப் பக்கத்திலிருந்து அவனுக்கு வேண்டியபோது உறுதி உரைப்பதில் பங்கு கொண்டிருந்தார் என்பதும் தெரிகின்றது.

செங்குட்டுவன் காலத்தில் நடந்த வரலாறே கோவ லன் கண்ணகியின் வாழ்க்கை வரலாறு. சோழர் தலை நகராகிய புகாரில் பிறந்து மண வாழ்வு வாழ்ந்து, பாண்டி

யன் தலைநகரில் தன் அன்பின் கணவனைப் பறிகொடுத்து வருந்திய கண்ணகி இச்சேரனது மலைநாட்டில் வந்து தான் கணவனொடு சுவர்க்கம் புகுந்தாள். அவள் நெடு வேள் குன்றத்தின்மேல் ஏறி விண்வழித் தன் கணவனொடு சென்றதைக் கண்டனர் காட்டில் வாழ்ந்த வேடுவர். அக் காலத்தில் அம்மலைக்குப் பக்கத்தில் மலைவளம் காண்பதற் காக வந்து தங்கி யிருந்தான் சேரன் செங்குட்டுவன். அவனிடம் சென்று காட்டில் வாழ்ந்த வேடுவர் தம் மலை நாட்டுப் பொருள்கள் பலவற்றையும் காணிக்கையாகக் கொடுத்து, தாங்கள் கண்ட அதிசயத்தைக் கூறினர். ஒரு கற்புடைப் பெண் கணவனொடு சுவர்க்கம் புகுந்ததைக் கேட்ட அனைவரும் வியப்புற்றனர்.

சேரன் செங்குட்டுவனோடு மலைவளங்காண அவனது கோப்பெருந்தேவி, இளங்கோவடிகள் முதலியோரும், மதுரையில் இருந்து வந்திருந்த சாத்தனார் என்ற பெரும் புலவரும் வந்திருந்தனர். கணவனொடு சென்ற காரி கையைப் பற்றி யாரும் அறியாது திகைத்த வேளையில் பக்கத்திருந்த சாத்தனார் என்னும் புலவர், அவர் மதுரையில் நிகழ்ந்ததையெல்லாம் முன்னமே அங்கு நேரில் கண்ட வராதலின், கண்ணகியின் வரலாற்றை விளக்கிச் சொல்லி அவள் கணவன் மதுரையில் கொலையுண்டதையும் பின் அவள் சீற்றத்தால் மதுரையை அழித்து இந்நாட்டுக்கு வந்து கணவனோடு சென்றதையும் எடுத்துரைத்தார். கேட்ட செங்குட்டுவன் பத்தினித் தெய்வத்தைப் போற்ற வேண்டும் என்று எண்ணினான். ஆனால் பாண்டியன் தன் தவறு உணர்ந்து இறக்க, உடன் இறந்த பத்தினி பாண்டி மாதேவியைக் கொண்டாடுவதா, அன்றிக் கண்ணகியைக் கொண்டாடுவதா என்ற ஐயம்பிறந்தது. அனைவரையும் கேட்டான். பக்கத்திலிருந்த அவன் பெருந்தேவி அதற்குப்

பதில் கூறினள்; கணவன் இறந்ததும் 'கணவனை இறந் தோர்க்குக் காட்டுவது இல்' என்று உடன் இறந்த பாண்டி மாதேவி கற்பிற் சிறந்தவளாயினும், தம் அகநாடு வந்து கணவனோடு சுவர்க்கம் புகுந்த கண்ணகியைப் போற்றலே தமது கடன் என்பதை அவள் வலியுறுத்தினள். அவள் சொல்லை அனைவரும் ஏற்றனர்.

கற்பிற் சிறந்த கண்ணகிக்குக் கோவிலெடுக்க விரும் பினன் சேரன் செங்குட்டுவன். இமயத்தில் கல் எடுத்துக் கங்கையில் நீராட்டி அக் கற்புத் தெய்வத்தின் சிலையைக் கொண்டு வரவேண்டுமென்று முடிவு செய்தான். இமயமும் கங்கையும் சிறந்தன என்பது அவன் எண்ணத்திற்கு ஒரு காரணம். மற்றொரு காரணம் அவன் காலத்தில் வட நாட்டை ஆண்ட கனகன் விசயன் என்ற இருமன்னர்கள் தமிழ் நாட்டு மன்னரைப் பழித்துரைத்தமை யாகும். தமிழ் நாட்டு வேந்தரைப் பழித்துரைத்த கனகவிசயரைப் போரில் வென்று, அப்படியே இமயத்தில் பத்தினித் தேவிக்குக் கல்லெடுத்து, கங்கையில் நீராட்டி அவர்கள் தலையிலே அப் படிமத்தைக் கொண்டு வரவேண்டுமென்று திட்டமிட் டான்போலும். அவன் நினைத்தபடியே செய்தும் முடித்தான்.

வடநாடு நோக்கிப் புறப்படப்போவதைத் தன் வஞ்சி நகரத் தெருக்களில் முரசறைந்து அறிவித்துக் கடல் போன்ற பெருஞ் சேனையோடு ஒரு நல்லவேளையில் சேரன் செங்குட்டுவன் தன் தலை நகராகிய வஞ்சியை விட்டுப் புறப் பட்டான். புறப்படு முன் அவ்வஞ்சி நகரில் உள்ள கோயில் களுக்கெல்லாம் பெருஞ்சிறப்புச் செய்து கடவுளரை வழிபட் டான். தன்னோடு படைவீரர்கள் மட்டுமன்றிக் கலைபயின்ற பல கலைஞர்களையும் பாவாணர்களையும் ஆடல்பாடல் வல்லவர்களையும் அழைத்துச் சென்றான். வஞ்சிநாட்டு மக்களெல்லாம் 'வெற்றியொடு திரும்பி வருக' என்று



ஒரு போர்க்களம்.

வாழ்த்த, சேரன் செங்குட்டுவன் இமயம் நோக்கிப் புறப்பட்டான்.

செங்குட்டுவன் வழியில் பல மன்னர்களைச் சந்தித்தான். பல நாடுகளைக் கடந்தான். பலர் அவனுக்கு நட்பினர் ஆயினர். சிலர் போரிட்டுத் தோற்று அடிபணிந்தனர். வடநாட்டில் அவனது நட்பினராக இருந்த நூற்றுவர் கன்னர் என்ற அரசர் அவனுக்கு வேண்டிய வகையில் உதவினர். கங்கைப் பேரியாற்றைக் கடப்பதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து தந்தனர். அவர்கள் உதவியினால் வங்கம் முதலிய நாடுகளைக் கடந்து கங்கையையும் தாண்டினன் சேரன் செங்குட்டுவன்.

கங்கையைத் தாண்டிய பிறகுதான் கனக விசயரோடு போர்செய்ய நேரிட்டது. செங்குட்டுவன் வருவதை அறிந்த கனக விசயர் இருவரும் அந்நாட்டுப் பிறமன்னர்களையெல்லாம் ஒருங்கு கூட்டிக்கொண்டு அவனை மேலே செல்ல ஒட்டாமல் தடுக்க முன் நின்றனர். அவ்வாறு ஒன்று கூடிய வடநாட்டு மன்னர்களுக்கும் செங்குட்டுவனுக்கும் பெரும்போர் நடந்தது. ஆனால் அப்போர் நெடுங்காலம் நடக்கவில்லை. நெடுநாட்களும் நடக்கவில்லை. பதினெட்டு நாழிகை அளவிலே போர் முடிவுற்றது. செங்குட்டுவன் வென்றான். ஒன்றுகூடி வந்த மன்னரில் பலர் மாண்டனர். பலர் தோற்றோடினர். பலர் மண்டியிட்டு வணங்கித் திறை



இமயத்தில் சேரன் விற்கொடி.

செலுத்த இணங்கினர். கனகனும் விசயனும் சிறைப்பட்டனர். தோற்ற மன்னரில் பலர் சடை அணிந்தும் காவி உடுத்தும் சாம்பல் பூசியும் துறவிகளாகவும் பாணர்களாகவும் பிறராகவும் வேடங்கள் பூண்டு தப்பினல் போதும் எனத் தலைமறைய, கனகவிசயர் மட்டும் செங்குட்டுவனிடமிருந்து தப்ப இயலாராய்ச் சிறைப்பட்டனர். பின் சேரன் செங்குட்டுவன் இமயம்வரை சென்று அங்கு தன் இலச்சினையாகிய விற்குறியைப் பொறித்து, தனது படையெடுப்பை நிலைநாட்டினன். அங்கு ஒரு அழகிய கல்லிலே பத்தினித் தேவியின் சிலையைச் செய்து முடித்தான். அனைத்தையும் செங்குட்டுவன் தனது சிறந்த சேனைத் தலைவனான வில்லவன்கோதை என்பானெடு குறைவறமுடித்துப் பின் கங்கைப்பேராற்றங் கரையில் சில காலம் தங்கியிருந்தான்.

இவ்வாறு முப்பத்திரண்டு திங்கள் கழிந்தது. வந்த பணியும் முடிந்தது. பின் தன் தாய் நாடு நோக்கி விரைந்து திரும்ப விரும்பினன் செங்குட்டுவன். வடநாடு நோக்கிச் சென்ற படை வெற்றியோடு முப்பத்திரண்டு திங்களுக்குப் பிறகு வஞ்சியுட் புகுந்தது. வஞ்சிநாட்டு மக்களும் சோழ பாண்டியமக்களும் மிகமகிழ்ந்து வெற்றிவிழாக் கொண்டாடினர். தான் கொண்டு வந்த பத்தினித்தேவியை ஒரு அழகிய ஆலயத்தில் அமைத்து விழாக்கொண்டாட ஏற்பாடு செய்தான் சேரன் செங்குட்டுவன்.

கண்ணகி விழாவை நாட்டு மக்கள் அனைவரும் தத்தம் வீட்டு விழாவாகவே மதித்தனர். செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயில் எடுக்கிருன் என்பதை அறிந்த தமிழ் மக்களும் பிறரும் வஞ்சியில் வந்து கூடினர். தமிழ்நாட்டு மன்னர்கள் மட்டுமன்றிப் பிறநாட்டு மன்னர் பலரும் அவ் விழாவில் பங்கு கொண்டனர். வடநாட்டிலிருந்து பல மன்னர் வந்திருந்தனர். சிறையிலிருந்து விடுவிக்கப்பட்ட

கனக விசயரும் பிறரும் விடுதலை பெற்றவராகி விழாவில் கலந்துகொண்டனர். கொங்குநாட்டு மன்னரும் மாளவ மன்னரும் விழாவில் பங்குகொண்டனர். அவர்களோடு கடலால் சூழப்பட்ட இலங்கையை அதுபோது ஆண்டு வந்த கயவாகு என்னும் மன்னனும் அவ்விழாவுக்கு வந்து கண்டு களித்தான். இந்நாட்டு மன்னர்களெல்லாம் அவ் விழாவினைக் கண்டுகளித்ததோடு அமையாது தம் தம் நாடுகளுக்கெல்லாம் அப்பத்தினித் தேவியை அழைத்துச் சென்று, அங்கங்கு கோயிலமைத்துக் கொண்டாட வேண்டு மென்று விரும்பினர். அவர்கள் விருப்பப்படியே அவ் விழா முடிந்தபின் அவரவர் திரும்பிச் சென்று தத்தம் நாட்டிலும் கண்ணகிக்குக் கோயிலெடுத்து வழிபட்டனர்.

கண்ணகிக்குக் கோயிலெடுத்த சேரன் செங்குட்டுவன் அவ் விழாவின் நினைவாக நாட்டில் பல நல்ல செயல்களைச் செய்தான். தனது அமைச்சரோடும் சேனைத் தலைவர்களோடும் கலந்து நாட்டுக்கு வேண்டிய நல்ல பணிகள் பல புரிந்தான். வில்லவன் கோதை, அழும்பில்வேள் முதலாய தம் அமைச்சரும் சேனைத்தலைவரும் முன்னின்று நடத்தப் பல செம்மைச் செயல்கள் அவ்விழாநாளில் நிறைவேறின. சிறைக் கோட்டங்களெல்லாம் அறக்கோட்டங்களாக மாறின. தனக்கு அடங்கித் திறைசெலுத்திய யாவரும் அவ்விழாவின் அறிகுறியாக அந்த ஆண்டு யாதொன்றும் தரவேண்டுவதில்லை என அறிவித்தான். நாட்டில் பத்தினிப் பெண்டிர் போற்றப்பட்டாலன்றி அரசமுறை சிறவாது என்று வந்த அனைவருக்கும் விளக்கிக்காட்டினன். உற்ற மன்னரையும் மாறுபட்டுப் போர்விளைத்த மன்னரையும் ஒருங்கு கூட்டி, அனைவரும் மனங்கலந்து போர் இன்றி நாட்டில் நல்ல வாழ்வும் அமைதியும் பெற வாழ வேண்டுவதே அரசர் கடன் என்பதை வற்புறுத்தித் தனக்கு உற்ற

வர் பகைவர் என்ற வேறுபாடு இல்லை என்ற பெரும் பண்பையும் எடுத்து விளக்கினான். விழாவுக்கு வந்த அனைவரும் வரம் பெற்று நலம் பலவும் அடைந்து தத்தம் நாட்டுக்குச் சென்றார்கள்.

இவன் செய்த சிறப்புக்களையெல்லாம் உடனிருந்து உதவியும் போற்றியும் வந்த இருவர் இளங்கோவும் சாத்தனாரும் ஆவர். அவர்களும் அவ்விழாவில் கலந்து கொண்டனர். தமிழ்நாட்டு மூவேந்தர்களையும் பற்றி வந்த கண்ணகி வரலாற்றைப் பாடவிரும்பினர். யார் பாடுவது என்ற ஐயம் எழுந்தது. 'முடி கெழுவேந்தர் மூவர்க்கும் உரியது, அடிகள் நீரே அருளுக' என்று சாத்தனார் இளங்கோவடிகளை நோக்கிக் கூறினார். இளங்கோவடிகளும் அச்சொல்லையேற்றுச் சிலப்பதிகாரம் என்ற நல்ல இலக்கியத்தை எழுதித் தந்தார். இச்சிலப்பதிகாரத்தாலும், பரணர் பாடிய பதிற்றுப் பத்தாலுமே நாம் செங்குட்டுவனைப் பற்றிய பல உண்மைகளை உணர்ந்து கொள்ளுகிறோம்.

சிறந்த உலகம்போற்றும் இளங்கோ என்னும் தம்பியையும் சாத்தனார், பரணர் போன்ற சாவாத இலக்கியங்கள் பாடிய புலவர்களையும், வேண்மாள் என்ற கற்பும் பொற்பும் பொருந்திய மனைவியையும், குட்டுவன்சோல் என்ற மைந்தனையும், அழும்பில்வேல், வில்லவன் கோதை முதலிய செயல்வீரர்களையும் ஒருங்கே பெற்று, வஞ்சியைத் தலைநகராக்கிக் கொண்டு, சேரநாட்டை ஆண்ட சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயிலெடுத்த பின்னும் பல காலம் வாழ்ந்து, நாட்டுக்கும் மொழிக்கும் மனித இனத்துக்கும் பல பணிகள்புரிந்து தமிழ் நாட்டு வரலாற்றில் நிலைத்த இடம் பெற்றுச் சிறந்துள்ளான் என்பதை அறியாதார் யார்?

## கேள்விகள்

1. சேரர் யார்? அவர்களுக்கு வேறு பெயர் என்ன?
2. செங்குட்டுவன் தாய் தந்தையர் யாவர்? அவர்களைப் பற்றி அறிவன யாவை?
3. இளங்கோ ஏன் துறவியானார்?
4. செங்குட்டுவன் தன் மைத்துனன் பொருட்டு என்ன செய்தான்?
5. அவனைச் சிறப்பித்துப் பாடிய புலவர் யார்? அவர் எதில் அவனைப் புகழ்ந்துள்ளார்?
6. செங்குட்டுவன் புலவரை ஆதரிப்பவன் என்பது எப்படித் தெரிகிறது?
7. செங்குட்டுவன் கண்ணகிக்கு ஏன் கோயிலெடுக்க நினைத்தான்?
8. கண்ணகி யார்? அவள் வரலாறு என்ன? அதைச் செங்குட்டுவன் எவ்வாறு அறிந்தான்?
9. கண்ணகிக்குக் கல்லெடுக்கச் செங்குட்டுவன் வடநாடு செல்லக் காரணம் என்ன?
10. செங்குட்டுவன் வடநாட்டில் செய்த போர் எவ்வாறு முடிந்தது?
11. செங்குட்டுவனிடம் தோற்றார் எவ்வாறு ஆயினர்?
12. கண்ணகி விழாவுக்கு யார் யார் வந்திருந்தனர்?
13. விழாவுக்கு அறிகுறியாகச் செங்குட்டுவன் செய்த சிறப்புக்கள் யாவை?
14. செங்குட்டுவனைப் பற்றி நாம் அறிந்து கொள்ள உதவுவன யாவை?
15. செங்குட்டுவன் மகன் யார்? அவனைச் செங்குட்டுவன் எப்படி அறிவு நிரம்பப்பெறச் செய்தான்?

## பயிற்சி

1. செங்குட்டுவன் வடநாட்டு யாத்திரை பற்றிச் சுருக்கி எழுதுக.
2. கண்ணகி விழாச் சிறப்பைச் சில வரிகளில் விளக்குக.
3. கண்ணகியின் வரலாற்றைக் கேட்டு சொந்த வாக்கியங்களில் சுருக்கி எழுதுக.

## இலக்கணம்

(1) 'விளைந்த நெல்லைக் கந்தன் வீட்டிற்குக் கொண்டு போனான்' இதில் பெயரெச்சம் எது? வினையெச்சம் எது?

(2) இடுகுறிச் சிறப்புப் பெயருக்கும், காரணப் பொதுப் பெயருக்கும் இரண்டு உதாரணங்கள் தந்து விளக்குக.

(3) கால், போர், நாகம்—இவைகளுக்கு இருக்கும் பல பொருள்களைக் கூறுக.

(4) காலத்தைக் காட்டும் இரண்டு சொற்களை எழுதி, அவற்றில் காலத்தைக் காட்டுவன யாவை என்பதையும் காட்டி, அதற்கு இலக்கணத்தில் என்ன பெயரென்பதையும் கூறு.

(5) கீழ்வரும் சொற்றொடர்கள் இலக்கண முறைப்படியமைந்துளதோ என்று ஆய்ந்து, ஏற்ப மாற்றியமை :—

(1) ஒரு மனிதன்.

(2) சுவற்றில் ஆணி அடித்தான்.

(3) யானையின் கால் வெட்டினான்.

(6) வியப்பிற்கும், விளிவிற்கும் விளிக்கும் இரண்டிரண்டு உதாரணம் தருக.

# 4. ஆபுத்திரன்

வாரணுசி என்பது வடபுலத்தே உள்ள ஓர் ஊர். அவ்வூரில் வேதம் ஓதும் விழுமிய குலத்தில் பிறந்தவன் அபஞ்சிகன் என்னும் அந்தணன். அவனுடைய மனைவி சாலி என்பவள். அவள் ஏதோ அறியாக்காரணத்தால் பாவச் செயல் புரிந்தாள். தீர்த்தமாடித் திரும்பி வரும் போது கருப்பமுதிர்ந்து மகப் பெறு காலம் அணுகிற்று. ஓர் ஆண் மகனையும் பெற்ருள். பெற்ற குழந்தையின் மீது இரக்கம் காட்டாமல், அது தன் பாவத்தின் முதிர்ச்சியிலே அதைப் பார்க்க விரும்பாதவளாகி, சாலி என்னும் அப் பெண், அதை அங்கேயே ஒரு பொழிலிடை விட்டுத் தன் வழியே செல்வாளாஞள். அக்குழந்தை வீறிட்டு அழத் தொடங்கியது. தூரத்தே மேய்ந்த ஒரு பசு அக்குழந்தை யின் அழுகுரலைக் கேட்டு, அதன் அண்மையில் வந்து நாவால் நக்கி, தன் பாலையும் உண்பித்தது. அவ்வாறே ஏழு நாள் அக் குழந்தையைப் பசு பாதுகாத்தது.

நிற்க, வயனங்கோடு என்னும் ஊரில் வாழும் பூதி என்னும் அந்தணன் தன் மனைவியோடு அவ்வழியே வந்தான். வந்த அவன் அக்குழந்தையைக் கண்டான். அதன் குரலைக் கேட்டான். அழகை அறிந்தான். மிக்க துன்பமொடு கண்ணீர் உகுத்து, 'ஆ மகன் அல்லன் என் மகன்,' என்று சொல்லி அக்குழந்தையை எடுத்துக் காதலியிடம் கொடுத்தான். அவளும் அன்போடு குழந் தையை ஏற்று ஊர் சென்று வளர்த்து வருவாளாயி னள். குழந்தை வளர வளர அந்தணர் குலச் சடங்குகளை



பசு குழந்தையை நாவால் நக்கிக்கொடுத்தது.

யெல்லாம் விதிமுறை தவறாது செய்து, பூணூல் அணி வித்துச் சிறப்புற வளர்த்து வருவாராயினர்.

சிறுவன் நன்கு பாதுகாக்கப்பட்டு வளர்ந்து வந்தான். அந்த நாளிலே அவ்வூரில் வேள்வி ஒன்றைச் செய்ய அந்தணர் முயன்றனர். அவ் வேள்வியில் பசுவினைக் கொல்வார்கள் போலும். அதற்கெனக் கொண்டு வரப்பட்ட பசு வொன்று, கழுத்தில் மாலையோடு தன் இறுதி வேளையை எண்ணி ஏங்கிக் கிடந்தது. வேடர் வலையிற் சிக்கிய மான் போல் வருந்திய அந்தப் பசுவினை எப்படியும் மீட்கவேண்டும் என்று கருதிய அச்சிறுவன் இரவில் ஒரு புறத்தே மறைந்திருந்து, அப்பசுவைப் பற்றிக்கொண்டு தனியாகப் புறப்பட்டுக் காட்டுவழியே செல்வானானான்.

பின்னர் யாகத்துக்கெனக் கொண்டுவந்த பசுவினைக் காணமுடியாது போனமையினாலே, கவன்ற பார்ப்பனர் அப்பசுவினைத் தேடலாயினர். காட்டு வழியில் பசுவுடன் சென்ற அச் சிறுவனைத் துன்புறுத்தினர். 'நிகழ்ந்ததை உரையாய் புலைச் சிறுமகனே, போக்கப்படுதி' என்று சொல்லிக் கோல் கொண்டடித்தனர். அவருள் உயர்ந்த பெரியான் ஒருவனது கொடுமையைக் கண்ட பசு, அவனை வயிற்றிடை முட்டிக் கொன்று காட்டினுள் ஓடிவிட்டது. அது கண்டு மற்றவர் மேலும் சினங் கொண்டனர். சிறுவனோ அமைதியாக அப்பசு செய்த கொடுமை யாது என்று கேட்டான். மேலும்,

'இரு நில மருங்கில் படுபுல் ஆர்ந்து
நெடுநில மருங்கின் மக்கட் கெல்லாம்
பிறந்தநாள் தொட்டுச் சிறந்த தன் தீம்பால்
அறந்தரு நெஞ்சொடு அருள்சுரந்து ஊட்டும்
இதனொடு வந்த செற்றம் என்னை'

என்று அச்சிறுவன் கேட்கவும் அவனை வந்தவர் பழித்தனர். 'பிரமதேவன் அருளிய வேள்வியின் திறத்தை இகழ்ந்து நீ அந்தப் பசுவினை மீட்ட காரணத்தால் நீ பசு மகன் எனப்படுவாயே யன்றி மகனாகமாட்டாய்' என்றனர். அதுகேட்ட சிறுவன் நகைத்து, மான் மகன், புலி மகன் நரி மகன் ஆகியோர் சிறந்த தவசிகளாகி அவ்வந்தணரால் போற்றப்படுவதை உரைத்து, தான் பசு மகன் என்றதால் தாழ்ந்து விடவில்லை என்று கூறினான். அதற்குள் அந்தக் கூட்டத்தில் இருந்த ஒருவன் முன் வந்து அனைவரிடத்தும் அச்சிறுவன் வரலாற்றைக் கூறினன். ஒழுக்கங்கெட்ட சாலி என்ற பார்ப்பனியின் மகன் என்பதையும், கொற்கைக் குக் காத தூரத்திலே அவன் பிறந்து, பசுவினால் காக்கப்

பட்டுப்பின் அவ்வூர் அந்தணனுல் கொண்டுவரப் பட்டதையும் கூறினன். கூறிய பின் அவனைப் புலைமகன் என்று அனைவரும் ஒதுக்கித் தள்ளுங்கள் என்ருன்.

அனைவரும் அவனை விட்டு நீங்கினர். அதுவரை அவனை வளர்த்த பூதி என்னும் அந்தணனும் அவன் பிழைபட்டவன் என்பதை அறிந்த காரணத்தால் அவனைத் தன் வீட்டிற்கு வரவேண்டாம் என்று கூறிவிட்டான். பிச்சையெடுத்தேனும் வாழலாம் என்று நின்ற அச்சிறுவனது பிச்சைப் பாத்திரத்திலே அப்பார்ப்பனர் கல்லிட்டுத் துன்பம் செய்தனர். ஆகவே அவர்கள் துன்பம் பொறுக்காது அவ்வூரையே விட்டு, தென்மதுரை சென்று சிந்தாதேவியின் திருக்கோயிலினுள் தங்கினுன். அங்கிருந்த செழுங்கலை நியமத்து வாயிலில் தங்கி அவ்வூரில் பலவிடங்களிலும் பிச்சையேற்று வந்தான். அவ்வாறு ஏற்றுவந்த பிச்சையைத் தான்மட்டும் உண்ணுது,

"காணுர், கேளார், கால்முடம் பட்டோர்
பேணுநர் இல்லோர், பிணி நடுக் குற்ருேர்"

ஆகிய யாவரையும் 'வருக' என்று அழைத்து அவர்களுக்கும் இட்டு, மிகுந்திருப்பதைத் தானும் உண்டு காலங் கழித்து வருவாஞயினுன்.

பிச்சைக்காரஞக இருந்த அச்சிறுவன் பின் எப்படி வற்ருத பாத்திரம் பெற்று உலகம் போற்றும் புகழ் பெற்ருன் என்பதை அறிய நம் உள்ளம் அவாவுகின்ற தன்ருே? பிச்சையேற்றும், பிறரை உண்பித்துத் தானும் உண்டு வாழ்ந்த அச்சிறுவனுக்கு மேலும் நலம் பல உண்டாயின. ஒரு நாள் பெரு மழை பெய்தது; மழைக்குப் பின் இருட்டிவிட்டது. நடு இரவிலே ஒரு சிலர் ஆபுத்திரன் தங்கியிருந்த அந்த மண்டபத்துக்கு வந்தார்கள். வந்து உறங்கும் அவனை எழுப்பித் தங்கட்குப் பெரும்பசி உண்

டென்றும், அதன் வருத்தம் நீங்க ஏதேனும் உணவளிக்க வேண்டும் என்றும் வேண்டிக்கொண்டனர். ஆனால் பிச்சையேற் றுண்ணும் வழியன்றி வேறு வகையில்லாத அவன் செய்வ தறியாது திகைத்தான். தான் பிச்சை யேற்றுக்கொண்டு வந்ததை மாலையே மற்றவர்களுக்கும் இட்டுத் தானும் உண்டு விட்டான். வேறு வழியில்லை என்று எண்ணி வருந்திக்கொண்டிருக்கையில் சிந்தாதேவி யின் திருக்கோயிலில் பேரொளி புகுந்தது. ஒளிவந்த திசை நோக்கினான் ஆபுத்திரன். சிந்தாதேவி அவன் முன்னே நின்றிருந்தாள். அத்தெய்வம் அவன் கையிலே ஒரு பாத்தி ரத்தைக் கொடுத்து,

"ஏடா ! அழியல் எழுந்து இது கொள்ளாய்
நாடுவறங் கூரினும் இவ்வோடு வறங்கூராது
வாங்குநர் கையகம் வருத்தல் அல்லது
தான் தொலைவு, இல்லாத் தகைமையது."

என்று சொல்லிற்று. அது கண்ட ஆபுத்திரன் தன்னை மறந்து, பிறர் துயர் களையும் பெரியோளாகிய அச் சிந்தா தேவியைப் பல்வேறு வகையிற் பரவிப் போற்றினான். பின்னர் அங்கு வந்தவர்கள் அனைவருக்கும் உணவினை அப்பாத்திரத்தி லிருந்து வாரி வாரி வழங்கினான். அப் பாத்திரத்தில் உள்ள உணவோ எடுக்க எடுக்கக் குறை யாது வளர்ந்துகொண்டே வந்தது. அனைவரும் வியந்தனர்.

பெற்ற பாத்திரத்தைக் கையிற் கொண்டு ஆபுத்திரன் அந்நாடு முழுதும் சென்று, பசித்திருப்பார் உண்டோ என்று கேட்டுக் கேட்டு அனைவருக்கும் பாத்திரத்திலிருந்து சோற்றினை வாரி வாரி அளித்து வந்தான். அவன் புகழ் நாடு முழுவதும் பரவியது. இவ்வுலகில் மட்டுமன்றித் தேவருலகினுக்கும் சென்றது அவன் புகழ்.

தெய்வ உலகத்தின் தலைவனாகிய இந்திரன் இவன் செயலைத் தன் பாண்டு கம்பள நடுக்கத்தால் அறிந்து கொண்டான். பாண்டு கம்பளமென்பது வெள்ளைக் கம்பளம் போர்த்த இந்திரனுடைய ஆசனம் போலும். இவ்வுலகில் நல்லறம் செய்து பெருநிலை பெறினும், அதனால் இந்திரருக்குஅல்லல் உறினும் அந்த ஆசனம் நடுங்கும் என்பது பௌத்த தர்மக் கொள்கை போலும். நடுக்கத்தின் காரணத்தை அறிந்த இந்திரன் கிழ அந்தணன் வடிவங் கொண்டுமாயிரு ஞாலத்துமன்னுயிர் ஓம்பும் ஆருயிர் முதல்வன் முன்னே தோன்றினான். எதிரில் வந்து நின்ற இந்திரனை நோக்கினான் ஆபுத்திரன். இந்திரனும் தான் இன்னானென்று கூறி அவன் தானத்தின் பலனைத் தன்னிடத்திலிருந்து பெற்றுக்கொள்ளுமாறு கூறினான். அவன் கூறியதைக் கேட்ட ஆபுத்திரன் விலா ஒடியச் சிரித்தான். தெய்வலோக வாழ்வைப் பற்றி எள்ளி நகையாடினான்.

"ஈண்டுச் செய்வினை யாண்டுநுகர்ந் திருத்தல்
காண்தகு சிறப்பினும் கடவுளர் அல்லது
அறஞ்செய் மாக்கள் புறங்காத்து ஓம்புநர்
நற்றவம் செய்வோர் பற்றற முயல்வோர்
யாவரும் இல்லாத் தேவர்நன் னாட்டுக்கு
இறைவ னாகிய பெருவிறல் வேந்தே"

என்று அந்நாட்டு இழிவு தோன்றக் கூறி அவனை விளித்தான். மேலும் பசியென வருந்தி வந்தோர்தம் வாடிய முகம் கண்டு, அவர்கட்கு வேண்டிய உணவிட்டு, வயிறு நிரம்பப் பெற்றபின் வாடிய முகம் மலரப் பெற அவனை வாழ்த்திச் செல்வோர் பலர். அம் மலர்ந்த முகம் காணும் வாழ்வு தேவ உலகில் கிடையாதே என்றான். மற்றும் இந்திரன் அளிப்பன யாவும் பலனற்றவையே என்று பரிகசித்தான். இவற்றையெல்லாங் கேட்ட இந்திரன் பெருஞ் சீற்ற

முற்ருன். பசி இருந்தாலன்ரே மக்கள் இவனிடம் வந்து சோறு, சோறு என்று வருந்திக்கேட்க, அவர்கட்கு உண வளித்து அவர்தம் திருந்து முகத்தை இவன் காணப் போவது என நினைத்தான். நாட்டில் பசி உண்டாகாதபடி நல்ல மழையினைப் பெய்வித்து விளைவினைப் பெருக்கி விட் டால், இவனும் இப் பாத்திரமும் பயனற்று நிற்க, இவன் தனக்குக் கீழ்ப்படுவான் என நினைத்தான். நினைத்தபடியே அதிக மழை பொழியச் செய்தான்.

பாண்டி நாட்டில் பன்னிரண்டாண்டு பற்றியிருந்த பஞ்சம் நீங்க நல்ல மழை பெய்தது. வரண்டு பயிராகா திருந்த நிலங்களெல்லாம் நல்ல பயனைத் தந்தன. விளைவு ஒன்றுக்குப் பத்தாகப் பெருகிற்று. மக்கள் நிறைய உணவைப் பெற்ருர்கள். எனவே, ஆபுத்திரனை அண்டி, 'உணவு உண்டோ ?' என்று வேண்டுவார் இலராயினர். வருந்திய ஆபுத்திரன் வருவோர் இலரே என்று எண்ணி அப்பாத்திரத்தைத் தான் கையிலேந்திக் கொண்டு ஊர் தோறும் சென்று உணவு வேணடுவார் உளரோ என்று காண விரும்பினுன். அவ்வாறே சிந்தாதேவியை வணங்கி வரங் கொண்டு ஊர்தோறும் சென்று உணவு உண்ண வாருங்கள் என அழைத்தான். ஆனல் எங்கும் அவனை இகழ்வோர் பலராயினர். நல்ல விளையுள் பெருகிய பின் பிச்சை ஏற்பார் இல்லை. இந் நிலையினை எண்ணிய ஆபுத் திரன் திருவின் செல்வம் பெருங்கடல் கொள்ள, ஒருதனி வரும் பெருமகன் போல் வருத்தம் அடைந்தான்.

அவ்வாறு அவன் வருந்தி யிருக்குங்கால் ஒரு நாள் கப்பலில் வந்து இறங்கிய சிலர் அவனைக் கண்டு, தூரத்தே உள்ள சாவக நாட்டில் மழை இன்மையால் பலர் உண வின்றி மடிகின்ருர்களென்றும் உடனே அவன் அங்குப் புறப்பட்டுச் சென்ருல் அனைவரும் அவன் அளிக்கும் உண

வினைக்கொண்டு உயிர் பிழைப்பார்களென்றும் கூறினர். அவர்கள் கூறியதைக் கேட்ட ஆபுத்திரன், வறியோன் பெருஞ் செல்வம் பெற்றதைப் போன்று பெரு மகிழ்வுற்று உடனே அந்நாட்டுக்குப் புறப்பட்டான்.

சாவகநாடு செல்லும் கப்பலில் புறப்பட்டான் ஆபுத்திரன். கப்பல் கடலைக் கிழித்துக் கொண்டு சென்றது. ஒரு நாள் அது மணிபல்லவம் என்ற தீவிடை நின்றது. கப்பலில் உள்ளார் சிலர் இறங்கி அத்தீவின் நலங்காணச் சென்றனர். ஆபுத்திரனும் சென்றான். அனைவரும் அத்தீவின் நலங் கண்டு திரும்பினர். ஆபுத்திரன் சற்று உள்ளே சென்றுவிட்டான் போலும். அனைவரும் வந்துவிட்டார்கள் என்று எண்ணிய கப்பற் றலைவன் கப்பலைச் செலுத்திக் கொண்டு நடுக் கடலுக்குச் சென்றுவிட்டான். பிறகு ஆபுத்திரன் கடற்கரை யடைந்து கப்பல் சென்று விட்டதைக் கண்டு செய்வ தறியாது திகைத்தான். அத் தீவில் மக்களே இன்மையால் அப் பாத்திரத்தால் அங்கு யாது பயன் என்று நினைத்தான். தான் அதில் வரும் உணவினை உண்டு வாழத் தேவையில்லை என எண்ணினான்.

யாருக்கும் பயன்படாத அப் பாத்திரத்தில் வரும் உணவினைத் தான் மட்டும் உண்டு உயிர் வாழலாகாது என்று கருதிய ஆபுத்திரன் உண்ணா நோன்பிருந்து உயிர் துறக்க நினைத்தான். அதற்கு முன்னாகச் சிந்தாதேவி அளித்த அந்த நந்தாப் பாத்திரத்தை—அமுத சுரபியை—அருகிலுள்ள கோமுகி என்னும் பொய்கையில் இட்டு, ஆண்டுக்கு ஒரு முறை அது வெளிவர வேண்டும் எனவும், அப்போது யாரேனும் 'அருளறம் பூண்டு ஆருயிர் ஓம்புநர் உளரெனில் அவர் கைப் புக வேண்டும்' எனவும் கூறினன். பின்னர் அப் பொய்கையின் பக்கலிலேயே உண்ணா நோன்பினை மேற்கொண்டான். அப்போது அறவணவடிகள் அங்கு



*ஆபுத்திரன் அந்தாப் பாத்திரத்தைப் பொய்கையில் மிதக்கவிட்டான்.*

சென்று அவன் பெற்ற பெருந்துயர் யாது எனக்கேட்க, அவன் எல்லாவற்றையும் அவருக்கு உரைத்தனன். பின்னர் அவன் உயிர் துறந்து, சாவக நாட்டினை ஆளும் அரசனது பசு வயிற்றில் மகனாகப் பிறந்தான்.

அவனைப் பெற்ற அப் பசு முற்பிறவியில், சாலி அவனை விட்டுச் சென்றபோது பாதுகாத்த பசுவேயாகும். அவனைப் பாலூட்டிப் பாதுகாத்த அப்புண்ணியச் சிறப்பினால் சாவக நாட்டில் தவளமால் வரையினிடத்து வாழ்ந்த மண்முக முனிவன் தங்கிய சோலையில் பிறந்தது. அதன் கொம்பும் குளம்பும் பொன்மயமாக இருந்தன. கன்றைப் பெற்றெடுப்ப தன் முன்னேயே கறவையாகித் தானே பற்பல விடங்களுக்

கும் சென்று பால் சொரிந்து நாட்டு மக்களை உண்பித்தது. அதன் செயலையெல்லாங் கண்டறிந்த, காலம் மூன்றும் உணரவல்லவனாகிய அம்முனிவன், 'அதன் வயிற்றினிடத்துத் தோன்றும் கருவில், மழை வளம் சுரப்பவும், மன்னுயிர் ஓம்பவும், உயிர்க் காவலன் ஒருவன் வந்து தோன்றுவான்' என்று கூறினான். அவன் கூறியபடியே நல்லதொரு நாளிலே ஆபுத்திரன் அப்பசு வயிற்றிற் பிறந்தான்.

நோயின்றியுங்கூட, 'அறமாற்ற வழியில்லையே; இறந்து வேறிடத்துப் பிறந்தாயினும் அறஞ் செய்வோம்,' என்ற செம்மை உள்ளத்தோடு மணிபல்லவத்தில் இறந்த ஆபுத்திரன் பிறந்த நாள் வைகாசி மாத நிறைமதி நாளாகும். அந்நாளில் நாட்டில் பல நன் னிமித்தங்கள் நிகழ்ந்தன. ஆபுத்திரனின் பெருமையறிந்த அச்சாவக நாட்டு மன்னனாகிய பூமிசந்திரன் என்பவன் மண்முக முனிவனிடம் வந்து அவனடி வீழ்ந்து வணங்கி, தனக்கு மகப்பேறில்லாமையை எடுத்து விளக்கி, ஆபுத்திரனைத் தனக்கு மகனாக அளிக்க வேண்டினன். முனிவனும் ஆபுத்திரனின் தகுதியும் திறமையும் அறிந்தவனாதலின் அவ்வாறே அரசனிடம் அவனை ஒப்படைத்தான். அவ்வாபுத்திரனும், பூமிசந்திரனுக்குப் பின்னர் நாட்டை நலம்பெற ஆண்டிருந்து இறையடி சேர்ந்தனன்.

## கேள்விகள்

1. சாலி என்பாளின் வரலாறு யாது ?
2. சாலி நீத்த குழந்தை காப்பாற்றப்பட்ட தெவ்வாறு ?
3. யாகப் பசு உயிர் தப்பிய தெவ்வாறு ?
4. ஆபுத்திரன் கூறிய பசுவின் சிறப்பென்ன ?

5. ஆபுத்திரன் தென் மதுரை சேர்ந்ததேன் ?
6. ஆபுத்திரன் '' அமுத சுரபி '' பெற்றதெவ்வாறு ?
7. இந்திரன் சின மடைந்த தேன் ?
8. சினங் கொண்ட இந்திரனின் செயலும் அதன் விளைவும் யாவை ?
9. ஆபுத்திரன் மணிபல்லவஞ் சேர்ந்ததேன் ?
10. ஆபுத்திரனின் மறு பிறவியின் வரலா றென்ன ?

## •பயிற்சி

1. ஆபுத்திரன் வரலாற்றை அவனே கூறுவது போல் எழுதுக.
2. அமுத சுரபியின் வரலாற்றைச் 'சுயசரிதமாக' எழுதுக.
3. மணிமேகலை முழுவரலாற்றையும் ஆசிரியர் வழிக் கேட்டு அறியவும்.

## இலக்கணம்

(1) பசு குழந்தையைக் காத்தது :—இதற்கு எழுவாய் பயனிலை செயப்படுபொருளை எழுதுக.

(2) பொழிலிடை விட்டுத் தன் வழியே செல்வாளானாள்:—இங்கு ஏழாம் வேற்றுமையைக் குறிக்கும் உருபு எது ?

(3) நனி, மிக, மன்னோ, ஐயகோ ! அம்மம்மா !—இவைகளுக்கு இலக்கணப் பெயர்களைத் தருக.

(4) 'அந்தணர் குலச் சடங்குகளையெல்லாம் விதிமுறை தவருது **செய்து** பூணூல் அணிவித்துச் சிறப்புற **வளர்த்து** வருவாராயினர்', இங்கு செய்து, வளர்த்து என்ற சொற்கள் எதைக் கொண்டு முடியும் ?

(5) கோல் கொண்டடித்தான் :—இதில் எவ் வேற்றுமை எப் பொருளில் வந்துள்ளது ?

(6) சேர்த்து எழுது :—
வலையில்+சிக்கிய ; கால்+முடம்+பட்டோர் ;
மக்கள்+கு+எல்லாம் ; பேர்+ஒளி ;
பற்று+அற.

(7) சிக்கிய ; வருந்திய ; வந்த—இவ்வெச்சங்களை முற்று விக்க.

(8) உவமை யணிக்கு ஒரு உதாரணம் தருக.

# 5. தூது நடந்த மூதாட்டி

## காட்சி 1

**ஔவை:** தமிழ்நாட்டுத் தனிப்பண்பே பண்பு! இந் நாட்டு மன்னர்கள் தாம் எத்தனை வகையில் நமக்கு அன்பும் ஆதரவும் காட்டி வருகின்றனர். முடியுடை வேந்தர் முதல் சாதாரண சிற்றரசர்வரை எத்துணை அரசர்கள் நம் கட்டளைப்படி நடக்கக் காத்துக் கிடக்கின்றனர். ஆம்! அவர் தம் உயர்ச்சி எங்கே? நமது ஏழ்மையும் எளிமையும் கலந்த தாழ்ச்சி எங்கே? இத்துணைப் பெரு வேறுபாடு இருந்தும் அவர்கள் என்னை எப்படிப் போற்றுகின்றனர். அதற்குக் காரணம் அந்தத் தமிழ்மொழி அல்லவா. கற்றவரை மற்றெவரைக் காட்டிலும் உயர்த்தும் தமிழ்மொழிக்குள்ள தனிச்சிறப்பே சிறப்பு. ஆம். புலவர் பாடலுக்கு ஏங்கும் புரவலர்தான் எத்தனைபேர். 'என்னிடம் தங்கலாகாதா' என்று இரங்கிப் புலவர்களை வேண்டும் மன்னுதி மன்னர்கள் இந்நாட்டில் உள்ளவரை புலவர்கள் வறுமை என்று ஏன் வாடப் போகிறார்கள்.

எத்தனையோ புரவலர்களை அடுத்தடுத்துச் சென்று கண்டு அவர்களது அன்பில் திளைத்த உள்ளம் ஏன் அதிக

மானிடம் விரைந்து செல்லுகின்றது. முடியுடை மூவேந் தரும் அடியிடை யிருந்தாலும்கூட அவர்களை எல்லாம் ஒரு பொருட்டாக மதியாது அதிகனைக் காண உள்ளம் அவாவுகின்றதே. ஆம். காரணம் உண்டு. அவன் தன் உயிரினும் மேலான நெல்லிக் கனியை எனக்குக் கொடுத்த கொற்றவன் அல்லவா ? யார் வேண்டுமானாலும் பொன்னை யும் பொருளையும் கொடுக்கலாம் 'வாழ்வையும் ; வளத்தை யும் வழங்கலாம் ; ஆனால் தன் உயிரைக் கொடுக்க இசை வாரா ஒருவர் ? இசைந்தானே அந்த அதிகமான். தன் உயிரை நெடிது நாள் வளர்க்கும் தன்மை வாய்ந்த அந்த நெல்லிக் கனியை எனக்குக் கொடுத்தானே. அதன் அருமை பெருமைகளை என்னிடம் எடுத்துச் சொல்லாது, தன்னிடமே மூடிவைத்து, அக்கனியை உண்டபிறகுதானே எடுத்துச் சொன்னான். ஆகா ! முன்னமே சொல்லி இருந் தால் நான் மறுப்பேன் என்ற காரணம்தானே அவனை அவ் வாறு செய்யத் தூண்டிற்று. தான் நீண்டநாள் உயிர் வாழ் வதனிலும் நான் உயிர் வாழ்ந்தால் உலகுக்குப் பேரும் புகழும் உண்டு என்று கூறினானே. அவன் ஒரு தியாகத்தின் சின்னம் அல்லவா ! அத்தகைய ஒரு புரவலன் இருக்கும் போது எப்படி என் உள்ளம் மற்றவரோடு தங்க விரும்பும். அவனைக் கண்டு நெடுநாட்க ளாயினவே. ஆம். உடனே புறப்பட்டுச் செல்லவேண்டும். இதோ செல்கிறேன். வாழ்க அதிகமானது பெருஞ் சிறப்பு.

## காட்சி 2

**அதிகன் :** (சற்று வருத்தத்துடன்) நான் என்ன செய் தேன் ? ஏன் அந்தத் தொண்டைமான் என்னிடம் வீண் சண்டைக்கு வருகிறான் ? நாட்டில் அமைதி நிலவ, அன்பு கொண்டு ஆளவேண்டும் என்ற தமிழ் நெறியை மறந்

தல்லவா அவன் போர் தொடுக்க நினைக்கிறான். நான் அமைதியோடு இருக்கின்றதால்தான் அவன் அவ்வாறு போருக்கு எழ நினைத்தான் போலும். என் அமைதிக் கிடையே அமைந்த வீரம் அவன் அறியான். என் பெயர் கேட்டவுடன் என் நாட்டு மக்கள் அன்பு நினைத்து அமையும் அதே நேரத்தில் மாற்றார் என் வீரத்தை நினைத்து மங்க வேண்டிய நிலை நாட்டில் உள்ளதை அவன் அறியானோ ? ஏன் அவன் என்மேல் இவ்வளவு மாறுபடுகின்றான் ? நட்பினன் என்ற முறையில் என்ன வேண்டுமானாலும் ஒரு வருக்கொருவர் பரிமாறிக் கொள்ளலாமே. அதைவிட்டு இப்படி யேன் போர் வேண்டி மாறுபடுகின்றான்.

ஐயோ ! ஒரு காரணமுமில்லாமல் போர்தொடுக்க மனம் விரும்ப வில்லையே. ஔவையும் அருகில் இல்லையே. யார் வழி சொல்வார்கள். அவர்கள் இருந்தாலும் ஒருவாறு இடையிட்டுப் போரின்றிப்' பாதுகாப்பார்களே. (சற்று நினைத்து, ஔவை வர) ஆம். அதோ வருகின்றவர்கள் அவர்கள்தான் என நினைக்கிறேன். நினைத்தலென்ன. அவர்களே தான். (அருகில்வர) அன்னாய் வணக்கம்.

**ஔவை:** வாழ்க நின் கொற்றம் !

**அதிகன்:** அன்னாய் ! தாங்கள் அருகில் இல்லாத நிலை என்னை வாட்டி வருத்துகின்றதே.

**ஔவை:** மன்னா, புலவர்கள் பறவைபோன்றவர்கள் தானே. பலவிடங்களுக்கும் பறந்து சென்று வந்து விட்டேன்.

**அதிகன்:** ஆனால் என்னையும் அப்படியா மற்றவர் களோடு ஒப்பிடுகிறீர்கள் ? (வருந்துகிறான்.)

**ஔவை:** அப்படியில்லை. உன் உயிரினும் என்னைப் பொருளாக எண்ணிய உன் உயர்வை என்றும் மறப்பேனா ?

வருந்தவேண்டாம். இனி என்றும் உன் அவையை விட்டுச் செல்லவே மாட்டேன். ஆனால்......

**அதிகன் :** என்ன அன்னாய் ! ஆனால் ?

**ஔவை :** ஒன்றுமில்லை நான் இதுவரை தென்னாடெல்லாம் சுற்றி வந்தேன். வடக்கே தொண்டை நாட்டையும் நடுநாட்டையும் சுற்றிக் காணவேண்டுமென்று கருதுகிறேன். அதற்காகச் சில நாட்கள்தான் உன்னை விட்டுப் பிரிய நேரும்.

**அதிகன் :** என்ன ! தொண்டை நாட்டுக்கா ? (பதறுகிறான்.)

**ஔவை :** ஆம் மன்னா ! ஏன் அவ்வளவு பதட்டம் ?

**அதிகன் :** அன்னாய் ! பதட்டம் என்ன ! பாருங்கள் இந்தத் தொண்டைமான் ஓலையை. (கையில் உள்ள ஓலையைத் தருகிறான். ஔவை படித்துச் சிரிக்கிறாள்.)

**அதிகன் :** என்ன அன்னாய் ? எல்லாம் அறிந்த தாங்கள் இப்படிச் சிரிக்கிறீர்கள். நான் ஒன்றும் செய்யாதிருக்கின்ற இந்த வேளையிலே, அவன் வலியப் படை எடுத்து வரக் காரணம் காட்டாது கடிதம் எழுதுகிறான் என்றால் அவனை என் செய்வது ?

**ஔவை :** அதிகனே ! ஆத்திரப்பட வேண்டாம். தொண்டைமான் அறிவிற் சிறந்தவன் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இதில் யாரோ இடையில் தலையிட்டிருக்க வேண்டும் என நினைக்கிறேன்.

**அதிகன் :** அன்னாய் ! நானும் அதைத்தான் முதலில் நினைத்தேன். அவன் இதுவரையில் எங்கேயும் போர் செய்தான் என்று நான் கேள்விப் பட்டதில்லையே. அவன் எவ்வாறு இப்படி வலிய வந்து போருக்கு அழைப்பான் என்பதே புரியாத செயலாக உள்ளது.

**ஔவை:** சரி! அதையெல்லாம் பிறகு பார்த்துக் கொள்ளலாம். இப்போது நான் என்ன செய்யவேண்டும்?

**அதிகன்:** எல்லாம் அறிந்த தங்களுக்கு நான் சொல்ல வேண்டியது என்ன இருக்கிறது. அன்னையே! நான் போருக்கு அஞ்சுபவன் அல்லன் என்பதும் தாங்கள் அறியாததா? என் பகைவர் புயலிடைப்பட்ட பஞ்செனக் கெடுவதைத் தாங்கள் எத்தனை முறை கண்டிருக்கிறீர்கள்?

**ஔவை:** ஆம்: அதனால்...இப்போது?

**அதிகன்:** இப்போது என் மனம் ஏனோ இந்த வலிய வரும் போரை விரும்பவில்லை.

**ஔவை:** அது சரிதானே. ஏன் ஒரு காரணமும் இல்லாமல் வலியப் போரிட வேண்டும்! அப் போரில் பல்லாயிரக் கணக்கான மக்கள் உயிர் துறக்க, கோடிக் கணக்காகப் பொருள்கள் கெட்டொழிய அதைக் கண்டு மகிழ்வதா வீரம்? வலியவரும் போராயினும், விலக்கும் வழிகளால் விலக்கி, நாட்டில் அமைதியை நிலைநாட்டுவதே நல்ல அரசர் தொழில். ஆகவே நீ அவ்வாறு நினைத்ததில் தவறொன்றுமில்லை. சரி, இந்த நிலையில் நான் என்ன செய்யவேண்டும் என்கிறாய்?

**அதிகன்:** அன்னையே! நான் சொல்லவும் வேண்டுமா? எல்லாவற்றையும் என் வாயிலிருந்தே தாங்கள் பெறவிரும்புகிறீர்கள் போலும். சரி அன்னாய்! தாங்கள் உடனே தொண்டை நாடு புறப்பட்டுச் சென்று, தொண்டையர்கோனைக் கண்டு, எப்படியும் இந்தப் போர் நடக்காதவாறு செய்தல் வேண்டும்.

**ஔவை:** அவ்வளவுதானே!

**அதிகன்:** ஆம். ஆனால் நான் போருக்கு அஞ்சினேன் என்று அவன் எண்ணிக்கொள்ளக் கூடாது.

**ஔவை:** அதில் எனக்கு அக்கறை இல்லையோ; நாளையே புறப்படுகிறேன்.

**அதிகன்:** நல்லது வாருங்கள் உணவு கொள்ளச் செல்லலாம்.

## காட்சி 3

(தொண்டைமான் காஞ்சியில் வீற்றிருக்கின்றான்.)

(தனக்குள்) என்ன! இன்னும் அதிகனது பதில் வர வில்லையே. அவன் அப்படி ஒன்றும் போருக்குப் பின் அடைபவன் இல்லையே!

**அமைச்சர்:** அரசர் பெருமானே அதிகன் அவ்வளவு எளியவன் அல்லன். அவன் எதையுமே எண்ணித் துணியும் இயல்புடையவன். அவன் ஆய்ந்து தக்கவரைப் பதில் சொல்ல அனுப்புவான். எப்படியும் இன்னும் இரண்டொரு நாட்களில் பதில் கட்டாயம் வந்துவிடும்.

**தொண்டைமான்:** என்னதான் பதில் வரட்டுமே. நம்முன் அவன் எப்படி நிற்பான்? நம் சேனை எங்கே? அவன் படை பலம் எங்கே?

**அமை:** ஆம் என்றாலும் நம் ஒற்றர் மதிப்பிட்டுக் கூறிய அளவைத்தானே நாம் அறிவோம்.

**தொண்:** ஆமாம். என்றாலும் அவர்கள் தவறாகவா மதிப்பிடுவார்கள். ஒருக்காலும் இருக்காது. (தூரத்தே ஔவை வருகிறார்.) அமைச்சரே! அதோ ஒருகிழம் வருகிறதே அது யார்?

**அமை:** தெரியவில்லை. ஒரு கிழவி. ஒரு வேளை ஔவையாராக இருக்கலாமா!

**தொண்:** ஆம். அமைச்சரே, ஐயமில்லை. நான் அவர்களை இதற்குமுன் இரண்டொரு தடவை கண்டிருக்கிறேன்.

**அமை :** நான் அவர்களைக் கண்டதில்லை. அவர் தம் புலமையைக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆமாம் அவர் ஏன் நம்மை நாடி வருகிறார் ?

**தொண் :** என்ன அமைச்சரே ! கேள்வி வேடிக்கை யாக இருக்கிறது. புலவர்கள் புரவலர்களை நாடி வருதல் இயல்பு தானே. அவர்கள் நம்மைப் பாட, நாம் அவர்களுக் குப் பொன்னும் பொருளும் கொடுக்கத்தானே ஒருவரை ஒருவர் பற்றி வாழ்கிறோம். அவர் நம் மனைக்கு வருவதற்கு நாம் பேறு செய்தவர்கள்தான். (ஔவை அருகில் வர, இருவரும் எழுந்து) அன்னையே. வரவேண்டும், வர வேண்டும்.

**ஔவை :** சான்றோர் வாழ் நன்னாட்டு மன்னா ! வாழ்க நின் கொற்றம், வழி வழி சிறக்க நின் செல்வம்.

**தொண் :** அன்னாய். தங்கள் வாழ்த்தைப் பெற நான் பெற்ற பேறே பேறு. (ஔவையும் மற்றவரும் உட்காரு கின்றனர்.)

**தொண் :** அன்னாய் ! என்னையும் ஒரு பொருட்டாக எண்ணி வந்த உங்களை என்றென்றும் போற்றுவேன். தாங்கள் இங்கேயே தங்கியிருக்க வேண்டும்.

**ஔவை :** நல்லது மன்னா, ஆனால் நான் வந்த வேலையைப் பற்றிச் சொன்னால், ஒருவேளை என்னை வெறுத் தாலும் வெறுப்பாய்.

**தொண் :** அன்னையே ! என்னை அவ்வாறு கருத வேண டாம். வழிவழி அறத்தால் ஆணை செலுத்தி ஆண்ட இத் தொண்டையர் குடி புலவர் தம் புகழுக்கு ஏங்கும் குடி. நீங்கள் எங்களை வெறுத்தாலும், ஒறுத்தாலும் உங்களை என்றென்றும் பிரியேன்.

**ஔவை :** இல்லை. நான் வந்த காரியம் பற்றிச் சொல்லுகிறேன். பிறகு பேசு.

தொண்: என்ன அது? அவ்வளவு அவசரமானதா? அடியேனால் செய்யக் கூடியது எதுவாயினும் உடனே முட்டின்றிச் செய்து முடிப்பேன்.

ஔவை: மன்னா! நான் இப்போது எங்கிருந்து வருகிறேன் என்பது உனக்குத் தெரியுமா?

தொண்: அன்னாய்! என்ன? என்னைக் கேள்வி கேட்கின்றீர்களே? நான் என்ன சொல்லமுடியும்? உரிமைப் பறவையாய், ஒருவருக்கும் அடங்காது சுற்றித் திரிந்து தமிழ் நலம் பரப்பும் தங்களைப் போன்றோர் தங்கும் இடம் எங்கு என்று யாரால் சொல்ல முடியும்? (சற்று சிந்தித்து) எனினும் தாங்கள் பெரும்பாலும் அதிகமானுடன் தங்குவதாகத்தான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

ஔவை: ஆம். நன்று சொன்னாய். நான் பெரும்பாலும் அதிகமானுடன்தான் தங்கியிருக்கிறேன். இங்கும் அவன் அனுப்பவே வந்தேன்.

தொண்: என்ன? தங்களைத் தூதாக அனுப்பினானா? கொடுமை கொடுமை.

ஔவை: ஏன்? நான் தூதாக வரலாகாதா? பெண் என்ற காரணத்தாலா?

தொண்: அன்னாய். அவ்வாறு நினைக்கவேண்டாம். உலகும் கலைக்களஞ்சியமாக உள்ள தங்களை இந்தச் சிறு பணிக்கு அனுப்புவது என்றால்!......

ஔவை: ஏன்? நம் நாட்டில் பெண்களும் ஆண்களுக்கு நேராக அறிவும் திருவும் ஆற்றலும் பெற்றவர் என்பதை உலகம் அறியுமே! நான் தூது வந்தால் காரியம் கெட்டு விடுமா?

தொண்: அன்னையே! தவறாக நினைக்கவேண்டாம். தங்களைப்போன்ற அறிவு ஊற்றுக்களை அருகிலேயே யிருத்திக் கலைச் செல்வத்தால் உண்டாகும் பயனைப் பெற

வேண்டுமே யன்றி, இப்படிக் காடும் மலையும் கடந்து நடக்கச் செய்யலாமோ எனக் கவல்கின்றேன்.

ஔவை: அரசே! அதிகன் என்னை அனுப்ப இசைய வில்லைதான். நானேதான் வேண்டுமென்று புறப்பட்டு வந்தேன். உன்னைக் காணவேண்டுமென்ற ஆசை எனக்கு நெடு நாட்களாக இருந்தது. அதற்காகவே நான் புறப் பட்டேன். மற்றும் மக்களுக்குள் அமைதி நிலவ வழி காணும் முகத்தாலேயே இங்கு வந்தேன்.

தொண்: தாயே! அப்படியாயின் நன்றே. நானும் தங்களை இங்கு வரவேற்க நெடுநாளாக நினைத்தேன். அது இன்று எதிர் பாராதபடி நிறைவேறிற்று. மற்றவற்றைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம். வாருங்கள் உணவு கொள்ள லாம். (அமைச்சரை நோக்கி) அமைச்சரே! அன்னைக்கு வேண்டிய வகையில் உணவினை ஏற்பாடு செய்யுங்கள். நாட்டு மக்களுக்கு அவரது நல்வரவு உணர்த்துங்கள். அன்னாய் வாருங்கள். போகலாம். (அனைவரும் செல் கின்றனர்.)

## காட்சி 4

### (படைக்கலக் கொட்டில்)

தொண்: தமிழ் நலம் அறிந்த அன்னையே. இதோ இப்போது நாம் நமது படைக்கலக் கொட்டிலில்தான் இருக்கின்றோம். என்னுடைய படைக்கலங்கள் எவ்வளவு சிறப்பாக ஒளிவிட்டுக் கொண்டிருக்கின்றன.

ஔவை: மன்னா! வாழ்க நின்வீரம். ஆகா! எவ் வளவு சிறப்பாக உனது படைக்கலங்கள் இதோ கண்ணைப் பறிக்கும் ஒளியை வீசிக்கொண் டிருக்கின்றன. இது போன்று நான் எங்கும் யாரிடத்தும் கண்டதில்லையே.



படைக்கலக்கொட்டிலில் ஔவையும் தொண்டைமானும்.

**தொண்:** அப்படிச் சொல்லுங்கள். என்னுடைய ஈடும் எடுப்புமற்ற இந்தப் பெருநிலையைக் காணாத காரணம் தான் பல தமிழரசர்களை என்னிடம் போர் கொள்ளத் தூண்டியிருக்கவேண்டும். இனிப் பயமில்லை, தாங்களே செல்லுமிடந் தோறும் இந்தக் கொட்டிலின் பெருமையை எடுத்துச் சொல்லுவீர்க ளன்றோ!

**ஔவை:** ஆகா! ஏன் சொல்லாமல்! யாருடைய படைக்கலங்கள் இவ்வளவு அழகாகப் பீலியும் மாலையும் சூட்டப்பெற்றுச் சிறந்து விளங்கும். உன்னுடைய வீரமே வீரம்.

**தொண் :** ஆமாம். தங்களிடமிருந்து மற்றொன்றும் அறிய வேண்டும். தாங்கள் அதிகமானிடமிருந்து தூதாக வந்திருக்கிறீர்களே. அவனிடம் இவ்வளவு படைக்கலங் கள் இத்தகைய ஒளிவீசிக் கொண்டிருப்பதைக் கண்டிருக் கிறீர்களா ?

**ஔவை :** இல்லை, இல்லை. எக்காலும் இல்லை. அவனுக் குப் படைக்கலக் கொட்டில் என்று ஒன்று. அவனுக்கு நல்ல ஆயுதங்கள் தான் ஏது? ஏதோ சில ஒடிந்தவை எங்கோ ஊர்க் கோடியில் கொல்லன் உலைக்களத்தில் உருத் தெரியாது மூடிக் கிடக்கும்.

**தொண் :** நல்லது சொன்னீர்கள். உங்கள் வாக்கு முற்றிலும் உண்மை. அந்த அதிகமானுக்கு இந்தப் பெரும் படைக்கலங்கள் தான் ஏது? இவற்றின் பெயர்கள் கூட அவனுக்குத் தெரியுமோ தெரியாதோ. ஐயோ பாவம், அவன் உங்களை வேறு தூதனுப்பி யுள்ளானே.

**ஔவை :** நீ சொல்வது உண்மைதான். ஆனால் ?

**தொண் :** ஆனல் என்ன அம்மையே ?

**ஔவை :** ஆமாம். இந்த ஆயுதங்களெல்லாம் இவ் வளவு அழகாக ஒளிவீசிக் கொண்டிருக்கின்றனவே. நீ போருக்கு எந்த ஆயுதங்களை உபயோகிப்பாய் ?

**தொண் :** ஏன் ? அதில் என்ன ஐயம் ? இதே ஆயுதங் களைத்தான்.

**ஔவை :** அப்படியா ! மகிழ்ச்சியே ! ஆமாம். நீ இவைகளைக் கடைசியாக எப்போது உபயோகித்தாய் ?

**தொண் :** (ஆழ்ந்து நினைத்து) தற்போது நினைவுக்கு வரவில்லையே.

**ஔவை :** நெடுநாள் ஆகியிருக்கும் போலும்.

**தொண் :** ஆம் இருக்கலாம். சண்டை இருந்தால் தானே.

**ஔவை:** உன் பெருமையே பெருமை. அந்த அதிகன் அடிக்கடி பலரோடும் போரிட்டு ஆயுதங்களை உடைத்துவிட்டு எப்போதும் கொல்லன் உலைக்களத்தி லேயே அவைகளைப் போட்டுவிடுகிறான்.

**தொண்:** இருக்கலாம்; இப்போது போர் தொடங்கி ஞல் அவனிடம் படைகள் இல்லை என்று சொல்லுங்கள்.

**ஔவை:** படைகள் இல்லை என்பது உண்மைதான். ஆனால் உன்னிடம் படைகளிருந்தும் அவற்றால் பயன் இல்லையே.

**தொண்:** என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள். இதோ இவற்றாலெல்லாம் பயன் இல்லை என்று நினைக்கிறீர்கள்.

**ஔவை:** பயன் இல்லை என்று யார் சொன்னார்கள்? ஆனால் அவற்றை யெல்லாம் பயன்படுத்தும் வழி யாருக் குத் தெரியும் என்று ஐயுறுகிறேன்.

**தொண்:** *ஏன், நாங்களெல்லாம் அறியாதவர்களா?*

**ஔவை:** இவற்றை எப்போது தொட்டீர்கள் என்பதே உனக்கு நினைவில்லையே.

**தொண்:** (ஆழ்ந்து நினைத்து) ஆம், உண்மைதான். எப்போதோ ஒரு முறை தொட்டிருப்போம். இவற்றைப் பயன்படுத்த மறுபடியும் நான் மட்டுமன்றி என் சேனைத் தலைவர்களும் பழகத்தான் வேண்டும் போலும்.

**ஔவை:** போலும் என்ன! பழகத்தானே வேண்டும்.

**தொண்:** ஆம்.

**ஔவை:** அதே வேலையில் ஓய்வின்றிப் போராடிக் கொல்லன் களத்திலே ஆயுதங்களை வீசி எறிந்து படை களையே என்றும் பயின்றிருக்கும் அந்த அதிகமானை நினைத்துப்பார்.

**தொண்:** (ஆழ்ந்து நினைக்க) அன்னாய்! அறிந்தேன்! அறிந்தேன்! தங்கள் அறிவின் திறத்தால் என்னை வென்று

விட்டீர்கள். ஆம். இத்துணைப் பெரும் படைகளிருந்தும் போரறியாது இருக்கும் என்ருல் பயன் என்ன ? இது ஒரு காட்சிச் சாலையாக அல்லவா மாறிவிட்டது. அதிகனது ஆண்மை அவன் படைகள் கொல்லன் உலைக்களத்தில் உள்ளதனுலேயே தெரிகின்றதே, அறிந்தேன் ; அழிந்தேன். அன்னுய் என் தவறைப் பொறுக்க வேண்டுகிறேன். (அடி பணிகிருன்.)

**ஔவை:** மன்ன ! அறிவு நிறைந்த தமிழர் நற்குடி வந்த பண்பினுல் நான் விளக்கிச் சொல்வதன் முன்பே நீ உன் நிலை உணர்ந்து தவறு காணத் தொடங்கிவிட்டாய். இது உன் மட்டற்ற அறிவின் செறிவையும், ஆற்றல் நிலையையுமன்ரே காட்டுகின்றது.

**தொண்:** அன்னுய்! என் ஆணவத்தால் அறியாது கெட்டேன். தாங்கள்தான் என் நிலையை அதிகனுக்கு உணர்த்தி நட்புக்கொள்ளச் செய்யவேண்டும்.

**ஔவை:** அரசனே ! பின் நான் எதற்குத்தான் வந்தேன். ஒரு பெரும் தமிழர் மரபில் வந்த உங்கள் இருவருக் கிடையில் போர்மூளலாகாது என்ற காரணத் தாலேயே நான் இவ்வளவு தூரம் வந்தேன். கவலற்க. இனிப் போர் ஏது ? நீமட்டு மன்று ; உனக்கு முன்னும் எத்த னையோ வேந்தர்கள் ஆத்திரத்தால் தள்ளப்பட்டு போர்க் களம் புகுந்துள்ளார்கள். அதன் பலன் தமிழ்நாடு பலமுறை போர்க்களமாக்கப்பட்டது. ஆனல் நீயோ அறிவு திருந்திய வன் ; ஆதலால் உடனே உண்மை நிலையை உணர்ந்து கொண்டாய்.

**தொண்:** அன்னுய் ! நானு உணர்ந்தேன். தாங்கள் உணர்த்தினீர்கள். என்றென்றும் தாங்கள் இருந்து போர் வகுக்கும் இருவேந்தருக் கிடையில் தூதுசொன்னல் தமிழ் நாட்டில் என்றென்றும் போர் தலை காட்டாது ஒழியுமே !

**ஔவை:** மன்னு! உண்மை. என்றுலும் பல பேரறிஞர்கள் என்போன்று நேரில் சொல்லாவிட்டாலும் நிறைய அற வழிகளை ஆக்கி வைத்துச் சென்றிருக்கிருர்கள். வையகமே வாழ வழிகாட்டும் திருக்குறள் போன்ற அற நூல்கள் நம் நாட்டில் உள்ளன. அவற்றையெல்லாம் படிக்கும் தமிழர்கள் மனம் திறந்து காட்டுவதில்லே. அதனுலே தான் நாட்டில் போரும், பிற தீமைகளும் நடக்கின்றன. எல்லாரும் உன்னேப்போல் தொட்டுக் காட்டிய உடனே உணர்ந்து நடப்பவர்களா யிருந்தால் நாடு இப்படிச் சீர் கெடுமா ?

**தொண்:** அன்னுய்! என்னேப் புகழ்வது இருக்கட்டும். உங்களேப்போன்ற நல்லவர்களால் இனி நாடு திருந்தும் என எண்ணுகின்றேன். உடனே அதிகனேக் காணவேண்டும். தாங்களே ஏற்பாடு செய்யுங்கள்.

**ஔவை:** நல்லது நான் புறப்பட்டுச் சென்றதும் உன்னேயும் அவனேயும் ஒன்றுபடுத்திக் கூட்டிவைக்கிறேன். கவலற்க.

**தொண்:** நல்லது அன்னுய்.

## காட்சி 5

(ஔவையும் அதிகனும் தொண்டைமானும் கூடி இருக்கின்றனர்.)

**ஔவை:** மன்னர்களே. உங்கள் இருவரையும் இங்கு ஒருசேரக் காண என் கண்கள் குளிர்கின்றன. மனம் மகிழ்கின்றது. உளமும் இனிக்கின்றது. ஆகா! தமிழ் நாட்டு மன்னர்கள் இப்படியே ஒருமை உளத்தால் வாழ்வார்களானுல் நாடு என்றும் எக்காரணத்தாலும் நலிவுருதே. சிறு சிறு வேறுபாடுகளே யெல்லாம் பெரிதாக்கும் போர்ப் புன்மை தானே நாட்டைத் துன்பத் தாழ்த்துகின்றது. கருத்து

வேற்றுமைக்கு இடங்கொடுத்து எல்லோரும் தமிழ் மக்கள் தானே என்ற உணர்வில் நீங்கள் இருப்பீர்களானுல் எத்தனே எதிர்ப்பு இருந்தாலும் நாட்டை என்ன செய்ய இயலும். என்றும் நாட்டில் நலிவு வராதிருக்க இதோ இன்றுகாணும் உங்கள் கூட்டுறவு உலகுக்கு எடுத்துக்காட்டாக அமைவ தாக. என்றும் உங்கள் நாடும் மொழியும் வாழ்வதாக! வாழ்க!

## கேள்விகள்

(1) ஔவை மற்ற அரசரை விட அதிகமானேயே நாடு வதன் கருத் தென்ன ?

(2) அதிகமான் தொண்டைமானிடம் ஏன் தூதனுப் பினுன் ?

(3) ஔவையார் போரினே எவ்வாறு தடுத்தார் ?

(4) அதிகமான் ஔவையாரைத் தூதனுப்பியதற்குத் தொண்டைமான் எவ்வெவ்வாறு வருந்துகின்ருன் ?

(5) புலவர்களுக்குப் பண்டைக் காலத்தில் அரசரிடமும் சிறப்பிருந்தது என்பதற்குக் காரணங் காட்டிப் பதில் தருக.

## பயிற்சி

(1) அதிகமான் பெற்ற நெல்லிக் கனியின் வரலாற்றை ஆசிரியரிடம் கேட்டுத் தெளிக.

(2) தொண்டைமான் தன் தவறு உணர்ந்து வருந்து வதாக ஒரு கட்டுரை வரைக.

(3) ஔவையாரைப் பற்றி ஒரு பக்கத்திற்கு மேற் படாமல் ஒரு கட்டுரை வரைக.

## இலக்கணம்

(1) விளி வேற்றுமை, வியப்புச்சொல் இவைகளுக்கு எடுத்துக் காட்டு தருக.

(2) கீழ் வரும் சொற்றொடர்களில் அமைந்த வேற்றுமைகளை எழுதி அவைகள் எப் பொருளில் வந்துள்ளன என்பதையும் குறிக்க :—

(1) தொண்டைமான் அறிவிற் சிறந்தவன்
(2) போருக்கு அழைப்பான்
(3) வாழ்த்தைப் பெற நான் பெற்ற பேறு
(4) அதிகனிடம் படையே இல்லையே.

(3) இறப்பும்மை, தேற்றேகாரம் இவைகளுக்கு உதாரணம் தந்து விளக்குக :—

(4) புணர்த்து வரைக :—

முட்டு + இன்றி
நெடு + நாள் + கள்
போர் + அறியாது.

(5) மூன்றும் வேற்றுமை ஆக்கல் பொருளிலும், இரண்டாம் வேற்றுமை அழித்தல் பொருளிலும் வரும்படி உதாரணங்கள் தந்து விளக்கம் தருக.

# 6. பொங்கல் விழா

'தை பிறந்தால் வழி பிறக்கும்,' என்பது சாதாரண மக்கள் வழங்கும் தமிழ்நாட்டுப் பழமொழி. தை மாதம் பிறந்தால் அப்படி என்ன வழி பிறக்கப் போகிறது? அந்தத் தை அவ்வளவு சிறந்த மாதமா? இல்லாததை என்ன சாதிக்கப்போகிறது அந்தத் தை? இது போன்ற கேள்விகள் உள்ளத்து எழுதல் இயல்புதான். எனினும் அந்தப் பழ



ஒரு பெண் பொங்கல் விழா கொண்டாடுகிருள்.

மொழி நாட்டில் நெடுங்காலமாக வழக்கில் இருந்து வரு வதைப் பார்த்தால் நிச்சயம் இத் தைமாதம் மக்கள் வாழ்க் கைக்கே வழிகாட்டும் மாதமாக இருந்திருக்கக்கூடும் என்பது மெய்யாகும்.

மக்கள், மனமகிழ்ச்சியோடு வாழ்வதே வாழ்க்கை. அந்த இன்ப உணர்ச்சியை 'மனம் குளிர்ந்தது' என்று சொல்லுவார்கள். உள்ளங் குளிர்ந்து, உணர்ச்சி சிறந்து வாழ்வதே நல்வாழ்வு. அந்த வாழ்வைத் தைத் திங்கள் வழங்குகின்றது போலும். சங்க காலந் தொடங்கி இன்று வரை இத் தைத் திங்களைப் பற்றித் தமிழ்நாட்டு இலக்கியங் கள் பாடுகின்றன. குளிர்ந்த தன்மைக்குத் தைத் தண்மை

யைக் குறிக்கின்றார்கள் புலவர்கள். அனைவரும் வேறு பாடற்று, கலந்து மூழ்கி நலம் பெறும் குளிர்ந்த பொய்கை யைத், 'தைத்திங்கள் தண்கயம்' என்கின்றார்கள். தைப் பூச விழா தேவாரத்தில் சிறப்பித்துப் பேசப்படுகின்றது. தையின் முதல் நாளாகிய பொங்கல் நாள் தமிழர்களுக்குத் தலைசிறந்த நாளாகப் போற்றப்படுகின்றது. ஆடியில் உழுது விதைத்து, அடுத்து வரும் மாரிக்காலத்தில் நீராட்டி வளர்க்கப்பெற்ற பயிர்களெல்லாம் கல்விசேர் மாந்தரின் தலை வணங்கிக் கதிர் முற்றி அறுவடைக்குத் தயாராகுங் காலம் இத் தைமாதமே யன்றோ! தமிழ் நாட்டில் பெரும் பாலராக உள்ள உழவர் அப் பயன் கொண்டு தாமும் அருந்தி, சுற்றத்தாரையும் மற்றவரையும் அருந்தச் செய்து மகிழ்ந்து கொண்டாடும் நாளன்றோ தைத் திங்கள்! ஆம்! அந்த மாதத்தில் புற உலகம் குளிர்ந்துள்ளது போன்றே மக்களது அகமும் வயிறும் நிறைந்து குளிர்ந்திருக்கும் என்பது உறுதி.

தமிழ் நாட்டில் எத்தனையோ விழாக்கள் நடைபெறு கின்றன. கோவிலிலும், குளக் கரையிலும், சோலையிலும், மலையிலும் நடைபெறும் கொண்டாட்டங்கள் மிகப் பல. தமிழர் தம் இல்லங்கள்தோறும் கொண்டாடப்பெறும் விழாக்களும் பல. அவற்றுளெல்லாம் தலையாயது பொங்கல் விழாவே யாகும்.

விழா என்றால் ஏதோ ஒரு நாளைய பொழுதுபோக்கு என்று கொள்ளவில்லை தமிழர்கள். வாழ்வாங்கு வையத்தை வாழவைக்க வேண்டும் என்ற அடிப்படையிலே விழாக்கள் கொண்டாடப்பட்டன. நாட்டிலே வாழும் மக்களெல்லோ ரும் யாதொரு வேறுபாடும் இன்றி ஒன்றிக் கலந்து, நாட்டில் பஞ்சமும் பிணியும் இல்லா வகையில் வாழ வகுக்க முற்படுவனவே விழாக்கள். தமிழ் நாட்டுத் தலை

சிறந்த விழாக்களுள் ஒன்ருக விளங்கிய இந்திர விழாவைப் பற்றி ஆசிரியர் சாத்தனர் கூறத்தொடங்கும்போது, அவ் விழா பற்றி வள்ளுவர் முதுமகன் முரசறைந்து கூறியனவாக இரண்டு அடிகள் காட்டுகின்ருர். அவற்றைச் சொல்லிப் பின் விழாவினைப்பற்றி முரசறைகின்ருன் முதுமகன்.

"பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்க என வாழ்த்தி"

முரசறைந்தான் என்கின்ருர் சாத்தனர். ஆம். விழா என்பது நாட்டிலே உள்ள பசியும் பிணியும் இல்லாமல் அகல, செல்வமும் வளமும் சிறப்ப நிற்க வழிகாட்டுவன என்பதை அவர் நன்கு காட்டியுள்ளார். பின்னல் வந்த ஞானசம்பந்தர் மயிலேயின் ஓணவிழாவைக் கூறுங்கால் அவ்விழாவில் நல்ல தவநலம் பெற்றவர்கள் வாழ்வைக் கலந்து துய்த்தார் எனக் காட்டுகின்ருர்.

"ஐப்பசி ஓண விழாவும் அருந்தவர்கள்
துய்ப்பனவுங் காணுதே போதியோ"

என்று அவர் பூம்பாவையை நோக்கிக் கூறுகின்ற அடிகள் சிறந்தன. இவ்வாறு விழாவென்பது விளைவுளைப் பெருக்கிப் பின் பெற்றது கொண்டு மற்றவரையும் சுற்றத்தையும் உண் பித்துத் தாமும் உண்டு வாழ்தலேயாகும். இத்தகைய பண்பாட்டில் தலேசிறந்த விழா பொங்கல் விழா.

தமிழ் நாட்டிற் பெரும்பாலான மக்கள் விவசாயி களே. வயலில் வருந்திப் பாடுபட்டு உழைத்துப் பயன் விளைத்துப் பாரெலாம் வாழ வழி காட்டுபவர்கள். அவர்கள் ஆடி முதல் பாடுபடத் தொடங்கிப் பயனைப் பெற்று அப் பயனைப் பல்லோருக்கும் பகிர்ந்து கொடுக்கும் நாள் பொங்கல். வற்ருது பெய்யும் மேலே மழை ஆடியில் பொழிய, உழவர் தங்கள் புத்தாண்டு உழவினைத் தொடங்கு

வார்கள். ஆடியில் தேடியிட்ட விதைக்கு அவ்வப்போது செய்யும் களை கட்டல், எருவிடல் முதலிய செயல்கள் முடியக் கதிர்கள் முற்றித் தலைசாய்ந்து, 'பயன் கொள்க' எனப் பணிந்து நிற்கும். கார்த்திகையில் கார் அறுக்கத் தொடங்குவார்கள். கார்த்திகை முதல் தை வரை அவர்களுக்கு அறுவடை விழாத்தான். அதன் இடையில்தான் பொங்கல் விழா சிறக்கின்றது.

பொங்கலுக்கு உழவன் பெறுகின்ற பொருள்கள் யாவை? அவன் தன் வயலில் விளைந்த நெல்லைக்கொண்டு பொங்கலிடுகிறான். தோட்டத்தில் விளைந்த காயும், கிழங்கும், கீரையும் கொண்டு காய்கறிகள் செய்கிறான். விளைந்த கரும்பினையும், மஞ்சளையும், தேங்காயையும் பிற பொருள்களையும் கொண்டு அனைத்தையும் அளித்த ஆண்டவனுக்கு அர்ப்பணிக்கிறான். மழைக்கு முதலாய சூரியனை நோக்குகின்றான். சூரியன் கதி மாறு நிலையில் நாட்டில் நல்ல மழை பெய்ய அம்மழை வளத்தால் தன் வயல் வளத்தைப் பெருக்கியதை எண்ணிப் பார்க்கிறான். அந்த எண்ணத்தில் நன்றி பிறக்கிறது. அந் நன்றி உணர்ச்சியால் மழை தந்து பயன் விளைக்கும் அச் சூரியனுக்குத் தன் புத்தரிசிச் சோற்றில் முதற் கவளத்தை வாரிக் கொடுக்கிறான். அதுவே சங்கராந்தி என்னும் சூரிய வணக்கமாகின்றது. அன்று அவன் புத்தாடை அணிவான். அது அவனது உள் நாட்டிலே நெய்யப்படும் ஆடையேயாகும். வீட்டில் விளைந்த பஞ்சைக் கொண்டு நூலாக்கி நாட்டுத் தறியில் நெய்த துணியினை இறைவனுக்கு நிவேதித்துப் பின் எடுத்து அணிந்து மகிழ்வான்.

அன்று சமைக்கும் பாத்திரங்களும் மண்பாண்டங்களேயாம். சூரியனுக்குப் படைத்த பொங்கலை, அனைவரையும் அருகழைத்துப்பகிர்ந்து கொடுத்துத் தானும் உண்பான்.

இப்படியே தனது உழைப்பால் பெற்ற பொருள்களாலேயே இறைவனையும் மழைக்கு முதற் காரணமாய சூரியனையும் உண்பித்து, பின் உலகையும் உண்பிக்கும் தமிழ் நாட்டு உழவனது தலைசிறந்த விழா பொங்கல் விழா. அந்நாளில் அவன் இப்படித் தன்னை அறியாமலேயே பிறர் பொருளை நாடாது தனது பொருள்களையே கொண்டு செய்யும் விழாவினைக் கருதித்தானோ பாரதி,

உப்பென்றும் சீனியென்றும்
உள்நாட்டுச் சேலையென்றும்
செப்பித் திரிவாரடி—கிளியே
செய்வ தறியாரடி.

என்று பாடினார் என நினைக்க வேண்டியுள்ளது. ஆகவே அறிந்தோ அன்றி மறந்தோ இன்றைய தமிழ் நாட்டிலும் தன் நாட்டுப் பொருளாலே, தன் வாழ்வைக் கருதும் விழா பொங்கல் விழாவாக அமைந்துள்ளது.

முதல் நாள் இறைவனுக்கும், சூரியனுக்கும் விருந்திட்ட தமிழன் தன்னைச் சுற்றி நோக்குகின்றான். தன் உழவுக்கு உறுதுணையாக நின்ற மாடுகள் அவன் கண்முன் நிற்கின்றன. ‘ஆகா! உனது உழவினாலன்றோ இத்தனை வயல் வளமும்’ என நினைக்கின்றான். ஆம்! அத்தகைய உயிர்களிடத்தும் நன்றி மறவாதவன் அவன். ஆகவே அந்த மாடுகளைக் குளிப்பாட்டிப் பூச்சூட்டி அழகு செய்து அதற்கும் ஒரு கவளம் என்று பொங்கல் செய்து பூசிக்கும் நாளே மாட்டுப் பொங்கலாக விளங்குகிறது.

மூன்றாம் நாள் பொழுது புலர்கின்றது. அன்று உலகை நோக்குகின்றான் அவன். ஏழை எளியவர்களைக் கண்டு அவர்களும் வயிறார உண்டு வாழ்கின்றார்களா எனக் காண்கின்றான். இல்லாதவர்களுக்கு இயன்றவரை எல்லா உதவியும் செய்கின்றான். அவர்களும் உழவனை

வந்து கண்டு உதவியதைப் பெற்றுச் செல்வர். எனவே அது காணும் பொங்கலாக அமைகின்றது. இவ்வாறு தனக்கும், இறைவனுக்கும், பலன் விளைத்த சூரியனுக்கும், உதவிய மாட்டுக்கும், மற்ற உற்றார்க்கும், பிறருக்கும் தான் பெற்ற பொருள் கொண்டு உதவும் ஒரே சிறந்த விழாவாக வரும் இப்பொங்கல் நாளிலும் சிறந்த நன்னாள் உளதோ?

## கேள்விகள்

1. தை மாதத்தைப் பற்றி வழங்கும் பழமொழி யாது?
2. தைத் திங்களைப் பற்றி இலக்கியங்கள் கூறுவன யாவை?
3. கதிர் முற்றிய நெற் பயிர் எவ்வாறு காட்சி யளிக்கிறது?
4. விழாக்கள் ஏற்பட்டதின் நோக்கங்கள் யாவை?
5. முரசறைவோன் முதலிற் கூறியன யாவை?
6. பொங்கல் விழாவின் நோக்க மென்ன?
7. பொங்கல் விழா எத்தனை நாட்கள் நடக்கின்றது? கருத்தென்ன?

## பயிற்சி

1. உங்கள் வீட்டில் இந்த ஆண்டு நடந்த பொங்கல் விழாச் சிறப்பைப் பற்றி உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.
2. நெல் சாகுபடி பற்றி ஒரு கட்டுரை எழுதுக.
3. நீ அறிந்த வேறு ஒரு விழாவைப் பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

## இலக்கணம்

(1) பண்புச் சொற்களுக்கு இரண்டு எடுத்துக் காட்டுகள் தருக.

(2) கீழ்வருவனவற்றைப் பிழைதிருத்தி எழுது.

(அ) மழையால் மரங்கள் முளைக்கின்றது.

(ஆ) பால் தரும் மாடு கன்றுடன் வாழ்கின்றன.

(இ) மனிதன் விழாவைக் கொண்டாடுகின்றார்.

(3) கீழ்வருவனவற்றிற்குப் பொருள் தருக :—

தன்மை—தண்மை ; மாரி—மாறி ; கோல்—கோள்

(4) கல்விசேர் மாந்தரின் இன் எப்பொருளில் வந்துளது ?

(5) தானும் உண்பான். இவ்வும்மைக்கு என்னபெயர் ?

(6) எதிர்ச் சொல் தருக.

கரும்பு ; காய் ; நன்னாள் ; இகழ்வு, இளமை,

# செய்யுள் பகுதி

## கடவுள் வாழ்த்து

**i. அப்பர்**

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.

**ii. தொண்டரடிப்பொடி யாழ்வார்**

கதிரவன் குணதிசைச் சிகரம்வந் தணைந்தான்
கனஇருள் அகன்றது காலையம் பொழுதால்
மதுவிரிந் தொழுகின மாமல ரெல்லாம்
வானவர் அரசர்கள் வந்துவந்து ஈண்டி
எதிர்திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த
இருங்களிற்று ஈட்டமும் பிடியொடு முரசும்
அதிர்தலில் அலைகடல் போன்றுளது எங்கும்
அரங்கத்தம்மா பள்ளி எழுந்தரு ளாயே !

**iii. சுந்தரம் பிள்ளை**

நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறும் திலகமுமே
தெக்கணமும் அதில்சிறந்த திரவிடநற் றிருநாடும்
அத்திலக வாசனைபோல் அனைத்துவரும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெரும் தமிழ்
அணங்கே !

பல்லுயிரும் பலஉலகும் படைத்தளித்துத் துடைக்
கினும்ஓர்

எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி இருப்பது
போல்
கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையா ளமும்
துளுவும்
உன்உதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்
ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையா
உன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்து
துமே !

## நீதிப்பகுதி

### 1. நீதி வெண்பா

1. தாமரைபொன் முத்துச் சவரங்கோ ரோசனைபால்
பூமருதேன் பட்டுப் புனுகு(ம்)சவ்வாது—ஆம்அழன்
மற்(று)
எங்கே பிறந்தாலும் எள்ளாரே நல்லோர்கள்
எங்கே பிறந்தாலும் என்.

2. பகைசேரும் எண்ணான்கு பற்கொண்டே நன்கு
வகைசேர் சுவையருந்து மாபோல்—தொகைசேர்
பகைவரிடம் மெய்யன்பு பாவித்(து) அவரால்
சுகமுறுதல் நல்லோர் தொழில்.

3. செய்யும் ஒருகருமம் தேர்ந்து புரிவதன்றிச்
செய்யின் மனத்தாபம் சேருமே—செய்யவொரு
நற்குடியைக் காத்த நகுலனைமுன் கொன்றமறைப்
பொற்கொடியைச் சேர்துயரம் போல்.

4. ஈக்கு விடந்தலையில் எய்தும்இருந் தேளுக்கு
வாய்த்த விடம்கொடுக்கில் வாழுமே—நோக்கரிய
பைங்கண்அர வுக்குவிடம் பல்லளவே துர்ச்சனருக்(கு)
அங்கம்முழுதும் விடமே யாம்.

5. சிற்றுணர்வோர் என்றும் சிலுசிலுப்பர் ஆன்றமைந்த
முற்றுணர்வோர் ஒன்றும் மொழியாரே—வெற்றிபெரும்

வெண்கலத்தின் ஓசை மிகுமே விரிபசும்பொன்
ஒண்கலத்தில் உண்டோ ஒலி.

6. தென்புலத்தார் தெய்வம் விருந்(து)ஒக்கல் என்றிவரோ(டு)
இன்புறத்தான் உண்டல் இனிதாமே—அன்புறவே
தக்கவரை யின்றித் தனித்துண்டல் தான்கவர்மீன்
கொக்கருந்தல் என்றே குறி.

7. பொற்பறிவில் லாதபல புத்திரரைப் பெற்றலின்ஓர்
நற்புதல்வனைப் பெறுதல் நன்றாமே—பொற்கொடியே!
பன்றிபல குட்டி பயந்ததனால் ஏதுபயன்
ஒன்றமையா தோகரிக்கென் றேது.

8. தாமும்கொடார் கொடுப்போர் தம்மையும்ஈ யாதவகை
சேமம்செய் வாரும் சிலருண்டே—ஏமநிழல்
இட்டுமலர் காய்கனிகள் ஈந்துதவு நன்மரத்தைக்
கட்டுமுடை முள்எனவே காண்.

9. பொன்னும் கரும்பும் புகழ்பாலும் சந்தனமும்
சின்னம்பட வருத்தம் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்றும் நலிந்தாலும் உத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து.

10. பாலின்நீர் தீயணுகப் பால்வெகுண்டு தீப்புகுந்து
மேலும்நீர் கண்(டு)அமையும் மேன்மைபோல்—நூலின்நெறி
உற்றோர் இடுக்கண் உயிர்கொடுத்தும் மாற்றுவரே
மற்றோர் புகல மதித்து.

## 2. சதகங்கள்

1. குறிப்பு அறிதல் :—குமரேச சதகம்

மனத்தில் கடும்பகை முகத்தினால் அறியலாம்
மாநிலப் பூடுகளெலாம்

மழையினுல் அறியலாம் நல்லார் பொலார்தமை
மக்களால் அறிய லாகும்
கனமருவு சூரரைச் சமரினுல் அறியலாம்
கற்றஒரு வித்து வானை
கல்விப்பிர சங்கத்தி னுல்அறியலாம் குணங்களை
நடையினுல் அறிய லாம்
தனதுஅகம் அடுத்தது பளிங்கினுல் அறியலாம்
சாதி சொல்லால் அறியலாம்
தருநீதி கேள்வியால் அறியலாம் பிணிகளைத்
தாதுக்க ளால் அறியலாம்
வனசவிக சிதவதன பரிபூரணு னந்த
வாலவடி வான வேலா !
மயிலேறி விளையாடு குகனே புல்வயல்நீடு
மலைமேவு குமரேசனே.

## 2. வறுமையின் கொடுமை :—அறப்பளீசுர சதகம்

மேலான சாதியில் உதித்தாலும் அதிலென்ன
வெகுவித்தை கற்றும் என்ன ?
மிக்க அதிரூபமொடு சற்குணம் இருந்தென்ன
மிகுமானி யாகில் என்ன ?
பாலான மொழிஉடை யனுயென்ன ஆசார
வானுய் இருந்தும் என்ன ?
பார்மீது வீரமொடு ஞானவானுய் என்ன ?
பாக்கியம் இலாதபோது
வாலாயமாய்ப் பெற்ற தாயும் சலித்திடுவள்
வந்த சுற்றமும் இகழுமே
மரியாதை இல்லாமல் அனைவரும் பேசிடுவர்
மனைவியும் தூறு சொல்வாள்
ஆலாலம் உண்டகனி வாயனே ! நேயனே !
அனகனே ! அருமை மதவேள்
அனுதினமும் மனதில் நினைதரு சதுரகிரிவளர்
அறப்பளீசுர தேவனே.

### 3. பலருக்கும் உதவுதலே சிறந்த அறம் :—தண்டலையார் சதகம்

தன்மமதைச் செயல்வேண்டும் தண்டலை நீள்
நெறியாரே தயவு செய்வார்
வன்மவினை செயல்வேண்டாம் பொய்வேண்டாம்
பிறரை ஒன்றும் வருத்தல் வேண்டாம்
கன்மநெறி வரல்வேண்டாம் வேண்டுவது
பலர்க்கும் உபகார மாகும்
நன்மைசெய்தரர் நலம்பெறுவர் தீமைசெய்தார்
தீமைபெற்று நலிவர் தாமே.

## கதைப்பகுதி

### திருவிளையாடல் புராணம் :—பரஞ்சோதி முனிவர் கீரனைக்கரையேற்றியது

1. தாழ்ந்த வேணியன் நெற்றி முளைத்த தழற்கண்ணால்
போழ்ந்த நாவலன் ஆடக பங்கயப் பொய்கை வாய்
வீழ்ந்து அரும்படர் வேலையில் வீழ்ந்தனன் விம்முறச்
சூழ்ந்த நாவலர் கண்டு பொருது துளங்குவார்

2. ஏன்ற வேந்தன் இலாக்குடி ஈட்டமும் இன்கதிர்
கான்ற நாயக மாமணி போகிய கண்டியும்
ஆன்ற ஞானம் இலாதவர் கல்வியும் ஆனதே
சான்ற கீரன் இலாது அவை கூடிய சங்கமே

3. ஐய சொற்பொருள் தன் வடிவானவர் ஆலவாய்
மை தழைத்த மிடற்றினர் தம்மொடு வாதுதான்
செய்த இப் பிழையோ பெரிது எப்படித் தீருமோ
உய்வது அற்புதமே என யாவரும் உன்னினர்

4. யாவராலும் அகற்றரிது இப்பிழை யாவர்க்கும்
தேவராம் அவரே திருவுள்ளம் திரும்பினல்
போவதே இதுவே துணிவென்று புகன்றுபோய்ப்
பாவலோர் பரன்தாள் நிழலில்பணிந்து ஏத்துவார்

5. 'அத்த கற்றசெருக்கின் அறிவுஅழி கீரன் நின்
வித்தகக் கவியைப் பழுது என்ற விதண்டையான்
மத்தகக் கண்விழித்து வெதுப்பின் மலர்ந்தபொன்
முத்தகக் கமலத்திடை வீழ முடுக்கினுய்

6. இருள்நிறைந்த மிடற்று அடிகேள் இனிஇப்பிழை
கருணைசெய்து பொறுத்தருள்' என்று கபிலனும்
பரணனும் முதலாகிய பாவலர் யாவரும்
சரணம் என்று விழுந்து இரந்தார் அடிசாரவே

(வேறு)

7. அக்கீர வேலைஆலம் அயின்ற எம் கருணை வள்ளல்
இக்குஊர மழலைத் தீம்சொல் இறைவியோடு எழுந்து போந்து
நக்கீரன்கிடந்த செம்பொன் நளினப்பூந் தடத்துப் பாங்கர்ப்
புக்குஊர மதுரத் தீஞ்சொல் புலவர்தம் குழாத்துள் நின்ருன்

8. அலற்கண்ணுல் நோக்கி ஞன்பின் அருட்கண்ணுல் நோக்க ஆழ்ந்த
புனற்கண்ணே கிடந்த கீரன் பொறிபுலன் கரணம் எல்லாம்
கனல்கண்ணுர் தமவே யாகக் கருணைமா கடலில் ஆழ்ந்து
வினைக்கண்ணே எடுத்தயாக்கை வேறில் அன்பு உருவம் ஆனுன்

9. போதையார் உலகம் ஈன்ற புனிதையார் பரஞானப்பூங்
கோதையார் குழற்குத் தீங்கு கூறிய கொடிய நாவின்
தீதையார் பொறுப்ப ரேயோ அவர் அன்றித் திருக்காளத்திக்
காதைஆர் குழையி ஞரைக் காளத்தி கயிலை என்ளு

10. எடுத்தசொல் மாறி மாறி இசைய நேரிசை வெண் பாவால்
தொடுத்த அந்தாதி சாத்தத் துணைச்செவி மடுத்து நேர்வந்து
அடுத்துஅவன் கையைப் பற்றி அகன்கரை யேற்றினுர் தாள்
கொடுத்து எழுபிறவிவேலைக் கொடும்கரை ஏற்ற வல்லார்.

## பல்சுவைப் பகுதி

### புகழேந்திப் புலவர் பாடிய நாட்டுவளம் (அல்லி அரசாணி மாலையிலிருந்து)

1. ‘வாழை வடக்கீனும் வான்கமுகு தெற்குஈனும்
கரும்பும் இளநீரும் கண்திறந்து மடைபாயும்
கட்டுக் கலங்காணும் கதிர் உழக்கு நெற் காணும்
அரிதாள் அறுத்துவர மறுதாள் பயிராகும்
அரிதாள் கீழாக ஐங்கலம் தேன் கூடுகட்டும்
ஆனைகட்டும் தாளும் வானமட்டும் போராகும்.’

### கோடி பெறுவன—ஔவையார் தனிப் பாடல்

2. i. மதியாதார் முற்றம் மதித்து ஒருகால் சென்று
மிதியாமை கோடி பெறும்

ii. உண்ணீர் உண்ணீர் என்று உபசரியார் தம்மனையில்
உண்ணுமை கோடி பெறும்

iii. கோடி கொடுத்தும் குடிப்பிறந்தார் தம்மோடு
கூடுவதே கோடி பெறும்

iv. கோடானு கோடி கொடுப்பினும் தன்னுடைநா
கோடாமை கோடி பெறும்.

**தமிழ்நாட்டு நான்கு பகுதிகளின் தனிச்சிறப்புக்கள் :—**
ஔவையார்

3. வேழ முடைத்து மலைநாடு; மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து—பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து தெண்ணீர் வயற்
றொண்டை
நன்னாடு சான்றோர் உடைத்து.

**அட்டாவதானம் சரவணப்பெருமாள் கவிராயர்**

4. வாரும் நீர் யாரென்ன வித்துவான் என்னவும்
மதிமோசம் வந்த தென்றே
வாய்குளறி மெய்யெலா மிகநடுக் குற்று நீர்
வந்த காரிய மேதெனச்
சீருலாவிய காம தேனுவே தாருவே
சிந்தாம ணிக்கு நிகரே
செப்பு வசனத் தரிச்சந்த்ரனே யென்னலுஞ்
சினந்தி ருகணுஞ் சிவந்தே
யாரைநீ மாடு கல் மர மென்று சொன்னது மலா
லரிச் சந்த்ர னென்றே
அடாதசொற் சொன்னையே யார்க்கடிமை யாகி
னேன்
யார் கையிற் பெண்டு விற்றேன்
தீருமோ இந்தவசை யென்றுரைசெய் வெகுகொடிய
தீயரைப் பாடி நொந்தேன்
திருமன்றுள் நடுநின்று நடமொன்று புரிகின்ற
தென் தில்லை நடராஜனே.

# குறிப்புரை

## வாழ்த்துப் பகுதி

1. **திருநாவுக்கரசர் :** இவர் திருமுனைப்பாடி நாட்டிலுள்ள திருவாமூரில், வேளாளர் குலத்திற் பிறந்தார். தந்தையார் புகழனார்; தாயார் மாதினியார். இவரது பிள்ளைத் திருநாமம் மருள்நீக்கியார் என்பது. இவரது பிள்ளைப் பருவத்திலேயே தாயாரும், தந்தையாரும் விண்ணுலகடைய இவருடைய தமக்கையாராகிய திலகவதியாரே இவரைப் பாதுகாத்து வந்தார். இவர் சமண சமயம் புக்குக் கல்வி கேள்விகளில் வல்லவராய்த் தருமசேனர் என்னும் பெயர் பெற்றுச் சிறந்திருந்தார். பின்னர் தனக்கு வந்த சூலை நோய் காரணமாகச் சைவ சமயஞ் சார்ந்து, தலங்கள் தோறுஞ் சென்று தேவாரப் பதிகங்களைப் பாடிக் கடவுளை வழிபட்டுப் பேறடைந்தார். இவரது தேவாரங்களெல்லாம் 4, 5, 6-ந் திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளன.

*மாசு இல் = குற்றமற்ற*
*மதியம் = சந்திரன்*
*மூசு வண்டு அறை = மொய்க்கின்ற வண்டுகள் ஒலிக்கின்ற*

2. **தொண்டரடிப் பொடியாழ்வார் :** இவர் பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவர். திருமண்டங்குடி என்னும் ஊரிற் பிறந்தவர். விப்ரநாராயணர் என்னும் பிள்ளைத் திருநாமம் பெற்றவர். திருவரங்கத் திறைவனிடம் பேரன்பு பூண்டு, நந்தவன முண்டாக்கித் தொண்டு செய்திருந்தார். பின்னர் தொண்டரடிப்பொடி என்னும் பெயர் தரித்துப் பாசுரங்கள் பாடி இறைவனைத் தொழுது இறையடி சேர்ந்தார்.

கதிரவன் = சூரியன்
குணதிசை = கிழக்குத்திசை
சிகரம் = மலையுச்சி
மது = தேன்
வானவர் = தேவர்
ஈண்டி = நெருங்கி
களிறு = ஆண் யானை
பிடி = பெண் யானை

3. **சுந்தரம்பிள்ளை (1855-1897)**: இவர் திருவிதாங்கூரைச் சேர்ந்த கடற்றுறைப் பட்டினமாகிய ஆலப்புழையிற் பிறந்தவர். தந்தையார் பெருமாள்பிள்ளை; தாயார் மாடத்தியம்மையார். சுந்தரம்பிள்ளை திருவிதாங்கூர் மகாராஜா கல்லூரியிற் படித்து பீ.ஏ. பட்டம் பெற்றார். அக் கல்லூரியிலேயே வரலாறும், தத்துவ நூலுங் கற்பிக்கும் ஆசிரியராயமர்ந்தார். பின்னர் திருநெல்வேலி ஆங்கிலத் தமிழ்க்கல்விச்சாலைத் தலைவராயிருந்து பணியாற்றினார். அதுவே இதுபோதுள்ள திரவியம் தாயுமானார் இந்துக் கல்லூரியாகும். இவர் 1877-ல் சிவகாமி என்னும் மங்கை நல்லாளை மணந்து கொண்டார். இவரியற்றிய ஒரு பெருந்தமிழ் நூல் ' மனோன்மணீயம் ' ஆகும். அதிலிருந்து எடுக்கப்பட்டதே இத் தமிழ்த்தாய் வாழ்த்து.

எழில் = அழகு
வதனம் = முகம்
திகழ் = விளங்குகின்ற
திலகம் = பொட்டு
அணங்கு = தெய்வம்
அளித்து = காத்து
துடைக்கினும் = அழிக்கினும்
பரம்பொருள் = மேலான இறைவன்
கவின் = அழகு
உதரம் = வயிறு
உலக வழக்கு = பேச்சு வழக்கு
ஆரியம் = வடமொழி
சிதையா = அழியாத

# நீதிப்பகுதி

## நீதிவெண்பா

1. சவரம் = சாமரை
பூமருதேன் = பூவிற் பொருந்தியுள்ள தேன்
ஆம் அழல் = எரிகின்ற நெருப்பும்
எள்ளார் = உலகத்தார் இகழமாட்டார்கள்

2. நல்நா = நல்ல நாக்கு
வகை சேர் = பலவகையான
சுவை = உருசியுள்ள பொருள்கள்
அருந்துதல் = உண்ணுதல்
தொகை சேர் = அதிக எண்ணிக்கையாகவுள்ள
பாவித்து = வைத்து
நல்லோர் = நல்லறிவு படைத்தவர்கள்

3. தேர்ந்து = ஆராய்ந் தறிந்து
புரிவ தன்றி = செய்வ தல்லாமல்
செய்யின் = ஆராயாமற் செய்யின்
நற்குழவியை = நல்ல குடிவளர்தற்கேதுவான குழந்தையை
நகுலன் = கீரிப்பிள்ளை
மறைப்பொற்கொடி = பார்ப்பனப் பெண்
துயரம் = வருத்தம்
மனத்தாபம் = துன்பம்

4. விடம் = நஞ்சு
எய்தும் = இருக்கும்
இருந்தேள் = பெரிய தேள் ; கருந்தேள்
வாய்த்த = பொருந்திய

வாழும் = தங்கியிருக்கும்
நோக்க அரிய = பார்ப்பதற்கு அருமையான
பைங்கண் = பசிய கண்களையுடைய
அரவு = பாம்பு
துர்ச்சனருக்கு = தீயவர்களுக்கு
அங்கம் = உடல்

5. சிற்றுணர்வோர் = சிற்றறிவினையுடையவர்
சிலுசிலுப்பர் = சிடுசிடுவென்று இரைச்சலிடுவர்
ஆன்று = கல்வி கேள்விகளால் நிறைந்து
அமைந்த = அடங்கிய
முற்றுணர்வோர் = அறிவிற் பெரியோர்கள்
வெற்றிபெறும் = மேன்மையடைகின்ற
மிகும் = மிகுதி யாகும்
விரி பசும்பொன் = ஒளி விடுகின்ற பசும் பொன்னு லியன்ற
ஒண்கலம் = ஒளி பொருந்திய பாண்டம்; ஒலி உண்டோ ? (இல்லை)

6. தென் புலத்தார் = பிதிரர் (ஒரு சாதித் தேவர்)
ஒக்கல் = சுற்றத்தார்
தக்க அவர் = தகுந்த அந்நால்வரும்
கவர் = கவர்ந்து கொண்ட
குறி = நீ கருது

7. பொற்பு அறிவு = சிறந்த அறிவு
நன்று ஆம் = நன்மையாகும்
பயத்தல் = பெறுதல்
கரி = யானை
அமையாதோ = போதாதோ

8. சேமம் செய்வார் = தடுத்துக் காவல் செய்வார்
ஏமம் நிழல் இட்டு = இனிய நிழலைச் செய்து
உடை முள் என = உடைவேல் முள்ளைப்போல

9. புகழ் = இனிமையானதென்று புகழப்படுகின்ற
சின்னம்பட = தம் நிலை குலையும்படி
நலிந்தாலும் = துன்புற்றாலும்
நயந்து = சிறந்து

10. பாலின் நீர் = பாலிலுள்ள நீரை
வெகுண்டு = கோபித்து
தீ புகுந்து = பொங்கி ஊற்றி நெருப்பை யவித்து
அமையும் = அடங்கும்
நெறி = வழி
இடுக்கண் = தம்மைச் சேர்ந்தோர்க்கு உண்டான துன்பம்
புகல = புகழ்ந்து கூறும்படி
மதித்து = அதுவே சரி என எண்ணி

## சதகங்கள்

1. **குமரேச சதகம்**
பூடு = பூண்டு; புல் முதலியன
கனமருவு = பெருமைமிக்க; சிறந்த
சமர் = போர்
பிரசங்கம் = சொற்பொழிவு
நடை = பழக்கவழக்கம்
தாது = நாடி (நரம்பு)
வனசம் = தாமரை
விகசித = மலர்ந்த
பரிபூரணம் = நிறைவு

2. **அறப்பளீசுர சதகம்**
ரூபம் = வடிவம்; அழகு
மான = மானமுடையவன்
பாலான மொழி = இனிய மொழி
ஆசார பரன் = ஆசார மிக்கவன்
பார் = உலகம்

பாக்கியம் = செல்வம்
சலிப்பு = வெறுப்பு
தூறு = பழிச்சொல்
ஆலாலம் = பாற்கடலைக் கடைந்தபோது உண்டான நஞ்சு
அனகன் = கடவுள்

3. **தண்டலையார் சதகம்**
வன்மம் = வைராக்கியம்
கன்மம் = தீவினை ; பாவம்

## கதைப்பகுதி

### திருவிளையாடற்புராணம்

**பரஞ்சோதி முனிவர் :** இவர் தஞ்சை மாவட்டத்திலுள்ள வேதாரணியம் என வழங்கும் திருமறைக் காட்டிற் பிறந்தவர்; தந்தையார் மீனாட்சிசுந்தர தேசிகர். இளமையில் இலக்கண இலக்கியங்களை முறையே கற்றுச் செய்யுளியற்றும் வன்மையும் பெற்றிருந்தார். மதுரையிற் சென்று தங்கியிருந்தபோது, மக்களின் வேண்டுகோட்படித் திருவிளையாடற் புராணத்தை இயற்றினார். அவ்வூரிலேயே மாணவர் பலர்க்குந் தமிழ் பயிற்றுவித்து அங்கேயே வீடுபேறடைந்தார்.

1. வேணி = சடை
தழற்கண் = அக்கினியாகிய நெற்றிக்கண்
போழ்ந்த = பிளக்கப்பட்ட
நாவலன் = கீரன்
ஆடகப் பங்கயப் பொய்கை = பொற்றாமரைக் குளம்
அரும் படர் = கடத்தற்கரிய துன்பம்
வேலை = கடல்
விம்முற = வருந்த
நாவலர் = ஏனைய சங்கப் புலவர்கள்
துளங்குவர் = கலங்கி வருந்துவார்

2 ஏன்ற = பொருந்திய
குடி யீட்டம் = குடிகளின் கூட்டம்
இன் கதிர் கான்ற = இனிய ஒளி வீசும்
மா மணி = பெரிய மணி
ஆன்ற = நிறைந்த
ஞானம் = அறிவு
சான்ற = புலமை மிக்க
அவை = சபை

3. ஐய ; அசைநிலை
ஆலவாய் = மதுரை
மை தழைத்த = இருள் நிறைந்த ; (கரிய)
மிடறு = கண்டம்
உய்வது = தப்பிப் பிழைப்பது
உன்னினர் = கருதினர்

4. அகற்ற அரிது = நீக்குதற் கரியது
அவரே = சிவபெருமானே
திருவுள்ளம் திரும்பினல் = திருவுள்ளம் கொள்வாராயின்
துணிபு = உறுதி
புகன்று = கூறி
பாவலோர் = புலவர்கள்

5. அத்த = இறைவனே
அறிவு அழி கீரன் = உணர் வழிந்த கீரன்
நின் வித்தகக்கவி = உனது சதுரப்பாடுடைய பாசுரத்தை
மத்தகக் கண் = நெற்றிக் கண்
வெதுப்பினல் = வெம்மையால்
பொன் கமலத்திடை = பொற்றாமரைக் குளத்தில்
முடுக்கினய் = செலுத்தினய்

6. அடிகேள் = பெரியோய்
அடிசார = திருவடியிற் பொருந்த
இரந்தார் = குறையிருந்து வேண்டினுர்

7. கீர வேலே = பாற் கடல்
ஆலம் = நஞ்சு
அயின்ற = உண்ட
இக்கு ஈர் = கரும்பின் சுவையை வென்ற
அம் மழலே = அழகிய மழலேச் சொல்லாகிய
நளினப் பூந்தடம் = பொற்ருமரைக் குளம்
ஞாங்கர் = அருகு
ஈரம் மதுரத் தீஞ்சொல் = அன்புகனிந்த இனிய சொல்

8. புனல் = நீர்
கனல் = நெருப்பு
கனற்கணுர் = நெற்றிக் கண்ணேயுடைய சிவபெருமான்
தமவே யாக = தம்முடையதாகவே (அவ்விறைவருடைய
தாகவே) ஆக
கருணே = அருள்
விணேக்கணே = விணேயினுல்
வேறுஇல் = அழிதல் இல்லாத

9. போதையார் = ஞான வடிவானவர்
புனிதையார் = தூய்மை யுடையார்
பரம் = சிறந்த
குழல் = கூந்தல்
தீங்கு = குற்றம்
காது ஆர் = காதிற் பொருந்திய

10. இசைய = பொருந்த
அந்தாதி = கைலேபாதி காளத்திபாதி அந்தாதி
தாள்கொடுத்து = திருவடியாகிய புணேயை அருளி
துணேச்செவி = இருகாதுகளினுலும்

# பல்சுவைப் பகுதி

1. புகழேந்திப் புலவர்

வான் = உயர்ந்த ; சிறந்த
கமுகு = பாக்கு
உழக்கு = காற்படி
அரிதாள் = அறுவடை செய்தபிறகு உள்ள தாள்

2. ஔவையார்

முற்றம் = வீட்டு வரியில்
கோடி = கோடி பொன்
உண்ணீர் = உண்ணும் நீர்; உண்ணுங்கள்
நா கோடாமை = சொல் பிறழாதிருத்தல்

3. ஔவையார்

வேழம் = யானை
மேதக்க = மேலான
பூழியர்கோன் = பாண்டியன்
தெள்நீர் = தெண்ணீர் = தெளிந்த நீர்

4. சரவணப் பெருமாள் கவிராயர்

மதி = அறிவு
மெய் = உடல்
சீர் உலாவிய = சிறப்புப் பொருந்திய
தாரு = கற்பகத் தரு
நிகர் = ஒப்பு
செப்பு = சொல்லுகின்ற
அடாத = தகாத
வசை = பழி
மன்று = சபை
திருமன்றுள் = கனக சபையில்
தில்லை = சிதம்பரம்

# அருஞ் சொற் பொருள்

## தமிழ்ப் பெரியார்

சொல் லொணு—கூற முடியாத
பொலிவு—அழகு
முட்டின்றி—தடை யின்றி
வேட்டல்—விரும்பல்
ஒப்புயர் வற்ற—ஈடெடுப் பில்லாத

## ஆபுத்திரன்

மகப்பேறு—மக்கள் செல்வம்
கவன்ற—கோபித்த
ஆர்ந்து—மேய்ந்து
செற்றம்—சினம்
புலேமகன்—தாழ்ந்த மகன்
பேணுநர்—ஆதரிப்போர்
வறங்கூரினும்—வறுமையுறினும்
புறங்காத்து ஓம்புநர்—ஆதரித்துக் காப்போர்
பற் றற—பற்று நீங்க
இறை யடி—கடவுள் திருவடி

## தூது நடந்த மூதாட்டி

புரவலர்—வள்ளல்கள்
கொற்றவன்—அரசன்
நெடிது நாள்—நீண்ட நாள்
போர் வேண்டி—போரை விரும்பி
ஆய்ந்து—ஆராய்ந்து
பேறு—செல்வம்
ஏங்கும்—வேண்டியிருக்கும்

மட்டற்ற—அளவில்லா
நலிவு—குறைவு ; இழிவு
புன்மை—தாழ்ந்த

**பொங்கல் விழா**

திங்கள்—மாதம்
தண்மை—குளிர்ச்சி
மாரி—மழை
வையம்—உலகம்
ஒன்றி—சேர்ந்து
சுரக்க—குன்றுது வர
நிவேதித்து—படைத்து

# நமது தமிழ் வாசகம்

## மூன்றும் புத்தகம்

## பொதுப் பகுதி

ஆசிரியர்
சென்னை பச்சையப்பன் கல்லூரித் துணைத்தமிழ்ப் பேராசிரியர்
அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட்.

மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட்
மதராஸ் . பம்பாய் கல்கத்தா லண்டன்
1954

# முன்னுரை

இந்தியா விடுதலை பெற்றபின் தாய்மொழியானது கல்வித் திட்டத்தில் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றுவிட்டது. தத்தம் மொழியை வளர்க்க வேண்டும் என்ற ஆர்வம் அவ்வப்பகுதி யில் உள்ள மக்கள் உள்ளத்தில் உண்டாயிற்று. சென்னை அரசாங்கத்தார் மக்கள் ஆர்வத்தை அறிந்து, இப்பகுதியில் உள்ள மொழிகளை வளர்க்க வழி பல வகுத்தனர். அவற்றுள் ஒன்று பாடநூல்களைத் திருத்தி அமைக்கும் முறை.

தமிழ்ப்பாடதிட்டத்தை அமைப்பதற்காக சென்னை அர சாங்கத்தார் 1951-ஜூன் 26ம் நாள் ஒரு திருந்திய முறையை சென்னை கெஜட்டில் பிரசுரம் செய்தனர். அதில் உயர்தர பாடசாலைகளின் முதல் மூன்று பாரங்களில் தமிழ்ப் பாடம் பொது, சிறப்பு என இருவகையாகப் பிரிக்கப்பட்டு, அவ்வ வற்றிற்கு உரிய அமைப்புகளும் விளக்கப்பட்டன. அத்திட்ட முறைப்படி இதுவரை தமிழ்ப் பாடநூல்கள் வெளி வருகின்றன.

சென்னை மாக்மில்லன் கம்பெனியார் அப்பாடதிட்டத்தின் அடிப்படையில் முதல் மூன்று பாரங்களுக்குத் தமிழ் நூல்கள் வெளியிட விரும்பினர். அவர்தம் விருப்பமே இந்த நூற் றொகுதியாக வருகின்றது. மூன்று பாரங்களுக்கும் பொது, சிறப்பு என்ற தனித்தனிப்பகுதிகள், அரசியலார் வரம்பு கடவாத வகையில் அமைக்கப்பட்டு வெளிவருகின்றன. இப்பாடநூல் வரிசை மாணவர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்ற துணி புடையேன்.

பாடசாலைகளின் தலைவர்களும், தலைமை ஆசிரியர்களும், தமிழாசிரியர்களும் இந்த நூற்றொகுதியை ஏற்று ஆதரிக்கக் கேட்டுக் கொள்ளுகிறேன். இத்துறையில் என்னை ஊக்கிய மாக்மில்லன் கம்பெனியாருக்கு என் நன்றி.

ஆசிரியன்.

# பொருளடக்கம்


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | தஞ்சைப் பெரிய கோயில் | 5 |
| 2. | தேனீ வளர்த்தல் | 19 |
| 3. | விவேகானந்தர் | 32 |
| 4. | கியூரி அம்மையார் | 45 |
| 5. | கூட்டுறவு இயக்கம் | 60 |
| 6. | குருகுலம் | 72 |
| 7. | மலேயா நாடு கடிதம் | 84 |
| 8. | நோயும் மருந்தும் | 97 |
| 9. | விவேகானந்தர் கடிதம் | 113 |
| | செய்யுள் பகுதி | 116 |
| | நீதிப் பகுதி | 117 |
| | சிறுகதைப் பகுதி | 123 |
| | பல்சுவைப் பகுதி | 126 |
| | குறிப்புரை | 129 |
| | அருஞ்சொற் பொருள் | 152 |



*பாரதியாரின் பாடல்களும், விவேகானந்தர் கடிதமும் அததற்கு உரியவர்களிடம் அனுமதி பெற்றுச் சேர்க்கப்பட்டுள்ளன. அனுமதி தந்துதவியதற்கு எங்கள் நன்றி.*

# 1. தஞ்சைப் பெரிய கோயில்

இவ்வுலகில் தோன்றிய அனைத்தும் அழியுந்தன்மை யுடையன; ஆனால் கால அளவு வேறுபடலாம். எப்படியும் தோன்றிய அனைத்தும் அழிவதென்பது முற்றும் உண்மையே. மனிதனும் இதற்கு விதிவிலக்குள்ளவன் அல்லன்; பிறந்தவர் இறந்தே தீரவேண்டும்; என்றாவது ஒருநாள் இறந்துதான் ஆகவேண்டும்; இந்த நியதியைக் கடக்க எந்த மனிதனாலும் இயலாது; எந்த அறிவு, திரு, ஆற்றல் முதலியனவும் அதற்குத் துணைபுரியா.

ஆனால் மனிதன் மற்றப் பொருள்களினின்றும், உயிர்த்தொகைகளினின்றும் முற்றிலும் வேறுபட்டவனாகின்றான். ஏன்? அவன் பெற்றுள்ள அறிவு அவனுக்குத் துணைபுரிகின்றது. அவ்வறிவின் துணைக்கொண்டுதான் அழிதற்கு முன்னரே, என்றென்றும், அல்லது நெடுங்கால அளவு நிலைத்திருக்கத்தக்க செயற்கரிய செயலைச் செய்து விட்டுப் போகின்றான். ஆதலால் விரைவில், அதாவது குறுகிய கால அளவில், இறந்து மறைந்து போகக்கூடிய மனிதன், தன் அறிவின் துணைக்கொண்டு தனக்குப் பின்னர் நெடுங்காலம் நிலைத்திருக்கத்தக்க பெருஞ் செயலைப் புரிந்து, தன்னை இறந்தும் இறவாதவனாக்கிக் கொள்ளுகின்றான். இதுவும் ஒரு வியத்தகு செயலேயாம். இவ்வாறு செயற்கருஞ் செயல் செய்தோனையே உலகம் 'பெரியோன்' எனப் போற்றுகின்றது. இதனையே நம் தெய்வப் புலமைத் திருவள்ளுவரும் 'செயற்கரிய செய்வார் பெரியர்' என அழகாகவும், அறுதியிட்டுங் கூறுகின்றார்.

தமிழ்நாட்டு மூவேந்தருள் சோழ மன்னர்களே இன்றும் மக்களாற் பெரிதும் போற்றப்படுகின்றனர். அதற்குரிய காரணங்கள் பல இருப்பினும், அவர்தம் இறை பணியே முதற்கண் வைத்தெண்ணப் படுவதாகும். சோழ மன்னர் கள் பலரும் சிவநெறி கைக்கொண்டு ஒழுகியவராவர். அவர்கள் எடுப்பித்த கோயில்கள் பலவும் இன்றளவும் நிலைத் திருந்து அவர்தம் புகழுக்கோர் எடுத்துக்காட்டாய் இலங்கு கின்றன. அக் கோயில்களுக்கு நிபந்தமாகப் பல ஊர்களை வழங்கி, எக்காலத்தும் இடையீடின்றிப் பூசனை நடந்துவர நிலைத்த ஏற்பாட்டினை அவர்கள் செய்து வைத்துள்ளனர். ஆதலின் தமிழ் நாட்டில் சைவ சமயத்தை வளர்த்த தொண்டிற் பெரும் பங்கு சோழ மன்னர்கட்கே உரியதென் பதில் பிழையில்லை.

இத்தகைய சிறப்புவாய்ந்த சோழர் குடியில் பத்தாம் நூற்றுண்டின் இறுதியில் அருண்மொழி என்னும் அரசன் அரியணை யேறினன். அவன்தான் பிற்காலச் சோழர் ஆட்சியைப் பெருக்கி நிலைநிறுத்தியவன். அவனே முதலாம் இராசராசன் என வரலாற்று ஆசிரியர்களாற் புகழ்ந்து பேசப்படுவோன் ஆவன். இராசராசன் இருந்து அரசாண்ட காலம் இற்றைக்குச் சற்றேறக் குறைய ஆயிரம் ஆண்டுகட்கு முற்பட்டதாகும். அவனது ஆட்சிக் காலம் கி. பி. 985—1014 ஆகும். எனினும் அவன் இன்றும் எல்லா மக்களாலும் போற்றிப் புகழப்படுகின்றான். ஏன்? அவனால் எடுக்கப்பட்ட தஞ்சைப் பெருவுடையார் கோயிலே அவனுக்கு அத்தகைய அழியாப் புகழைத் தந்து வருகின்றது.

இக்கோயிலின் பெயருக்கேற்பவே அதன் வடிவமும் மிகவும் பெரியதாகவே அமைந்துள்ளது. தஞ்சையிலிருந்து நெடுந்தூரத்திற்கு இக்கோயில் தெரியக்கூடியதா யுள்ளது.

இக்கோயில் இராசராசனது ஆட்சிக்காலம் பத்தொன்பதா வது ஆண்டில் தொடங்கப் பெற்று இருபத்தைந்தாவது ஆண்டில் முடிவடைந்ததாகத் தெரிகிறது. இது தஞ்சைச் சிவகங்கைக் கோட்டையின் தென்பால் அமைந்துள்ளது. இக் கோட்டை பிற்காலத்து நாயக்க வம்ச மன்னனை சேவப்ப நாயக்கனுற் கட்டப்பட்டதாக அறிகிறோம். காலப் போக்கில் கோயிற் பிராகாரங்கள் சிதைவுறவே, அரண்க ளோடு கூடிய இப்புதிய கோட்டை அமைக்கப்பெற்றது.

தமிழ் நாட்டில் மிகப் பழங்காலத்துக் கோயில்களெல் லாம் மரத்தாலும், செங்கல்லாலும், சுதைகலந்து கட்டப் பட்டனவாகும். ஆதலால்தான் போலும் அத்தகைய கோயில்கள் இன்று யாண்டுங் காணப்படவில்லை. இவ் வாறு அவை அழிந்து விடுவதைக் கண்ட பின்னரே அம் முறையை மாற்றிக் கற்றளிகளை (கற்கோயில்கள்) எடுக்கும் முறை கைக்கொள்ளப்பட் டிருத்தல் வேண்டும். காஞ்சியி லிருந்து அரசாண்ட பல்லவப் பேரரசர்களே முதன்முதல் கற்கோயில்களை எடுக்கத் தொடங்கினர். ஏழாம் நூற் ருண்டின் தொடக்கத்திலிருந்தே கற்றளிகள் எடுக்கப் பட்டன. தென்னுர்க்காடு மாவட்டத்தில் ஒரு கல்மண்டபம் உளது. அது கி. பி. 600—630-ல் ஆட்சிசெய்த பல்லவ மன்னன் மகேந்திரவர்மனுல் கட்டுவிக்கப்பட்டது. அம் மண்டபத்தில், ‘இக்கோயில் பிரமனுக்கும், ஈஸ்வரனுக்கும், விஷ்ணுவுக்கும் விசித்திர சித்தனுல் செங்கல், சுண்ணும்பு, மரம் உலோகமில்லாமல் அமைக்கப்பட்டது,’ என்று பொறிக்கப்பட்டுள்ளது. ஆதலால் அதற்கு முன்னர்க் கட்டப்பட்ட கோயில்களெல்லாம் செங்கல் முதலியவற்ரு லானவை என்பது தெளியக்கிடக்கின்றது.

சோழ நாட்டுத் திருப்பதிகள் பலவற்றிலும் உள்ள கோயில்களுக்கும் தஞ்சைப் பெரியகோயிலுக்கும் அமைப்

பில் மிகப்பெரியதொரு வேறுபாடு உண்டு. எல்லாக் கோயில்களிலும், கோயிலுட்புகும் மதிலிலுள்ள கோபுரமே மிகவும் உயர்ந்திருக்கும்; ஆனால் தஞ்சைப் பெருவுடை யார் கோயிலிலோ அதற்கு முற்றிலும் மாருகக் கருவறை



*Courtesy: Dept. of Archaeology.*

தஞ்சைப் பெரிய கோயில்.

யின் (மூலத்தானம்) மேலுள்ள கோபுரமே மிக மிகப் பெரிதாயும் உயரமாயும் அமைந்துள்ளது. பெரும்பாலான கோயில்களில் தெற்கு, வடக்கு, மேற்கு ஆகிய மூன்று திக்குகளிலும் மதிற்சுவரின் நடுவிற் கோபுரவாயில்கள் அமைக்கப் பெற்றுள்ளன; ஆனால் இவ்விராசராசேச்சரத்தில் கிழக்குத் திக்கில் மட்டுமே இரு கோபுரவாயில்கள் அமைக்கப்பட்டுள்ளன.

இக்கோயிலுட் செல்லுதற்கு முதன் முதலிற் சிவ கங்கைக் கோட்டையின் அகழைக் கடந்து, அக்கோட்டைச் சுவரில் உள்ள வளைவைக் கடந்து செல்லவேண்டும். சற்றுத் தூரத்தில் அழகிய கோபுர வாயில் ஒன்று காணப் படும்; அதுவே 'கேரளாந்தகன் திருவாயில்' ஆகும். 'கேரளாந்தகன்' என்னுந் தொடர் சேரர்களுக்கு யமன் என்று பொருள்படும். இராசராசன் சேரர்களை வென்ற பிறகு ஏற்படுத்திக்கொண்ட சிறப்புப் பெயரே கேரளாந்தகன் என்பது. அதைக் கடந்து சிறிது தூரம் சென்றால் அங்கே இராசராசன் திருவாயில் என்னுங் கோபுரவாயிலை அடைய லாம். அதையுங் கடந்து உள்ளே சென்றால் சுமார் எண்ணூறடி நீளமும் நானூறடி அகலமும் உள்ள தொரு பேரவை போன்ற இடத்தில் பெருவுடையார் ஆலயம், பிற அங்கங்களோடும் கூடி அமைக்கப் பெற்றிருப்பதைக் காணலாம். அவ்விடம் முழுவதும் கருங்கல், செங்கற்க ளால் தளவரிசை செய்யப் பெற்றுள்ளது.

முதன் முதலில் சிறு மேடை ஒன்றைக் காண்கின் றோம். அது ஆடல் வல்லான் சன்னிதிக்கு நேராகப் பெரு வுடையார் சன்னிதியில் அமைந்துள்ளது. அம்மேடையில் தான் ஆண்டுதோறும், சித்திரைத் திருவிழாவின்போது குறவஞ்சி நாடகம் நடைபெறும். இராசராசனது இறை யன்பையும், சமயத் தொண்டினையும் வியந்து போற்றிய

அக்கால மக்கள் அம்மேடையில், இராசராசன் நாடகத்தை நடித்து வந்தனர். ஆனல் பிற்காலத்தில் எக் காரணம் பற்றியோ அது நின்றுபோகக் குறவஞ்சி நாடகம் நடை பெறுகின்றது. கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் இயற்றிய சரபேந்திர பூபாலக் குறவஞ்சியே இந்நாடகத்திற் குரிய காப்பியமாகும். இந்நாடகம் தஞ்சையை யாண்ட மராட்டிய மன்னராகிய சரபோஜியின் (1798—1832) வாழ்க்கையை உட்கொண்டதாகும்.

அதை யடுத்துச் செல்லுவோமாயின் ஏறக்குறைய நூறடி அகலமுள்ள உயர்ந்த மேடையமைந்துள்ளதைக் காணுவோம். அம்மேடையின் கீழ்ப்பகுதியில் நந்தி மண்டபம் அமைந்துள்ளது. இங்குள்ள நந்தி மிகவும் பெரியதாகும்; இந்தியாவிலேயே இரண்டாவதாக உள்ளது. இதனைக் காட்டிலும் பெரியதோர் நந்தி அனந்தப்பூர் மாவட்



நந்தி மண்டபம்

டத்தில் உள்ளது. இது ஒரே கல்லால் இயன்றது. நந்தி பன்னிரண்டடி உயரமும், பத்தொன்பதரைஅடி நீளமும், எட்டேகாலடி அகலமும் உள்ளதாயிருக்கிறது. இதன் மண்டபத் தூண்களில் நாயக்க மன்னர்களின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. ஆதலால் இம்மண்டபம் நாயக்க மன்னர்களாற் கட்டப்பட்டதென்பது தெளிவாகி றது. இந்த நந்தி, திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள பெரம்பலூருக் கணித்தாயுள்ள பச்சைமலையி லிருந்து கொண்டுவரப்பட்ட தென்பர்.

நந்தி மண்டபத்தைத் தாண்டி வடபுறம் பார்த்தால் இறைவியின் சன்னிதியைக் காண்போம். இக்கோயில் இராசராசனுற் கட்டப்பட்ட தன்று. இராசராசன், பெரிய கோயிலின் வடபுறமுள்ள சிவகங்கைத் தோட்டத்தில் தேவியின் கோயிலை எடுப்பித் திருந்தான். தேவியின் பெயர் உமாபரமேச்சுவரி என்பதாகும். பிற்காலத்து வந்த நாயக்க மன்னர்களி லொருவரால் இக்கோயில் இடிக்கப்பெற்று, அவருக்குப் பின்னர் வந்த நாயக்க மன்னரால் இப்போதுள்ள இத்தேவி ஆலயம் எடுக்கப்பட்ட தெனவும் அறிகின்றோம். இறைவியின் பெயர் உலகமுழுதுடையாள் என்றழைக்கப் பட்டது. இதன் முன்னுள்ள மகா மண்டபம் மல்லப்ப நாயக்கரால் கட்டப்பட்டதெனவும் தெரிகின்றது.

அதைக் கடந்து செல்லுவோமாயின் பின்னும் சற்று உயர்ந்த மேடை காணப்படும். அதுவே இறைவன் சன்னிதியாகும். இம்மேடைக்குச் செல்ல இருபுறத்தும் படிகள் உள்ளன. அவையே இராசராசன் காலத்துக் கட்டப்பட்ட படிகளென்பர். வாயிலுக்கு நேராக உள்ள படிகள் சரபோஜி மன்னன் காலத்தில் எடுக்கப்பட்டதா யிருக்கலாம் எனத் தெரிகின்றது. இப் படிக்கட்டுகளில் ஏறிச் சென்றபின் அங்குள்ள வாயில் தான் திருஅணுக்கன்

திருவாயில் எனப்படுவது. இதனை யடுத்துள்ள மண்டபத்தைத் தாண்டிச் சென்றால் இறைவன் கருவறையை அடையலாம்.

கருவறையோடு கூடிய உட்கோயிலானது ஆறு பகுதிகளைக் கொண்டதாகும். அவை கருவறை, அதனைச்சுற்றியுள்ள வலம்வரு மண்டபத்துடன்கூடிய அர்த்த மண்டபம், இருபுறமுந் தூண்களும் வெளிவாயிலும் உள்ள மகா மண்டபம், தியாகேசர் சன்னிதி மண்டபம், கோயில் எடுபிடிகள் வைத்துள்ள ஆடன் மண்டபம், இசைக் கருவி மண்டபம் என்பவையாம். கருவறையும், அதனை யடுத்துள்ள திருச்சுற்று மண்டபமும் தொண்ணூற்றாறடிச் சதுர அளவினவை. ஏனைய பகுதிகளைக் கொண்ட மண்டபம் நூற்றுத் தொண்ணூற்றிரண்டடி நீளமும் தொண்ணூற்றாறடி அகலமும் உள்ளதாகும்.

கருவறையும் அதைச் சூழ்ந்த திருச்சுற்றும் தொண்ணூற்றாறடிச் சதுரவடிவா யமைந்துள்ளன. அதன் மேலுள்ள அழகிய விமானம் சதுரவடிவாகவும், பதின்மூன்று கோபுர மாடிகளைக் கொண்டதாகவும் அமைக்கப்பட்டுள்ளது. விமானம் மேலே செல்லச் செல்லக் கோபுரத்தின் சதுர அளவு குறைந்து கூம்பிய வடிவமாயுள்ளது. பதின்மூன்றாவது மாடிக்குமேல் சதுரவடிவமுள்ள தளக்கல் அமைக்கப்பட்டுள்ளது. இது இருபத்தைந்தரையடிச் சதுர அளவுள்ள ஒரே கல்லாகும். இக்கல்லை, தஞ்சைக்கு மேற்கில் நான்கு கல் தூரத்திலுள்ள சாரப்பள்ளம் என்னுங் கிராமத்திலிருந்து சாரம் அமைத்து, அதன் வழிக் கொணர்ந்து விமானத்தின் உச்சியிற் சேர்த்ததாகச் சொல்லப்படுகின்றது. இக்கல்லின் நிறை எண்பது டன் எனக் கணக்கிட்டுள்ளனர். இக்கல்லின் நான்கு மூலைகளிலும் இரண்டிரண்டு நந்திகள் அமைக்கப்பெற்றுள்ளன. அவை ஒவ்

வொன்றும் ஆறரையடி நீளமும் ஐந்தரையடி அகலமும் உள்ளன.

இக் கல்லின்மேல் அரைப் பந்து வடிவமான கல் கட்டு விமானமும், அதன்மேல் தூபிக் குடமும் அமைக்கப் பட்டுள்ளன. இக்குடம் செம்பா லியன்றது. அதன் நிறை 3083 பலம் உள்ளதாம். இக்குடத்தின்மேல் பொற்றகடு வேயப் பெற்றுள்ளது. அதற்கு 2926½ கழஞ்சு பொன் செலவாயிற் றென்று தெரிகிறது. இவ்விமானத்தின் உயரம் இருநூற்றுப் பதினாறு அடியாகும் இவ் விமானம் 'தட்சிணமேரு' எனவும், 'உத்தம விமானம்' எனவும் அழைக்கப்படுகின்றது.

இக்கோயிலின் மூலத்தானத்தில் எழுந்தருளச் செய்தி ருக்கும் பெருவுடையார் திருமேனி மிகவும் பெரியது; உயரமானது. இது நருமதை நதி தீரத்திலிருந்து இராச ராசனுற் கொண்டுவரப் பட்டதாகத் தெரிகிறது. இவ்விறை வனின் திருநாமம் 'இராசராசேச்சரமுடையார்' எனவும், இறைவி பெயர் 'உமாபரமேச்சுவரி' எனவும் இராச ராசனுல் வழங்கப்பெற்றன. 'தட்சிணமேரு விடங்கர்' எனவும், 'ஆடவல்லான்' எனவும் வழங்கப்பட்டதாகவுந் தெரிகின்றது. பிற்காலத்தில் இறைவன் திருப்பெயர் 'பெரு வுடையார்' எனவும், இறைவி பெயர் 'பெரியநாயகி' எனவும் வழங்கலாயின. வடமொழியில் பிரகதீச்சுரர், பிருகந்நாயகி எனவும் வழங்கப் பெறுகின்றன.

இறைவனின் சன்னிதியை யடைவதற்காக விமானத் தின் தெற்கிலும் வடக்கிலுமாக இரு வாயில்கள் அமைக் கப்பெற்றுள்ளன. இக்கோயிலில் ஆங்காங்கேயுள்ள வாயில் கள் தோறும் துவார பாலகர் வடிவங்கள் அமைக்கப்பட் டுள்ளன. அவையாவும் மிகப் பெரிய உருவம் வாய்ந்தன வாயுள்ளன; பதினெட்டடி உயரமும் எட்டடி அகலமும்

கொண்டுள்ளன. ஆறுமுகப் பெருமான் சன்னிதியிலுள்ள துவாரபாலகர் மிக்க வேலைப்பாடு அமைந்தவை. மாசற்ற கருங்கல்லாற் செய்யப்பெற்றவை. இத் திருவாலயம் (ஆறு முகப் பெருமான்) பிற்காலத்தில் எடுக்கப்பட்டதாகும்.

மேற்குச் சுற்ருலயத்தில் அமைந்துள்ளது கணபதி திருக்கோயில். இக் கோயில் தஞ்சையை யாண்ட மன்ன ராகிய இரண்டாம் சரபோஜியால் எடுக்கப்பட்ட தென்றும், பழைய விநாயகர் திருமேனிக்குப் பதிலாகப் புதியதொரு விநாயகர் திருமேனி அமைக்கப்பட்டதென்றும் தெரி கின்றது. கோயிலின் தெற்குச் சுற்ருலயத்துள்ள கல்வெட்டு ஒன்ருல் இவை தெரிய வருகின்றன. மேலும் அம்மன்னன் கோயிலுக்குக் கா்ளே, யானே போன்ற பல வெள்ளி வாக னங்களேயும், பல ஆபரணங்களேயுங் கொடுத்தானென்றும், கோயிலுக்குத் தளவரிசை யிட்டுப் பல திருப்பணிகள் செய்தானென்றும் அக்கல்வெட்டிஞலேயே அறியக்கிடக் கின்றது.

பிள்ளேயார் திருக்கோயிலுக்கு வடக்கில் கருவூரார் சன்னதி அமைந்துள்ளது. இவ்விடத்தே கருவூரார் மேடை தான் முன்னர் இருந்தது. ஏறக்குறைய ஐம்பது ஆண்டு கட்கு முன்னரே இத் திருக்கோயில் எடுப்பிக்கப்பெற்றுக் கருவூரார் திருமேனியும் அமைக்கப்பெற்றது. வியாழன் தோறும் கருவூரார்க்குச் சிறப்புறு பூசனே நடைபெற்று வருகிறது. இவரே திருவிசைப்பாப் பாடியருளிய கருவூர்த் தேவரெனக் கொள்ளப்படுகிறது. இராசராசேச்சரம், கங்கைகொண்ட சோழேச்சரம் ஆகிய கோயில்களுக்கு இவராற் பாடப்பெற்ற திருப்பதிகங்கள் உள்ளன.

திருச்சுற்ருலயத்தின் வடமேற்கில் அமைந்துள்ளது ஆறுமுகப் பெருமானின் திருக்கோயில். இது முழுவதும் மாசற்ற கருங்கல்லா லமைந்தது. இதிலமைந்துள்ள சிற்ப

வேலைகள் இந்தியாவிலேயே சிறந்தனவாகக் கொள்ளப்படுகின்றன. இதன் சிற்ப நுட்பங்களை நோக்குமிடத்து இது பதினேழு பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த தெனக் கருதப்படுகிறது. தஞ்சையை ஆட்சி புரிந்த நாயக்க மன்னர் காலத்தில் இக்கோயில் எடுப்பிக்கப்பட்டிருக்கலாம் எனத் தெரிகின்றது. கோயிலில் உள்ள கல்வெட்டுக்கள் ஒன்றிலும் இக் கோயில் பற்றிக் குறிப்பிடப்படாததிலிருந்தே இது மிகவும் பிற்பட்டதென்பது விளங்கும். இங்கு அமைந்துள்ள ஆறுமுகப் பெருமானின் அருட்டிருமேனி மிகவும் வனப்பு வாய்ந்தது. மயிலும், ஆறுமுகக் கோலமும், திருவாசியும் ஒரே கல்லில் அமைக்கப்பட்டுள்ளன. இவ்விறைவர் மேல் அருணகிரியார் பாடிய திருப்புகழ்ப் பாடல்கள் மூன்றுள்ளன. யானை குதிரைகள் பூட்டப்பெற்ற இரதம் போன்று அமைத்திருப்பது இக்கோயிலின் அழகை மேலும் அதிகப்படுத்துவதாகவே யுள்ளது.

விமானத்தின் வடக்கு வாயிலை யடுத்து, மேற்புறமாகச் சண்டேசுவரர் ஆலயம் அமைந்துள்ளது. இவ்வாலயம் ஒன்றைத்தான் உட்பிரகாரத்தில் அமைப்பது அக்கால வழக்கம். அதற்கொப்பவே இராசராசனும் இவ்வாலயம் ஒன்றைத்தான் உட்பிரகாரத்தில் ஏற்படுத்தி இருந்தான். கோயிற் பொருள்களை யெல்லாங் கண்காணிக்கும் அதிகாரி சண்டேசுவரர் எனக் கொள்ளப்பட்டதாலேயே அவ்வாலயத்தை மூலத்தானத்திற் கருகில் அமைக்கும் வழக்கம் ஏற்பட்டது போலும். இதன் கிழக்கே, திருச்சுற்றாலயத்தின் வடகிழக்குப் பகுதியில் நடராசப் பெருமான் திருக்கோயில் அமைந்துள்ளது. இதுவும் பிற்காலத் தெழுந்ததேயாம்.

விமானத்தின் தென்புறத்தில் அமைந்துள்ள வாயில் விக்கிரமன் திருவாயில் என்றழைக்கப்படுகின்றது. இதன் கிழக்குப் பக்கத்தில் அழகிய திருமகள் வடிவம் அமைக்கப்

பெற்றுள்ளது. அதனையடுத்துச் சில பௌத்த உருவச்சிலைகள் அமைந்துள்ளன. விமானத்தின் வடக்கு வாயிலின் கீழ்ப்புறத்தில் கலைமகள் வடிவம் மிக்க அழகுடன் விளங்குகின்றது. மேலும் விமானத்தின் தென்புறத்தில் பிள்ளையார், திருமால், பிச்சாடனர், தட்சணாமூர்த்தி, மார்க்கண்டேயர், நடராசர் சிலைகளும், மேல்புறத்தில் அர்த்தநாரீசுவரர் வடிவமும்; வடபுறத்தில் கங்காதரர், கல்யாண சுந்தரர், மகிடாசுர மர்த்தனி படிமங்களும் வனப்புறச் செய்யப்பெற்றுள்ளன. மேலும் மகாலிங்கங்கள், நாக கன்னிகைகள், சமயக் குரவர்கள் உருவங்களும் கவின்பெற அமைக்கப்பட்டுள்ளன. எண் திசைத் தேவர்கட்கும் தனித்தனிச் சுற்றாலயங்கள் எடுக்கப்பட்டுள்ளன. இவையாவும் அக்கோயிலிலமைந்துள்ள சிற்பக் கலையின் சிறப்பை விளக்குவனவாயமைந் துள்ளன. விமானத்தின் வடபுறத்தில் ஒரு ஐரோப்பியனது தலை அமைக்கப்பெற்றுள்ளது. அதன் கருத்தை இதுகாறும் அறிந்தோர் இலர்.

பெருவுடையார் விமானத்தின் கீழ், கருவறையைச் சுற்றி, சிறியதொரு உள்மாளிகை யுளதல்லவா? அதன் சுவர்களிலும், மண்டப மேற்கட்டியிலும் பற்பல அரிய வண்ண ஓவியங்கள் உள்ளன. ஒன்றன் மேலொன்றாக இரு ஓவிய அமைப்புக்கள் உள்ளன. ஒன்று இக்கோயில் எடுப்பிக்கப்பட்டபோதே, இராசராசன் காலத்தே தீட்டப்பெற்றது. மற்றொன்று பதினேழு பதினெட்டாம் நூற்றாண்டில் நாயக்க மன்னர்களால் தீட்டுவிக்கப்பெற்றது. முந்திய ஓவியங்களின்மேல் மெல்லிய சுண்ணச்சாந்து தீட்டி அதன்மேல் நாயக்க மன்னர் கால ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. மேலுள்ள ஓவியங்களை நீக்கிக் காணுங்கால் இராசராசன் காலத்திய ஓவியங்கள் சிற்சிலவே காணக்கிடைக்கின்றன. சுந்தரமூர்த்தி நாயனாருடைய சரித்திரப் பகுதிகள், சிவ

பெருமான் யோகாசனத்திலிருப்பது, திரிபுர சம்மாரம் இவைபோன்ற புராண வரலாற்று ஓவியங்களும், அக்கால மக்கள் வாழ்க்கையை விளக்கும் ஓவியங்களும், அரசன் தேவிமார் போன்ருர் ஓவியங்களும் காணப்படுகின்றன. ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் தீட்டப்பெற்ற இவ்வோவி யங்கள் யாவும் வண்ணம் கெடாமல் காண்போர் மனத்தைக் கவரத்தக்கனவா யுள்ளன. இதிலிருந்து அக்காலத்து ஓவியக்கலே வளர்ச்சியை அறிய முடிகின்றது.

இக்கோயிலிலுள்ள கல்வெட்டுக்கள் பலவாகும். அவையாவும் ஆராய்ச்சிக்கு மிகவும் பயன்படுவன. இங்கு இராசராசன், முதல் இராசேந்திரன், முதற் குலோத்துங்கன், விக்கிரமசோழன், நாயக்க மன்னர்கள், இரண்டாம் சரபோஜி ஆகியோரது கல்வெட்டுக்கள் உள்ளன. இவை யாவும் அரசியற் கல்வெட்டு ஆராய்ச்சித் துறையாரால் அரிய குறிப்புக்களுடன் வெளியிடப்பட்டுள்ளன. எனவே இக்கோயில் வரலாற் ருராய்ச்சிக்குத் துணே செய்யுந் தன்மை வாய்ந்துள்ளது.

இப் பெரிய கோயில் அக்காலத்து மக்களின் கலே வளர்ச்சியையும், கைத்தொழிற் றிறனேயும் விளக்குவ தாயும் இராசராசன் வெற்றி வீரனுகவும், சமயத் தொண் டனுகவும் இத்தலேநகரில் வீற்றிருந்தா னென்பதற்கோர் எடுத்துக் காட்டாகவும் விளங்குகின்றது. இதன் பெரிய வடிவமும், சிறந்த சிற்பங்களும், கண்கவர் வண்ண ஓவியங் களும் காண்போர் உளத்தை உவகைக் கடலு ளாழ்த்தி இன்றுபோல் என்றும் நின்று நிலவும் என்பது உறுதி.

## கேள்விகள்

1. மனிதன் இறந்தும் இறவாம லிருப்ப தெங்ஙனம்?
2. சோழ மன்னர்தம் சிறப்புக்கள் யாவை?

3. இராசராசன் இன்றும் புகழப்படுவதேன் ?
4. தஞ்சைக் கோயிலுக்குப் பெரிய கோயில் என்னும் பெயர் பொருந்துவதெங்ஙனம் ?
5. கோயில்களின் வளர்ச்சி முறை யாது ?
6. தஞ்சைக் கோயிலிலுள்ள பெரிய வாயில்கள் யாவை ?
7. பெரிய கோயில் நந்தியைப் பற்றி நாமறிவதென்ன ?
8. விமானத்தின் அமைப்பென்ன ?
9. திருச்சுற்றாலயத்துள்ள கோயில்கள் யாவை ?
10. இக்கோயில் வரலாற்றாராய்ச்சிக்குப் பயன்படுவதெவ்வாறு ?

## பயிற்சி

1. அடியிற் கண்டவை பற்றிக் கட்டுரைகள் எழுதுக :—
   (1) தஞ்சைப் பெரிய கோயில் அமைப்பு.
   (2) தஞ்சைக் கோயிலும் ஓவிய, சிற்பக்கலைகளும்.
   (3) தஞ்சைக் கோயிலும் வரலாற்று ஆராய்ச்சியும்.
2. தஞ்சைக் கோயில் பற்றிய புத்தகங்கள் கிடைப்பின் படிக்கவும்.
3. இயலுமாயின் நேரிற்சென்று கோயிலைப் பார்க்கவும்.

## இலக்கணம்

(1) அகச்சுட்டு, புறவினா இவ்விரண்டிற்கும் இரண்டிரண்டு உதாரணங்கள் தருக.

(2) சேர்த்து வரைக :—

இடையீடு + இன்றி
அருள் + மொழி
கல் + தனி

கோயில் + உள் + புகும்
கேரள + அந்தகன்
அருள் + திரு + மேனி.

(3) இரண்டாம், வேற்றுமை ஆக்கல் பொருளிலும், மூன்றும் வேற்றுமை கருத்தாப் பொருளிலும் வந்த இரண்டு உதாரணங்கள் தருக.

(4) செய், உண், போ, நட—இப்பகுதிகளைக்கொண்ட சொற்களை ஆக்குக.

(5) பால்பகா அஃறிணைப் பெயரென்றால் என்ன ?

(6) கீழ் வரும் வாக்கியங்களை திருத்தி அமைக்க :—

(1) சிறந்தவர்கள் சோழ மன்னர்களே மூவேந்தருள் தமிநாட்டு.

(2) அங்கு நடைபெறுகின்றது நாடகம் குறவஞ்சி இன்றும்.

(3) வடக்கு விமானத்தில் வாயிலை யடுத்து ஆலயம் சண்டேசுவரர் அமைந்திருக்கின்றது.

## 2. தேனீ வளர்த்தல்

நம் நாட்டுப் பொருளாதார நிலை வளர்ச்சியடையவில்லை யென்றே எல்லா அறிஞருங் கூறுகின்றனர். அதன் முதற் காரணம் நம் நாட்டின் பெரும்பகுதியும் கிராமங்களாயிருப்பதுதான் என்றுங் கூறுகின்றனர். ஆனால் கிராம மக்களோ இதைப்பற்றி ஒரு சிறிதுங் கவலைப்படுவதாகவே இல்லை.

கிராம மக்களிற் பெரும்பாலோர் விவசாயிகளே யாவர். அவர்கள் ஆண்டில் பாதிக் காலந்தான் வேலை செய்கின்றார்கள். அதாவது பயிரிடுவதற்கு நான்கு திங்க

ளும், களையெடுக்க ஒரு திங்களும், அறுவடைசெய்து நெல்லைச் சேகரிக்க ஒரு திங்களும் ஆக அரையாண்டுக் காலந்தான் வேலை செய்கிறார்கள். ஆனால் புன்செய்த் தானியங்கள் பயிரிடுவோரும், நீர் இறைத்துப் பாய்ச்சி நெற்பயிரிடுவோரும் ஏறக்குறைய ஆண்டு முழுவதும் அலுவல் பார்ப்பவர்களாவர்.

சோழ நாடு போன்று பாசன வசதி பெற்ற ஊர்களிலுள்ள விவசாயிகள் ஆண்டில் பாதிக் காலத்தைப் பயிர்த் தொழிலுக்குப் பயன்படுத்தி, எஞ்சியுள்ள பாதிக் காலத்தை வீணாகவே கழிக்கின்றார்கள். இந்தச் சோம்பல் வாழ்க்கை நடத்துங் காலத்துத்தான் கூத்தும் விழாவும் நடத்தி, வம்பும் வழக்குந் தொடுத்துப் பொருளை வீண் செலவு செய்து பகைமையையும் உண்டாக்கிக்கொண்டு வாழ்க்கையைப் பாழ்படுத்திக் கொள்ளுகின்றனர். இந்தக் காலத்தை நல்ல பயனுள்ள வேறு வழியில், சிறுதொழில்களைச் செய்வதில் செலவிட்டால் எவ்வளவோ நன்மையுண்டாகும். நாட்டுப் பொருளாதாரமும் சீர்பட வழியுண்டு. நூல்நூற்றல், கயிறு திரித்தல், பாய் முடைதல், கோழி வளர்த்தல், தேனீ வளர்த்தல் முதலிய பலவும் சிறு கைத் தொழில்களேயாம்.

தேன் மிகவுந் தித்திப்பான பொருள் என்பதை நாம் எல்லோரும் அறிவோம். தேனை உண்ண விரும்பாதவர் எவரும் நம்மில் இரார். உணவுப் பொருள்களில் இனிப்புப் பொருள்களையே எல்லோரும் விரும்புவோம். அதிலும் குழந்தைகட்கோ இனிப்புப் பண்டம் என்றால் மிகவுங் கொண்டாட்டம். தேன் இனிய சுவை யுடைய தென்பது மட்டு மன்றி உடலுக்கும் நன்மை பயக்கக்கூடிய தாகும். மிகவும் கசப்பு வாய்ந்த மருந்துப் பொருள்களைக் கூடத் தேனிற் கலந்து எளிதாக உண்டு விடலாம். ஆகவே தேன்

மக்கட்குப் பலவகையாலும் பயன்படக் கூடிய சிறந்த தொரு பொருளாகும். இத்தகைய சிறந்த தேனைப் பெறுதற்கே தேனீ வளர்த்தல் வேண்டும். இத் தேனீ வளர்த்தலால் ஒருவர் ஆண்டொன்றுக்கு முந்நூறு முதல் நானூறு ரூபாய்வரை இலாபம் அடையலாம்.

தேனீக்கள் பூவிலிருந்து தேனைச் சேகரிக்கின்றன என்பதுவே பொதுவாகக் கூறப்படும் செய்தி. ஆனால் அது முற்றிலும் பிழையான கருத்தாகும். பூவில் நிறைந் திருப்பது இனிய சுவையுடைய இரசமே யன்றித் தேனல்ல. தேனீக்கள் பூக்களில் தங்கி, தங்கள் நீண்ட உறிஞ்சு குழாய்போன்று அமைந்துள்ள நாக்கினைப் பூக்களுக்குட் செலுத்தி, அச் சுவைமிக்க இரசப் பொருள் முழுவதையும் உறிஞ்சி எடுத்துக்கொள்ளுகிறது. அவ்வாறு எடுத்த பொருளைத் தன் வாயின்கண் உள்ள ஒரு பையில் நிறப்பிக் கொள்கிறது. பின்னர் அதன் வாயில் ஊறும் நீர்ப்பொருள் அந்த இரசத்தைத் தேனாக மாறச்செய்கிறது. தேனீக்கள் கூட்டை அடைந்தவுடன் தன் வாய்ப் பையிலுள்ள தேனை உமிழ்ந்து தேன் கூட்டு அறைகளில் நிறப்புகின்றன. இது தான் நாம் உபயோகிக்கின்ற தேனாகும்.

தேனீக்களின் வாழ்க்கையை முதற்கண் காணுவோம். ஒவ்வொரு தேனீக் குடும்பத்திலும் மூன்று வகையான



இராணித் தேனீ



ஆண் தேனீ



உழைப்புத் தேனீ

தேனீக்கள் உள்ளன. அவை இராணித் தேனீ, ஆண் தேனீக்கள், உழைப்புத் தேனீக்கள் எனப்படுவனவாம்.

ஒரு குடும்பத்தில் ஒரு இராணித் தேனீதான் இருக்கும். இதுவே அக் குடும்பத்திற்கு அதிகாரி; அங்குள்ள எல்லாத் தேனீக்களுக்கும் அரசியாகும். அதுவே எல்லாத் தேனீக்களுக்கும் தாயும் ஆகும். அது ஏனைய தேனீக்களைப் போல் இரண்டு பங்குக்கு மேலாகவே பெரியதாயிருக்கும். ஆதலால் அதனை எளிதிற் கண்டுகொள்ளலாம். அதன் வடிவத்திற் கேற்பவே தேனடையிலுள்ள அதன் அறையும் பெரிதாகவே அமைக்கப்பட் டிருக்கும். முட்டையிடுவ தொன்றுதான் அதன் வேலை. அது தேவைக்குத் தக்கபடி நாள்தோறும் ஆயிரக்கணக்கான முட்டைகளை யிடும் வல்லமை படைத்ததாகும். இது ஏறக்குறைய மூன்றாண்டு கள் உயிர்வாழ்ந் திருக்கும்.

உழைப்பாளித் தேனீக்கள்தாம் அக்குடும்பத்தின் அலுவல்கள் முழுவதையும் செய்கின்றன. அவை ஒவ்வொரு குடும்பத்திலும் நாற்பது, ஐம்பதாயிரம்வரை இருக்கும். முற்றும் வளர்ச்சி யடையாத பெண் ஈக்களே உழைப்பாளி ஈக்களாகும். இராணி ஈ இடும் முட்டைகள் பொரிந்து புழுக்கள் வெளிவந்தவுடன், இவைகள்தாம் தம் தலையிலிருந்து உண்டாகும் ஒருவித கட்டியானபாலை அவைகட்குக் கொடுத்து வளர்க்கும். சில நாட்கள் சென்றதும், தேனும் மகரந்தமும் கலந்த உணவைக் கொடுத்து அவைகளை வளர்ப்பதும் இவையேதாம். தேன், மகரந்தத் தூளைக் கொண்டுவந்து உணவாவதற்கேற்றவாறு பக்குவப் படுத்துவதும் இவைகளின் வேலையே யாகும். தேனை அறைகளில் நிரப்பி மெழுகால் மூடிப் பத்திரப்படுத்து வதும், கூட்டைச் சுத்தமாக வைத்திருப்பதுங்கூட இவற்றின் அலுவல்களேயாம். சுருங்கக் கூறின் பிறந்தது முதல்

இறக்கும்வரை தம் குடும்பத்திற்காக உழைப்பதுதான் இவைகளின் வேலையாகும். இவை சுமார் ஆறுமாத காலம் வாழ்ந்திருக்கக் கூடியன.

உழைப்பாளி ஈக்கள் தவிர எஞ்சியுள்ள யாவும் ஆண் ஈக்களேயாகும். அவை ஒரு கூட்டில் (குடும்பத்தில்) நூற்றுக்கணக்கில்தான் இருக்கக் காணலாம். அவைகட்கு ஒரு வேலையும் இல்லை. தேனை உறிஞ்சுவதற்கு ஏற்ற நாவும் இல்லை. உழைப்பாளி ஈக்கள் கொண்டு வரும் தேனை உண்டு, சோம்பேறி வாழ்க்கை நடத்துவனவே யாம். மாரிக் காலங்களில் பூக்கள் அதிகம் மலர்வ தில்லை யாதலின் தேன் அதிகமாகக் கிடைப்பதில்லை; ஆதலால் கூட்டிலுள்ள தேன் குறையத் தொடங்கும். அப்போது உழைப்பாளி ஈக்கள் இவற்றைக் கொஞ்சமும் இரக்கங் காட்டாமற் கொன்றுவிடுவதும் உண்டு. இவை மூன்று மாதம் வரையும் வாழ்ந்திருக்கக் கூடியன. தேனீக் குடும் பத்திலேயே, ஒன்றும் அலுவல் புரியாமல் சோம்பேறி வாழ்வு வாழ்வதும், மிகக் குறைந்த காலமே வாழ்ந்திருப் பதும் இவ் வாண் ஈக்களேயாம்.

தேனீக்களில் பலவகை யுண்டு. அவைகளில் பெரியது மலைத்தேனீ. இது மலைப் பாறைகளின் இடுக்குகளிலுள்ள பொந்துகளிலும், உயர்ந்த மரக்கிளைகளிலும் கூடுகட்டி வசிக்கும். அக்கூடுகள் ஐந்து முதல் ஆறடி நீளம், அகலம் உள்ள பெரியனவாக அமைக்கப்பட்டிருக்கும். மலை களில் வாழும் மக்கள் தீயிட்டுக் கொளுத்தித் தேனீக்களை விரட்டிவிட்டுத் தேனடையை எடுத்துப் பிழிந்து தேனெடுப் பார்கள். இது அவ்வளவு தூய்மையான தேனல்ல.

கொம்புத் தேனீ என்னும் இனமே தேனீக்களில் சிறியது. இவை மரக்கிளைகளிலும், புதர்களிலும், வீட்டுக் கூறைகளிலும், மூலைகளிலும் தங்கள் கூட்டை அமைத்துக்

கொள்ளுகின்றன. அக்கூடுகள் மிகவும் சிறியனவாகவே அமைந்திருக்கும். பெரும்பாலும் ஆறு முதல் பத்தங்குல அளவிற்குள்ளேயே இருக்கும். ஆதலால் இவ்வடைகளிலிருந்து கிடைக்கும் தேனும் மிகவுங் குறைவாகவே இருக்கும்.

மலைத் தேனீயைக் காட்டிலும் சிறியதாகவும், கொம்புத் தேனீயைவிடப் பெரியதாகவும் ஒருவகைத் தேனீக்கள் உண்டு. அவை அடுக்குத் தேனீ எனப்படும். இவை மரப் பொந்துகளிலும், சுவர்களின் • சந்துகளிலும் தங்கள் கூட்டை அமைத்துக்கொள்ளும். அக் கூடுகள் சேர்ந்தாற் போல் பத்து பதினைந்து அடுத்தடுத்து அமைந்திருக்கும். சில வேளைகளில் வீடுகளிலிருந்து கழித்து எறியப்பட்ட மட்பாண்டங்கள், பெட்டிகள் முதலியவற்றிலுங்கூட இவற்றின் கூடுகளைக் காணலாம்.

இந்த அடுக்குத் தேனீக்கள் மிகவும் சாந்த குணம் உடையவை. இவைகளே நாம் வளர்த்தற்கு ஏற்றவை. இத் தேனீக் கூட்டத்தின் தன்மைகளை யெல்லாம் நன்குணர்ந்தவர்கள், அவைகளை வளர்ப்பதற்கேற்ற, படத்திற் காட்டியபடியுள்ள பெட்டி யொன்றைக் கண்டுபிடித்துள்ளார்கள். இப்பெட்டி பலகைகளால் இணைக்கப்பெற்று ஒரு சிறு வீடுபோற் காணப்படுகிறது. இது நான்கு பாகங்களைக்கொண்டது. ஒவ்வொரு பாகமும் தனித்தனியே செய்யப்பட்டு, ஒன்றின்மேலொன்ருகப் பொருத்தி வைக்கப்பட்டுள்ளன. வேண்டும்போது அவற்றைத் தனித்தனியாக எடுத்துக்கொள்ளலாம். ஒவ்வொரு பாகமும் நாற்புறத்திலும் பலகைகளால் அடைக்கப்பட்டு, மேலும் கீழும் திறந்தபடியே விடப்பட்டுள்ளன. ஆதலால் தேனீக்கள் மிகவும் எளிதாக ஒரு பாகத்திலிருந்து மற்ெருரு பாகத்திற்குப் போகமுடியும். அடியில் உள்ளது இப்பெட்டியின்

பீடம்போன்று அமைந்தொரு பலகை. அதற்குமேலுள்ள பாகம் புழு அடைப் பெட்டி. அதற்குமேல் உள்ளது தேனடைப் பெட்டி. அதற்குமேலும் இருப்பதுதான் பெட்டியின் கூரை. புழுஅடைப் பெட்டியின் அடிப்பாகத்தில் ஒரு நீண்ட துவாரம் உள்ளது. அதுவே தேனீக்கள் உள்ளே புகவும் வெளியே வரவும் உள்ள வழியாகும்.

புழு அடைப்பெட்டியிலும், தேனடைப் பெட்டியிலும் சிறிது சிறிது இடம்விட்டுப் பல சட்டங்கள் தொங்கவிடப் பட்டுள்ளன. இச்சட்டங்களில்தான் தேனீக்கள் கூடுகளைக் கட்டுகின்றன. அக் கூடுகள் பார்வைக்கு அடைபோல் காணப்படுவதால் அவற்றைத் தேனடைகள் என்கிறோம். தேனடை ஒவ்வொன்றிலும் ஆயிரக்கணக்கான அறைகள்



தேனீ வளர்க்கும் பெட்டி.

உள்ளன. அவற்றில்தான் தேனீக்கள் தங்கியுள்ளன. தேனை யும் சேகரித்து வைக்கின்றன.

தேனீக்கள் சாதாரணமாகத் தேனடைகளில் உள்ள மேல் அறைகளில் தேனைச் சேர்த்துவைத்து, கீழ்ப் பகுதி களில் உள்ள அறை களிலேயே வாழ்ந்து வருகின்றன. அந்தப் பழக்கத்தினால் தே னீக்கள் இப்பெட்டியி லேயும் கீழேயுள்ள பெட்டியில் உள்ள கூடுகளில் தங்கு கின்றன; முட்டை வைக்கின்றன; புழுக் களைக் காத்து வளர்க் கின்றன. அது போலவே மேல் பெட்டியில் உள்ள கூடுகளில் தேனைச் சேர்த்து வைக்கின்றன. ஆதலால் நாம் புழு அடைப் பெட்டியிலுள்ள தேனை எடுத்தல் கூடாது. அது புழுப்பூச்சிகள் நிறைந்து மிகவுந் தூய்மையற்றதாயிருக்கும். மேலும் தேனீக்களும் நாச மடைந்துவிடும். ஆதலால் தேனடைப் பெட்டியிலுள்ள தேனையே நாம் எடுத்துக் கொள்ளுதல் வேண்டும். அதுவே மிகவுந் தூய்மையானது மாகும். இத்தேன் நெடுநாட்களுக்குக் கெடுவதில்லை.



சட்டமும் தேனீ முட்டை அறையின் உள்பாகமும்.

பெட்டியின் கீழுள்ள அடைகளில் தேனீக்கள் முட்டைகளைக் காத்து, குஞ்சான பிறகு வளர்த்து வரு வதால் இதனைப் புழுஅடைப் பெட்டி என்றும் மேலுள்ள பெட்டியிலுள்ள அடைகளில் தேனைச் சேகரித்துவைப்ப

தால் அதைத் தேனடைப் பெட்டி என்றும் கூறுகிறோம். கடைசியாக மேலே இருக்கும் பாகம் பெட்டியின் கூரை எனப்படும். இது காற்று, மழை, அதிக வெய்யில், அதிகக் குளிர் முதலியவற்றினின்றும் கூட்டினைக் காக்கிறது. அதில் தேனீக்களுக்கு வேண்டிய காற்று உட்புகுவதற்கு ஏற்றவாறு மெல்லிய கம்பியினுல் அடைக்கப்பட்ட துவாரங்கள் உள்ளன.

இத்தகைய பெட்டிகளை நாமே செய்து கொள்ளலாம்; அல்லது விவசாயப் பண்ணைகளிலிருந்து, தேனீக்களின் தேனடையுடன் மலிவான விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம். பெட்டிகளை நாமே செய்து கொண்டோமாஞல் தேனீக்களைக் கொண்டுவருவதெப்படி? அடுக்குத் தேனீக்கள் கூடுகட்டியுள்ள மரப் பொந்துகளைக் கண்டு பிடிக்க வேண்டும். பின்னர் அப் பொந்தின் வாயைக் களிமண் கொண்டு மூடி, மேலுங் கீழுமாக இரு துவாரங்கள் இட வேண்டும். அவற்றுள் மேல் துவாரத்திற்கு நேரே ஒரு பெட்டியைத் திறந்து பிடித்துக்கொண்டு, கீழ்த்துவாரத்தின் வழியாகப் புகையைச் செலுத்தவேண்டும். அப்போது தேனீக்கள் புகையினுல் தடுமாறி மேல்துவாரத்தின் வழியே நாம் வைத்துள்ள பெட்டிக்குள் வந்துசேரும். பெட்டியை அப்படியே மூடித் தேனீக்களைக் கொண்டு வந்து விடலாம். தேனடைகளையும் எவ்வித இடர்ப்பாடும் இன்றி எடுத்துக்கொண்டு வந்து, நம்மிடமுள்ள பெட்டியின் சட்டங்களிற் பொருத்தி விடலாம். பின்னர் தேனீக்களை அக் கூட்டிற்குள் விடவேண்டும். அப்போது தேனீக்கள் முன் போலவே அக்கூடுகளில் தங்கி வாழத் தொடங்கும். தேன் கூடு கிடைக்காமல் ஈக்கள் மாத்திரம் கிடைக்குமாஞல், நாம் கடையிலிருந்து தேன் மெழுகை வாங்கி வந்து, தேனடைகள் செய்து பெட்டிக்குள் உள்ள சட்டங்களிற் பொருத்தி

வைத்துவிடலாம். தேவையானபோது இன்னும் வேண்டிய அடைகளைத் தேனீக்களே தங்கள் வயிற்றிலிருந்து உற்பத்தியாகி வெளிவரும் தேன் மெழுகினுற் செய்துகொள்ளும். ஒரு பவுண்டு தேன் மெழுகு உண்டாக்குவதற்குத் தேனீக்கள் பத்துப் பதினைந்து பவுண்டு தேனை உண்ண வேண்டுமாஞல் அது எவ்வளவு அரிய பொருள் என்பதை எண்ணிப் பாருங்கள்.

முன்பெல்லாம் தேனடைகளுக் கருகில் புகையிட்டுக் கொளுத்தித் தேனீக்களைக் கொன்று அல்லது விரட்டியோட்டிவிட்டுத் தேனடையை எடுப்பார்கள். அதை அப்படியே பிழிந்து தேனைச் சேகரிப்பது வழக்கம். இது பல வகையாலுந் தவருன முறையாகும். தேனடையில் முட்டைகளும் புழுக்களும் நிறைந்துள்ளதால் அவை தேனிற் கலந்து தேன் தூய்மையற்றதாகி விடுகின்றது. மேலும் சிறிதளவு தேனைப் பெறுவதற்காக அதைவிடப் பன்மடங்கு தேன் சேகரிக்கக்கூடிய தேனீக்களைக் கொன்று, தேனடையையும் அழித்து விடுகின்ருேம். இது எத்துணை அறியாமை மிக்க செயலாகும் என்பதை எண்ணிப் பாருங்கள். தூய்மையற்ற தேனை எடுக்கத் தேனீக் குலத்தை அழிக்கும் முறை இப்போது நீக்கப்பட்டுள்ளது.

சிறந்த முறையில் தூய தேனை எடுப்பதற்கான சிறு இயந்திரம் ஒன்றை அமைத்திருக்கிருர்கள். அது துத்தநாகத் தகட்டினுல் வட்டமாகச் செய்யப்பட்ட சிறிய பாத்திரமேயாம். அதன் நடுவில் ஓர் இருப்புக் கோல் பொருத்தப்பட்டுள்ளது. அதில் காற்ருடி போன்று நான்கு இறக்கைகள் இணைக்கப்பட்டுள்ளன, இவற்றில் தேனடைப் பெட்டியிலுள்ள சட்டத்தில் அமைந்துள்ள தேனடையை எடுத்து வைக்கவேண்டும். பின்னர் அவ்விருப்புக் கோலின் தலையில் அமைந்துள்ள பற்சக்கரத்தோடு பொருத்தப்பெற்

றுள்ள கைப்பிடியை விசையாகச் சுற்றவேண்டும். அப்போது அந்தச் சக்கரம் சுழல நாற்புறமும் அமைக்கப்பட்டுள்ள இறக்கைகளும் விரைந்து சுழலும். அப்போது தேனடையிலுள்ள தேன் துளித்துளியாகப் பாத்திரத்தில் விழும். அவ்வாறு விழுந்த தேனை அப் பாத்திரத்தில் அடியிலுள்ள துவாரத்தின் வழியே குழாயின் உதவியால் வேண்டும் கலங்களிற் பிடித்துக் கொள்ளலாம். தேனை எடுத்துக் கொண்ட பிறகு தேனடையைச் சட்டத்துடன் பெட்டிக்குள் வைத்துவிடவேண்டும். தேனீக்கள் மறுபடியும் அவ்வடையில் தேனை நிரப்பும். இவ்வாறு அத்தேனடை அழிவினின்றும் காப்பாற்றப்படுகின்றது.

தேன் மக்களுக்குப் பயன்படும் பொருள்களில் சிறந்த தொன்றுகும். தேன் உடம்பிற்கு மிகவும் நலந் தருவதாகும். தேனை உணவிற் சேர்த்து உண்ணுபவர் நீண்ட நாள் வாழ்ந்திருப்பர் எனக்கருதப்படுகிறது. நம் நாட்டில் முற்காலத்திருந்த வேடுவர்கள் தேனையும் தினை மாவையும் உண்டே நல்லுடல் பெற்று நெடுங்காலம் வெற்றி வீரர்களாகத் திகழ்ந்திருந்தனர். பழங்களைத் துண்டுதுண்டாக நறுக்கித் தேனிற் போட்டு வைத்தால் நெடுநாட்கள் வரை கெடாதிருக்கும். தேனைப் பாலிலும், எலுமிச்சம்பழச் சாற்றிலும் கலந்து சாப்பிடலாம். தோசை, ரொட்டி முதலியவற்றையும் தேனில் தோய்த்து உண்ணலாம். குழந்தைகட்கும், நோயாளிகட்கும் தேன் எளிதில் செரிக்கத் தக்கது. தேன் மருந்துகளைச் சாப்பிடுவதற்குப் பயன்படுவதன்றி மருந்தாகவும் பயன்படுகின்றது. இதனைச் சேகரிப்பவருக்குப் பொருள் வரும் வருவாயாகவும் இருக்கிறது. இத்துணைச் சிறப்பும், பயனும் உள்ள தேனைத் தரும் தேனீ வளர்த்தல் தொழிலை நம் நாட்டிலும் பெரும் அளவிற் கைக்கொண்டு நன்மை யடைதல் சாலச் சிறந்ததாகும்.

## கேள்விகள்

1. விவசாயிகள் எவ்வாறு சோம்பேறிகளாகின்றனர் ?
2. அதைப் போக்குவ தெவ்வாறு ?
3. தேன் என்பது யாது ? விளக்குக.
4. தேனீக் குடும்பத்திலுள்ள மூவகை ஈக்கள் யாவை ?
5. அவற்றின் வாழ்க்கை விவரம் யாது ?
6. மூவகைத் தேனீக்களும், அவற்றின் வாழ்க்கை முறையும் யாவை ?
7. தேனீ வளர்க்கும் பெட்டியின் அமைப்பு யாது ?
8. தேன் சேகரிக்கும் முறை (பெட்டியிலிருந்து) யாது ?
9. தேனின் பயன்கள் யாவை ?

## பயிற்சி

1. தேனீ அதன் வாழ்க்கையைக் கூறுவதுபோல் எழுதுக.
2. 'தேன் ஒரு சிறந்த பொருள்' என்னுந் தலைப்பில் ஒரு கட்டுரை எழுதுக.
3. தேனீப் பண்ணை அருகிலிருந்தால் சென்று பார்க்கவும்.

## இலக்கணம்

(1) பிரித்து எழுதுக :—
மருத்துப் பொருள்
மக்கட்கு
இருப்புக் கோல்.

(2) தொழிற் பெயர் என்றால் என்ன ? அதற்கு இரண்டு உதாரணம் தந்து விளக்குக.

(3) கீழ்வருஞ் சொற்றொடர்களில் அமைந்த வேற்றுமைகளை விளக்குக.

(1) வேலைக்கார ஈயினால் கட்டப்பட்ட கூண்டில் சோம்பேறி ஈக்கள் வசிக்கின்றன.

(2) தேனீக்களைக் கொன்று தேனெடுக்கின்றோம்.

(3) கோலின் தலையில் அமைந்துள்ள பற்சக்கரத்தோடு பொருத்தப் பெற்றுள்ள சக்கரத்தைச் சுற்றவும்.

(4) காரண இடுகுறிப் பெயருக்கும், இடுகுறிச் சிறப்புப் பெயருக்கும் உதாரணம் தந்து விளக்குக.

(5) கீழ்வருஞ் சொற்களுக்கேற்ற இலக்கணத் தொடர்பு கூறுக :—

நாடு
அத்தேனீ
இது
எவன்
கொன்றவர்
கந்தன்.

(6) ஆண்பால் விகுதி, பலர்பால் விகுதி, பலவின்பால் விகுதி இவைகளுக்கு இரண்டிரண்டு உதாரணங்கள் தருக.

# 3. விவேகானந்தர்

வங்காளத்துக்குத் தலைநகராக விளங்குவது கல்கத்தா நகரமாகும். சென்ற நூற்றாண்டின் இடைப்பகுதியில் விசுவநாத தத்தர் என்ற ஒருவர் அந் நகரில் வாழ்ந்து வந்தார். அவர் கல்வி கேள்விகளிற் சிறந்தவர் ; நற்குணங்கள் நிறைந்தவர். அவர் கல்கத்தா உயர்நீதி மன்றத்தில் ஓர் வழக்கறிஞராக இருந்தார். தம் 'தொழிலில் சீரிய திறம் படைத்து அதனாற் பெரும் வருவாயுடையவரா யிருந்தார். எனினும் வறியோரும், வருந்துவோரும் விரும்பி வேண்டியதை இல்லையென்னாமல் வாரி வழங்கியதனால், செல்வம் ஒன்றும் சேர்த்து வைத்தாரில்லை.

விசுவநாத தத்தர் புவனேசுவரி மாதா என்ற அம்மையாரை மணஞ்செய்திருந்தார். அவர் அடக்கம், அன்பு, அமைதி, நிறைவு முதலிய எல்லா நற்குணங்களும் ஒருங்கமையப்பெற்றுத் திகழ்ந்தார். கடவுளிடம் மாறாத அன்பு பூண்டொழுகி வந்தார். இராமாயணம், மகாபாரதம் என்னும் இரு பெருங் காவியங்களையும் மனப்பாடம் செய்திருந்தார்.

இவ்வம்மையார் இருவர் மகளிரைப் பெற்றெடுத்தார் ; எனினும் ஆண்மக வில்லையே என்றேங்கினார். காசி விசுவநாதரை எண்ணி நோன்புகள் பல நோற்றார். உண்ணும் போதும், உறங்கும்போதும் இவர் அவ் வெண்ணமாகவே இருந்து வந்தார். பின்னர் கருத்தரித்து, நன்னாளிலே (12-1-1863) ஓர் ஆண்மகவைப் பெற்று மகிழ்ந்தார். பெற்றோர் அக் குழந்தை பிறந்த நாள், நட்சத்திரத்திற்கு ஏற்ப நரேந்திரநாதன் எனப் பெயரிட்டு வளர்த்து வந்தார்கள்.

நரேந்திரன் வயது மூன்று ஆவதற்குள்ளாகவே அதிக குறும்புக்காரனுகி விட்டான். பெற்ருேர்கள் எவ்வளவுக் கெவ்வளவு அவனைக் கண்டித்தார்களோ அவ்வளவுக்கவ் வளவு அவனுடைய துடுக்குத் தனமும், துணிவும் அதி கரித்தன. தனக்குக் கொடுக்கப்படும் தண்டனைகளை அவன் ஒரு போதும் பொருட்படுத்தியதே கிடையாது. அவன் மூர்க்கத்தனம் செய்யும் போதெல்லாம் அவன் தாயார் அவனைத் தண்ணீர்க் குழாயி னடியில் நிறுத்தித் தண் ணீரைத் திறந்து விட்டுவிடுவார். தண்ணீர் விர்ரென்று அவன் தலையில் வீழ்ந்து ஓடியவண்ண மிருக்கும். அவ்வாறு பொழியும் புனலின் கீழ் அவன் எவ்வளவு நேரமாலுைம் சாந்தமா யிருப்பான். இவனது முரட்டுக் குணத்தைக் கண்ட தாயார், 'சிவபெருமானை நோக்கி ஓர் ஆண்மகவு வேண்டுமென்று தவங் கிடந்தேன்; அவர் தன் பூதகணங்களிலேயே ஒன்றை எனக்குப் பிள்ளையாக அனுப்பி விட்டாரே' எனக்கூறி மனங் கலங்குவதுண்டு.

புவனேசுவரி மாதா தம் மைந்தனுக்கு இராம கதையை முறையாகக் கூறி வந்தார். இராமனின் அடக்கம், ஆண்மை, பொறுமை, சொற்கடவாமை போன்ற சிறந்த பண்புகளை யும், சீதையின் சிறந்த குணநலன்களையும் தம் குழந்தை யின் உள்ளத்தே பதியும்படிச் செய்தார். நரேந்திரனும் அவற்றைக்கேட்டு மனந்திருந்தினுன். அதன் விளைவாக இராமனிடம் நீங்காத அன்பு கொண்டவனுனன். சீதா ராமன் வடிவம் ஒன்றை வைத்துக் கொண்டு கடவுள் வழிபாடு ஆற்றத் தொடங்கினுன். ஒரு நாள் தன் வீட்டு மாடியில், தன் நண்பன் ஒருவனுடன் உட்கார்ந்து தியானம் செய்யத் தொடங்கினுன். கதவு உட்புறம் தாழிடப்பட்டி ருந்தது. நெடுநேரமாகக் குழந்தையைக் காணுத பெற்ருேர் மாடிக்கு வந்தனர். கதவு தாழிடப்பட்டிருந்ததால் பலமாக



*விவேகானந்த அடிகள்.*

உதைத்துக் கதவைத் திறந்தனர். அவ் வாரவாரத்தைக் கேட்ட நண்பன் அஞ்சி நழுவிவிட்டான். ஆனுல் நரேந்திரனே தன்னையும் மறந்து தியானத்தி லிருந்ததால் அங்கு நிகழ்ந்தவை ஒன்றையும் அறியவில்லை. அவனது தியான முங் கலையவில்லை. அதுகண்ட பெற்ருேரும் மற்ருேரும் பெருவியப் படைந்தனர்.

நரேந்திரன் வீட்டில் வண்டிக்காரன் ஒருவன் இருந்தான். அவன் மிகவும் நற்குணமுள்ளவன். நரேந்திரனுக்கு எக்காரணம் பற்றியோ அவனிடத்துப் பேரன்பு உண்டாகி விட்டது. அடிக்கடி அவ் வண்டிக்காரன் வீட்டிற்கு ஓடி விடுவான். வண்டிக்காரனுடைய தயவு எல்லா மக்களுக்கும் வேண்டற்பால தொன்றென்றே அவன் நம்பினுன். ஆதலால் தானும் பெரியவனுகும்போது ஒரு வண்டிக்காரனுவது மேல் என்ற எண்ணமும் அவன் உள்ளத்தில் தோன்றியது. ஒரு நாள் இருவருக்கு மிடையே திருமணத்தைப் பற்றியதொரு சொல்லாடல் நிகழ்ந்தது. வண்டிக்காரன் திருமணத்தைப் பற்றி மிகவும் இழிவாகப் பேசினுன். அக் கருத்து நரேந்திரன் உள்ளத்தில் கருக்கொண்டது; நரேந்திரனுந் திருமணத்தை வெறுத்தான். தன்னலத்திற்கும், துன்பத்திற்குங் காரணமாயுள்ள திருமணத்தைத் தான் கனவிலுங் கருதுவதில்லை என்ற உறுதியும் ஏற்பட்டுவிட்டது. நரேந்திரனுக்கு ஆஞ்சனேயரிடத்து அதிகப் பற்றுதல் உண்டாயிற்று; தானும் அவரைப்போல் ஒரு பெரு வீரனுகத் திகழவேண்டுமென்ற எண்ணமும் உண்டாயிற்று.

நரேந்திரனை ஐந்தாம் ஆண்டிற் பள்ளிக்கனுப்பினர். தீய பிள்ளைகளின் நட்டால் நரேந்திரன் இழிந்த சொற்களை யெல்லாங் கூறத் தொடங்கினுன். அதனை யறிந்த விசுவநாத தத்தர் தம் மகனுக்குத் தனி ஆசிரியரை யமர்த்தி வீட்டிலேயே கற்பிக்கச் செய்தார். நரேந்திரனும் மிக்க விரைவிலேயே தன் பாடங்களைக் கற்று வந்தான். அத்துடன் தனக்கு விருப்பமான இசையிலுங்கூடத் தேர்ச்சி யடைந்து வந்தான். அவன் விளையாட்டில் மிக்க ஊக்கம் உள்ளவன். எந்த விளையாட்டாயினும் விருப்புடனே விளையாடுவான். பிள்ளைகள் சண்டையிட்டுக் கொள்வது அவ

னுக்கு ஒரு சிறிதும் பிடிக்காது. சிறுவர்கள் கைகலக்க ஆரம்பித்து விட்டால், தன் மீது அடி விழுவதைக்கூடப் பொருட்படுத்தாமல் இடையில் புகுந்து அவர்களை விலக்கு வான். தன் உயிரைக் கொடுத்தேனும் மற்றவர்களைக் காப்பாற்ற வேண்டும் என்ற உயரிய நோக்கம் சிறுவயதி லேயே அவன் உள்ளத்திற் பதிந்து விட்டது.

தக்க வயது வந்தவுடன் நரேந்திரனை உயர்நிலைப் பள்ளியிற் சேர்த்தார்கள். அங்கு அவன் எல்லோரைக் காட்டிலும் மிகவும் சுறுசுறுப் புள்ளவனுகவே கற்றுவர லானுன். ஆங்கிலம் படிக்க நேர்ந்தபோது, அது அன்னிய மொழியாதலால் கற்கமுடியாது என்று அடியோடு மறுத்து விட்டான். ஆனுல் அதைக் கற்கவேண்டியதன் இன்றிய மையாமையை உணர்ந்தபோது தானுகவே படிக்கத் தொடங்கினுன். எடுத்த செயலை அரிதின் முயன்ருவது இனிதே முடிக்குந் தன்மை வாய்ந்தவன் ஆதலின், ஆங்கிலத்தையும் மிகவும் விரைவிற் கற்றுத் தேர்ச்சி யடைந்தான்.

நரேந்திரன் உயர்நிலைப் பள்ளியிற் படித்துக் கொண்டி ருந்தபோது, விசுவநாத தத்தர் கொஞ்ச காலம் மத்திய மாகாணத்திற் சென்று தங்கவேண்டியிருந்தது. அவர் குடும்பத்துடன் சென்றதால் நரேந்திரனையும் அழைத்துச் சென்ருர். அதனுல் நரேந்திரனின் படிப்பிற்கு இடையீடு ஏற்பட்டது. எனினும் நரேந்திரன் காலத்தை வீண் போக் காமற் பொது அறிவை வளர்க்கும் புத்தகங்களைப் பயின்று தேர்ந்தான். மீண்டும் கல்கத்தா சென்றபோது, அவன் பல் கலைக்கழக நுழைவுத் தேர்வுக்கு எழுத அனுமதிக்கப்பட வில்லை. இருந்தாலும் நரேந்திரனின் அறிவுத் திறனைக் கண்ட பல்கலைக் கழகத்தார், விதிவிலக்கு அளித்தார்கள். அப்போது நரேந்திரன் மூன்ருண்டுக்குரிய பாடங்களைத்

தையும் ஒரே ஆண்டிற் பயின்று, முதல்வனுகவும் தேர்வு பெற்ருன்.

அதன் பின்னர் நரேந்திரன் கல்லூரியிற் சேர்ந்து பயின்ருன். அங்கு வங்காளி மொழி, வட மொழி, ஆங் கிலம், தத்துவம், தருக்கம், வரலாறு முதலியவற்றிற் சிறந்த அறிவைப் பெற்ருன். அவன் திறமையைக் கண்ட சுரேந்திர நாத் பானர்ஜி அவனை வெகுவாகப் பாராட்டினுர். தேர்வுக் காலங்களில் நரேந்திரன் சந்தடியற்ற தனி வீட்டிலிருந்து படிப்பது வழக்கம்; ஆதலால் முழுக் கவனத்தையும் செலுத்திப் படிப்பான். முடிவில் பல்கலைக் கழகத் தேர்வி லும் முதல்வனுக வெற்றிபெற்று பீ. ஏ. பட்டத்தையும் பெற்ருன். அவன் கல்லூரியிற் பயின்றகாலை நாடகக்கலை யிலும் வல்லவ னுனன். கல்லூரி நாடகங்களி லெல்லாம் பங்கெடுத்துக் கொண்டு சிறப்புற நடித்தும் எல்லோ ருடைய பாராட்டுதலையும் பெற்ருன். அத்துடன் சிலம்பத் திலும் நல்ல தேர்ச்சியடைந் திருந்தான். ஒரு சமயம் பெயர் பெற்ற சிலம்பக்காரன் ஒருவனேடு போட்டியிட்டு, நெடு நேரம் அவனுடன் சிலம்பம் விளையாடி முடிவில் அவனைத் தோற்கடித்தான். ஆகவே அவன் அறிவு வன்மையைப் போலவே உடல் வன்மையையும் பெற்றிருந்தான்.

நரேந்திரன் பி. ஏ. தேர்வில் முதல்வனுகத் தேர்வு பெற்றதும், அந்த ஆண்டிலேயே சட்டக் கல்லூரியிற் சேர்ந்து பயிலத் தொடங்கினுன். அவன் வார விடுமுறை நாட்களில் தன் நண்பர்களின் வீட்டிற்குச் சென்று தங்கு வதுண்டு. அவ்வாறு ஒரு வாரத்தில், இரண்டு மைல்களுக் கப்பாலுள்ள தன் நண்பன் ஒருவன் வீட்டிற்குச் சென்றிருந் தான். தன் நண்பர்களுடன் அளவளாவி மகிழ்ந்திருந்தான். அப்போது ஓர் ஆள் ஓடிவந்து விசுவநாத தத்தர் மாரடைப் பால் இறந்துவிட்டதாகக் கூறிக் கண்ணீர் விட்டான்.

நரேந்திரன் ஓடோடியும் வீடு சேர்ந்தான்; தந்தையார் பிணமாய்க் கிடத்தலையும். அன்னையும், பிறரும் அழுது அரற்றுவதையுங்கண்டு பிரமித்துப் போனான்; வாய் பேசவும், அழவுங்கூட இயலாதவனானான். பின்னர் தந்தைக்குச் செய்யவேண்டிய இறுதிக் கடன்களையெல்லாம் முறையே செய்து முடித்தான்.

விசுவநாத தத்தர் தாம் தேடிய பெரும் பொருளனைத்தையும் அவ்வப்போதே செலவு செய்தாரென்று முன்னரே கண்டோ மல்லவா? ஆதலால் அவர் இறந்த பின்னர் வறுமையுங் குடும்பத்திற் குடி புகுந்தது. எவ்வாறு குடும்பம் நடந்ததென்பதே நரேந்திரனுக்கும், புவனேசுவரி மாதாவுக்குந்தான் தெரியும். நரேந்திரன் நெடுந்தூரத்திலுள்ள கல்லூரிக்குக் கால் நடையாகவே சென்றான். இன்றியமையாப் பொருள்களாகிய செருப்பு, குடை போன்றவை கூட எட்டாப் பொருள்களாயின. அவனும் அவற்றையெல்லாம் வெட்டென மறந்துவிட்டுத் தன் கல்வியிலே கருத்தாயிருந்தான். அந்நாட்களில் அவன் பட்டினி கிடந்த நாட்கள் எத்தனை என்பதை யாரே அறியக் கூடும்! இதனால் உடலும் இளைக்கத் தொடங்கிற்று; சிறிது தளர்ச்சியும் அடைந்தது.

துன்பந் தனித்து வருவதில்லை என்பது முதுமொழியல்லவா! அதற் கேற்பவே நரேந்திரனுக்கு மற்றோர் பேரிடுக்கணும் உண்டாயிற்று. அவன் குடியிருந்த வீடு தங்கட்குச் சொந்தமானதென்று அவன் தாயாதியர் வழக்குத் தொடர்ந்தனர். வழக்கும் நீடித்துக்கொண்டே போயிற்று. ஏழ்மையில் வாடிய நரேந்திரன் குடும்பத்தை அவ் வழக்கு மேலும் துன்புறுத்துவ தாயிற்று. எனினும் நரேந்திரன் மனத்தளர்வு அடையவில்லை. எவ்வளவுக் கெவ்வளவு துன்பம் அதிகமாக வந்ததோ அவ்வளவுக் கவ்

வளவு அவன் உள்ளமும் உறுதிப்பட்டுக்கொண்டே வந்தது. இறுதியில் வழக்கும் முடிந்தது; நரேந்திரனே வெற்றி பெற்முன். அதன் பின்னர் வறுமையும் சிறிது சிறிதாக அக் குடும்பத்தினின்றும் அகலத் தொடங்கியது.

'வாழ்வின் செயல்கள் அனைத்தினும் ஒருவன் தூய் மையுடையவனு யிருத்தல்வேண்டும். மாணக்கன் விரதங் களுக்குள்ளே சிறந்ததாகிய பிரம்மச்சரிய விரதத்தையே தன் நோக்கமாகக்கொண்டு அதன்படி வழுவாது ஒழுக வேண்டும். பலவீனம் வாழ்க்கையைச் சிதைத்துவிடும். வலிமை யுடையவன்தான் நன்மையைக் கடைப்பிடிக்கக் கூடும். ஆற்றல், அன்பு, அறிவு, திறன் முதலிய எல்லா வற்றையும் ஒருங்கே தரவல்லது பிரம்மச்சரியமே.' இவை போன்ற பல அரிய கருத்துக்களையே நரேந்திரன் தன் உயர்ந்த நோக்கமாகக் கொண்டொழுகினன். ஆதலால்

"உரன்என்னுந் தோட்டியான் ஓர் ஐந்துங் காப்பான்
வரன்என்னும் வைப்புக்கோர் வித்து"

என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கு ஓர் எடுத்துக் காட்டாக இலங்கி நின்முன்.

நரேந்திரன் தான் சந்தித்த பெரியோர்களிடமெல்லாம் 'கடவுளைக் கண்ட துண்டா?' என்று கேட்பது வழக்கம். கங்காதீரத்தையடுத்துள்ள தட்சிணேசுவரத்தில் இராம கிருஷ்ண பரமஹம்ஸர் என்ற பெரியார் ஒருவர் இருப்பதாக வும், அவர் காளிதேவியின் அருளைப்பெற்றவர் என்றும் அவரே கடவுளைக் கண்ட பெரியார் என்றும் ஒருவர் நரேந் திரனிடம் கூறினர். அதுகேட்ட நரேந்திரன் அவ்விடம் சென்று அப்பெரியாரைக் கண்டான். அவருக்கும் அதே கேள்வியை விடுத்தான். அவரும் சற்றும் தாமதியாமல், 'ஆம், என் அகக் கண்ணல் அப்பெருமானை இடையருது கண்டு களிப்பெய்துகின்றேன்' என்முர். அதை நரேந்

திரன் உடனே நம்பவில்லை யாயினும் அவன் மனம் அப்பெரி யார் வசப்பட்டுவிட்டது.

பின்னர் நரேந்திரன் அடிக்கடி அங்கே போய் வரத் தலைப்பட்டான். அவனை யொத்த இளைஞர் பலர் அப்பெரி யாரின் சீடர்களாயிருந்தனர். நரேந்திரன் அவர்கள் யாவ ருக்கும் தலைவனு யிருந்தான். அவனது உயர்ந்த ஆன்மீக அறிவையும், பக்தி வைராக்கி யத்தையும் உணர்ந்த இராம கிருஷ்ணர் அவனிடமே நம்பிக்கை கொண்டு அவனுக்கே ஞானேபதேசம் செய்து சமாதி நிலையையும் அருளித் தம் ஊனுடலைத் துறந்தார். நரேந்திரன் சிறந்தவரானுர். எனவே நாமும் இனி அவர் என்றே அழைப்போம். பின்னர் சீடர் களெல்லோரும், நரேந்திரருடன் வராக நகர் என்னுமிடத் திருந்த பாழுங் கட்டிடம் ஒன்றில் தங்கித் தவஞ்செய்யலா யினர். இராமகிருஷ்ணருக்குப் பதிலாக நரேந்திரரே தலைவரானுர்.

இவ்வாறிருக்குங்கால், அவர் ஏதோ ஒரு சக்தி தன்னை உந்தித் தள்ளுவதாகவும், தான் பூவலம் வரவேண்டு மென்றும் கூறிப் புறப்பட்டார். கால் நடையாகவே சென்றுர். யாராவது அன்போடு அழைத்து உணவிட்டால் உண்பார். இல்லாவிட்டால் பட்டினிதான். நெடுந் தூரம் செல்ல வேண்டியபோது தாமாகவே யாராவது பிரயாணச் சீட்டு வாங்கித் தந்தால் பயன் படுத்திக்கொள்ளுவார். கையில் ஒரு காசும் வைத்துக் கொள்ளாமல் தீர்த்த யாத்திரை புறப் பட்டார்.

தீர்த்த யாத்திரை புறப்பட்ட நரேந்திரர் பற்பல ஊர் களுக்குஞ் சென்று பின்னர் காசியில் சில காலந் தங்கியிருந் தார். பின்னர் பிருந்தாவனம் சென்று கோவர்த்தன கிரியை வலம் வந்தார். இமயத்தை யடைந்து கொஞ்சகாலம் தவஞ் செய்திருந்தார். பல மன்னர்களும் வீற்றிருந்து ஆட்சி

புரிந்த டில்லி மாநகரஞ் சென்று தங்கி, அங்கிருந்து இராஜ புதனத்தை யடைந்தார். அங்குள்ள பல சுதேச மன்னர் நாடுகளை யெல்லாம் பார்த்து விட்டு, பம்பாய் வழியாகப் பூனு வந்து சேர்ந்தார். அவ்வூரில் பாலகங்காதர திலகருடன் பத்து நாட்கள் தங்கியிருந்தார்.

பின்னர் நரேந்திரர் பங்களூரை யடைந்து, அங்கிருந்து மைசூர் சென்று இரண்டு திங்கள் தங்கியிருந்து புறப் பட்டார். அப்போது மைசூர் மன்னன், அமெரிக்காவில் உலக சமயப் பேரவை யொன்று நடக்கப் போவதாகவும், அதற்குச் சுவாமிகள் செல்லவேண்டு மென்றும், அதற் கான செலவுகளைத் தானே தருவதாகவும் விண்ணப்பம் செய்து கொண்டான். 'இறைவன் கருத்து அதுவாயின் அவ் வாறே நடப்பதாக' என்று கூறிப் புறப்பட்டார் நரேந்திரர். அவர் மலையாள நாட்டின் வழியாகக் கன்னியாகுமரியை யடைந்து தங்கி, பின்னர் மதுரை, இராமநாதபுரம் முதலிய ஊர்களின் வழியே சென்னை சேர்ந்தார். இங்கு கடற்கரைக் கூட்டத்திற் பேசினர். இங்கிருந்தபடியே அமெரிக்கா செல்ல ஏற்பாடாகிப் பம்பாய் சேர்ந்து, 1893-ம் ஆண்டு மே மாதத்தில் 'பெனின்சுலார்' எனுங் கப்பலிலேறிச் சென்ருர். அக்கப்பல் இலங்கை, மலேயா, சீனு, ஜப்பான் முதலிய நாடு களின் வழியே சென்று, நேரே பசிபிக் பெருங்கடலைத் தாண்டி அமெரிக்காவின் மேற்குக் கடற்கரையிலுள்ள வான்கூவார் என்ற துறை முகத்தை யடைந்தது.

பேரவை நிகழ்வது சிகாகோ நகரிலானதால் சுவாமி கள் இரயில் மூலமாக அந் நகரை யடைந்தார்கள். பேராசிரி யர் ரைட் அவர்கள் உதவியால் அப்பேரவையில் பேசித் தம் தாய் நாட்டுச் சமயமே சிறந்ததென எல்லோரும் ஒப்பும் வண்ணம் செய்தார்கள். அப் பேரவை முடிந்த பின்ன ரும் சிலகாலம் அங்குத் தங்கியிருந்து பின்னர் இங்கி

லாந்து, ஐரோப்பா முதலிய மேல்நாடுகட் கெல்லாஞ் சென்று, இந்துமத விளக்கஞ் செய்துவிட்டு, நான்காண்டு களுக்குப் பிறகு தம் தாய்நாட்டை யடைந்தார். சுவாமிகள் மேல் நாடுகளில் இருந்தபோது சேவியர் தம்பதிகள் (Captain Sevier and Mrs. Sevier), குட்வின் (J. J. Goodwin), மார்கரெட் நோபிள் (Margaret Noble) போன்ற சிறந்த சீடர்களின் துணைகொண்டு அங்கங்கே இந்துமத விளக்கச் சங்கங்களையும் நிறுவி வந்தார்கள்.

தாய்நாடு திரும்பிய சுவாமிகளுக்கு இலங்கை, சென்னை, கல்கத்தா போன்ற பெருநகரங்களிலும் பிறவிடங் களிலும் செய்யப்பட்ட வரவேற்பு விழாக்கள் மிகமிகச் சிறந்தனவாயிருந்தன. சுவாமிகள் கல்கத்தாவி லிருந்த போது, இராமகிருஷ்ணரின் சீடர்களையெல்லாம் கூட்டி ஓர் மாநாடு நடத்தி அப்பெரியாரின் கொள்கைகளைப் பரப்பு தற்கான வழிவகைகளை யெல்லாம் தெரிவித்தார்கள். அம் முயற்சியால்தான் தற்போதுள்ள பேலூர் இராமகிருஷ்ண மடம் கட்டப்பட்டது.

சுவாமிகள் மீண்டும் ஒரு முறை பூவலம் வந்து, தம் கொள்கையை நிலைபெறச் செய்யவேண்டுமென்று எண்ணி னார்கள். அதற்காக 1899-ம் ஆண்டில் கல்கத்தாவிலிருந்து கப்பலேறினார்கள். கப்பல் சென்னை, கொழும்பு, பம்பாய், செங்கடல், மத்தியதரைக் கடல் வழியே இலண்டனை யடைந்தது. சுவாமிகள் அங்கு சிலநாள் தங்கிப் பின்னர் அமெரிக்காவை யடைந்தார்கள். அமெரிக்கக் கிழக்குப் பகுதிகளில் கொஞ்ச காலமும், மேற்குப் பகுதிகளில் கொஞ்ச காலமும் தங்கிப் பின்னர் பாரிஸ் நகரம் வந்தார்கள். அப்போது அங்கே உலக சமயத் தோற்ற ஆராய்ச்சி புரிவ தற்காகப் பேரவை ஒன்று கூடியது. சுவாமிகள் அதிற் கலந்து கொண்டார்கள். இந்து மதத்தைப் பற்றி அவர்கள்

கூறியதே முடிவான உண்மை என அறிஞர் பலரும் ஒப்புக்கொண்டனர். பின்னர் அடிகளார் அங்கிருந்து புறப் பட்டு, ஆஸ்திரியா, துருக்கி, எகிப்து முதலிய நாடுகளிற் பிரயாணஞ் செய்தபின்னர்த் தம் தாய்நாடு சேர்ந்தார்கள்.

தலைமை மடத்திற்கு வந்த கொஞ்ச நாட்களுக்கெல் லாம் அடிகளார் இமயத்திலுள்ள மாயாவதி அத்வைத மடத்திற்குச் சென்று வந்தார்கள். அவர் வழி பற்றிப் பல கிளைச் சங்கங்கள் நாடு முழுவதும் நிறுவப்பெற்றன. அவற் றுள் சென்னை இராமகிருஷ்ண மடாலயம், மூர்ஷிதாபாத் குருகுல ஆஸ்ரமம், கல்கத்தா நிவேதிதைப் பெண்பள்ளி ஆகியவைகள் குறிப்பிடத் தக்கன. பல்வேறு மொழிகளிற் பத்திரிகைகளும் தொடங்கப்பெற்றன. காசி போன்ற யாத் திரைத் தலங்களில் மருத்துவச் சாலைகள் நிறுவப்பெற்றன. அன்பர்களின் விருப்பத்திற் கிணங்க அடிகளார் டாக்கா விற்கு எழுந்தருளிப் பின்னர், காசி, புத்த கயை ஆகிய இடங்களுக்கு யாத்திரை போய் வந்தார்கள். இவ்வாறு எல்லாச் செயல்களையும் ஒழுங்குபெறச் செய்து முடித்த அடிகளார் 1902-ம் ஆண்டில் தம் அறையிற் இருந்து சமாதிகூடி முத்திநிலை யடைந்தார்கள். இப்பெரியார் தாம் **விவேகானந்த அடிகள்** என வழங்கப்படுகிறார்கள். இவர் தம் போதனைகளும் புகழும் என்றும் நின்று மக்களுக்கு வழி காட்டிகளாக அமைவனவாம்.

## கேள்விகள்

1. விசுவநாத தத்தரின் சிறப்பியல்புகள் யாவை ?
2. புவனேசுவரியின் நோன்பும், பயனும் யாவை ?
3. நரேந்திரரின் குழந்தைப் பருவ இயல்பு யாது ?
4. நரேந்திரர் கல்வி பயின்ற வரலா றென்ன ?

5. துன்பந் தனித்து வாரா தென்பது நரேந்திரர் பால் உண்மையான தெவ்வாறு ?
6. நரேந்திரரின் பிரம்மச்சரியம் பற்றிய கருத்து யாது ?
7. நரேந்திரர் இந்தியாவில் எவ்வெவ் விடங்கட்குச் சென்றார் ?
8. நரேந்திரரின் முதலாவது மேல்நாட்டுச் செலவை விளக்குக.
9. விவேகானந்தரின் வாழ்க்கையிலிருந்து நாமறிவன யாவை ?

## பயிற்சி

1. நரேந்திரரின் இளமை, கல்வி, இந்தியநாட்டு, மேல் நாட்டுச் சுற்றுப் பிரயாணம் முதலியவைபற்றித் தனித்தனியே அவர்களே கூறுவதுபோல் எழுதுக.
2. விவேகானந்தரின் வாழ்க்கை வரலாற்றுப் புத்தகம் ஏதாவதொன்றைப் படிக்கவும்.
3. அண்மையிலுள்ள ஏதாவதொரு இராமகிருஷ்ண மடத்திற்குப் போய் அம்மட அமைப்பைப்பற்றி அறிந்து வரவும்.

## இலக்கணம்

(1) எதிர்ச் சொல் தருக :—

இன்னல், புனல், உருவம், சீரிய.

(2) தன்வினையைப் பிறவினையாகவும், பிறவினையைத் தன்வினையாகவும் மாற்றுக :—சுட்டான், தாழிட்டார், செலுத்தினர், காப்பான், உந்தப்பட்டார்.

(3) கீழ்வருவன வற்றில் பிறிதின் கிழமையும், தற்கிழமையும் இதுவெதுவெனக் குறிப்பிடுக :—

(1) விவேகானந்தரது வீடு
(2) பறவையது இறக்கை
(3) இந்து மதத்தின் கொள்கை
(4) கந்தனது சட்டை.

(4) ஆகுபெயர் தருக :—
(1) வான் பொய்ப்பினும் தான் பொய்யா.
(2) கார் விளைந்தது.

(5) விவேகானந்தரைப் 'போன்ற' இளைஞர்கள் பலர் வந்தனர். •அதுபோல், போல, ஒப்ப, நிகரப்ப, அன்ன என்ற சொற்களைக்கொண்டு ஒவ்வோர் உவமைத் தொடரை அமைக்கவும்.

(6) கீழ்வரும் சொற்களை முற்றுவிக்க :—
(1) நரேந்திரர் நன்ருக வளர்ந்து ——.
(2) மூன்ருண்டிற்குரிய ——.
(3) ஆற்றல், அறிவு, திறன் எல்லாவற்றையும் ஒருங்கே தரவல்லது ——.

## 4. கியூரி அம்மையார்

மூன்று வயதும் நிரம்பாத மேரி என்னுங் குழந்தை தம் வீட்டுத் தோட்டத்தில் அமர்ந்திருந்தது. அதன் அருகில் ஏதோ ஒரு புத்தகம் கிடந்தது. அதை ஆவலுடன் எடுத்தது குழந்தை; ஆர்வத்துடன் படித்தது. தட்டுத் தடங்கலின்றிப் படித்தது; வாய்விட்டு உரக்கப் படித்தது. குழந்தை தன்னையும் மறந்து படிப்பதிலேயே ஆழ்ந்திருந்தது.

அங்கு வந்தனர் அக்குழந்தையின் பெற்ருேர். குழந்தையின் செயலைத் தூரத்தே கண்ட பெற்ருேர் சந்தடி செய்யாமல் பின்புறம் வந்து நின்றனர்; தம் குழந்தை மழலை

மொழியாடிப் படிப்பதைக் கண்டு கழிபேருவகை யடைந்த னர். அதற்கு மேலும் அவர்களால் தங்களை மறைத்துக் கொள்ள இயலவில்லை.

'மேரி! உனக்குப் படிக்கக் கற்றுக்கொடுத்தவர் யார்?' என்றனர் தாயார். அதுகேட்டுத் திடுக்கிட்டது குழந்தை. 'அன்னையே! மன்னிப்பீராக. தமக்கை படித்த தைப் பார்த்தேன். நானும் முயன்றேன்; அன்றி வேறில்லை; இனிச் செய்யேன்,' என்று கனிந்த குரலிற் கூறியது. தான் ஒரு பெரிய குற்றம் செய்ததாகவே கருதிக் கவன்றது குழந்தை.

அன்னையார் குழந்தையை வாரி எடுத்தார். ஆதர வுடன் மார்பிறுகத் தழுவிக்கொண்டார். 'செல்வமே! மனங் கவலற்க! நின் செயல் எத்துணையும் பிழையுடைத் தன்று; அறிவுடைச் செயலே ஆற்றினை! நின் ஊக்கம் வளர்வதாக! அறிவு சிறப்பதாக!' என வாழ்த்தி மகிழ்ந்தார்.

இந் நிகழ்ச்சி நடந்தது போலந்தைச் சேர்ந்த வார்சா வில், 1870-ம் ஆண்டில். அப்போது போலந்து உரிமை யிழந் திருந்தது. போலந்தின் ஒரு பகுதி ஜெர்மனிக்கும், மற்றொருபகுதி ஆஸ்திரியாவுக்கும், வார்சாவும் அதைச் சார்ந்த பகுதியும் ரஷியாவிற்கும் அடிமையாயிருந்தன. ரஷியாவில் ஸார் மன்னரின் கொடுங்கோ லாட்சி நிலை பெற்றிருந்தது. அதனால் வார்சாவி லுள்ளோர் தாய்மொழி பயிலுதற்குங்கூடத் தடைப்படுத்தப்பட் டிருந்தனர்.

ஒரு நாட்டின் உரிமை பாதுகாக்கப்பட வேண்டு மானல், முதற்கண் பாதுகாக்கப்பட வேண்டுவது நாட்டு மொழியே யாகும். நாட்டுமொழி வளர்ந்தால்தான், முன் னேற்றமடைந்தால்தான் நாட்டுமக்கள் முன்னேற முடியும். நாட்டு மக்கள் முன்னேற்றமடைந்தால்தான் நாடு முன்

னேற்றமடைய முடியும். ஆகவே ஒரு நாட்டு முன்னேற்றத் திற்கும் அந்நாட்டு மக்களின் முன்னேற்றத்திற்கும் உயிர் நாடியாக, அடிப்படைக் காரணமா யமைந்திருப்பது அந் நாட்டு மொழியேயாகும். ஆகவே ஒவ்வொருவரும் தத்தம் தாய்மொழியின்—நாட்டுமொழியின் முன்னேற்றத்திற்கா கப் பாடுபடக் கடமைப்பட் டுள்ளனர்.

இந்த உண்மையை நன்கறிந்த ரஷிய அரசாங்கம் போலந்திலும் தன் மொழியையே போதிக்க ஏற்பாடு செய்தது. போலந்து மொழி எப்பள்ளியிலும் போதிக்கப்பட லாகாது எனவும் திட்ட மியற்றியது. நாம் மேலே பார்த்த மேரியின் தந்தையார் ஓர் பள்ளியாசிரியர். தன் தாய் மொழிப் பற்று மிக்கவர். தாய்நாட்டின் விடுதலைக்காக அல்லும் பகலும் ஒல்லும் வகை முயலுபவர். கனவிலுந் தன் தாய்மொழியையே கருதுபவர். அத்தகைய பெரியார் தன் மனச்சான்றுக்கு எதிராகப் பள்ளியில் ரஷியமொழி யைக் கற்பித்துவர நேர்ந்தது. அதுவே அடிமை நாட்டி லுள்ளாரது நிலை போலும்.

1878-ம் ஆண்டில் ஒருநாள் மாலைவேளை மேரியின் வீட்டில் அமைதி நிலவியது. எல்லோருடைய முகத்திலுங் கவலை தேங்கி நின்றது. மேரியின் தாயார் தன் படுக்கையிற் கிடந்தார். தன் அருமை மக்களை அருகழைத்துக் கொஞ்சிக் குலவினார். கொஞ்ச நேரத்திற்கெல்லாம் ஆழ்ந்த நித்திரை யடைந்து அமைதியுற்றார். பரிதியும் மறைந்தது; பாரகம் இருண்டது. அவ்வாறே மேரியின் இல்லமும் அந்தகாரத் தில் ஆழ்ந்தது. குழந்தைகள் உற்றதை அறிந்தனர்; அழுதனர்; அரற்றினர். கவலைக்கடலுள் மூழ்கினர்; கண்ணீர் ஆறாய்ப் பெருக்கினர். எனினும் பயன் உண்டோ? இல்லை. ஆவி பிரிந்த அன்னையின் உடலமே அங்கு கிடந்தது; அழுது அரற்றும் குழந்தைகளிடம் பரிவு

கொண்டு ஆறுதல் கூறும் பான்மையற்றுக் கிடந்தது. அப்போது மேரிக்கு வயது பத்து ஆயிற்று.

'தாயோடு அறுசுவை போம்,' என்னும் நிலையை அடைந்த மேரியையும், உடன்பிறந்தோரையும் அவர்தம் தந்தையாரே தந்தையும் தாயுமாயிருந்து பேணி வளர்த்து வந்தார். மேரியும் தன் பதினொருவது வயதை எட்டிப் பிடித்தார். அந் நிலையில் வந்தது மற்றோர் அல்லல். மேரியின் தந்தையார் ஆசிரியர் பணியினின்றும் விலக்கப் பட்டார். எனினும் அவர் மனந் தளர்ந்தாரில்லை; தன் னருமைக் குழந்தைகட்கு எவ்விதக் குறைபாடும் இன்றி வளர்த்து வந்தார்.

'துன்பம் வந்தால் தொடர்ந்து வரும்,' என்பதும் ஒரு பழமொழி யல்லவா? அப்பழமொழி இவர்பால் மெய்யா யிற்று. அடுத்துவந்தது மிகப்பேரிடி. மேரியின் தந்தையார் தம் செல்வம் அனைத்தையும் ஒரு கம்பெனியின் பங்குத் தொகையாகக் கொடுத்திருந்தார். அக்கம்பெனி வளர்ந் தோங்கி நற்பயன் தருவதுபோற் காணப்பட்டது; அதை நம்பியே தம் செல்வம் முழுவதையும் அதில் ஈடு செய்திருந் தார். 1884-ல் அந்தக் கம்பெனி அடியோடு உருக்குலைந்து போயிற்று. அத்துடன் இவர்தம் செல்வமும் சிதைந்து போயிற்று. குழந்தைகட்குக் கல்வி கற்பிக்கவும் வகை யில்லாது போயிற்று. மேரி முதலிய குழந்தைகள் யாவரும் வீட்டு அலுவல்களைக் கவனித்துக்கொண்டு, தந்தையா ருக்கு வேண்டும் பணிகளைப் புரிந்து அவரது உள்ளம் ஆறுதலடையுமாறு நடந்துகொண்டனர். 'தந்தை மகற் காற்று நன்றி அவையத்து முந்தியிருப்பச் செயல்' என்ற வள்ளுவர் வாக்கின்படித் தம் குழந்தைகட்கு வேண்டும் கல்வி யளிக்க முடியவில்லையே என்று அவர் வெகுவாக மனம் மாழ்கியிருந்தார்.



கியூரி அம்மையார்.

மேரிக்கு வயது பதினேழு ஆயிற்று. மேரியின் தமக்கை பிரான்யாவுக்கு வயது இருபது ஆயிற்று. ஒரு நாள் பிரான்யா மேரியைப் பார்த்து, 'மேரி! நீதான் நம் உடன் பிறந்தோருள் மிகவும் நுண்ணறிவு வாய்ந்தவள்; ஆதலால் நீயாவது பாரிசுக்குச் சென்று படித்தல் வேண்டும்; பணத்தைப் பற்றிக் கவலை வேண்டாம்,' என்று கூறினாள். அதற்கு மேரி 'நீயும் நுண்ணறிவு படைத்தவள் என்பதை எல்லோரும் நன்கறிவோமே! ஆண்டுதோறும் நீ பள்ளியில் பரிசுகள் பெற்றதெல்லாம் எதனைக் காட்டுகின்றது. நீதான் இப்போது பாரிசு சென்று கல்லூரியிற் சேர வேண்டும்.

நான் இரண்டு தினங்கட்கு முன்னரே அலுவலிற் சேர்ந்து விட்டேன். திங்கள்தோறும் உனக்கு வேண்டும் தொகை வந்துசேரும்; கவலை வேண்டாம்,' என்றுரைத்தாள். பிரான்யா ஒன்றும் பதிற்சொல்ல இயலாமல் பாரிசு செல்ல உடன்பட்டாள். பிரான்யாவின் படிப்பும் தொடங்கியது.

மேரி தான் மேற்கொண்டிருந்த தனி ஆசிரியத் தொழிலைச் (Private Tutor) செம்மையுற நடத்தி வந்தார். முதலில் அத்தொழில் மிகமிகக் கடினமானதாகவே இருந்தது. குழந்தைக்கு, அதிலும் மிகச்'சிறு குழந்தைக்குக் கற்பிப்பதென்பது மிகவும் கடினமான தொன்ருகவே யிருந்தது. குழந்தை ஆசிரியையைக் கண்டவுடனே வெளியில் நழுவி விடும்; அப் பக்கம் தலை காட்டுவதே இல்லை. பின்னர் குழந்தையின் அன்னையாரின் ஒத்துழைப்பால் குழந்தையைத் தன்னிடம் வரும்படிச் செய்துகொண்டார். பயிலுவதைத் தவிர வேறு வழியில்லை என்றறிந்த குழந்தையும் கொஞ்சங் கொஞ்சமாகப் பயில முயன்றது. மேரி ஆறு மாதங்கள் அரிதின் முயன்றதன் பயனுகக் குழந்தைக்குக் கல்வியில் ஊக்கம் உண்டாயிற்று.

போலந்து நாட்டு மகளிர் அழகிற் சிறந்தவர்கள். அதிலும் மேரி யம்மையாரோ அந்நாட்டு மகளிர் அனைவரிலும் சிறந்த அழகு வாய்ந்து விளங்கினுர். எனினும் பயனென்ன? வறுமையில் வாடித் தனித்து வாழும் அவர் பெற்ற அழகினுல் வரும் பயன்தான் யாது? மேரியோ உலகப் பற்றே அற்றவர் போலவே வாழ்ந்து வந்தார். தம் வாழ்க்கையே இருள் நிறைந்ததென்றே உறுதியாக நம்பினுர். அதற்கேற்பவே தம் வாழ்க்கை முறையையும் அமைத்துக் கொண்டார்.

ஒரு சமயம், ஒரு வாலிபன் இவரிடம் அன்பு காட்டினுன். இவரும் அவ்வன்பு ஒருக்கால் உண்மையாயிருக்கக்

கூடுமோ என்றெண்ணினர். அவனே ஒரு பெருஞ் செல்வந்தனின் மகன். செல்வச் செழிப்பிலேயே வளர்ந்தவன். மேரியின் புற அழகைக் கண்டு மயங்கி அன்புகொண்டவன். மேரியை மணந்துகொள்ளத் தம் பெற்ருேரின் சம்மதத்தை நாடினன். பணத்திற் புரளும் பெற்ருேர், தம் மகன் ஓர் ஏழை ஆசிரியையை மணக்கச் சம்மதிப்பரோ! மணக்கக் கூடாது எனத் தடை விதித்தனர். வாலிபனும் தன் அன்பை நழுவ விட்டான். அதுகண்ட மேரியார் அழுங்கவில்லை; ஆத்திரங் கொள்ளவுமில்லை. அதுவே உலகியல் என்றெண்ணி, அந் நிகழ்ச்சியைத் தம் மனத்திலிருந்தே நீங்கும்படிச் செய்துவிட்டார்.

ஏழாண்டுகள் விரைந்தோடி மறைந்தன. பிரான்யாவும் தன் மருத்துவக் கல்லூரிப் படிப்பை முடித்துப் பட்டமும் பெற்றுவிட்டார். தன் மனமொத்த மணுளனையும் அடைந்து இல்வாழ்க்கை நடத்தத் தொடங்கினர். அத்துடன் தங்கை மேரியையும் அலுவல் தளையினின்றும் விடுவித்தார். மேரியும் தன் ஆசிரியப் பணிக்கு முற்றுப்புள்ளி வைத்தார்.

ஏழாண்டுகளாக ஆசிரியராயிருந்த மேரி இப்போது (1891) மீண்டும் மாணவி யானர். பாரிசில் உள்ள ஸொபோன் கல்விக் கழகத்தில் சேர்ந்து மாணவியானர். 'இப் பிறவியிற் கல்லூரிப் படிப்பும் கிட்டுமோ' என்று ஏங்கிக் கிடந்த மேரியின் உள்ளம் பூரித்தது. அங்கு தனக்குப் பிரியமான பௌதிகக் கலையைக் கற்கத் தொடங்கினர். எல்லா மாணவரும் கல்லூரியைவிட்டு வெளியேறும் வயதில் தான் கற்கத் தொடங்க நேர்ந்ததே என்பதை நினைந்து மனம் வருந்தினர். எனினும் இப்போதாவது தன் விருப்பம் நிறைவேறிற்றே என்றெண்ணி ஆறுதலடைந்தார்.

அக்காலத்தில் அவர் இருந்த நிலைமை எடுத்துரைக் குந்தரத்த தன்று. மிகமிக எளிய வாழ்க்கை. அவரிடம் இருந்தவை இரண்டே ஆடைதாம். அவையும் வெகுநாட் களுக்கு முன்பு புதியவை. இருந்த இடமோ ஒரு சிற்றறை. உணவோ ரொட்டியும் தண்ணீருமே. அவர் இருந்த அறையில் இடம் பெற்றிருந்தவை ஒரு சிறு மரப்பெட்டியும், மண்ணெண்ணெய் விளக்குமே. ஏனைய மாணவர் இருக் கும் அறைகளைப்போன்று நவீன நாகரிகப் பொருளையும் அங்கு காண்டல் இயலாது. ஆயின் உண்மையிலேயே கல்வித்தெய்வம் குடிகொண்டிருந்த திருக்கோயில் அதுவேயாம் எனிற் பிழையிலது.

மேரி எதனையுங் கருத்திற்கொள்ளாது தம் கல்விப் பயிற்சியிலேயே கண்ணுங் கருத்துமா யிருந்தார். 1893-ல் தேர்வும் நடந்தது; தேர்வு முடிவும் வெளி வந்தது. பாரிசு நகரமே அதுவரை காணுத, ஒரு புதுமையைக் கண்டது. ஒரு பெண்பாலார் பௌதிகக் கலையில் முதல்வராகத் தேர்வு பெற்ருர். அது கண்ட மாணவர் பலரும் பொரு மைப் பட்டனர். அப்பெண்மணிதான் மேரியாவார். தேர்வில் பற்பல பரிசுகளுடன் வெற்றி பெற்ற மேரியார் தன்னு டைந்து ஆசிரியர் பணியை மேற்கொள்ளவே எண்ணி யிருந்தார். ஆனுல் மறுபடியும் ஸொபோன் கல்விக் கழகம் அவரை அன்புடன் வாவென் றழைத்தது.

அலெக்ஸாண்ட்ராவிச் (Alexandrawitch) என்பார் ஒரு கல்வி நிதியை ஏற்படுத்தியிருந்தார். அந்நிதிக் குழுவினர் ரூபாய் நானூறு பெறுமானமுள்ள தொகையை மேரியாருக்குக் கல்வி நன்கொடையாக (Scholarship) அளிக்க முன்வந்தனர். மேரியாரும் அதனைப் பெற்றுக் கொள்ளச் சம்மதித்தார். அத்தொகையில் பாதித் தொகை கல்லூரிச் சம்பளத்திற் காயிற்று. மீதமுள்ள தொகையைக்

கொண்டு கல்லூரி வாழ்க்கையை நடத்திவந்தார். அக் காலத்தில் அவர் கணிதப் பட்டத்திற்காகப் படித்துவந்தார். அடுத்த ஆண்டில் கணிதத்திலும் அவரே முதல்வராகத் தேர்வு பெற்ருர். அன்றிப் பல பரிசுகளேயும் பெற்ருர்.

மேரியம்மையார் பெளதிகத்தைப் போலவே, கணிதத் திலும் முதல்வராய்த் தேறிப் பரிசுகள் பல பெற்றதைக் கண்ட பாரிஸ் திடுக்கிட்டது. ஏன்? அன்ஞளில் மகளிர் கல்வி கற்றலே அருமை, அதிலும் பல்கலேக் கழகக் கல்வி கற்றல் அதனினும் அருமை. பட்டத் தேர்வுகளில், ஓர் பெண்மணி முதல்வராகத் தேறிப் பல பரிசுகளேயும் பெறுவ தென்பது அரிதினும் அரிதாம். ஆதலால்தான் மேரியா ரின் வெற்றி கேட்டுப் பாரிஸ் திடுக்கிட்டது.

பாரிஸில் இருந்த வர்த்தக சங்கம் ஒன்று காந்தத்தைப் பற்றி ஓர் ஆராய்ச்சி நடத்த விரும்பித் தக்காரொருவரைத் தேடியிருந்தது. மேரியாரின் திறம் பற்றிக் கேள்வியுற்ற அச் சங்கம் அவ் வாராய்ச்சியை நடத்துமாறு மேரியம்மை யாரைக் கேட்டுக்கொண்டது. மேரி யம்மையாரும் அதற் கிணங்கி அவ் வாராய்ச்சியைச் செய்துமுடித்தார். அது கண்ட சங்கம் அவருக்கு ஆயிரம் ரூபாய் மதிப் புள்ள தொகையை அளித்தது. அதனேப்பெற்ற மேரி யார் அலெக்ஸாண்ட்ராவிச் கல்வி நிதியிலிருந்து தாம் பெற்றுக்கொண்ட தொகையை உடனே கொடுத்துவிட் டார். இஃது அக் கல்வி நிதிக் குழுவினர்க்கும் பெரு வியப்பையும், திகைப்பையும் விளேவித்தது. உலகிலேயே காணுதற்கரிய ஒன்றன்ருே இந் நிகழ்ச்சி!

அக்காலத்தே பாரிஸில் பியரி கியூரி என்னும் ஒரு வர் வாழ்ந்திருந்தார். அவர் பெளதிகத்தில் மிகச் சிறந்த அறிவு நிறம்பப்பெற்ற பேரறிஞர். பிறநாட்டுப் பேரறிஞர் பலராலும் பாராட்டிப் புகழப் பெற்றவர். சாந்தமே வடி

வெடுத்தா லொத்த பொறுமைசாலி. ஆடம்பரம் என் பதை அணுவளவுங் கொள்ளாதவர். கல்லூரியிற் பௌதி கப் பேராசிரியரா யிருப்பதற்குரிய ஆற்றல் பெற்றிருந்தும், கல்லூரிக்கு வருமாறு பலர் வருந்தியழைத்தும், அதனை ஏற்றுக் கொள்ளாமல் ஓர் உயர்நிலைப் பள்ளியிலேயே பௌதிக ஆசிரியராகத் தொண்டாற்றி வந்தார். பட்டம், பதவி, செல்வம், புகழ் முதலியன தாமாகவே இவரை வந் தடைய முயன்ற போதும் அவற்றிலிருந்து தப்பும் வழி யையே மேற்கொண்டிருந்தார்.

1894-ல் மேரியார் காந்தத்தைப் பற்றி ஒரு ஆராய்ச்சி நிகழ்த்தினு ரல்லவா? அதன் பின்னர் பௌதிக சம்பந்த மான ஆராய்ச்சிகளை நிகழ்த்தி வரலானார். ஒரு சமயம் அவருக்குப் பௌதிக ஆராய்ச்சியில் ஓர் ஐயந்தோன்றி யது. அவரும் பியரி கியூரியைப்பற்றிக் கேள்விப்பட்டிருந் ததால், தம் ஐயத்தைப் போக்கிக்கொள்ள மேரி அவர்பாற் சென்றார். மேரியாரைக் கண்ட கியூரி, மகிழ்ந்து அவரை வரவேற்று, அவர் ஐயத்தைக் கேட்டு, அதனைத் தக்கவாறு விளக்கிக்காட்டி அவர் ஐயத்தைத் தீர்த்துவைத்தார்.

இவ் விருவரது இச்சந்திப்பே உலகப்புகழ் பெற்ற நிகழ்ச்சிகட்குக் காரணமாயிற்று. அறிவு முதிர்ந்த கியூரி யும் அறிவுத்துறையில் முன்னேறிவரும் மேரியும் ஒருவர்க் கொருவர் ஒத்த அன்பு கொண்டவராயினர். அவ்விருவ ரது அன்பின் வளர்ச்சியே அவர்தம் அறிவின் பெருக்கத் திற்கும், ஆராய்ச்சியின் வளர்ச்சிக்கும் அடிகோலுவதா யிற்று. இருவரும் அடிக்கடி சந்தித்துப் பௌதிக ஆராய்ச்சி பற்றி ஆய்ந்து வருவாராயினர்.

இவ்வாறு சிலகாலம் சென்றது. கியூரிக்கு மேரியிடத் தில் அன்பும், நம்பிக்கையும் ஏற்பட்டன. அவர் தம் ஆராய்ச்சிகட்கு உறுதுணையாவா ரென்பதும் புலப்பட்டது.

ஆதலால் தம்மை மணந்து கொள்ளுமாறு மேரியைக் கேட்டார். மேரியோ தம் வாழ்க்கையிலேயே இல்வாழ்க்கை என்னுந் துறைக்கே இடமில்லை என்று முடிவுகட்டியிருந்தார். ஆதலின், அவர் உடன் ஒன்றும் பதிலிறுக்கவில்லை. ஏறக்குறைய ஆறு மாதங்கட்குப் பிறகே அவர் தம் சம்மதத்தைத் தெரிவித்தார். 1895-ம் ஆண்டில் எவ்வித ஆடம்பரமும் இன்றி இரு பேரறிஞரும் இல்வாழ்க்கைத் துணைவர்க ளாயினர்.

யுரேனியம் என்னும் பொருள்பற்றிய ஆராய்ச்சி வெளியீடுகளை யெல்லாம் கியூரி படித்திருந்தார். ஆதலால் அதுபற்றி மேலும் ஆராய்ச்சி செய்யுமாறு மேரியைத் தூண்டினர். கியூரியின் பள்ளிக் கூடத்தில் சிறிதளவு அக் கனிப்பொருளும் இருந்தது. பொருள்களின் அழியுந் தன்மையைக் கண்டறிவதற்கேற்ற நுண்கருவிகளும் கியூரியால் அமைக்கப்பெற்றிருந்தன. ஆதலால் மேரி கியூரியாரும் மிகவும் ஆர்வத்துடன் தன் ஆராய்ச்சியைத் தொடங்கினர். கியூரியும் அடிக்கடி அவ்வாராய்ச்சியிற் கலந்துகொண்டு அவ்வப்போது வேண்டும் ஆலோசனையைக் கூறிவந்தார்.

ஆராய்ச்சிக்கு முடிவேது! ஒருநாளும் இல்லை. அதுபோலவே ஆராய்ச்சிக்காரர்களுக்கும் ஓய்வில்லை. கியூரியம்மையார் அப்பொருள் பற்றி மேலும் ஆராய்ச்சி செய்யத் தொடங்கினர். யுரேனியம், பொலோனியம் என்ற இரு தனிப்பொருள்களைத் தவிர மூன்ருவதொரு தனிப்பொருளும் இருத்தல்வேண்டும் என்ற கருத்தை வெளியிட்டார். அதை நம்பியவர் கியூரி ஒருவரேயாவர். ஏனைய அறிஞர்களும், ஆராய்ச்சிக்காரர்களுங்கூட நம்பவில்லை. கியூரியம்மையார், அவ்வாறு மூன்ருவது பொருளாக இருப்பதாகக் கூறியது தான் ரேடியம் (Radium) ஆகும். அப்பொரு

ளைக் கண்டுபிடிக்கக் கியூரி அம்மையார் அரும்பாடு பட்டார்.

மேரி கியூரியம்மையார் அயராது தன் ஆராய்ச்சி யிலீடுபட்டார். கியூரியும் சேர்ந்து உழைத்தார். ஒரு சிறு தொழிலும் செய்தறியாத கியூரியும், கருத்தரித்ததால் இளைப்புற்றிருந்த மேரியும் இரவு பகலாக உழைத்தனர். குற்றவாளிகள்கூட உடைத்தறியாத கற்களையும் கட்டிகளை யும் உடைத்தனர். நான்காண்டுகள் சலியாது உழைத்த னர். அதன் பயனுக முடிவில் கியூரியம்மையார் ஊகித்த ரேடியம் பிரித்தெடுக்கப்பட்டது. அப்பொருளைக் கண்டதும், அப்பொருளின் ஒளியின்முன் அவர்கள் அடைந்த துன்ப மெல்லாம் மறைந்தொழிந்தன. இருளிலும் ஒளிவிடும் ரேடியத்தைக் கண்டதும் அத்தம்பதிகள் அடைந்த மகிழ்ச் சிக்கோ ரெல்லை யில்லை. முடிவில் வெற்றியே கண்டனர்.

ரேடியம் பற்றிய உண்மைகளைக் கொண்ட வெளியீடு கள் வெளியிடப்பட்டன. அறிஞர் பலரும் அதிசயித்த னர். விஞ்ஞானம் இக் கண்டுபிடிப்பால் வெகுதூரம் முன்னேற்ற மடைந்தது. இவ் வியக்கத்தகு செயலைக்கண்ட நோபெல் பரிசுக் கழகத்தார், இவ்வாராய்ச்சிக்காக, பியரி கியூரிக்கும், மேரி கியூரியம்மையாருக்கும் பரிசுகள் வழங்கி னர். எனவே தம்பதிகள் இருவரும் ஒரே ஆண்டில், ஒரே பொருளைப் பற்றிய ஆராய்ச்சிக்காக, பௌதிகத்திற்குரிய நோபெல் பரிசைப் பெற்றனர்.

ஸொபோன் கல்விக் கழகத்தார், பியரியைப் பௌதிகப் பேராசிரியராக வருமாறு வருந்தி யழைத்தனர். அவ ரும் முடிவில் ஒப்புக்கொண்டார். பியரியும், மேரியும் சொற்பச் சம்பளத்திற்கே ஸொபோனுக்கு உரியவராயினர். ஆராய்ச்சி உரைகள் பல வெளிவந்தன. ஆண்டுகளும் இரண்டு கழிந்தன. 1906-ம் ஆண்டு ஜூலையில் ஒரு நாள்

மாலை பியரிகியூரி தன் கல்விக் கழகத்திலிருந்து வீட்டிற்குத் திரும்பி வந்துகொண்டிருந்தார். நடந்து வந்து கொண்டிருந்த அவர் மீது எதிரில் வந்த கார் ஏற, அவர் அக்கணமே உயிர் துறந்தார்.

குருதி வெள்ளத்தே கிடந்த பியரியைக் கியூரியம்மையார் கண்டார். கண்டதும் சிலையானார்; ஆர்த்திலர்; அழுதிலர்; தாமும் சவம்போலானார். பத்தாண்டுகள் கழியுமுன் இல்வாழ்க்கையும் மின்னென மறைந்தது. மேரியம்மையார் தனியரானார். தாம்பெற்ற இரு பெண் குழந்தைகளுமே, இப் பரந்தவுலகில் அவருக்குற்ற துணையாய் நின்றனர்.

கியூரியம்மையார் தம் கணவர் கருத்துப்படி ஆராய்ச்சியை விடாது தொடர்ந்து நடத்தினர். 1911-ல் இரஸாயனத்திற்காக அவருக்கு இரண்டாம் முறையாக நோபெல் பரிசு வழங்கப்பட்டது. இருமுறை நோபெல் பரிசு பெற்றவர் இதுவரை வேறெவரு மிலர். கணவனும் மனைவியுமாக நோபெல் பரிசு பெற்றவரும் வேறெவரு மிலர். நோபெல் பரிசு பெற்ற இவ்விருவரது முதன் மகளாகிய ஐரின் கியூரியும் பௌதிகத்திற்காக நோபெல் பரிசு பெற்றவ ராவர். அத்தகையாரும் உலகில் இதுவரை வேறுயாரு மிலர்.

1914-ல் ஐரோப்பியப் பெரும்போர் தொடங்கியது. அதில் வீரர்கள் அடைந்த துன்பங்களைக் கண்ட கியூரியம்மையாரின் உளம் நெகிழ்ந்தது. அவர்தம் துன்பந் துடைக்கத் தம்மாலாவன செய்ய முன்வந்தார். 'எக்ஸ்ரே' சாதனத்தைச் சீர்செய்து மோட்டார் வண்டிகளிலேயே பொருத்திக் கொடுத்தார். இதனால் வீரர்கள்தம் உடலுக்குட் சென்ற குண்டுகள் உடனுக்குடன் கண்டுபிடிக்கப்பட்டு, நீக்கப்பட்டு, குணமாக்கப்பட்டனர். அதனால்

வீரர்கள் அடைந்த நன்மைகள் மிகப் பலவாம். இவ்வாறு இவர் நான்காண்டுகள் போர்முனையிலேயே நின்று மக்கட் பெரும்பணி செய்துவந்தார். ஓரளவிற்கு மன ஆறுதலும் அடைந்தார்.

அமெரிக்க நாடு இவ்வறிஞரை வருந்தி யழைத்தது. இவரும் சென்றார். நூறாயிரம் டாலர் பெறுமானமுள்ள ரேடியம் இவருக்குப் பரிசளிக்கப்பட்டது. இவர் அதைப் பெற மறுத்து, அதனைத் தம் ஆராய்ச்சிக் கழகத்திற்கு மாற்றிக் கொடுக்கச் செய்து, பெற்றுக்கொண்டு, அதனைத் தம் ஆராய்ச்சிக் கழகத்திற்கே கொடுத்துவிட்டார். எத்துணைத் தாராள மனப்பான்மை! தன்னல மற்ற பெருந் தன்மை!

இவ்வாறு பல்லாற்றானும், உலகிற்கே தொண்டு செய்த மேரி கியூரியம்மையாரும், உலகந் திடுக்கிடத் தம் அறுபத்தேழாம் ஆண்டில் 1934-ல் உலகிலிருந்து விடுதலை யடைந்து என்றும் நீங்காத ஆழ்ந்த அமைதி யடைந்தார்.

## கேள்விகள்

1. மேரியின் குழந்தைப் பருவ நிகழ்ச்சி யாது?
2. தாய் மொழியின் இன்றியமையாமை யாது?
3. துன்பம் வந்தால் தொடர்ந்து வரும் எனும் பழமொழி உண்மையான தெவ்வாறு?
4. பிரான்யாவைப் பற்றி நாமறிவ தென்ன?
5. வார்சாவிலிருந்தபோது மேரியாருக்கு ஏற்பட்ட திருமண அனுபவம் யாது? அதனால் நாமறிவ தென்ன?
6. மேரியார் கல்வி கற்றமைப் பற்றி நாமறிவ தென்ன?
7. கியூரி யம்மையாரின் மக்கட் தொண்டு யாது?

## பயிற்சி

1. நோபெல் பரிசு பற்றி அறிந்து ஒரு கட்டுரை எழுதுக.
2. கியூரியம்மையாரின் விஞ்ஞான ஆராய்ச்சி என்பது பற்றி ஒரு கட்டுரை எழுதுக.
3. ரேடியமும், கான்ஸர் என்னும் சதைப்பற்று நோயும் என்பது பற்றி ஆசிரியர் வழிக் கேட்டறிக.

## இலக்கணம்

(1) உறு, கழி, நனி, தவ—இச் சொற்கள் உரிச் சொற்கள் எனப்படும். இவைகள் மிகுதிப் பொருளைக் குறிப்பதாகும். இச் சொற்களில் ஒவ்வொன்றைக் கொண்டும் சொற்றொடர் அமைத்துக் காட்டுக.

(2) நாகம், கார், கிளை—இவைகளுக்குள்ள பல பொருள்களையும் கூறுக.

(3) ஏனைய காலங்களை குறிக்கவும் :—

உண்டான்
நடந்தான்
உண்டாகும்
அடைவார்.

(4) கீழ் வருவனவற்றிற்கு உறுப்பிலக்கணம் தருக :—

உண்டான்
நடந்தான்
பொன்னன்.

(5) செய்தார், செய்யப்பட்டது—இவ்விரண்டிற்குமுள்ள வேறுபாடு என்ன?

(6) அணி யிழை, கொல் யானை—இவ்விரண்டிற்குமுள்ள வேறுபாடு என்ன ?

(7) ‘ உம் ’ வருமாறு ஒரு சொற்றொட ரமைக்க.

# 5. கூட்டுறவு இயக்கம்

'சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை' என்பது உலகம் அறிந்த ஒரு பழமொழி. தனித்து வாழ்வதைக் காட்டிலும் ஒன்று சேர்ந்து வாழ்தலின் சிறப்பை வற்புறுத்த எழுந்ததே இப் பழமொழி. மனிதன் மட்டுமன்றி விலங்குகளும் பிறவும் கூடச் சேர்ந்து வாழ்வதால் பயன்பெறுகின்றன என்பதை விளக்க நாட்டில் எத்தனையோ கதைகள் வழக்கத்தில் உள்ளன. சிங்கமும் எருதுகளும் என்ற கதை மிகச் சிறிய பிள்ளைகளும் அறிந்த கதைதான். ஒன்ருகக் கூடிவாழ்ந்த நான்கு எருதுகளைக் கொன்று தின்ன முடியாமல் வஞ்சனை யால் அவைகளுடைய கூட்டுறவைப் பிரித்துத் தனித்தனி யாக்கிப் பின் கொன்று தின்றதாக நாட்டில் ஒரு கதை வழங்குகின்ற தன்ருே! அதைப் போன்றே மரணப் படுக்கை யில் இருந்த ஒரு தந்தை தம் மக்கள் கூடி ஒற்றுமையாயி ருக்கவேண்டும் என்ற உண்மையை விறகுச் சுமையின் மூலம் விளக்கிய ஒரு கதையும் உண்டல்லவா! சுள்ளியைச் சுமையாகக் கட்டி அதை உடைக்கச் சொல்ல மக்கள் முடி யாமல் நின்றனர். அக் கட்டை அவிழ்த்துச் சுள்ளிகளைத் தனியாக எடுத்து உடைக்கச் சொல்ல மிக எளிதில் அக் காரியத்தை அவர்கள் செய்துவிட்டனர். அதன்மூலம் அவர்கள் அனைவரும் சுமையைப் போல் பிரியாது வாழ்ந் தால் பகைவரால் துன்புறுத்தப்பட மாட்டார்கள் என்று தந்தை அறிவுறுத்தினுர். இவைகள் சாதாரணக் கதைகள் தாம் என்ருலும் இவற்ருல் கூட்டுறவு வாழ்க்கைத் தத்து வம் விளங்குகின்ற தன்ருே!

தனி மனிதன் வாழ்க்கையில் மட்டு மன்றிச் சமுதாய வாழ்விலும் கூட்டு முயற்சி இன்றியமையாத தாகும். ஒரு சமுதாயம் முன்னேற வேண்டுமாயின் அச் சமுதாயத்தில் உள்ள அனைவரும் கூடிக் கலந்து பணியாற்றினுல்தான் அம்முன்னேற்றம் வெற்றியுடன் சிறந்து நிற்கும். இன்று உலக முழுவதிலும் இக்கூட்டுறவு இயக்கம் பற்றிப் பேசுகின்றனர். பல மேலை நாடுகள் இக் கூட்டுறவு இயக்கத்தால் சிறந்த நன்மைகளைப் பெற்றுள்ளன. உண்ணும் உணவு சமைப்பது முதல், உயர்ந்த இயந்திரங்களை உற்பத்தி செய்வது வரை இக் கூட்டுறவு முறை அந் நாடுகளில் பல காலமாக வழக்கத்தில் இருந்து வருகின்றது. தனி மனிதன் தனித்த வாழ்வு வாழ்வதைக் காட்டிலும் இக் கூட்டுறவு மூலம் மனித இனமே ஒரு பின்னல்போல் ஒன்றிக் கலந்து விடுகிறது. தனி மனிதரோ அன்றிச் சிலரோ சேர்ந்து சாதிக்க முடியாத பெரும் சாதனைகளை யெல்லாம் இக் கூட்டுறவு இயக்கம் எளிதில் நிறைவேற்றிக் காட்டுகின்றது. இக் கூட்டுறவு இயக்கம் நம் நாட்டில் பண்டைக்காலத்தில் கிராமவாழ்வில் கலந்திருந்தது. ஆயினும் தனித்த முறையில் அது ஒரு இயக்கமாக வளரவில்லை. கடந்த ஐம்பது ஆண்டுகளாகத்தான் நம் நாட்டில் இக் கூட்டுறவு இயக்கம் வளர்ந்து வருகின்றது. எனினும் போதிய வளர்ச்சி பெறவில்லை என்றே சொல்லவேண்டும்.

இந்தியாவில் கூட்டுறவு இயக்கம் இன்றைக்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன் கி.பி. 1904ல் ஆரம்பிக்கப்பட்டது. சென்னை மாகாணம்தான் அதற்குத் தேவையான முன்னேற்பாடுகளை யெல்லாம் செய்தது. அதற்கு முன்னமேயே மேலை நாடுகளில் பல பகுதிகளில் இக்கூட்டுறவு இயக்கம் தோன்றி வளர்ந்து வளம் பெற்றிருந்தது. பல விடங்களில் கிராம மக்களுக்காகவும் உழவு, வாணிப உதவிகளுக்காக

வும் பாங்கிகள் (Banks) இக் கூட்டுறவு முறையில் ஏற்படுத்தப்பட்டு வளர்ந்து வந்தன. மேலைநாட்டுக் கூட்டுறவு இயக்கத்தை ஆராய்ந்து, அவ்வியக்கம் நம் நாட்டுக்கு, சிறப்பாகச் சென்னை மாகாணத்துக்குப் பயன் தருமா என்று ஆராய்ந்து முடிவு கண்டு வருவதற்காக, சென்னை அரசாங்கத்தார் 1892-ம் ஆண்டில் தங்களது உயர்ந்த உத்தியோகத்தருள் ஒருவராகிய சர். பிரடிரிக் நிக்கல்சன் (Sir Frederick Nicholson) என்பவரை மேலைநாடுகளுக்கு அனுப்பினர். அவரும் கூட்டுறவு இயக்கம் வளர்ச்சி பெற்றுள்ள பலநாடுகளுக்கும் சென்று, ஆங்காங்கே உள்ள அமைப்பு முறைகளையும் பயன்பெறு வழிகளையும் கண்டு அவை நம் நாட்டுக்கு எவ்வெவ் வகையில் பயன்படும் எனவும் ஆராய்ந்து கொண்டு இந்தியா திரும்பினர். அவர் கொண்டு வந்து கொடுத்த அந்த ஆராய்ச்சியின் பேரில் தான் 1904-ல் இந்தியாவில் கூட்டுறவு இயக்கச் சட்டம் அமுலாகத் தொடங்கியது. அன்று முதல் இவ்வியக்கம் பலதுறைகளில் முன்னேற்றம் கொண்டுள்ளது. சிறப்பாகக் கடந்த உலகப் பெரும் போருக்குப் பின் இவ்வியக்கம் நாட்டில் நன்கு கால்கொள்ளத் தொடங்கியுள்ளது.

கூட்டுறவு இயக்கமானது 1904 தொடங்கி 1919 வரை மத்திய அரசாங்க ஆட்சி வரம்புக்கு உட்பட்டிருந்தது. பின் 1919-ல் உண்டான நாட்டமைப்புச் சீர்திருத்த முறையில் (Montague Chelmsford Reforms) இந்த இயக்கம் மாகாண ஆட்சி வரம்புக்குள் மாற்றி அமைக்கப்பட்டது. இந்திய நாட்டில் உள்ள ஒவ்வொரு மாகாணமும் இன்று இக் கூட்டுறவு இயக்கத்தைப் பலவகையில் போற்றி வளர்க்க முற்பட்டுள்ளன.

இந்தியா ஒரு விவசாய நாடு. மக்களுள் பெரும்பாலோர் உழவுத் தொழில் செய்பவர்கள். பொருளாதாரத் தாழ்

நிலை அவர்களுக்கு ஒரு எதிர்ப்புச் சக்தியாக அமைந்தது. அத் தாழ்வைப் போக்கி எதிர்ப்பை மாற்றிப் பல விவசாயிகளைக் கைத்தூக்கி விடும் பணியில் இக்கூட்டுறவு இயக்கம் உதவி புரிந்தது. ஏழை விவசாயிகள் தங்கள் பயிர்த் தொழிலுக்குத் தேவையான பண உதவிபெற முடியாது வருந்தினார்கள். அதனால் அவர்களது உழைப்பெல்லாம் வீணாகும் நிலையில் இருந்தது. எனவே இக்கூட்டுறவு இயக்கத்தை உழவுத் தொழிலுக்கு நண்பனாக்க அரசாங்கத்தார் முயன்றதில் வியப்பில்லை அல்லவா!

இந்திய அரசாங்கத்தார் கிராம விவசாய மக்களின் பண உதவியை அறிந்து அவர்களுக்கு உதவி செய்யும் வகையில் வழித் துறைகளை ஆராய்ந்தனர். அதன்படி 1912-ல் ஒரு கூட்டுறவுச் சட்டம் அமுலுக்கு வந்தது. அதனால் மாகாணத்திலுள்ள ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒவ்வொரு கூட்டுறவுத் தலைமைப் பாங்கியை ஏற்படுத்தினர். தற்போதுள்ள சென்னை மாகாணத்தில் அவ்வாறு அமைக்கப்பட்ட பதினைந்து பாங்கிகள் உள்ளன.

இப்பாங்கிகளில் அவ்வப் பகுதிகளில் உள்ள செல்வர்கள் தத்தம் பொருளைக் குறைந்த வட்டி விகிதத்துக்குச் சேர்த்து வைப்பர். அரசாங்கப் பொறுப்புள்ள சங்கமாதலால் இதில் கட்டிவைக்கும் தொகைக்குப் போக்கு இல்லை என்பதை அவர்கள் அறிவார்கள். சாதாரண எளிய மக்களும் இதில் பங்கு கொள்ளும் வகையில் உறுப்பினர் பங்குத் தொகை மிகக் குறைவாகவே இருக்கும். செல்வர்கள் எவ்வளவு அதிகமாகவேனும் பணம் செலுத்தி உறுப்பினராகலாம். ஆனால் எத்தனை பங்கு எடுத்துக்கொண்டாலும் அவர்களுக்கு அவ்வியக்க சம்பந்தமாகவும், பாங்கி சம்பந்தமாகவும் அளிக்கப்படும் ஓட்டுரிமை ஒன்றே. கூட்டுறவு இயக்கத்தின் பெருத்த நன்மை அதுவேயாகும். சாதாரண

ஒரு ரூபாய் கட்டிய உறுப்பினரும் பல ஆயிரம் கட்டிய உறுப்பினரும் இக்கூட்டுறவு இயக்கத்தின் முன்னர் சம மாவர். அதனால் இவ் வியக்கம் நன்கு நடைபெறுமாயின் செல்வர்கள் ஆதிக்கம் பெற்று ஒரு சிலருக்குத்தான் பயன் படும் என்ற கெட்ட பெயருக்கு இது இலக்காவதில்லை. இக் கூட்டுறவு இயக்கம் மக்கள் இயக்கமே யாகும்.

ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஒவ்வொரு தலைமைப் பாங்கி ஏற்படுத்திய பின் அவ்வந் நாட்டுப் பகுதிகளின் தகுதியும் தேவையும் கருதிப் பல கிராமக் கூட்டுறவு சங்கங் கள் ஏற்படுத்தப் பட்டன. இச்சங்கங்களே இந்த இயக்கத் துக்கு இன்றும் உயிர்நாடியாக உள்ளன. இன்று இக் கிராமச் சங்கங்கள் மிகவும் ஓங்கி வளர்ந்து நாட்டு மக்க ளுக்குப் பலவகைகளில் உதவிபுரிந்து வருகின்றன.

மக்கள் கடன் வாங்குவதற்கு மட்டுமன்றி தத்தமது சிறுசிறு சேமிப்புகளைப் பாதுகாக்கவும் இக்கூட்டுறவுச் சங்கங்கள் பயன்படுகின்றன. சேமிப்பு நிதி என்ற ஒரு துறையில் ஒரு மனிதனால் எவ்வளவு சிறு தொகை சேமிக்க முடியினும் அதை ஏற்று அவன் சேமிப்புப் பெருக வழி செய் கிறது இவ் வியக்கம். கடன்வாங்க வருகின்றவர்களும் அந்தக் கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினராக வேண்டும் என்ற நியதி இருக்கிறது. வாங்கிய கடனுக்கு வட்டியும் மிகக் குறைவு. கடனை ஒருசேரத் திருப்பித்தர வேண்டும் என்ற கட்டுப்பாடும் இல்லை. ஆண்டுக்கு இவ்வளவு என்று இருபது ஆண்டுக ளுக்குள்ளோ, பத்தாண்டுகளுக் குள்ளோ, வேறு வரையறுத்த கால வரையறைக்குள்ளோ திருப்பிச் செலுத்திவிட வேண்டும்.

மக்களுக்கு இவ்வாறு குறைந்த வட்டிக்குப் பணம் கொடுக்க பாங்கிகளுக்கு வருவாய் ஏது? அரசாங்கம் குறைந்த வட்டிக்கு பெரும் பொருள் கொடுத்துஉதவுகிறது

சேமிப்பாளர்தம் தொகையும் கூடுகிறது. பெரும்பாலும் அரசாங்கத்தின் துணையாலேயே பல சங்கங்கள் தொழிற்படுகின்றன. கடன் வாங்கும் உறுப்பினர்களுக்கும் சேமநிதி கட்டும் உறுப்பினர்களுக்கும் இறுதியில் அச் சங்கங்களில் வருவாயிலும் பங்கு உண்டு. இந்த முறை இக் கூட்டுறவு இயக்கத்தின் சிறந்த ஒரு வாய்ப்பு ஆகும்.

பணம் கொடுத்து வாங்குவது மட்டுமன்றிப் பண்டமாற்றுச் செய்யும் இடங்களாகவும் கூட்டுறவுப் பாங்கிகள் தொழிற்படுகின்றன. விவசாயிகள் பயிரிட்ட பண்டங்களை இப் பாங்கிகளில் அடமானமாக வைத்துத் தேவையான பொருள்களைக் குறைந்த வட்டிக்குப் பெறலாம். மேலும் தாம்பெற்ற பொருள்களை நல்ல விலைக்குச் சிறு நகரங்களிலும் பெரு நகரங்களிலும் உள்ள கூட்டுறவுப் பண்டக விற்பனை சாலைகள் மூலம் விற்றுப் பயன்பெறவும் வழியுண்டு. சென்னை மாகாணத்தில் 1951-ம் ஆண்டு இந்த மாதிரியான விற்பனைக் களஞ்சியங்கள் 291 இருந்தன. அவற்றுள் 2,37,030 உறுப்பினர்கள் இருந்தனர். இவர்கள் பல லட்சம் பெறுமான பொருள்களை வைத்தும் விற்றும் வாங்கியும் பயன் பெற்றனர். வியாபாரிகள் கொள்ளை லாபம் அடிக்கும் கொடுமை இதில் இல்லை. உள்ளதை மறைத்து அதிக விலைக்கு விற்கும் மாருட்டமும் இல்லை. விவசாயிகள் குறைந்த விலைக்கு உடனுக்குடன் விற்றுவிட வேண்டும் என்ற கட்டாயமும் இல்லை. இவ்வாறு விவசாயிகளுக்கு ஒரு வரம் எனும்படி இக் கூட்டுறவு இயக்கம் நாட்டில் தொண்டாற்றி வருகின்றது.

இயக்கம் வளர வளர விவசாயிகள் மட்டுமன்றி நகர மக்களும் இக் கூட்டுறவு அமைப்பினால் பயன் பெறலானார்கள். கூட்டுறவுப் பண்டக சாலைகள் இன்று நாட்டின் பல பாகங்களிலும் மக்களுக்குப் பயன்படும் வகையில் பணி

யாற்றி வருகின்றன. சென்னை நகரில் உள்ள 'திருவல்லிக் கேணி அர்பன் கோவாபரேடிவ் சொஸைடி' என்ற பண்டக சாலையைப் பற்றி அனைவரும் அறிவர். சென்னையின் பல பகுதிகளிலும் அதன் கிளைகள் உள்ளன. பலர் அதில் உறுப் பினராகிப் பங்குத் தொகை கட்டியுள்ளனர். அரசாங்கத் தாரும் வேண்டிய உதவி செய்து வருகின்றனர். மக்களது அன்றாட வாழ்வுக்குத் தேவையான எல்லாப் பொருள்களை யும் அப் பண்டகசாலைகள் வாங்கிக் குறைந்த விலைக்குத் தருகின்றன. அவற்றின் தேவைக்கான பண்டங்களை வெளியூர்களிலுள்ள கூட்டுறவு விற்பனைக் களஞ்சியங்கள் வாங்கி அனுப்புகின்றன. இதனால் இடையில் பல வியா பாரிகள் பெறும் லாபம் முதலியன குறைகின்றன. தவிர, சாதாரணமாகக் கிடைக்காத தேவைப் பொருள்களையெல் லாம்கூட இக் கூட்டுறவுச் சங்கங்கள் முயன்று தேடிப் பெற்றுத் தம் உறுப்பினருடைய தேவையைக் கூடிய வரையில் நிறைவு செய்கின்றன. இதுபோன்ற கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள் நாட்டில் பல விடங்களில் உள்ளன. ஆகவே உழவுத் தொழிலில் மட்டுமன்றி வாணிபத் துறையிலும் இக் கூட்டுறவு இயக்கம் நிறைந்த பயனைத் தருகின்றது.

இனி நிலைத்து வாழும் வீட்டு வசதிக்கும் இக் கூட் டுறவு இயக்கம் உதவுகின்றது. சென்னையிலுள்ள காந்தி நகர், கஸ்தூரிபாய் நகர் போன்ற பெருநகர அமைப்புக் களும் வெளியூர்களிலுள்ள சிறு சிறு நகர் அமைப்புகளும் இக்கூட்டுறவு இயக்கத்தாலேயே உருப்பெற்றன. மாளிகை களோ வீடுகளோ கட்ட வசதியற்றவர்கள் தம்முள்கூடி இயன்ற அளவு பங்குத்தொகை யிட்டு, பிறகு அரசாங்கத் தாரிடம் தேவையான கடனைப் பெற்றுத் தத்தமக்கு வேண் டியவகையில் வீடுகளை அமைத்துக் கொள்ளுகின்றனர்.

அரசாங்கம் அக் கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பெருந் தொகையைக் குறைந்த வட்டிக்குத் தருகிறது. அச் சங்கம் அத் தொகையை உறுப்பினர்களுக்குப் பகிர்ந்தளித்து அவரவர்களுக்கு வேண்டிய வீடுகளைக் கட்டிக்கொள்ள வழி செய்கின்றது. உழவர்கள் பெற்ற கடனைப் பல ஆண்டு களில் சிறுகச் சிறுகத் திருப்பித் தர வசதி பெற்றமை போன்றே, இந்த வீடுகட்டும் சங்க உறுப்பினர்களும் தாங் கள் பெற்ற தொகையைக் குறைந்த அளவில் பல அல்லது சில ஆண்டுகளின் எல்லைக்குள் சிறுகச் சிறுகக் கட்டி விடலாம். இவ்வாறு இக் கூட்டுறவு இயக்கம் உழவு வாணிபத் துறைகளோடு நிலைத்துக் குடியிருக்கத் தேவை யான வீட்டமைப்புக்கும் உதவுகின்றது.

இக் கூட்டுறவு இயக்கத்தால் இன்று நாட்டில் பெரும்பாலார் பயன்பெறும் மற்றொரு துறை நெசவாகும். ஆலைப்போட்டிக்களுக்கு இடையில் நம் நாட்டுப் பண்டைக் கைத்தொழிலாகிய நெசவு நிலை கெடுமோ என்று மக்கள் கலங்கிய வேளையில், அவர்களைக் காக்க முன்வந்தது இக் கூட்டுறவு இயக்கமேயாகும். நெசவாளர்கள் உள்ள ஒவ்வொரு ஊரிலும் கூட்டுறவுச் சங்கங்கள் உள்ளன. அதன் உறுப்பினர்களாகிய நெசவாளிகள் தம் தேவை யான நூல்களை அச் சங்கங்களின் மூலம் பெறுகின்றனர். கள்ள மார்க்கெட்டில் நூல் விலை பல மடங்கு அதிகமாக விற்ற அந்தக் காலத்திலும்கூட இக் கூட்டுறவுச் சங்கங்கள் உரிய விலைக்கே தம் உறுப்பினருக்கு நூல் உதவின. நூல் ஆடையான பின்பும் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்று அவர்களுக்கு உரிய கூலியையும் வழங்கி வந்தன. துணி விற்றல்தான் அன்றைய வாழ்வு என்ற நிலையை மாற்றின அவ் விற்பனைச் சங்கங்கள், கிளைச் சங்கங்கள் தாம் வாங் கியவற்றைக் குறைந்த முதலீட்டு இலாபத்தோடு தலைமைச்

சங்கங்களுக்கும் வேறு சங்கங்களுக்கும் மாற்றித் தந்தன. தலைமைச் சங்கங்கள் நாட்டின் தலைமை விற்பனைச் சங்கங்களாக அமைந்து பல நாடு நகரங்களிலும் கிளைகளை ஏற்படுத்தி விற்பனை செய்து வியாபாரத்தைப் பெருக்கி, அதன் மூலம் கைத்தறி நெசவை வளர்த்து வருகின்றன. தற்போது சென்னையிலுள்ள கூட்டுறவு விற்பனைச் சங்கம் சென்னை மாகாணத்தில் மட்டுமன்றி இலங்கை, மலேயா, பர்மா முதலிய நாடுகளிலும் தம் கிளைகளை நிறுவி நல்ல கைத்தறி ஆடைகளை ஏற்றுமதி செய்து வாணிபத்தைப் பெருக்கி வருகின்றது.

இவைகளோடு கூட்டுறவு இயக்கப் பணி முடிவு பெறவில்லை. கூட்டுறவு உயிர் ஒப்பந்த திட்டம் ஒன்றும் உருப்பெற்றுள்ளது. தம் வாழ்வை ஒப்பந்தம் வைக்க விரும்புவோர் (Insurance) பல கம்பெனிகளில் செய்து கொள்ளுகின்றார்கள். அதனால் வரும் இலாபம் அனைத்தும் அக் கம்பெனிகளின் முதலாளிகளைச் சார்கின்றது. இக் கூட்டுறவு உயிர் ஒப்பந்த முறையிலோ அதன் முதலாளி, செய்து கொள்ளுபவர் யாவரும் தமக்குள்ளேயாதலின் வரும் இலாபம் அனைத்தும் உறுப்பினர்களுக்கே உரிமையாகின்றது.

இவைகளைத் தவிர்த்துப் பல கைத்தொழில்கள் வளர்வதற்கும் இக்கூட்டுறவுச் சங்கங்கள் பயன்படுகின்றன. சிறு சிறு கைத்தொழில் தொடங்கி, முக்கிய நாட்டு பெரும் கைத்தொழில்கள் வரை இக் கூட்டுறவு முறையால் முன்னேற்ற மடைந்துள்ளன.

ஒரு சில துறைக்கென ஏற்படுத்தப்பட்ட இயக்கம் இன்று மக்கள் வாழ்வின் தேவைக்கான எல்லாத் துறைகளுக்கும் பயன்படுகின்றது. மேனாடுகளில் சில வீடுகள் ஒன்று கூடிக் கூட்டுறவு முறையில் தங்கள் உணவினைச்

சமைத்துப் பரிமாறிக் கொள்வர். இக் கூட்டுறவினுல் குறைந்த உழைப்பில் நிறைந்த பயன் உண்டாகின்றது. நம் நாட்டில் கடந்த ஐம்பது ஆண்டுகளாக இந்த இயக்கம் வளர்ந்து வருகின்றது என்றுலும் போதிய அளவு வளர்ச்சி பெறவில்லை என்றே கூறலாம். மக்கள் மனம் நன்கு திறக்கப்பட வேண்டும். 'நாடெங்கும் வாழக் கேடொன்றும் இல்லை' என்ற அடிப்படையில்தான் இவ் வியக்கம் அமையவேண்டும். எனவே மக்கள் 'நாட்டு மக்கள் வாழ அதன் இடையில் நாமும் வாழ்வோம்' என்ற சிறந்த கொள்கை உடையவர்களாக இருந்து வாழ்வார்களாஞல் இன்னும் விரைவில் இக் கூட்டுறவு இயக்கம் வளர்ச்சி யுறும். தனிமனிதன் வாழ்வு தொடங்கி கிராமவாழ்வு, நாட்டுவாழ்வு என்ற வகையில் வளர்ச்சி யுற்று உலகம் ஒன்றுபட்டு வேறுபாடு இன்றி வாழ்வு நடத்தத் தேவை யான இயக்கம் இக் கூட்டுறவு இயக்கமேதான். இக் கூட்டுறவு இயக்கம் உலகமுழுதும் எல்லாத்துறைகளிலும் சிறந்து விளங்குமாஞல் அன்று உலகம் வாழும். நாடு வாழும். நாமும் வாழ்வோம்.

## கேள்விகள்

1. கூட்டுறவின் அடிப்படை நோக்கம் யாது ?
2. இந்தியாவில் கூட்டுறவு இயக்கம் எப்போது ஆரம்பிக்கப்பட்டது ?
3. இந்தியாவில் கூட்டுறவு இயக்கம் வளர வழிகாட்டியது சென்னைமாகாணம் என்பது எவ்வாறு பொருந்தும்?
4. உழவர்களுக்குக் கூட்டுறவு இயக்கம் எவ்வெவ் வகையில் பயன்படுகிறது ?
5. வாணிபத்துறையிலும் கூட்டுறவு பயன் தருகின்றது என்பதை விளக்கிக் காட்டுக.

6. நகர மக்களுக்குக் கூட்டுறவு இயக்கம் எவ்வெவ்வாறு உதவுகின்றது ?
7. நெசவுத் துறைக்கு இவ் வியக்கம் எவ்வாறு உதவுகிறது ?
8. கூட்டுறவு இயக்கத்தால் உண்டாகும் பயன் என்ன ?

## பயிற்சி

1. உங்கள் ஊரில் உள்ள கூட்டுறவு இயக்கத்தின் தோற்ற வளர்ச்சிகளை அறிந்து ஒரு கட்டுரை வரைக,
2. பள்ளிகளில் கூட்டுறவு மூலம் மாணவர் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளலாம் என்பதைத் தொகுத்து எழுதுக.
3. கூட்டுறவு மூலம் வளர்ந்த நகர்ப் பகுதிகளைக் கண்டு, அவற்றின் நிலையை அறிக.

## இலக்கணம்

(1) கீழே கோடிட்ட இடங்களைப் பூர்த்தி செய் :—

(1) *முதன் முதலில்* —— என்பவரால் கூட்டுறவு இயக்கம் நிறுவப்பட்டது.

(2) இந்தியக் கூட்டுறவுச் சங்கங்களில் —— மாநிலம் முதலிடம் பெற்று விளங்குகின்றது.

(3) மக்கள் —— மிகவும் பயன் தரும் இம் முறை.

(2) கீழ் பிரித்துத் தந்த சொற்களுக்குப் பொருள் தருக.

கூட்டு + உறவு
நெசவு + ஆளர்
ஒழுங்கு + முறை
பயன் + அளிக்கும்.

(3) இராமன் வந்தான்.
வந்தான் இராமன்.
இவ்விரண்டிற்கு முள்ள வேறுபாடு யாது ?

(4) கீழ் கோடிட்ட இடங்களுக் கேற்ற இலக்கணத் தொடர்பை ஆய்க :—

(1) இராமலிங்கம் செட்டியாரே கூட்டுறவு வளர மிகவும் பாடுபட்டவர்.

(2) பாங்குகளை நிறுவி விவசாயிகளுக்குப் பண உதவி செய்து வந்தார்.

(3) நலிந்த நெசவாளர்களுக்கும் கூட்டுறவு தான் பயனளிக்கின்றது.

(4) எல்லாவற்றிலும் சிறந்தது கூட்டுறவு.

(5) கீழ் காணுவனவற்றிற்குப் பொருள் தருக.
நனி-நளி ; கூளி-கூலி ; மண்-மன் ; வாழ்-வாள்.

(6) எதிர் மறைச் சொல் தருக :—
உண்டேன்
சென்றிலேன்
கண்டேன்
கொடுத்திலன்.

# 7. குருகுலம்

தமிழ் நாட்டில் பல சிறந்த இலக்கியங்கள் வாழ்ந்து வருகின்றன. அவற்றுள் ஒன்று பதிற்றுப்பத்து என்பது. இந்நூல் சேரநாட்டு மன்னர்களைப் போற்றுவது. இவற்றுள் ஐந்தாம் பத்து பரணர் என்ற பெரும் புலவரால் பாடப்பெற்றது. பரணர் பாடல்கள் சிறந்தனவாக அன்றும் மதிக்கப் பட்டன; இன்றும் போற்றப்படுகின்றன. அப்பாடல்களால் பரணர் சிறந்த சேர மன்னனாகிய செங்குட்டுவனைப் போற்றிப் பாடினார். பாடல்களைக் கேட்டு மகிழ்ந்தான் சேரன் செங்குட்டுவன். புலவருக்கு நாடும் பொன்னும் பிற செல்வங்களும் கொடுத்தான். அவைகளோடு மட்டு மன்றித் தன் அருமை மகன் 'குட்டுவன் சேரல்' என்பவனை யும் கொடுத்தான். தன் மகனைக் கொடுத்தான் என்றால் என்ன? தன் மகனை அப் புலவர் கையில் ஒப்படைத்து, அவனைக் கல்வியில் வல்லவனாகுமாறு செய்தான். அம் மகன் ஆசை மகனாயினும் புலவர் வீட்டிலேயே தங்கி, அவர்களோடு அவர்கள் வாழும் எளிய வாழ்வையே தானும் மேற்கொண்டு கல்வி முதலிய கலைகளை யெல்லாம் கற்க வேண்டும். அவ்வாறு பல ஆண்டுகள் முறைப்படி பயின்று கலை வல்லவனாகிய பின்பே குருவினிடம் விடை பெற்றுத் தன் பெற்றோரை அடையவேண்டும். இதுவே குருகுல வாசம் என்று கூறும் பழங்காலக் கல்வி முறை.

வடநாட்டுக் கதைகள் பலவற்றிலும்கூட இத்தகைய குருகுல வாச வாழ்க்கைகள் இருந்தனவாகப் படிக்கின்றோம். அரசர் குடும்பத்திலே பிறந்த கண்ணன் சாந்தீப முனியிடம் குசேலன் போன்ற எளிய மாணவர்களோடு

ஒருங்கு இருந்து கல்வி கற்றுச் சிறப்புற்ற கதை யாவருக்கும் தெரிந்த ஒன்றே. அந்தக் காலத்தில் அவர்கள் காட்டில் விறகு சேர்த்தல் முதல் பலப்பல தொழில்களைச் செய்ததாகக் கதை சொல்லுகிறது. அவர்கள் தம் குருவாகிய சாந்தீப முனிவருடைய வீட்டில் இருந்து, அவர்களோடு கலந்தவராகவே தாமும் வாழ்ந்து, இடைவிடாது ஆசிரியரோடு உறைந்து கற்பனவற்றை யெல்லாம் கற்றார்கள். எனவே குருகுல வாசம் என்பது பழங்காலத்தில் அனைவரும் விரும்பி யேற்ற ஒரு கல்வி முறை என்பது புலப்படுகின்றதன்றோ!

இக் குருகுல வாழ்வால் உண்டாகும் பயன் என்ன? மாணவர்கள் ஆசிரியர்களோடு நெருங்கிப் பழகுகிறார்கள். ஆசிரியர்களிடம் வெறும் ஏட்டுப் படிப்பை மட்டுமன்றி வாழ்வுப் படிப்பையும் பயில்கிறார்கள். அறிவால் சிறந்த ஆசிரியர்களிடம் பல நல்ல பண்புகளும் வாழும் வழித் துறைகளும் அமைந்திருக்கும். பயிலும் மாணவர்கள் அத்தகைய பண்புகளைப் பெறுவதோடு வாழ்வாங்கு வாழ வேண்டிய வழித்துறைகளையும் கற்றுக்கொள்ள அக் குருகுல வாழ்வு வாய்ப்பாக அமைகின்றது.

ஒரு ஆசிரியர் ஐந்தாறு பேர்களைத்தான் தம்து மாணவராகக் குருகுல வாழ்வில் எடுத்துக் கொள்ளுவார். மிகக் குறைந்த அளவில் மாணவர் இருந்தால்தான் தனிப்பட்ட முறையில் ஆசிரியர் நேரிலேயே ஒவ்வொருவரையும் கவனித்து அவரவர்களது மனம் அறிந்து கல்வி கற்பிக்க முடியும். தற்காலத்தில் உயர்ந்த கல்லூரிகளில் உள்ள சிறப்பு வகுப்புகள் (Honours Course) அந்த முறையிலேயே அமைக்கப்பட்டுள்ளன. மாணவர் ஒவ்வொருவரும் தத்தம் ஆசிரியர்களிடம் நன்கு கலந்து பழகித் தமது ஐயங்களைத் தீர்த்துக்கொள்ள உதவுவது இம்முறைக் கல்வி.

பழங்காலத்து ஆசிரியரோடே வாழ்ந்ததில் கல்வி மட்டுமன்றி வாழவும் கற்றுக்கொண்டார்கள் மாணவர்கள். அரசர் குடும்பத்திலே பிறந்த மாணவராயினும், அவர்கள் ஆசிரியர் வீட்டில் இருக்கும் காலத்தில் எளிய வாழ்வுதான் வாழ இயலும். தம்முடன் ஒருசேரப் பயிலும் சாதாரண ஏழை மாணவனுக்கும் தனக்கும் யாதொரு வேறுபாடும் காண முடியாது. அனைவரும் ஒருசேர உழைத்துப் பாடு பட்டு, ஒரேவகையான உணவினைத்தான் உண்பார்கள். ஒருவருக்கொருவர் உதவும் மனப்பான்மையைப் பெறுவார்கள் மாணவர்கள். அத்துடன் ஆசிரியருக்கும் மற்றவர்களுக்கும் தொண்டு செய்யும் நல்ல பண்பாட்டினையும் அவர்கள் பெறுவார்கள். செல்வர் வறியர் என்ற மனப்பான்மை நீங்கும். உடன்பிறப்பு உணர்ச்சி அவர்கள் வாழ்வில் மலரும். மிக வறியராகிய குசேலர் கண்ணனது உயர்ந்த அரச வாழ்வின் இடையில் அந்தப்புரத்தில் சென்றபோது, கண்ணனது அன்பு கலந்த வரவேற்பு நல்ல எடுத்துக்காட்டாக நமக்கு விளங்குகின்றது.

குருகுல வாழ்வில் ஏட்டுப்படிப்புடன் ஆசிரியரின் பண்பாடுகளும் வாழ்வாங்கு வாழும் வகையும்கூட மாணவர் பெறுகின்றார்கள். அவற்றுடன் தாங்கள் கை வருந்தித் தொழில் செய்வதால் ஒவ்வொரு தொழிலில் தேர்ச்சியும் பெறுகின்றனர். இக்கால மாணவர்களைப் போல் கற்று என்னசெய்வோம் என்று கவலையும் இல்லாமல், தாம் கற்ற தொழிலாலும் கலையாலும் நல்ல பண்பட்ட வாழ்வாலும் உலகில் வாழ அக்குருகுல வாழ்வு கொண்ட மாணவர்கள் கற்றிருந்தார்கள் எனில் எல்லாக் கல்வி அமைப்பிலும் குருகுலக் கல்வியே சிறந்ததென்பது தெரியவில்லையா !

இத்தகைய குருகுல வாழ்வு இன்று நம் நாட்டில் இல்லை. வட நாட்டிலும் கூட இல்லை என்று சொல்லலாம்.

கள் இருந்ததால் பாரதியார் உற்சாகமுடையவராகவே காணப்பட்டார். திருமணமும் மிகச் சிறப்பாகவே நடைபெற்றது.

அடுத்த ஆண்டிலேயே பாரதியாருக்கு மிகவும் துன்பந்தரும் நிகழ்ச்சி ஒன்று ஏற்பட்டது. சின்னசாமி ஐயர் பெரும்பொருள் திரட்டுதற்கேற்ற தொழில் முயற்சியிலீடுபட்டிருந்தார். அது கைகூடி வராததுடன் கைப்பொருள் முற்றும் அம்முயற்சியில் அழிந்துவிட்டது. அதுகண்ட ஐயர் மனமுடைந்து நோய்வாய்ப்பட்டார். அதுவே அவரைத் தம் அருமைத் திருமகனிடமிருந்தும் பிரித்துவிட்டது. பாரதியார் அடைந்த கவலைக்கு அளவில்லை. வறுமையும் பற்றிக்கொண்டது. செய்வதறியாது திகைத்தார்.

பாரதியாரின் அத்தை குப்பம்மாள் என்பவர் காசியிலுள்ள சிவமடத்தில் தன்கணவர் கிருஷ்ணசிவனுடன் வாழ்ந்து வந்தார். அவர் பாரதியாரைக் காசிக்கு வருமாறு பரிந்து அழைத்தார். பாரதியாரும் காசி சேர்ந்தார். பாரதியார் அங்குள்ள பள்ளி யொன்றிற் சேர்ந்தார்; இந்துஸ்தானியும், சம்ஸ்கிருதமும் பயின்றார். பல்கலைக் கழக நுழைவுத் தேர்வில் முதல்வாரகத் தேறினார். இத்துடன் அவரது பள்ளிப் படிப்பும் முற்றுப் பெற்றது.

பாரதியார் காசியிலேயே தங்கிவிட எண்ணியிருந்தார். ஆனால் அரசரின் அழைப்பினால் மீண்டும் எட்டையபுரத்தை அடைந்தார். தன் மனைவியை அழைத்துவந்து இல்வாழ்க்கையைத் தொடங்கினார். கொஞ்சகாலத்தில் இவ்வாழ்க்கை பிடிக்காமல் மதுரையை யடைந்தார். அங்குள்ள சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகச் சேர்ந்தார். அத்தொழிலிலும் வெறுப்படைந்து விட்டுவிட்டார்.

'சுதேசமித்திரன்' ஆசிரியரான ஜி. சுப்பிரமணிய ஐயர் ஒருசமயம் மதுரைக்கு வந்தார். பாரதியாரைத் தன்னோடு

உணவு தயாரித்தல், துப்புரவு செய்தல், நீர் கொண்டு வருதல் ஆகிய பல பணிகளையும் தாங்களே வகுத்துக் கொண்டு செய்து வாழ்வாங்கு வாழப் பழகுகின்றார்கள் மாணவர்கள்.

மாணவர்களது அன்றாட வாழ்க்கை முறையைக் காணில் குருகுல வாழ்வு ஒருவாறு விளங்கும். விடியற்காலை ஐந்து மணிக்கே மாணவர் அனைவரும் படுக்கைவிட்டு எழுந்திருக்கவேண்டும். மணி அடித்ததும் அனைவரும் எழுந்து உட்கார்ந்து சில நிமிடங்கள் ஆண்டவனை நினைப் பார்கள். பின் எழுந்து சென்று காலைக்கடன்களை முடித்துக் கொள்வார்கள். விடுதியிலே தங்கி அவர்களோடு கலந்து பழகும் பல ஆசிரியர்கள் அவர்களுடன் இருக்கிறார்கள். காலை ஐந்தரை மணியிலிருந்து ஏழு மணிவரையில் அந்த ஆசிரியர்கள் முன்னிலையில் நன்கு பயில்வார்கள். பின் அவரவர்களுக்கு உரிய கடமைகள் உண்டு. பாலாற்றி லிருந்து நீர் கொண்டு வருவது, காய்கறி நறுக்குவது, இடங்களை துப்புரவு செய்வது போன்ற பல வேலைகளைத் தங்களது முன்னேற்பாட்டின்படி பிரித்துச் செய்வார்கள். பணி இல்லாதவர்கள் நீராடுவார்கள். பணி உள்ளவர்களும் விரைவில் முடித்து நீராடி வருவார்கள். பிறகு எட்டு மணிக்குக் காலை உணவு. மாணவர்களே உணவினைப் பரிமாறிக் கொள்வார்கள். காலை ஒன்பதி லிருந்து பன் னிரண்டு வரை பள்ளி நேரம். பின் பகல் உணவு. மாலை ஒன்றரையிலிருந்து நான்குவரை பள்ளி. பின் சிற்றுண்டி; பிறகு விளையாட்டு; மறுபடியும் ஆறுமணிக்கு பணியியற்ற வேண்டிய பொறுப்பு; இரவு ஆறரையிலிருந்து எட்டு மணி வரையில் மாணவர்கள் விடுதி ஆசிரியர்கள் முன்னிருந்து பயில்வார்கள். பிறகு உணவு கொள்வார்கள். பின் சிறிது நேரம் மாணவர் அனைவரும் கலந்து உட்கார்ந்து ஆடியும்

பாடியும் விளையாட்டாகப் பொழுது போக்குவர். இரவு ஒன்பதரை மணிக்கு அனைவரும் ஆண்டவனை வணங்கி விட்டுப் படுக்கச் செல்வர்.

மாணவர்தம் அன்றாட வாழ்வு இதுதான். ஆனால் இவ் வாழ்வில்தான் குருகுல வாழ்க்கை மலருகிறது. பயிலும்போதோ உண்ணும்போதோ விளையாடும்போதோ வேறு எந்த நேரத்திலோ மாணவரிடம் யாதொரு வேறு பாடும் காண இயலாது. அவர்கள் பயிலும் முறை பற்றி



நெசவுத் தொழிலில் மாணவர்.

யும், வாழும் முறை பற்றியும் காணல் சிறந்ததாகும். பாடங்கள் சென்னை அரசியலார் பாடதிட்ட முறைப்படி கற்றுக் கொடுக்கப்படுகின்றன. அத்துடன் சமயக் கல்வியும் தமிழ்மொழிப் பயிற்சியும் மாணவர்தம் விருப்பத்தாலே பயின்று முன்னேற வழியும் உண்டு. வாரத்திற்கு ஒரு முறை மாணவர்கள் ஒருங்கு கூடிப் பல உயர்ந்த அறிவுத் துறைகள் பற்றியும் சமய உண்மைகள் பற்றியும் ஆய்ந்து பேசுவர். தக்க ஆசிரியர்கள் அவர்கள் உடனிருந்து உதவுவார்கள். பள்ளி ஆசிரியர்களே யன்றி, வெளியிலிருந்தும் பல பெரியோர்கள் அடிக்கடி வந்து மாணவர்களுக்கு அறிவூட்டிச் செல்வர்.

ஏட்டுப் படிப்பு மட்டும்மன்றி மாணவர் தொழிற் கல்வியும் பெறுகின்றனர். நெசவு, தச்சு, தையல், பயிர், அச்சு போன்ற பலவகைத் தொழில் மாணவர்களுக்கும் பயிற்றுவிக்கப் படுகின்றன. பள்ளி வேளைகளைத் தவிர்த்து ஓய்ந்த



மாணவர் உழவுத் தொழில்.



மாணவர் துப்புரவு செய்கிருர்கள்.

வேளைகளில் மாணவர்கள் தாம்தாம் விரும்பிய கைத்தொழிலைக் கற்க வழியும் வசதியும் செய்து தந்துள்ளார்கள். ஒவ்வொரு தொழிலையும் கற்பிக்க அவ்வத் துறையில் தேர்ச்சி பெற்ற சிறந்த ஆசிரியர்களை அமர்த்தியுள்ளார்கள். தாம் கற்கும் கல்வியோடு' கைத்தொழிலையும் பல மாணவர்கள் கற்றுப் பயன் பெற்றுள்ளனர்.

வீட்டு வாழ்க்கையைக் கற்றுக்கொள்வதோடு மாணவர் நாட்டு வாழ்க்கையையும் நன்கு அறிந்துகொள்ளுகின்றனர். நாட்டு அரசியற் றலைவர்களில் பெரும்பாலோர் அப் பள்ளியைப் பார்வையிட்டுள்ளார்கள். நம் நாட்டு அரசியலமைப்பு முறையை மாணவர்கள் நன்கு அறிந்துள்ளனர். அவர்கள் விடுதியிலேயும் நாட்டாட்சி முறை போன்றதொரு நல்ல அமைப்பு உண்டு. மாணவர் அறுநூற்று ஐம்பதுபேரும் தங்களுக்குள் ஆளும் குழுவாக

நூற்றுவரைத் தேர்ந்தெடுப்பார்கள். அந் நூற்றுவருள் பதின்மர் அமைச்சர்களாக ஆக்கப் பெறுவர். ஆட்சி முறையில் உள்ளது போன்றே பத்து அமைச்சர்களுக்கும் தனித் தனிப் பொறுப்புக்கள் உள்ளன. அமைச்சருள் ஒழுக்க அமைச்சர் என ஒருவர் இருக்கின்றார். அவர் மாணவர்தம் ஒழுங்கையும் சீரிய வாழ்வையும் பார்த்து வருவார். அமைச்சர் ஒவ்வொருவருக்கும் அறிவுரை கூற ஆசிரியர்கள் உடனிருப்பார்கள்.

ஆட்சிமன்றக் கூட்டங்கள் அடிக்கடி நடைபெறும். நாட்டின் தலைவர்கள் பலர் அந் நடைமுறைகளைக் கண்டு போற்றியுள்ளார்கள். அவர்கள் மேலும் அவ் வாட்சி மன்றம் எவ்வெவ்வாறு சிறக்கவேண்டும் என்று அறி



மாணவர் காய்கறிகளுடன்......

வுரையும் கூறுவார்கள். நல்லவர்தம் அறவுரைகளையும் அறிவுரைகளையும் ஏற்று மாணவர் ஆளும் பொறுப்பை அறிகின்றனர். வருங்காலத்தில் நாடாள வேண்டிய நல்ல திறனையும், கேட்டார் பிணிக்கும் சொல்வன்மையையும் பிற பண்புகளையும் மாணவர்கள் இந்த ஆட்சிமன்றத்தின் மூலம் பெறுகின்றனர்.

உடலோம்பலும் மாணவர்களுக்கு இன்றியமையாதது. 'உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே' என்றார் திருமூலர். எனவே யாவர்க்கும் உடல் இன்றியமையாதது. உடலை நல்ல முறையில் வைத்திருக்கச் சிறந்த உடற்பயிற்சி தேவை. மாணவர்களுக்குப் பாடல் கலந்த ஆடல்களும் சில சமயங்களில் உடற் பயிற்சியாக அமைவதைக் காண்கின்றோம். இவ் வள்ளலார் இல்லத்து மாணவர்கள் உள உரம் பெற்றதோடு உடல் உரமும் பெற்றவராகக் காண்கின்றார்கள். அவர்களுக்கு மாலை வேளைகளில் முறைப்படி உடற் பயிற்சி கற்பிக்கப்படுகின்றது. சாதாரண உடற் பயிற்சியோடு ஆசனம் முதலியனவும் அவர்கள் அறிந்துள்ளனர். ஆசனங்கள் மிகப் பழங்காலந் தொட்டு நம்நாட்டில் பயின்று வந்த உடல் வளர்க்கும் நல்ல சாதனங்கள். மாணவர்கள் பல ஆசனங்களைச் செய்வர். அத்துடன், ஒவ்வொன்றின் விளையும் பயன்களையும் கூட அவர்கள் அறிந்து வைத்திருக்கின்றனர். இவ்வாறு ஏட்டுப்படிப்பு மட்டுமன்றி, வாழ்வுக்குத் தேவையான தொழிற் கல்வி, தனிவாழ்க்கை முறை, அரசியல் வாழ்வான பொதுவாழ்க்கை முறை ஆகியவற்றையும் அறிந்திருப்பதோடு, அனைத்துக்கும் அடிப்படையான உடல் ஓம்பலையும் மாணவர்கள் அறிந்துள்ளார்கள்.

இத்தனையும் வாலாஜாபாத் குருகுலத்தில் நாம் ஒரு சேரக் காணக்கூடியவையாகும். இவைகளுக்கு ஏற்ப

பள்ளியும் விடுதியும் நல்ல இயற்கைச் சூழலை ஒட்டி உருவாக்கப் பெற்றுள்ளன. பரந்த பாலாற்றங்கரையில் அப் பள்ளி அமைந்துள்ளது. மாலை வேளைகளில் அப் பாலாற்று மணலில் மாணவர் விளையாடும் காட்சி சிறந்த விருந்துக் காட்சியாகும். ஆற்றிலிருந்து அவர்கள் நீர் கொண்டு வரும் காட்சியும் சிறந்ததே. இங்கு பண்டைக் குருகுல வாழ்க்கை சிறந்து விளங்குகிறது. புதுமைக் கல்வியும் பொலிகின்றது. எனவே இவ் வாலாஜாபாத் இந்துமத பாடசாலையும் அதன் அங்கமாகிய வள்ளலார் இல்லமும் பழைமையும் புதுமையும் கலந்த ஒரு சிறப்புக்கு எடுத்துக் காட்டாக அமைகின்றன. அதில் கல்வி பயின்று வெளி யேறும் மாணவர் பலர். அதைக் கண்டு பயன் பெறும் மக்கள் பலர். ஆம். இதுபோன்ற குருகுலங்கள் நாடெங்கும் அமையுமாயின் இந்நாடு அறிவும் அன்பும் பிற நற்பண் களும் ஒருசேர அமையப்பெற்றுச் சிறக்கும் என்பதில் ஐய மில்லை.

## கேள்விகள்

1. சங்ககாலத்தில் குருகுல வாழ்க்கை இருந்ததென்பது எப்படித் தெரிகிறது?
2. கண்ணன், குசேலர் அவர்தம் கல்வி முறை பற்றி அறிவன யாவை?
3. குருகுல வாழ்க்கையால் உண்டாகும் பயன் என்ன?
4. குருகுல வாழ்வு மாணவர்களுக்கு எவ்வெவ் வுணர்வு களை உண்டாக்கும்?
5. இன்று நம் நாட்டில் குருகுலங்கள் உண்டா?
6. இந்துமத பாடசாலை எங்குள்ளது? அதைக் குரு குலம் என்று கூறலாமா?
7. வள்ளலார் விடுதியின் அமைப்பு யாது?

8. விடுதியின் அன்றாட வாழ்வினை எழுதுக.

9. எட்டுப் படிப்புடன் குருகுலத்தில் மாணவர் என்னென்ன பயில்கின்றனர் ?

10. விடுதியில், ஆட்சி மன்றம் ஆற்றும்பணி என்ன ?

11. 'உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே' என்றால் என்ன ? அது எவ்வாறு விடுதியில் கையாளப்படுகிறது ?

## பயிற்சி

1. கண்ணன், குசேலர் குருகுலவாழ்வை உங்கள் ஆசிரியர் மூலம் அறிந்து ஒரு கட்டுரை எழுதுக.

2. வள்ளலார் விடுதியில் பயிலும் ஒருவர் தனது அன்றாட வாழ்வைப் பற்றித் தன் நண்பனுக்கு எழுதும் முறையில் ஒரு கடிதம் எழுதுக.

3. கூடுமாயின் வாலாஜாபாத் சென்று இல்லத்தைக் கண்டு உம் கருத்தைக் கட்டுரையாக எழுதுக.

4. ஆசனப் பயிற்சி பற்றி உங்கள் ஆசிரியர்களிடம் கேட்டறிந்து சில வாக்கியங்களை எழுதுக.

## இலக்கணம்

(1) 'எண்ணும்மை' என்றால் என்ன ?

(2) கீழ்க்காணுவனவற்றிற்கு இலக்கணத் தொடர்பு கூறுக :—

ஆசிரியரோடு வாழும் மாணவ வாழ்வு.
எல்லாவற்றிற்கும் குருகுலமே சிறந்தது.
உலகம் சிரிக்கும்.

(3) தன்மைப் பன்மைக்கும், முன்னிலை ஒருமைக்கும் உதாரணம் தருக.

(4) உறுப்பிலக்கணம் தருக :—
பழகுவர்
பயில்கின்றார்கள்
செல்வர்
பெறுகின்றார்.

(5) ஆசிரியர் மாணவர்களுக்கு அறிவு கொடுத்தார். குருகுலத்தால் மாணவர் ஒழுங்கு வளரும்.
இச்சொற்றொடர்களி லமைந்த வேற்றுமையை எடுத்துக் காட்டு.

(6) பயன்—பயம் ; நயன்—நயம் ; கோயில்—கோவில். இவைகளுக்கு இலக்கணத் தொடர்பு கூறுக.

# 7. மலேயா நாடு—கடிதம்

[இந் நூல்லாசிரியர் அவர்கள் 1948-ல் மலேயாவிற் சுற்றுப் பிரயாணம் செய்தார்கள். அதுபோது தம் மருமைத் திரு மகளார் மங்கையர்க்கரசிக்கு எழுதிய கடிதங்களில் ஒன்று தான் அடியில் தரப்பட்டுள்ளது. அக் கடிதங்கள் யாவும் ஒருங்கு திரட்டப்பெற்று, 'தமிழன் கண்ட மலேயா' என்னும் புத்தக வடிவில் வெளியிடப்பட்டுள்ளன.]

அன்பு மிக்க மங்கையர்க்கரசிக்கு,

மேலை நாட்டாரும் கீழை நாடுகளும்

நலன். விழைவு. இன்று (31-5-48) நான் ஓய்வின்றிப் பலவிடங்களுக்கும் சென்று பார்வையிட்டேன். போர்ச்சுகீசிரியர்கள்தான் கீழை நாட்டில் தம் ஆதிக்கத்தைச் செலுத்திய முதல் மேலை நாட்டார். மேலை நாட்டவர் இது வரை இந்த ஆசியப் பகுதிகளை யெல்லாம் ஆண்டுவந்த

வர்கள் அல்லவா? அவர்கள் இன்று ஒவ்வொன்ருக விட்டுப் போவதையும் காண்கிறேமே. இந்தியாவும், பர்மா வும், இலங்கையும் இன்று விடுதலைபெற்ற நாடுகளாக வில்லையா! மேனுட்டாரில் முதல் முதல் கடல் வழியாக வந்தவர் போர்ச்சுகீசியர்தான். இந்தியாவுக்கு வந்தவர் 'வாஸ்கோடி காமா' என்பவர். ஆனல் அவர்கள் வரும் போது நாடாள வேண்டும் என்ற ஆசையுடன் வரவில்லை. வாணிபத்தைப் பெருக்க வேண்டும் என்ற விருப்பத் தாலேயே வந்தார்கள். ,அப் போர்ச்சுகீசியர் ஒரு படைக் கப்பலை 1509-ம் ஆண்டில் மலாக்காவிற்கு அனுப்பினர். ஆனல், அன்று ஆளுகையிலிருந்த சுல்தான் மலாக்காவில் அவர்களை இறங்க விடவில்லை; போர்ச்சுகீசியர் திரும்பினர். பிறகு 1511-ல் போர் மூலமே இங்குள்ள சுல்தானை விரட்டி மலாக்காவில் குடியேறினர் போர்ச்சுகீசியர். குழந்தாய்! இங்கு அன்று வாழ்ந்த சுல்தானிடம் நமது நாட்டுக் கள்ளிக்கோட்டையார் கொடுத்த பீரங்கி ஒன்று இருந்த தாம். அதை, வந்தவர் தம் நாட்டு 'லிஸ்பன்' காட்சிச் சாலைக்கு அனுப்பிவிட்டார்களாம். பிறகு இந்நாட்டுச் சுல் தான்களும், ஜாவா நாட்டு மன்னர்களும் முயன்றும் மலாக் காவைக் கைப்பற்ற முடியவில்லை. கடைசியாக 1641-ல் டச்சுக்காரர்கள் மலாக்காவைக் கைப்பற்றினர். பின்னர் அவர்களிடமிருந்து 12-8-1795-ல் ஆங்கிலேயர் மலாக் காவைக் கைப்பற்றினர். அது முதல் இந்த ஊரை அவர் கள் ஆண்டு வருகிருர்கள்; கைப்பற்றிய காலத்து இருந்த டச்சுக்காரர் விருப்பப்படி அரசியல் அலுவலகங்களை யெல் லாம் செந்நிற வண்ணமாகவே வைத்துள்ளனர். இப்படித் தான் இந்த நாட்டுப் பகுதிகள் ஒன்றன்பின் ஒன்ருக ஆங்கி லேயர் ஆட்சியின் கீழ்ப்பட்டன. என்ருலும் முழு உரிமை யும் அவர்களிடம் இல்லாமல் சுல்தான்கள் ஆட்சியோடு



*மலேயா நிலப்பரப்பு.*

பிணைக்கப்பட்டுள்ளது. இதேபோல் ஒவ்வொரு ஊரைப் பற்றியும் சரித்திர வரலாறுகள் உள்ளனவாம். ஆனால் அவற்றைப்பற்றி யெல்லாம் எழுதினால் கடிதங்கள் நீளுவ தோடு, போதிய வகையில் இன்றைய மலேயாவைக் காட்ட இயலாது. மற்றும் அது ஒரு வரலாற்று நூலாகுமே தவிர வந்ததைக் கூறும் முறையாகாது. இது ஒன்றை மட்டும் இன்றைய ஆட்சி வந்த வகைக்கு விளக்கினேன். மற்றவை யும் ஏறக்குறைய இதே முறையில்தான் இன்றைய நிலைக்கு வந்துள்ளன என்பதை அறிவாய்.

போர்ச்சுகீசியர்தான் முதல் வந்த மேனாட்டார் என்று கூறினேன் அல்லவா? இந்த மலாக்காவையும் அவர்கள்தான் முதலில் கண்டு வளர்த்தனர் என்பது இங்குள்ளார் முடிவு.

## சேவியர் செம்மைப் பணி

அவர்கள் வாணிபத் துறையில் வந்தபோது கிறிஸ்து சமயத்தைப் பரப்பப் பல பாதிரிகளும் உடன் வந்தனர். அவருள் ஒருவர் 'சேவியர்' என்னும் செம்மலார். தம் அன்புச் சமயத்தைப் பரப்ப வந்த இடத்திலே பரனடி சேர்ந்தார். அவர் சமயப் பிரசாரம் செய்து நின்றபோது கொல்லப்பட்டார் என்று நம் நாட்டில் சொல்லுவார்கள். ஆனால் இங்குள்ள குறிப்பில் அவர் சீன நாட்டிற்குச் செல்லுங்காலை இறந்தார் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. எப்படியாயினும் தாய் நாட்டை விட்டு, தந்தையாம் இறைவன் புகழ்பாட வந்த பெரியார் அந்தப் பணியிலேயே தம் ஆவி நீங்கினார் என்றால் அவர் பெரியவ ரன்றோ! அவர் மறைந்து இன்று முன்னூறு ஆண்டுகள் ஆகின்றன. அவ்வரை இங்கு மலாக்காவில் நான் தங்கிய வீட்டின் பின்னுள்ள சிறுமலையில் அடக்கம் செய்து வைத்தார்கள் பிறகு அவரது உடம்பு நம் நாட்டில் போர்ச்சுகீசியருக்குச் சொந்தமான மேலைக் கடற்கரையிலுள்ள, கோவாவிற்கு எடுத்துச் செல்லப்பட்டது. அந்த உடல் அங்கே இன்னும் வைத்துப் பாதுகாக்கப்படுகிறது. சிறிதும் கெடாத வகையிலே வைத்துப் பாதுகாக்கின்றனராம். பல நூற்றாண்டுகள் கழித்தும் உயிர் நீங்கிய உடம்பு நன்கு பாதுகாக்கப்படுகின்றது என்பது உனக்கு வியப்பை ஊட்டுகிறதல்லவா! அந்த முறையில் காக்கப் பல மருந்து வகைகள் பயன்படுகின்றன. இராமாயணத்தில் தசரதன் உடல்

பல நாட்கள் பரதன் வருகைக்காகப் பாதுகாக்கப் பட்டிருந்ததாகப் படித்திருக்கிறோம். அதை நாம் காண வில்லை. ஆனால் இன்று சேவியர் திருவுடல் கோவாவில் பாதுகாக்கப்படுகிறது. அவர் செய்த பணி கருதி, நான் நம் நாடு வந்தபின் வாய்ப்பு ஏற்படுமேல் உன்னைக் கோவா வுக்கு அழைத்துச் சென்று அதைக் காட்டுகிறேன்.

அன்புச் செல்வி! அவரை மூடி வைத்திருந்த கல்லறையின் பக்கலில் நின்று கொண்டு, அவரைப் புதைத்து வைத்த அந்தத் திறந்த பள்ளத்தை நோக்கும் போது அப்படியே சிறுதுளிக் கண்ணீர் புறப்பட்டது. அருகிலே இருவர் இருந்தனர். இல்லாவிட்டால் ஓ வென்று கதறி அழுதிருப்பேன். தன்னலம் மறந்து செல்வமும் சீரும் மறந்து, நாடும் பிறவுந் துறந்து, ஆண்ட வன் பணியே அன்புப் பணியெனக் கொண்டு பற்பல நாடு கட்கும் போந்து அன்புச் சமயத்தைப் பரப்பிய அண்ண லார் மறைந்த இடம் கண்டால் கண்ணீர் உகுக்காது என் செய்வது? உலகம் உய்யத் தன் குருதி சிந்திச்



சேவியர் அடக்கம்.

சிலுவை ஏறிய செம்மல் காட்டிய நெறியைப் பேச்சளவில் அல்லாது செயலளவில் சிறக்கக் காட்டிய சேவியர் நிலை நினைத்தேன். தமிழ் நாட்டில் இன்று அவர்தம் திருப் பெயரால் பல பள்ளிகளும், கல்லூரிகளும் ஆக்கப்பட் டிருப்பதை எண்ணி மகிழ்ந்தேன்.

சேவியர் ஒருவரைப் பற்றிச் சிறிது அறிந்துகொண் டாய். இதுபோன்று சமயத்தை வளர்க்க நாடு விட்டு, மக்களை விட்டு உலகின் பல பாகங்களுக்கும் சென்ற அறிஞர் பலர் என்பதையும் அறிவாய். அவர்களுள் கால்டு வெல்லும், போப்பும் தமிழ் நாட்டில் கிறிஸ்து சமயம் பரப்ப வந்தவருள் தலைசிறந்தவர்கள். இருவரும் தமிழை நன்கு பயின்றவர்கள். இறக்குங் காலத்துத் தமிழ் மாணவன் என்ற உணர்வோடு இறந்தார் போப். கால்டுவெல் ஒப் பிலக்கணமே இன்று வாழும் திராவிடன் தனது மொழி உலகிடை உயர்ந்த மொழி என்று கூறிக்கொள்ளக் காரணமாக அமைந்தது. இப்படிக் கடந்த நான்கைந்து நூற்றாண்டுகளாக இயேசு சமயம் பரப்ப வந்து செல்லும் நல்லவர் நாட்டில் பலர். இன்றும் எல்லா நாட்டிலும் அவர்கள் சென்று சமயப்பணி செய்கின்றனர். ஆனால் நம் நாட்டில் உள்ள சைவ மதத்தை வளர்க்கும் பெருந்தலைவர் களோ சமயம் வளரப் பாடுபடுவதே கிடையாதே! சமயத் தைப் பற்றிக் கவலைப் படுவதும் இல்லையே! சமயத்தை வாழ்க்கைத் துறையிலிருந்து நெடுந்தூரத்துக்குப் பிரித் துச் சென்றுவிட்டார்களே! இந்த நிலையில் எச் சமயம் வாழும், எச் சமயம் வீழும் என்பதை நீயே சிந்தித்துப் பார்.

## மலாக்காவில் கண்டவை

சேவியர் திருவடி பட்ட இடம் கண்டு கசிந்து நின்ற நாங்கள் மலை விட்டிறங்கி அரசாங்க அலுவலகங்கள் பல

வற்றையும், அரசாங்க நூல் நிலையம், பொருட்காட்சிச் சாலை ஆகியவற்றையும் பார்த்தோம். பிறகு செட்டியார் அவர்களுடன் மலாக்கா மருந்தகம் (Govt. General Hospital) பார்க்கச் சென்றோம். குழந்தாய்! இந்த ஊர் அவ்வளவு பெரிய தன்று. நம் காஞ்சிபுரத்தைவிடச் சிறிய ஊர்தான். ஆனால் இந்த மருந்தகம் சென்னை மருந்தகத் தைக் காட்டிலும் சிறந்ததாக விளங்கிற்று. ஐந்தடுக்கு மாடி; ஊருக்கு வெளியே ஒரு தனியிடம்; தூய நிலை. எல்லா நோய்களுக்குந் தொடர்ந்து மருந்தளிக்க ஒரு இடத் தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. குருதிச் சோதனைச் செய்யும் இடமும் பிற இடங்களும் கண்டோம். நம் நாட்டில் கண்ட மருத்துவர் கண்ட வைத்தியம் செய்வது போல் இங்குச் செய்ய முடியாதாம். கத்தி எடுத்து அறுக்க எந்த வைத்தியனுக்கும் உரிமை இல்லையாம். அவர்கள் மருந்து மட்டும்தான் கொடுக்கலாமாம். ஆனால் அறுவை முழுதும் இங்குக் கொண்டுவந்துதான் நடைபெறவேண்டு மாம். மற்றும் பிற மருத்துவ நலங்களும் நன்கு புரக்கப் படுகின்றன. உண்மையில் சொல்லுகின்றேன், நான் இத்தகைய மருந்தகத்தை நம் நாட்டில் கண்டதில்லை. ஆங்கில மருத்துவர்கள் பலர் இங்கு பணியாற்றுகின்ற னர். தமிழர் நிரம்ப உள்ளனர். எந்தப் பகுதியிலும் தமிழில் பேசிப் பழக முட்டுப்பாடு ஒன்றும் இல்லை.

### பயன்தரு பள்ளிகள்

சிறந்த மருந்தகத்தைக் கண்டபின் நகரில் நடை பெறும் பள்ளிகளைப் பார்வையிட விரும்பினேன். முன் னேற்பாட்டின்படி 'மெத்தடிஸ்டு மிஷன்' ஆண், பெண் பாடசாலைகளைப் பார்வையிட்டேன். அந்த மிஷன் பள்ளி கள் அமெரிக்கப் பாதிரியாரால் நடத்தப்படுவன வாகும்.

நம் நாட்டில் உயர்நிலைப்பள்ளி (High School) உள்ள அந்த வகையில் அமைந்தன இவை. ஆண்கள் பள்ளியின் தலைமையாசிரியர் மிக அன்போடு வரவேற்று ஒவ்வொரு வகுப்பிற்கும் அழைத்துச் சென்று அறிமுகப் படுத்தினார். மாணவரில் பெரும்பாலோர் சீனர்கள். அடுத்துச் சிலர் ஆங்கிலேயர். தமிழர் மிகக் குறைவு. தமிழர்கள் இங்குள்ள அரசாங்கப் பள்ளியில் பயில்கிறார்களாம். ஒவ்வொரு வகுப்பையும் சுற்றிப் பார்வையிட்டு, பிறகு மண்டபம், அறிவியல் ஆய்வகம் முதலிய அனைத்தையும் பார்த்தோம். இங்கே பள்ளி நேரம் காலை எட்டு மணி முதல் பகல் ஒரு மணி வரைதான். சிறிது நேரம் பள்ளி நடைமுறையைப் பற்றிப் பேசிவிட்டு, பக்கத்தில் இருந்த பெண் பாடசாலைக்குச் சென்றோம். அதுவும் ஒரு உயர் நிலைப் பள்ளிதான். அந்தப் பள்ளியில் தலைமை ஆசிரியையும் அன்போடழைத்துப் பல வகுப்புக்களையுங் காட்டி, அவர்கள் பாடம் நடத்தும் முறைகளையும் விளக்கினார். இரு விடங்களிலும் மாணவர்களைப் போன்றே, பெரும்பாலான ஆசிரியர்களும் சீனர்கள்தான். ஆண் பள்ளியில் நான் முன் கடிதத்தில் குறித்த ஈரோடு சுப்பிரமணியமும், மகளிர் பள்ளியில் ஒரு திருவாங்கூர்ச் செல்வியும் பணியாற்றுகின்றார்கள். திரு. சுப்பிரமணியம் அவர்கள் தான் இவற்றையெல்லாம் பார்க்க ஏற்பாடு செய்தார். நான் கல்வித் துறையில் அவர்கள் கையாளும் பல முறைகளை அறிந்தேன். அவர்கள் நம் நாட்டு முறையைக் கேட்டறிந்தார்கள். மேலும் தொடர்ந்து கல்விமுறை பற்றி அளவளாவ என் முகவரியை அவர்கள் கேட்டார்கள். நான் கொடுத்தேன். அவர்கள் முகவரியும் பெற்றேன். பொதுவாக மலாய் நாட்டில் கல்வியும், பொதுநலமும் அரசியலாரால் நன்கு புரக்கப்படுகின்றன என்று கண்டும் கேட்டும் உணர்ந்தேன்.

வீடு தோறும் கலையின் விளக்கம்
வீதி தோறும் இரண்டொரு பள்ளி
நாடு முற்றிலும் உள்ளன ஊர்கள்
நகர்க ளெங்கும் பலப்பல பள்ளி

என்ற பாரதியின் கனவு இங்கு நனவாக்கப்படுவதை எண்ணி மகிழ்ந்தேன்.

அருமைச் செல்வி! கடிதம் நீளுகிறது. கண்டதைச் சொல்ல வேண்டுமே! மலாக்காவில் தமிழ்நாட்டி லிருந்து வெகு காலத்திற்குமுன் வந்த ஒரு செட்டி வகுப்பார் மலாக்காப் பெண்களை மணந்துகொண்டு ஒருவகைத் தனிக் குடியாக மாறிவிட்டார்கள். அவர்களை மலாக்கா செட்டி யார் என்றே அழைக்கிறார்கள். அவர்கள் மகமதிய மதத்தைத் தழுவியவர்கள். எனினும், வீட்டுச் சடங்குகள், வழிபாடுகள், கலியாணம் முதலிய அனைத்தும் நம் நாட்டில் நாம் செய்வது போலவே செய்கிறார்கள். அவர்களுக்கு ஐயர் உண்டு சடங்கு செய்ய. மாரியம்மன் கோயிலும் பிள்ளையார் கோயிலும் உள விழாக்கள் செய்ய. வெள்ளித் தேரும் பிற வாகனங்களும் உள்ளன. இங்கு இருக்கும் பிள்ளையார் கோயிலை அவர்கள் தற்போதுள்ள நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் வசம் விட்டிருக்கின்றனர். அப் பிள்ளையாருக்குப் பொய்யா விநாயகர் என்று பெயர். நாங்கள் மாரியம்மன் கோயில் முதலியவற்றைப் பார்த்துக் கொண்டே பொய்யாக் கோயிலில் புகுந்தோம். அங்கு நகரத்தார் ஒருவர் தம் தாயின் ஆண்டுக் கடன் குறித்துப் பெரு விருந்து ஏற்பாடு செய்திருந்தார். விருந்து மிகச் சிறந் திருந்தது. உண்டோம். பிறகு நாங்கள் தங்கியிருந்த வீட்டிற்கு வந்து மாலை நான்கு மணிவரை ஓய்வெடுத்துக் கொண்டோம்.

## சாதிகள் இல்லையாமே

மாலை நாலரை மணிக்கு, முன் ஏற்பாட்டின்படியே திரு. சுப்பிரமணியம் அவர்கள் வீட்டிற்குத் தேநீர் விருந்திற்காகச் சென்றோம். அங்கு காலையில் கண்ட பள்ளிகளை நடத்தும் அமெரிக்கப் பாதிரியாரும், அவர் மனைவியாரும், அப் பணியிற் கலந்த சீனப் பெரியாரும், அவர்தம் மனைவியாரும் வந்திருந்தனர். திரு. உ. அரு. அருணசலஞ் செட்டியார் அவர்களும் தம் குடும்பத்தோடு வந்திருந்தார்கள். சிற்றுண்டி உண்டு கொண்டே பல பொருள்களைப் பற்றிப் பேசினோம். அமெரிக்கப் பெரியாரும் அவர்தம் மனைவியாரும் பிறரும் தமிழ்நாட்டுப் பழைய இயல்புகளை அறிய வேண்டினர். பலவற்றை விளக்கினேன். 'உங்கள் நாட்டில் வரவரச் சாதிகள் இல்லையாமே!' என்றார் அமெரிக்க நல்லார். நம் நாட்டு மேடைப் பேச்சாளர்கள் பேச்சுக்களையும், பிற இதழ்களின் விளம்பரங்களையும் அவர் அறிந்திருக்கக்கூடும். நான் அந்த நிலையெல்லாம் பேச்சளவிலே என்றும், நாட்டில் ஆடும் சாதி வெறியின் கொடுமை இத்தகைய தென்றும் விளக்கி உரைத்தேன். மேடையில் சாதி இல்லை யென்று பேசி, செயலில் தன் இனம், தன் சாதி என்று நோக்கும் கீழ்மை நம் நாட்டில் உள்ளதை யாரும் அறிவர் அல்லவா? வெளி ஆரவாரம் இங்குக் கேட்கப்படுகிறது. சில சாதிகள் பற்றி விளக்கி உரைத்தேன். குழந்தாய்! நம் நாட்டில் சாதிகள் வேண்டாம் என்று பேசப்படுகிறதே ஒழியச் செயலில் முன்னேற ஏதாவது வழி யுண்டா? ஏதோ இன்று அரசாங்கத்தார் சாதிகளை நீங்கப் பலவகையில் முயல்வார்கள் என அறிகின்றோம்.

சீன அறிஞர் தமிழ் நாட்டுக்கும் அவர் நாட்டுக்கும் உள்ள தொடர்பை அறிய விரும்பினர். அது பற்றிப் பல வாகப் பேசிக்கொண் டிருந்தோம். சர்க்கரையும் பட்டும் சீனவிலிருந்து வந்ததால் தான் தமிழர் அவற்றை, 'சீனி' என்றும், 'சீனம்' என்றும் அழைத்தார்கள் என்று நான் சொல்லும்போது அனைவரும் வியப்படைந்தார்கள். இத் துணைத் தொடர்பு நெடுநாளாக உண்டா என எண்ணினர் கள். ஏன்? நம் நாட்டிலே கூட சீனி என்ற பெயர் ஏன் அதற்கு இடப்பட்டது என்றால் பல படித்தவர்கள் கூடப் பதில் சொல்ல மாட்டார்களே! கற்கண்டைக்கூடச் சீனக் கற்கண்டு என்று நாம் சொல்லும்போது அதுபற்றி எண்ணு கிறோமா? இல்லையே! அப்படி யிருக்க இங்கு வாழும் அமெரிக்கரும், சீனரும், பிறரும் அதனை எவ்வாறு அறிந்து கொள்ள இயலும்.

செல்வி! அந்தக் குடும்பங்களோடு மாலை நெடு நேரம் பேசிக்கொண்டிருந்தேன். பிறகு நானும் திரு. செட்டியார் அவர்களும் பிறரிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டோம். செட்டியாரவர்கள் மலாக்கா கடற்கரையின் நீளத்தையும், ஊர்ப்புறத்தே அக்கரையில் அமைந்த செல்வர்தம் மாளிகைகளையும் எனக்குக் காட்ட விழைந்து காரிலேயே அந்தப் பக்கம் அழைத்துக்கொண்டு சென்றார். கடற்கரை அழகாக அமைந்திருந்தது. அதன் அருகில் நீண்ட நெடுஞ்சோலை; இரு மருங்கும் வானோங்கிய மாளிகைள், அவற்றுள் ஒன்றில் பண்டித நேரு அவர்களும் மற்றொன்றில் மறைந்த தாகூர் அவர் களும் மலாக்கா வந்தபோது தங்கியிருந்தார்களென்று அவைகளைக் காட்டினர். செல்வர்தம் பிற மாளிகைகளும் அழகாக அமைந்திருந்தன.

## ஏற்றத் தாழ்வு

செல்வி! எங்கும் இந்தச் செல்வர்—வறியர் வேறுபாடு நீங்கவில்லை. நாம் வாழும் சென்னையில் வறுமையில் வாடுங் கூலிமக்கள், சென்னை நகரில் தெருக்களிலும் மூலை முடுக்குகளிலும் அவற்றின் சுற்றுப்புறங்களிலும் வாட, செல்வர் உயர்ந்த உப்பரிகைகளில் இருந்து உல்லாச வாழ்வு வாழவில்லையா? ஆங்கில நாட்டுச் செல்வர் தம்நிலை கருதித் தனித்து வாழப் பிரான்சு நாட்டில் தனி இடத்தில் மாளிகை கட்டித் தங்கியுள்ளார் கள் என்று அறிய வில்லையா! அதே போல இங்கும் செல் வர்கள் வாழ்கிறார்கள் என்று எண்ணும்போது இங்குமா இதைக் காணவேண்டும் என எண்ணினேன். என்ன செய் வது? உலகப் பொருளாதாரம் திருந்தும் வரையில் எங்கும் இந்த வேறுபாடுதானே! என்று பொருளாதாரச் சமத்துவம் உண்டோ, அன்று ஒரு வேளை இவை அகலலாம். அதை எண்ணின் பலப்பல எண்ண அலைகள் தோன்றுகின்றன. அவற்றை எழுதின் கடிதம் நீளும்.

திரும்பிவரும் வழியில், மற்றொரு நண்பர் வீட்டில் தங்கிச் சிறிது தேநீர் அருந்தினோம். நான் காப்பி, தேநீர் அருந்துவது வழக்கமில்லை யல்லவா? ஆகவே எங்கு சென்றாலும் எனக்குச் செட்டியாரவர்கள் முன்னேற்பாட் டால் பால் கொடுக்க ஏற்பாடு செய்து விடுவார். பிறகு வீட்டுக்கு வந்தோம். பெருமழை பெய்தது. பிற அலுவல் களை முடித்து உனக்கு இந்தக் கடிதத்தையும் எழுதி முடித் துப் பதினொரு மணிக்குப் படுக்கச் செல்லுகிறேன். அன் றாடம் கடிதம் எழுத முடியாது போலும். வான் வழித் தபால் வாரத்தில் மூன்று நாள்தான் வருமாம். 2-6-48-ல் கோலா

லம்பூர் செல்கிறேன். அடுத்த கடிதம் அங்கிருந்து எழுதுவேன்.

உன் அன்புள்ள தந்தை,
அ. மு. பரமசிவானந்தம்

## கேள்விகள்

1. ஆசிய நாடுகளில் ஆதிக்கஞ் செலுத்திய முதல் மேலை நாட்டார் யார் ?
2. போர்ச்சுகீசியர் எக்கருத்துடன் வெளிநாடு சென்றனர் ?
3. சேவியரைப் பற்றி நாமறிவ தென்ன ?
4. தமிழ் நாட்டில் கிறிஸ்துவ சமயத்தைப் பரப்பவந்த இரு பெரியார்களைப்பற்றி நாமறிவதென்ன ?
5. ஆசிரியர் மலாக்காவில் எவ்வெவ் விடங்களைப் பார்த்தார் ?
6. சீனர்க்குந் தமிழர்க்கும் நெடுங்காலமாகத் தொடர்புண்டென்பதற்கு ஆசிரியர் கூறுங் காரணங்கள் யாவை ?
7. நம் நாட்டுச் சாதிகள் நிலை பற்றிய அமெரிக்கர் வினவும், ஆசிரியர் விடையும் யாவை ?

## பயிற்சி

1. சேவியர் வாழ்க்கையை அவரே கூறுவதுபோல் எழுதுக.
2. தமிழ் நாட்டில் சாதிகள் என்னுந் தலைப்பில் ஒரு கட்டுரை எழுதுக.
3. நீ பார்த்து வந்த ஒரு ஊரைப்பற்றி உன் தங்கைக்கு ஒரு கடிதம் எழுது.

## இலக்கணம்

(1) வினையாலணையும் பெயர் என்றால் என்ன? வினைமுற்றிற்கும் வினையாலணையும் பெயருக்கும் வேறுபாடு யாது?

(2) கீழ்க்காணும் சொற்களைச் செயப்படுவினையாக்கு:—

செய்தான், குடியேற்றினர், இட்டேன்.

(3) விளி வேற்றுமைக்கும், இடைச்சொல்லிற்கும் இரண்டிரண்டு உதாரணங்கள் தருக.

(4) வந்து செல்வர், வந்த பெரியார்—இவ்விரண்டிற்குமுள்ள வேறுபாடு யாது?

(5) சேவியர் சமயத்திற்காக உயிர் துறந்தார்.
சேவியர் சமயத்திற்காக உயிர் துறந்தவர்.
இவ்விரண்டிற்குமுள்ள வேறுபாடு என்ன?

(6) முற்றுவிக்க:—
நானும் செட்டியாரும்——.
அமெரிக்கத் தம்பதிகளும் விருந்திற்கு——.
நான் சுப்பிரமணியத்துடன் பல பள்ளிகளை——.

# 8. நோயும் மருந்தும்

இடம்—மாரியம்மன் கோயில்.
காலம்—முற்பகல்.
மக்கள்—கிராம மக்கள்.

[மாரியம்மனுக்குப் பூசைபோடக் கூடியிருக்கிறார்கள் மக்கள். சிலம்பு, பம்பை முதலியன ஒலிக்கப் பேராரவாரம் எழுகின்றது. பட்டம் பெறு முன்னர் கிராமத்தொண்டில் ஈடுபட்டுள்ள பொன்னப்பன் விரைந்து வந்துகொண்டிருக்கிறார்.]

[இங்குப் பாடமாக வரும் பகுதி ஆசிரியர் அவர்களால் எழுதப்பெற்ற '**இந்திய முதற் சட்டம்**' என்னும் நாடக

நூலிலிருந்து எடுக்கப்பட்ட ஒரு காட்சியாகும். பல்கலைக் கழகப் பட்டம் பெறுதற்கு முன்னர் பட்டம் பெறும் ஒவ்வொருவரும் ஒரு குறித்தகால அளவிற்கு மக்கட் தொண்டு செய்யவேண்டும்; பின்னர்தான் பட்டம் கொடுக்கப்படல் வேண்டும் என்ற நியதியிருந்தால், படித்த ஒவ்வொருவரும் கிராமத்தொண்டில் ஈடுபட நேரும்; அதனால் நாடு விரைவில் நலமுறும் என்னுங் கருத்தைத் தெள்ளிதில் விளங்கவைக்கும் சுவைமிக்க ஒரு நூல் அது.]

**பொன்னப்பன் :**—(தனிமொழி) என்ன இது! இப்படி மாரியம்மன் கோயிலிலே இவ்வளவு கூட்டம்! ஊரில் அம்மைநோய் வந்திருக்கிறதே, அதற்குப் பூசைபோடத் தொடங்கி விட்டார்களோ?



அம்மன் கோயிலில் பூஜைபோடுகிறார்கள்.

ஐயோ! எவ்வளவு அறிவுரை பகர்ந்தாலும் இன்னும் இவர்கள் முன்னேற வில்லையே! சற்று நாகரீகம் தெரிந்தவர்களாயிருக்கும் இவர்களே இப்படியானல் ஒன்றுமே அறியாத ஏழைகள்—சேரியில் வாழும்—இல்லை வாடும் மக்கள்—என்னதான் செய்யமாட்டார்கள். ஐயோ! விரைந்து சென்று உண்மையை அவர்களுக்கு விளக்கவேண்டும். அந்த அம்மை குத்தும் அதிகாரிக்குச் சொல்லி அனுப்பினேன்; அவரும் இன்னும் வரக் காணேம். நேற்று மாலை நான் அடுத்த ஊரில் இருந்தபோது. யாரோ அங்கு வந்து அம்மை என்று சொன்னர்களே. அதற்குள் ஊரில் அம்மை அதிகமாகிவிட்டதோ! இல்லையானல் இவ்வளவு ஆடம்பரமும் எதற்கு? நல்லவேளை. சமயத்திலாவது வந்துவிட்டோமே. சாதாரணப் பொங்கலாகத் தான் இருக்கவேண்டும். கள்தான் கிடையாதே! ஆடு வெட்டுதலும் பெரும்பாலும் நிறுத்தப்பட்டு விட்டது. எதற்கும் விரைந்துசென்று காண்போம். (கோயிலை நெருங்குகிருர்.)

**அனைவரும்:**—அதோ தொண்டர். அதோ பொன்னப்பர்.

**பெரியார் ஒருவர்:**—வா அப்பா, எங்கே இரண்டு நாளாய்த் தொடர்ந்தாற்போல் காணவில்லையே!

**பொன்னப்பன்:**—ஐயா, நான் அந்தக் கோடியிலுள்ள ஊர்களுக்குச் சென்றிருந்தேன். அங்கே ஒரு கூட்டுறவுச் சங்கம் ஏற்படுத்த வேண்டியிருந்தது. அதற்காக எல்லா ஏற்பாடுகளையும் செய்து எப்படியும் இன்று மாலை இந்தப் பக்கம்

வருவதாகத் தான் இருந்தேன். முன்னதாகவே வந்து சேர்ந்தேன். நேற்று மாலை ஒருவர் வந்து இங்கு அம்மை வார்த்திருக்கிறது என்று சொன்னார். ஆதலால் அங்குள்ள சில வேலைகளை நிறுத்திவிட்டு ஓடோடியும் இங்கு வந்தேன். ஒருவரை அனுப்பி அம்மை குத்தும் அதிகாரியையும் வரச்சொல்லி சொல்லிவிட்டு வந்திருக்கிறேன். அவரும் விரைவில் வந்து விடுவார்.

**பெரிய :**—அப்பா! ஏன் அவருக்குச் சொல்லியனுப்பினாய்?

**பொன் :**—ஐயா! அம்மை குத்திக்கொண்டால் அம்மை நோய் வராது.

**பெரிய :**—அந்த மாதிரிதான் பலகாலமாக இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை அந்த அதிகாரி வந்து போகிறார். ஆனால் நோய் அடிக்கடி வருகிறது. நாங்கள் யாருமே பெரும்பாலும் அம்மை குத்திக்கொள்ள மாட்டோம்.

**பொன் :**—அதுதான் தவறு. அரசாங்கத்தார் இதுபோன்ற தொத்து வியாதிகளைத் தடுப்பதற்காகவே அம்மை குத்தும் மருந்தை வரவழைத்து இலவசமாக உதவுகின்றார்கள். அம்மை முதலியன தொத்து நோய்கள். அவற்றைப் போக்க அம்மை குத்திக் கொள்வது அவசியமாகும். மற்றும் இதுபோன்று பூசை முதலியன நோயின் பேரால் செய்தல் பொருத்த மற்றவையாம். நோய் வருவதற்குக் காரணம் நாம் நமது வீடுகளைத் தூய்மையாக வைத்துக் கொள்ளாததே யாகும். கண்ட கண்ட இடங்களில் குழந்தைகளை மல ஜலம் கழிக்க விடுவதும், எச்சில் இலையைப்

போடுதலும், இன்னும் இதுபோன்ற கொடுமைகளும் செய்வதால்தான் நோய்கள் வருகின்றன. அங்கங்கு சிறுசிறு நீர்த் தேக்கங்கள் இருப்பதால் கொசுக்கள் வளர்ந்து, அதனால் மலேரியா என்னும் நோய் வளர்கிறது. நோயாளிகள், அதுவும், தொத்துநோய் பற்றியவர்கள், மிகப் பாதுகாவலோடு தனிமையில் வைக்கப்பட வேண்டியவர்கள். கூடுமானவரையில் வீட்டையும், தெருவையும் துப்புரவு செய்து வைத்துக் கொள்ளவேண்டும். இவ்வாறெல்லாம் இருந்தால் பெரும்பாலும் நோய் வராது. அப்படி வந்தாலும் தக்க மருத்துவர் மூலமோ, அரசாங்க உதவியின் மூலமோ அவற்றைப் போக்கிக்கொள்ளலாம்.

**பெரிய :**—தம்பி, அப்போது இந்தப் பூசையெல்லாம் வேண்டாம் என்று சொல்கிறாயா? அப்பா, இந்த மாரியம்மன் பொல்லாதவள். அவளுக்கு எதிராக ஒன்றும் பேச வேண்டாம். இந்தப் பூசை காலாகாலமாக நடந்துவருகிறது. நோய் வந்தால் நாங்கள் கட்டாயம் இந்தப் பூசை போட்டுத்தான் ஆகவேண்டும். இல்லாவிட்டால் நோய் அதிகமாகிவிடும்.

**பொன் :**—பெரியோர்களே! நான் பூசையும் வழிபாடும் செய்யவேண்டாம் என்று சொல்லவில்லை. கடவுள் வணக்கத்தை நான் மறுக்கவில்லை. உண்மைக் கடவுளாகிய எங்கும் நிறைந்து அருள் புரியும் இறைவனை நான் மறக்கவும் மறுக்கவும் இல்லை. ஆனால் இதுபோல நோய் ஒன்றிருக்க மருந்தொன்று தின்னும் வழக்கந்

தான் வேண்டாம் என்கின்றேன். எல்லோருக்கும் ஒரே கடவுள்தான் உண்டு. தமிழர் அந்த ஒரே கடவுள் வணக்கத்தைப் பலவகையில் வற்புறுத்தி யுள்ளனர். 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்பது நமது நாட்டுப் பழமொழி. இதை ஒட்டியே பல பெரியார்களும் அன்புச் சமயங்களை வளர்த்தார்கள். கடவுள் எப்படியோ பலராகப் பெருகி விட்டார். ஒவ்வொருவர் கருத்துக்கும் ஒவ்வொரு கடவுளோ என எண்ண வேண்டிய அளவுக்கு எண்ணிக்கை வளர்ந்து விட்டது. ஆனால் அப்படிப் பல கடவுள்களானாலும் அனைத்தும் ஒன்றே என்றுதான் அறிந்தவர்கள் கூறுவார்கள். எங்கும் இந்த மாரியம்மை போன்ற தெய்வங்களைக் கடவுளாகக் காண்பதே இல்லை. இவையெல்லாம் மிகப் பழங்காலத்துக் காட்டு மிராண்டிகள் ஆரவாரத்தோடு வழிபட்ட தெய்வங்களாகும். இவை நோய் செய்வதும் இல்லை. நோயைத் தீர்ப்பதும் இல்லை. ஆங்கிலேயரும், கிறிஸ்தவரும், மகமதியரும் இத்தகைய நோய்கள் வந்தால் என்ன செய்கின்றனர். எண்ணிப்பாருங்கள். நேராக வைத்தியரிடம் செல்வார்களேயன்றி இம்மாதிரி பூசைப் போடமாட்டார்கள். ஏன் நம்மவரில் கூடச் சென்னை போன்ற நகரங்களில் இருக்கும் படித்தவர் பலர் இந்தமாதிரி செய்வதில்லையே. நாம் மட்டும் ஏன் இப்படிச் செய்யவேண்டும்.

இந்தமாதிரி பூசை செய்வதாலும், கூட்டம் கூடுவதாலும் நோய் பெருகுமே அன்றிக் குறையாது. தொத்துநோய் பலர் சேர்ந்து இருந்தால்

அதிகரிக்கத்தானே செய்யும். அதுவும் பூசை செய்ய இங்கே இத்தனைபேர் கூடியிருக்கின்றீர் கள். அனைவரும் கலந்து பொங்க லிடுகிறீர்கள். பயன் தொத்திக்கொள்ளுதல்தானே. பெரியோர் களே! உங்களைத் தாழ்ந்து வேண்டிக்கொள்ளு கிறேன். இவற்றை விட்டுவிடுங்கள். ஒருவர் தவருது அம்மை குத்திக்கொள்ளுங்கள். அதோ அம்மை குத்தும் அதிகாரியும் வந்துவிட்டார். (அம்மை குத்தும் அதிகாரி வருகிருர்.)

**பொன்:**—(அம்மைகுத்தும் அதிகாரியைநோக்கி)—ஐயா! வணக்கம், வாருங்கள். அனைவருக்கும் அம்மை குத்துங்கள். இங்கு அம்மை நோய் கண்டிருக் கிறது. சிலர் அஞ்சுகின்றனர். நீங்கள் இதன் அவசியத்தை ஒவ்வொருவருக்கும் எடுத்து வற்புறுத்தவேண்டும். குழந்தைகள் முதல் ஒவ் வொருவருக்கும் குத்துங்கள். இதோ நானே முத லில் குத்திக் கொள்ளுகிறேன். (அம்மை குத்திக் கொள்ளுகிருர்). பெரியோர்களே! இன்னும் அச்சம் வேண்டாம். வழிகாட்டவே நான் முத லில் குத்திக்கொண்டு காட்டினேன். அனைவரை யும் வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன். தாய் மார்களே! நீங்கள் முன்வந்து வழிகாட்டுங்கள். உங்கள் குழந்தைகளுக்கும் அம்மை குத்துங்கள். ஐயா! அம்மை குத்தும் அண்ணு! நான் வேறு வேலையாக உடன் செல்ல வேண்டியுள்ளது. நீங்கள் அனைவருக்கும் குத்திவிட்டு எனது சிறு குடிலுக்கு வாருங்கள். அங்கு உணவு கொள்ள லாம். நானே சமைக்கிறேன்; என் சிற் றுணவைச் சுவைத்துப் பாருங்கள்.

**எல்லோரும் :**—வேண்டாம். நாங்கள் ஏற்பாடு செய்கிறோம்.

**பொன் :**—அந்தப் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்கிறேன். நீங்கள் தயவு செய்து ஒவ்வொருவரும் அம்மை குத்திக் கொள்ளுங்கள். அதுதான் நான் வேண்டுவது. கட்டாயம் வந்து விடுங்கள் ஐயா.

**அ. கு. அதிகாரி :**—அப்படியே.

(பொன்னப்பன் செல்கிறான். பின்னால் ஒரு இளைஞன் தொடர்ந்து வருகின்றான். சிறிது தூரம் சென்றதும் பொன்னப்பன் திரும்பி) யாரையா நீர்! உங்களை எங்கோ பார்த்திருக்கிறேனே. உங்கள் பெயர் என்ன ?

**வடிவேலு :**—என் பெயர் வடிவேலு. பக்கத்து ஊரில் இருக்கிறவன். அன்று நீங்கள் ஊருக்கு வந்தபோதே உங்களிடம் பேசலாம் என்று இருந்தேன். ஆனால் பலர் சூழ்ந்திருந்ததாலும், நீங்கள் விரைந்து வந்துவிட்டதாலும் பேச முடியவில்லை. இன்று உங்களைக் காணவே இங்கு வந்தேன். வந்ததும் நீங்கள் ஊரில் இல்லை என்று அறிந்தேன். அந்தக் கோயிலில் என்ன கூட்ட மென்று காணச் சென்றேன். அப்போது தான் தாங்கள் அங்கு வந்தீர்கள். இதுவரை அங்கேயே இருந்தேன். இதோ தங்களைப் பின் பற்றி வருகிறேன்.

**பொன் :**—அறிகின்றேன். எதற்காக இவ்வளவு தூரம் வருகிறீர்கள் ?

**வடிவேலு:**—ஒன்றுமில்லை........

**பொன் :**—ஒன்றுமில்லேயா ! இதற்கா இவ்வளவு தூரம் வந்தீர்கள் ? பேசுவதாலுல் நேராகத் தொடர்ந்து பேசவேண்டும். அதற்காக இவ்வளவு தூரம் சுற்றி வரவேண்டாம். நம்மவர்கள் இப்படிப் பேச்சில் கூட நேராக இருப்பது இல்லேயே !

**வடிவேலு:**—ஐயா ! மன்னிக்கவும். நான் கிராமப் பள்ளிக் கூடத்தில் எட்டாவது வரையில் படித்தவன். 1942-ல் நாட்டில் உரிமை உணர்ச்சி தலே யெடுத்தபோது நாட்டுத் தொண்டில் கலந்து சிறை சென்றவன்.

**பொன் :**—அப்படியா ! மிக்க மகிழ்ச்சி. விடுதலேயில் உங்களுக்கும் பங்குண்டு போலும். உங்கட்கு வணக்கம்.

**வடிவேலு:**—ஏதோ செய்தேன். சிறை சென்றேன். மூன்று திங்கள் கழித்து வெளியே வந்தேன். ஊரி லேயே பயிரைப் பார்த்துக்கொண்டு காலந் தள்ளுகிறேன். இப்பொழுது, காங்கிரஸ்காரர் ஆளுகின்ற நிலே ஏற்பட்டபின், அவர் கள் அப்பொழுது சிறை சென்றவர்கட் கெல் லாம் ஐந்து ஏக்கர் நிலம் தருகின்ருர்களாம். அவர்களெல்லாம் தியாகிகள் பட்டியிலே சேர்க்கப்பட் டிருக்கிருர்களாம். எனக்கு ஐந்து ஏக்கர் நிலம் தருமாறு விண்ணப்பம் செய்தேன். எனக்கு இங்கிருந்து பதினேந்து கல் தொலேவிலுள்ள ஒரு ஊரில் மேட்டு நிலத்தில் ஐந்து ஏக்கர் தந்திருக்கிருர்கள். நான் எங்கள் ஊரிலேயே கேட்டேன். அந்த நிலம் பெறுவதற்கு ஏதேனும் வழி இருந்

தால் அறிந்து போகலாம் என்றே உங்களை நாடி வந்தேன்.

**பொன் :**—ஐயா! நீங்கள் செய்த தொண்டோ சிறந்தது. பிறந்த பொன்னுட்டைத் தவ வானினும் சிறந்ததாக எண்ணும் நிலையில் தொண்டாற்றி யுள்ளீர்கள். வீடு வாசலைவிட்டு, விடுதலை வேட்கை மிகச் சிறைக் கோட்டத்தில் தவம் கிடந்தீர்கள். இப்படிப் பல பெரியவரும், மற்றவரும், செல்வரும், வறியரும் செய்த தொண்டினுல்தான் இன்று நாடு விடுதலை அடைந்துள்ளது. இதோ நான் இத் தொண்டை மேற் கொள்ளுவதற்காக அமைந்த சட்டம் பிறந்த விடுதலை நாட்டுக்கு நாங்கள் வணக்கம் செலுத்துவதோடு, உங்களைப் போன்ற உண்மைத் தியாகிகளுக்கெல்லாம் வணக்கம் செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். ஆனால், நீங்கள் இப்போது கேட்பதுதான் என் சிந்தையைத் துளைக்கிறது. ஐயா! மன்னிக்க வேண்டும். நீங்கள் 1942-ல் சிறைசென்றபோது பின்னுல் ஐந்து ஏக்கர் நிலம் வரும் என்ற உள்ளத்தோடு தான் சென்றீர்களா?

**வடிவேலு :**—இல்லை! இல்லை! இல்லவே இல்லை!

**பொன் :**—பின் ஏன் அதுபற்றி இப்போது எண்ணுகிறீர்கள்? இதோ இன்று விடுதலை அடைந்த ஒன்றை நாம் கண்டு நிற்கிறோமே. அந்த ஒன்று போதாதா? நீங்கள் தியாகிகள் வரிசையில் சேர்க்கப்படுகின்றவர்கள். ஆனுல் அந்தத் தியாகத்துக்குப் பரிசு கேட்கிறீர்கள்! இதற்குத் தியாகம் என்று பெயரா?

**வடிவேலு:**—எல்லோரும் பெறும் போது—அரசாங்கமே வலியவந்து தரும் போது—ஏன் நான் பெறக் கூடாது? ஐயா, அது உண்மையில் எப்படித் தவறாகும். அன்று எதிர்பாராது செய்தாலும், இன்று வலிய வருவதை வேண்டாம் என்று சொல்வதா? அதை நல்லதாகத் தரவேண்டும் என்றுதானே கேட்கிறேன். இதுவும் குற்றமாகுமா?

**பொன்:**— ஐயா! நன்று சொன்னீர்கள். தியாகி, தியாகம் புரிவோன்,—பயன் கருதாது, வாழ்வு நினையாது, உரிமை மறந்து, உடமையில் கருத்து வையாது, வாழினும் வீழினும் ஒன்றே யென்று எண்ணும் அந்த அளவில் தன்னையும் தன் உடைமையையும் மற்றவர்களுக்கு ஈபவனே யாவன். அது போன்ற உண்மைத் தியாகிகள் உலகில் ஒரு சிலரே இருக்கமுடியும். இப்படி ஒரு முறை சிறை சென்றதற்கெல்லாம் கணக்கிட்டு ஐந்து ஏக்கர் நிலத்துக்குப் போட்டி போட்டுக் கொண்டு விண்ணப்பங்கள் எழுதும் எல்லோரும் தியாகிகளாக முடியுமா? எண்ணிப் பாருங்கள்.

'உலகில் மக்கள் படும் துன்பத்தைக் கண்டு—உயிர்கள், பறவைகள், விலங்குகள், பிறவெல்லாம் படுகின்ற இன்னலைக் கண்டு கசிந்து கசிந்து உருகி, அரச போகத்தையும், அன்பின் மனைவியையும், அழகான குழந்தையையும் விடுத்துக் காடு நடந்து, உயிர்களது துன்ப நீக்கத்துக்கு வழி இல்லையா இல்லையா என்று ஏங்கி ஏங்கித் திரிந்து, அலைந்து, ஓய்வு ஒழிவு இல்லாமல் வாழ்நாள் முழுதும் கழித்துப் போதி நிழலில் அமர்ந்து, "ஜீவகாருண்யமே

திறவுகோல்" என்ற உண்மையை உணர்ந்தானே புத்தன்—அவன் ஒரு தியாகி.'

'சமயம் மக்களை வாழ்விப்பதற்காக அமைந்ததேயன்றி, உயர்ந்தோர்களும், செல்வர்களும், தத்தம் பதவியையும், செல்வத்தையும், பெருக்குவதற்காக அன்று, என்றும் கோயில்கள் இறை வழிபாட்டிற்கு ஏற்றனவே யன்றி, கள்ளர் குகைகளாகவும். கொடுமை விடுதிகளாகவும் மாறுதல் தகாது என்றும் கூக்குரலிட்டு, பாவிகள் பாவம் தீர்க்க வழிகாணுவதே தன் பிறவிப் பயன் என்று அல்லும் பகலும் பாடு பட்டு, இறுதியாக அதே தொண்டுக்காக—உழைப்புக்காக—சிலுவையில் இரத்தம் கசிய அறைபட்டானே இயேசு—ஆம், அவன் ஒரு தியாகி.'

'நம்மிடையே நமக்காக வாழ்ந்து, உயர்ந்த உப்பரிகை வாழ்வை உதறித் தள்ளி, நாளொன்றுக்குப் பல ஆயிரம் பெருக்கும் பணியையும் வேண்டாம் என்று வெறுத்து, இந்தியர் வாழ்வே என் வாழ்வு—அவர் வாழிடமே எனக்கு வீடும், இன்பமும் என்று கூறி, கூறியபடியே நடந்து—ஒரு ஆடை, ஒரு துண்டு, முழங்காலுக்குமேல் விளங்க—தென் ஆப்பிரிக்காவில் இந்தியருக்காகச் சிறைப்பட்டு—அந்நாட்டின் மக்கள் வாழ்வே தம் வாழ்வென உழைத்து—அடியும் உதையும், அல்லலும் அவதியும் பெற்று, பலமுறை சிறையடைந்து—கொண்ட மனைவியையும் குடும்பத்தையும் அப்பணிக்கு இலக்காக்கி—சிறையில் செல்வ மனைவியைப் பறிகொடுத்து, கடைசியில் தாம் விரும்பிய விடுதலையைப் பெற்ற அந்த நிலையிலும் "வருக வருக" என்று அழைத்த போதிலும் "எனக்கு அந்த மகிழ்ச்சி வேண்டாம்; நவகாளியில் ஏழை மக்கள் மதவெறிக்குப் பலியாகின்றார்களே" என்று பதறி, அவர்களிடையே, விடுதலை விழா நாளில் இருந்து, அவர்களுக்காக இராப் பகலாகத் தொண்டு

செய்து, கடைசியில் எந்த மக்களுக்காக உழைத்தாரோ—எந்த நாட்டுக்காகத் தொண்டு செய்தாரோ—அந்த மக்களுள் ஒருவனுலேயே—குண்டைப் பரிசாகப்பெற்று மறைந்தாரே, காந்தியடிகள்—' அவரும் ஒரு தியாகி. ஆம்.

நாட்டிலே புரட்சிவேகம் ஆற்ருது தலை எடுத்ததை அறிந்து, தடுக்கத் தக்க தலைவர்களை யெல்லாம் சிறை செய்து, ஆங்கிலேயன் ஆணை செலுத்த, அதைக் கண்டு பொருத பல அன்பர்கள்—அறிஞர்கள் அனைவரும் ஆற்ரு நிலையிலே பல செயல்கள் செய்து அதன் காரணமாகச் சிறைசென்று நின்றதைக் கண்டு, விடுதலை உணர்ச்சி பிறந்த காரணத்தாலோ, ஏதோ பேச்சினுலோ, அன்றிச் சிறு செயல்களினுலோ சிறைபிடிக்கப்பட்டு, இரண்டொரு நாட்களோ இரண்டொரு திங்களோ சிறையிலிருந்து வெளி வந்து விட்டு, இன்று நம்மவர் ஆளவந்ததும், 'அன்று சிறை சென்றதற்குத் தக்க கூலிகொடு. ஐந்து ஏக்கர் நிலம்கொடு, அதுவும் நன்செய்யாகக் கொடு, அதுவும் எனது ஊரில் கொடு, அதுவும் நீர்ப்பாய்ச்சலுக்கு ஏற்றதாகக்கொடு. கொடாவிட்டால் அதற்கு வழி என்ன' என்று கேட்கும் அன்பர் வடிவேலுவும் ஒரு தியாகி. அவ்வளவுதானே நீங்கள் கேட்பது? நான் அதிகமாகப் பேசிவிட்டேன் என்று கோபிக்கவேண்டாம். என் உணர்ச்சியைக் கொட்டிவிட்டேன். பிழை இருந்தால் மன்னியுங்கள்.

**வடிவேலு:**—(குழறி) ஐயா! ஐயா! மன்னிப்பதா. நீங்களன்ருே என்னை மன்னிக்க வேண்டும். குருடனுகிய எனக்கு விழி அளித்தீர்கள். அறிவிழந்த என்னை அறிவாளி யாக்கினீர்கள். வாழ்விழந்த எனக்கு வாழ்வளித்தீர்கள். அண்ணுல்! உங்களைத் தெய்வம் என்று

சொல்வதல்லது வேறு என்ன சொல்வேன்? ஆம், புத்தர், இயேசு, காந்தியடிகள்—இவர்கள் பெற்ற பரிசு அரசுத் துறவு, சிலுவை, குண்டு. உண்மைத் தொண்டர்களுக்குப் பரிசு அவைகள். என்போன்ற போலிகளுக்கு ஐந்து ஏக்கர். வேண்டாம்—எந்த நிலமும் வேண்டாம். இனி, தங்கள் வழி பற்றித் தொண்டு ஒன்றையே மேற்கொண்டு பணி செய்வேன். ஐயனே! என்னை மன்னிக்க வேண்டும். தெரியாது இதுவரை சிந்தை கெட்டேன். போதும் என் தியாகத்தின் பெருமை. தொண்டின் ஆரவாரம். உணர்ந்தேன் இன்று.

இனி உண்மையில் உங்கள் அடியில் இருந்து தொண்டாற்றுவேன். எனக்கு உங்களோடு இருந்து தொண்டாற்ற ஒரு உத்தரவு மட்டும் தாருங்கள். (காலில் வீழ்கின்றான். பொன்னப்பன் தூக்கி நிறுத்தி)

ஐயா! இந்தக் கொடுமை வேண்டாம். 'நாமார்க்குங் குடியல்லோம்' என்ற வீரம் பிறந்த நாட்டில் என்னை வணங்க வேண்டாம். எல்லார்க்கும் மேலான இறையை வணங்குங்கள். இப்படிக் கண்டவர்களை யெல்லாம் வணங்கித்தான் நாட்டில் தெய்வம் பலவாகி, மதவெறி மிக்கு, அதனாலேயே பலர் மடிகின்றனர். அது மட்டுமல்ல. மக்களைக் கடவுளாக்கிய காரணத்தால் தான் அவர்களது உண்மைத் தொண்டு, தியாகம் அனைத்தும் மறைபட்டு, அற்புதம் என்ற அளவில் நின்று மற்றவர் பின்பற்றுத வழியில் மறைகின்றன. 'நாம் என்ன கடவுளா அன்றிக் கடவுள் அருள் பெற்றவரா' என்று சொல்லித் தட்டிக்

கழிக்க வழிசெய்கிருர்கள். ஆகவே எனக்கு வணக்கம் வேண்டாம். மற்ெருன்று; தாங்கள் என்னுடன் இருக்கவேண்டாம். இங்கு நான் தொண்டுசெய்கிறேன். மக்களுக்கு என்ளுல் இயன்றவரை உதவுகின்றேன். இன்னும் நம் நாட்டில் வழித்துறை அறியாத ஏழை மக்கள் வாழ்கின்ற கிராமங்கள் எத்தனையோ ஆயிரம் உள்ளன. அங்கெல்லாம் சென்று உங்கள் தொண்டினைப் பரப்புங்கள்; உங்கள் செயல் களைச் செய்யுங்கள். அதுவே நீங்கள் எனக்குச் செய்யும் உபகாரமாகும். அப்போது தான் காந்தியடிகளைப் பின்பற்றினவர் ஆவீர்கள். காலம் தாழ்த்தாது உடனே துணையற்று வாடும் கிராமங்களுக்குச் சென்று உங்கள் சொல் மூல மல்லாது செயல் மூலம் அவர்களுக்கு வழிகாட் டுங்கள். காலம் அதிகமாகிறது. நான் சென்று வருகிறேன்.

**வடிவேலு:**—வாழ் வளித்த வள்ளல்! உங்கள் வாய்மொழிப் படி நடப்பேன். வாழ்க உங்கள் தொண்டு!

## கேள்விகள்

1. பொன்னப்பரைப் பற்றி நாமறிவது யாது?
2. மாரியம்மனுக்குப் பூசை போட்டதேன்? அது தவிர்க் கப்பட்ட தெவ்வாறு?
3. தொத்து வியாதிகள் பரவாதிருக்க அரசாங்கத்தார் மேற்கொண்டுள்ள செயல் என்ன?
4. வடிவேலரைப் பற்றி நாமறிவ தென்ன?
5. தியாகிகளைப் பற்றிப் பொன்னப்பர் கூறியன யாவை?

## பயிற்சி

1. புத்தர், இயேசு, காந்தி யண்ணல் இவர்தம் வாழ்க்கை வரலாற்றினை அறிந்து கொள்ளுக.
2. ஒரு கிராமத்தில் அம்மைநோய் பரவியிருப்பதாகவும், அதற்கு மாரியம்மனுக்குப் பூசைபோட மக்கள் முயற்சிப்பதாகவும், சுகாதார அதிகாரி அதைத் தடுத்து அம்மை குத்துவதாகவும் கற்பனைசெய்து ஒரு சொல்லாடல் எழுதுக.
3. மேற்கண்ட பாடப் பகுதியை நடிக்கவும்.

## இலக்கணம்

(1) ன், ள் முன் வல்லினம் வரின் நிலை மொழி என்ன ஆகும்? அதற்கு உதாரணம் தருக.

(2) மிகுதல், கெடுதல், திரிதல்—இவைகளுக்கு இப் பாடத்தைக் கொண்டு உதாரணம் தருக.

(3) ஆண்பால் விகுதி, தொழிற்பெயர் விகுதி, காலம் காட்டும் இடைநிலை இவைகளுக்கு ஒவ்வோர் உதாரணம் தருக.

(4) உரிச்சொல், இடைச்சொல், திசைச்சொல் இவை களுக்கு உதாரணங்கள் தந்து விளக்குக.

(5) பொதுப் பாலுக்கு இரண்டு உதாரணங்களை இப் பாடத்தி லிருந்தே தருக.

(6) வினையாலணையும் பெயர், ஆகுபெயர், உடம்படு மெய் இவைகளுக்கு விளக்கம் தருக.

# 9. விவேகானந்தரின் கடிதம்

அமெரிக்கா
(U. S. A.)
1894

அன்புள்ள......

உங்கள் கடிதம் தற்போது தான் வந்து சேர்ந்தது. இதற்குள் எனது கடிதங்களை நீங்கள் பெற்றிருப்பீர்களென நினைக்கிறேன். அவற்றின் மூலம் எனக்காக அமெரிக் காவிற்கு நீங்கள் ஏதும் அனுப்ப வேண்டாம் என்பதையும் அறிந்திருப்பீர்கள். எப்பொருளும் அளவுக்கு அதிகமாயின் கேடு தரும். இங்கு நாளிதழ்களில் ஆரவாரப் பிரசாரம் என்னை நாடறிந்தவனாக்கி விட்டது. எனினும் நாளிதழ் களின் பிரசாரம் பற்றிய யோகம் இந்தியாவில் இருப்பது போல் அவ்வளவு அதிகமாக இங்கு இல்லை. இங்கு, அதற்கு நேர்மாறாக, அளவுக்கு மீறிய நாளிதழ்ப் பிரசாரம் உயர் வகுப்பாரிடத்து வெறுப்பையே அளிக்கின்றது. இது பற்றி இவ்வளவு போதும்.

இங்கு அமைப்பது போன்ற கூட்ட நடவடிக்கைகளை அங்கு இந்தியாவிலும் அமைக்க நீங்கள் முயன்று ஏற்பாடு செய்யுங்கள். நீங்கள் இனியும் இந்நாட்டுக்கு எதையும் அனுப்பத் தேவையில்லை. பெண்களின் தேவையையே முதலில் கவனிக்க வேண்டியிருத்தலின் நான் அன்னைக் காக அங்கு முதலில் ஒரு இடம் அமைக்க முடிவு செய் துள்ளேன். அவ்வன்னைக்கு வேண்டிய இடத்துக்காக நான் ஏறக்குறைய 7000 ரூபாய் அனுப்பக் கூடும். முதலில் அவ்விடத்தை நாம் முயன்று பெற்றுவிட்டால் நான் மற்ற

வற்றைப் பற்றிக் கவலை கொள்ள மாட்டேன். நான் இந் நாட்டை விட்டு வந்துவிட்ட போதிலும்கூட இங்கிருந்து ஆண்டொன்றுக்கு 1600 ரூபாய் வரக்கூடும் என்று நம்புகிறேன். அத் தொகையைக் கொண்டு மகளிர் இல்லத்தை ஓம்ப வழி செய்து விட்டால் பின் அது தானுகவே வளர்ச்சியுறும். நான் அதற்குத் தேவையான இடத்தை வாங்குமாறு முன்னமே உங்களுக்கு எழுதி யிருந்தேன்.

நான் இதற்கு முன்பே இந்தியா வந்திருக்கலாம். ஆனுல் அங்கேதான் பணம் இல்லையே. ஆயிரக்கணக்கான மக்கள் அங்குகூடி இந்தியாவில் இராமகிருஷ்ணருக்கு அஞ்சலி செலுத்துகின்றனர். ஆனுல் ஒரு காசு கூடக் கொடுப்பவர் இல்லையே! இவைகளுக் கிடையில் எது போயினும் ஆய்ந்த அமைதி வாழ்வில் வாழப் பழகுதல் நலம். இவ்வுலகம் கொள்கைகளைப் பற்றிக் கவலை கொள் வதே கிடையாது. தனி மனிதர்களுக்கு இது மதிப்புத் தருகிறது. தாங்கள் விரும்பும் மனிதன் எவ்வளவு மட்ட மான பயனற்றவைகளைப் பலகாலும் தொடர்ந்து பேசி னுலும் அவர்கள் கேட்டுக்கொண்டே இருப்பார்கள். அவர்கள் விரும்பாதவர்கள் எவ்வளவு நல்ல கருத்தை எடுத்துக் காட்டினுலும் அச் சொற்களைச் செவியில் ஏற்றுக் கொள்ள மறுப்பார்கள். இவ்வுலக நிலை ஆராய்ந்து அதற்கு ஏற்ப உங்களைத் திருத்தி அமைத்துக் கொள்ளுங்கள். எல் லாம் சரியாகும் நாள் வராமல் போகாது. உங்களுக்கு ஆளும் பொறுப்பு வந்தால் 'தொண்டு செய்யும் அடிமை' யாக இருக்கப் பழகுங்கள். அதுதான் வாழ்வின் உண்மையான இரகசியம். அப்போது உங்கள் சொற்கள் கடினமானவை களாக இருப்பினும் உங்களது அன்புள்ளம் உண்மையை உலகுக்கு எடுத்துக் காட்டும். எம்மொழியில் கூறப்படினும்

தன்னை அறியாமலேயே மனிதன் அன்புக்குக் கட்டுப் பட்டே நிற்பான்.

இராமகிருஷ்ண பரமஹம்சர் கடவுள் அவதார மானவர். எனக்கு அதில் ஐயப்பாடு கிடையாது. நீங்கள் மக்களை, அவர்களே முயன்று அவருடைய நல்லுரைகளை விரும்பிக் கேட்டு அறிந்து கொள்ள ஏற்பாடு செய்யவேண் டும். ஆனால் அவர்களை வற்புறுத்திக் கேட்கவேண்டும் என்று கூறும் ஒன்றை நான் தடுக்கிறேன்.

மக்கள் தம்தம் கருத்தைத் தாராளமாக வெளி யிடட்டுமே! நாம் ஏன் அவற்றைத் தடை செய்யவேண்டும்? இராமகிருஷ்ண பரஹம்சரை முதலில் நன்கு அறிந்து கொண்டா லன்றி யாரும் வேத வேதாந்த பாகவத புராணங் களின் தூய உண்மைப் பொருள்களை அறிந்து கொள்ள முடியாது. அகில இந்திய சமய உணர்வென்னும் பேரமைப் புக்கு அவரது வாழ்வு எல்லை யற்ற வற்றாத பேரொளி வாரி வழங்கும் ஒளி விளக்காக அமைகின்றது. வேதங் களுக்கும் அவற்றின் கொள்கைகளுக்கும் அவர் ஒரு நட மாடும் உரைநூலாகக் காட்சி அளிக்கின்றார். அவர் தமது ஒரே வாழ்க்கையில் இந்திய நாட்டு எல்லாச் சமய அமைப் புக்களும் கலந்து நின்ற பெருவாழ்வு வாழ்ந்து காட்டி யுள்ளார்.

..........................................

என்றும் தங்கள்
விவேகானந்தா

* இஃது அடிகளின் ஆங்கிலக் கடிதத்தின் மொழிபெயர்ப்பு.

# செய்யுள் பகுதி

## கடவுள் வாழ்த்து

**i. மாணிக்கவாசகர்**

அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை
எல்லாமும்
குன்றே அனையாய் என்னை ஆட்கொண்ட போதே
கொண்டிலையோ
இன்றுஓர் இடையூறு எனக்கு உண்டோ எண்தோள்
முக்கண் எம்மானே!
நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இத(ற்)கு
நாயகமே.

**ii. தாயுமானவர்**

நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்
நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை
சுடராய் எல்லாம்
வைத்திருந்த தாரகமாய் ஆனந்த மயமாகி மனம்
வாக்கு எட்டாச்
சித்துருவாய் நின்றஒன்றைச் சுகாரம்பப் பெருவெளி
யைச் சிந்தை செய்வாம்.

**iii. பாரதியார்**

ஆத்தி சூடி இளம்பிறை அணிந்து
மோனத் திருக்கும் முழுவெண் மேனியான்
கருநிறங் கொண்டுபால் கடல்மிடைக் கிடந்தோன்
மகமது நபிக்கு மறையருள் புரிந்தோன்
ஏசுவின் தந்தை எனப்பல மதத்தினர்

உருவகத் தாலே உணர்ந்து உணராது
பலவகை யாகப் பரவிடும் பரம்பொருள்
ஒன்றே ; அதன்இயல் ஒளிஉறும் அறிவாம்
அதன்நிலை கண்டார் அல்லலை அகற்றினர் ;
அதன்அருள் வாழ்த்தி அமரவாழ்வு எய்துவோம்.

iv. **தமிழன்னை—வரந்தருவார்**

பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்து
இருப்பிலே இருந்து வைகை ஏட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்து ஓர்ஏன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளரு கின்றாள்.

## நீதிப் பகுதி

### 1. குறள்

1. வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை யில (1-4)
2. விண்நின்று பொய்ப்பின் விரிநீர் வியன்உலகத்து
உள்நின்று உடற்றும் பசி (2-3)
3. மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்
ஆகுல நீர் பிற (4-4)
4. என்புஇல் லதனை வெயில்போலக் காயுமே
அன்புஇல் லதனை அறம் (8-7)
5. சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும் (10-8)
6. செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது (11-1)
7. கேடும் பெருக்கமும் இல்லல்ல ; நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க்கு அணி (12-5)

8. தீயினுல் சுட்டபுண் உள்ஆறும்; ஆருதே
நாவினுல் சுட்ட வடு (13-9)

9. ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை; இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி (14-7)

10. இன்மையுள் இன்மை விருந்துஓரால்; வன்மையுள்
வன்மை மடவார் பொறை (16-3)

11. அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும் (17-8)

12. இலம்என்று வெஃகுதல் செய்யர் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர் (18-4)

13. கண்ணின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க
முன்னின்று பின்னேக்காச் சொல் (19-4)

14. பல்லார் முனியப் பயன்இல சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும் (20-1)

15. அறிவினுள் எல்லாம் தலைஎன்ப தீய
செறுவார்க்கு செய்யா விடல் (21-3)

16. தாள்ஆற்றித் தந்தபொருள் எல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தல் பொருட்டு (22-2)

17. ஈத்துஉவக்கும் இன்பம் அறியார்கொல் தாம்உடைமை
வைத்துஇழக்கும் வன்கண் ணவர் (23-8)

18. உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்(கு)ஒன்று
ஈவார்மேல் நிற்கும் புகழ் (24-2)

19. வலியார்முன் தன்னை நினைக்கத்தான் தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து (25-10)

20. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும் (26-10)

21. உற்றநோய் நோன்றல் உயிர்க்குஉறுகண் செய்யாமை
அற்றே தவத்துக்கு உரு (27-1)

22. மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின் (28-10)

23. எல்லா விளக்கும் விளக்கல்ல; சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு (30-9)

24. உள்ளிய எல்லாம் உடன்எய்தும் உள்ளத்தான்
உள்ளான் வெகுளி எனின் (31-9)

25. எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானும்
மாணா செய்யாமை தலை (32-7)

26. பகுத்துஉண்டு பல்உயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை (33-2)

27. அவா இல்லார்க்கு இல்லாகும் துன்பம்; அஃது உண்டேல்
தவாஅது மேன்மேல் வரும் (37-8)

28. கொடைஅளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க்கு ஒளி (39-10)

29. கேடில் விழுச்செல்வம் கல்வி; ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை (40-10)

30. விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர் (41-10)

31. இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல் (42-5)

32. அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவுஇலார்
என்னுடைய ரேனும் இலர் (43-10)

33. வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை (44-9)

34. அறன்அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறன்அறிந்து தேர்ந்து கொளல் (45-1)

35. மனநலம் மன்உயிருக்கு ஆக்கம்; இனநலம்
எல்லாப் புகழும் தரும் (46-7)

36. பீலிபெய் சாகாடும் அச்சுஇறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின் (48-5)

37. கொக்குஒக்க கூம்பும் பருவத்து ; மற்றுஅதன்
குத்துஒக்க சீர்த்த விடத்து (49-10)

38. நொடும்புனலுள் வெல்லும் முதலை ; அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற (50-5)

39, பற்றற்ற கண்ணும் பழமை பாராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே உள (53-1)

40. இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாம்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போது (54-9)

41. கொலையில் கொடியாரை வேந்துஒறுத்தல் பைங்கூழ்
களைகட்டு அதனொடு நேர் (55-10)

42. அல்லல்பட்டு ஆற்றுது அழுதகண்ணீர் அன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை (56-5)

43. வெள்ளத்து அனைய மலர்நீட்டம் ; மாந்தர்தம்
உள்ளத்து அனையது உயர்வு ' (60-5)

44. இன்பம் விழையான் (இடும்மை இயல்பு) என்பான்
துன்பம் உறுதல் இலன் (63-8)

45. கேட்டார்ப் பிணிக்கும் தகைஅவாய் கேளாறும்
வேட்ப மொழிவதாம் சொல் (65-3)

46. அழக்கொண்ட எல்லாம் அழப்போம் ; இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை (66-9)

47. துன்பம் உறவரினும் செய்க துணிவுஆற்றி
இன்பம் பயக்கும் வினை (67-9)

48. தள்ளா வினையுளும் தக்காரும் தாழ்வுஇலாச்
செல்வரும் சேர்வது நாடு (74-1)

49. அறன்ஈனும் இன்பமும்ஈனும் திறன் அறிந்து
தீதுஇன்றி வந்த பொருள் (76-4)

50. புணர்ச்சி பழகுதல் வேண்டா ; உணர்ச்சிதான்
நட்புஆம் கிழமை தரும் (79-5)

51. மருவுக மாசுஅற்ருர் கேண்மை ; ஒன்றுஈத்தும்
ஒருவுக ஒப்புஇலார் நட்பு (80-10)

52. ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெரும்செல்வம் உற்றக் கடை (84-7)

53. துஞ்சினுர் செத்தாரின் வேறுஅல்லர் ; எஞ்ஞான்றும்
நஞ்சுஉண்பார் கள்உண் பவர் (93-6)

54. மருந்துஎன வேண்டவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றுஅது போற்றி உணின் (95-2)

55. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னுர்
உயிர்நீப்பர் மானம் வரின் (97-9)

56. பெருமை பெருமிதம் இன்மை ; சிறுமை
பெருமிதம் ஊர்ந்து விடல் (98-9)

57. இன்ஞ செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு ? (99-7)

58. அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கள்பண்பு இல்லா தவர் (100-7)

59. கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய
கோடிஉண் டாயினும் இல் (101-5)

60. பலகுடை நீழலும் தம்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர். (104-4)

2. **நீதிநெறி விளக்கம் :—குமரகுருபரர்**

1. அறம் பொருள் இன்பம் வீடும் பயக்கும்
புறங்கடை நல்இசையும் நாட்டும்--உறுங்கவல் ஒன்(று)
உற்றுழியும் கைகொடுக்கும் கல்வியின் ஊங்குஇல்லை
சிற்றுயிர்க்கு உற்ற துணை

2. எத்துணைய வாயினும் கல்வி இடமறிந்து
உய்த்துணர்வு இல்லெனில் இல்லாகும்—உய்த்
துணர்ந்தும்
சொல்வன்மை இன்றுஎனின் என்னாகும் ? அஃது
உண்டேல்
பொன்மலர் நாற்றம் உடைத்து

3. அவைஅஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும் கல்லார்
அவைஅஞ்சா ஆகுலச் சொல்லும்—நவையஞ்சி
ஈத்துண்ணார் செல்வமும் நல்கூர்ந்தார் இன்னலமும்
பூத்தலில் பூவாமை நன்று

4. இன்சொல்லன் தாழ்நடையன் ஆயினும்ஒன்று
இல்லானேல்
வன்சொல்லின் அல்லது வாய்திறவா—என்
சொலினும்
கைத்துடையான் காற்கீழ் ஒதுங்கும் கடல்ஞாலம்
பித்துடைய அல்ல பிற

5. கற்றோர்க்குக் கல்வி நலனேகலன் அல்லால்
மற்றோர் அணிகலன் வேண்டாவாம்—முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா ; யாரே
அழகுக்கு அழகுசெய் வார்

6. முற்றும் உணர்ந்தவர் இல்லை முழுவதூஉம்
கற்றனம் என்று களியற்க—சிற்றுளியால்
கல்லும் தகரும் ; தகரா கனங்குழாய்
கொல்உலைக் கூடத்தி னால்

7. தம்மின் மெலியாரை நோக்கித் தமதுஉடைமை
அம்மா பெரிதென்று அகம்மகிழ்க—தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றவெல்லாம்
எற்றே இவர்க்குநா மென்று.

8. ஆக்கம் பெரியார் சிறியார் இடைப்பட்ட
மீச்செலவு காணின் நனிதாழ்ப—தூக்கின்

மெலியது மேன்மேல் எழச்செல்லச் செல்ல
வலியதன்றே தாமும் தொலைக்கு

9. பிறரான் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாதே நோற்பதுஒன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்கும் தாழ்ச்சி சொலல்

10. கண்நோக்கு அரும்பா நகைமுகமே நாள்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா—வண்மை
பலமா நலங்கனிந்த் பண்புடையார் அன்றே
சலியாத கற்ப தரு

11. வாங்கும் கவளத்து ஒருசிறிது வாய்தப்பின்
தூங்கும் களிறோ துயர்வுறா—ஆங்கதுகொண்(டு)
ஊரும்எறும்பு இங்கு ஒருகோடி உய்யுமால்
ஆரும் சினையோடு அயின்று

12. மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணா யினார்.

## சிறுகதைப் பகுதி

### சேக்கிழார் பெரியபுராணம்—திருநாவுக்கரசர் விடம் தீர்த்தல்

1. ஆளுடைய நாயகன்தன் அருள்பெற்று அங்கு அகன்று போய்
வாளைபாய் புனல்பழனத் திருப்பழனம் மருங்கு அணைந்து
காளவிடம் உண்டுஇருண்ட கண்டர்பணிக் கலன் பூண்டு
நீள்இரவில் ஆடுவார் கழல்வணங்க நேர் பெற்றார்.

2. அப்பதியைச சூழ்ந்ததிருப் பதியில்அரனுர் மகிழும்
ஒப்பரிய தானங்கள் உள்உருகிப் பணிந்து அணைவார்
மெய்ப்பொருள்தேர் நாவினுக்கு வேந்தர்தாம் மேவினுர்
செப்பருஞ்சீர் அப்பூதி அடிகள்ஊர் திங்களூர்.

3. அந்தணரின் மேம்பட்ட அப்பூதி அடிகளார்
தந்தனய ருடன்சாலை கூவல்குளம் தருதண்ணீர்ப்
பந்தர்பல ஆண்டஅரசு எனும்பெயரால் பண்ணினமை
வந்தணைந்த வாகீசர் கேட்டுஅவர்தம் மனைநண்ண.

4. மற்றவரும் மனமகிழ்ந்து மனைவியார் மைந்தர்பெரும்
சுற்றமுடன் களிகூரத் தொழுதுஎழுந்து சூழ்ந்து மொழிக்
கொற்றவரை அமுதுசெயக் குறைகொள்வார் இறை கொள்ளப்
பெற்றபெருந் தவத்தொண்டர் திருவுள்ளம் பெறப் பெற்றுர்.

5. காண்தகைமை இன்றியும்முன் கலந்தபெருங் கேண்மையினுர்
பூண்டபெருங் காதலுடன் போனகமும் கறியமுதும்
வேண்டுவன வெவ்வேறு விதங்கள்பெற விருப்பினுல்
ஆண்டஅரசு அமுதுசெயத் திருஅமுது ஆம்படி அமைத்து

6. திருநாவுக் கரசுஅமுது செய்தருள மற்றுஅவர்தம்
பெருநாமம் சாத்தியஅப் பிள்ளைதனை அழைத்துஅன்பு
தருஞானத் திருமறையோர் தண்டலையின் வண்கதலிக்
குருநாளக் குருத்துஅரிந்து கொண்டுவரத் தனிவிட்டார்.

7. ஆங்கு அவனும் விரைந்துஎய்தி அம்மருங்கு தாழாதே
பூங்கதலிக் குருத்தரியப் புகும்அளவில் ஒருநாகம்
தீங்குஇழைக்க அதுபேணுன் திருஅமுது செய்துஅருள
ஓங்கு கதலிக்குருத்துக் கொண்டுஒல்லை வந்து அணைந்தான்.

8. தீயவிடம் தலைக்கொள்ளத் தெருமந்து செழுங்
குருத்தைத்
தாயர்கரத் தினில்நீட்டித் தளர்ந்துதனை தழல்நாகம்
மேயபடி உரைசெய்யான் விழக்கண்டு "கெட்டு
ஒழிந்தோம் ;
தூயவர்இங்கு அமுதுசெயத் தொடங்கார்" என்று
அதுஒளிந்தார்.

9. தம்புதல்வன் சவம்மறைத்துத் தடுமாற்றம் இலராகி
'எம்பெருமான் அமுதுசெய வேண்டும்' என வந்து
இறைஞ்ச
உம்பர்பிரான் திருத்தொண்டர் உள்ளத்தில் தடு
மாற்றம்
நம்பர்திரு வருளாலே அறிந்தருளி நவைதீர்ப்பார்.

10. அன்றுஅவர்கள் மறைத்ததனுக்கு அளவிறந்த கருணை
யராய்க்
கொன்றைநறும் சடையார்தம் கோயிலின்முன்
கொணர்வித்தே
'ஒன்றுகொலாம்' எனப்பதிகம் எடுத்துஉடையான்
சீர்பாடப்
பின்றைவிடம் போய்நீங்கிப் பிள்ளைஉணர்ந்து
எழுந்திருந்தான்.

11. அரும்தனையன் உயிர்பெற்ற அதுகண்டும் அமுது
செயா(து)
இருந்ததற்குத் தளர்வெய்தி இடர்உழந்தார் துயர்நீங்க
வருந்தும்அவர் மனைப்புகுந்து வாகீசத் திருமுனிவர்
விருந்துஅமுது செய்தருளி விருப்பினுடன் மேவுநாள்.

12. திங்களூர் தனில்நின்றும் திருமறையோர் பின்செல்லப்
பைங்கண்விடைத் தனிப்பாகர் திருப்பழனப் பதிபுகுந்து

தங்குபெரும் காதலொடும் தம்பெருமான் கழல்சார்ந்து
பொங்கியஅன்பு உறவணங்கி முன்னின்று போற்
றிசைப்பார்.

13. புடைமாலை மதிக்கண்ணிப் புரிசடையார் பொன்கழல்
கீழ்
அடைமாலைச் சீலம்உடை அப்பூதி அடிகள்தமை
நடைமாணச் சிறப்பித்து நன்மைபுரி தீந்தமிழின்
தொடைமாலைத் திருப்பதிகச் சொன்மாலை பாடினார்.

## பல்சுவைப் பகுதி

1. **பயிர் விளைதலின் சிறப்பும், அதன் உவமையும்.**

சொல்லரும் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந்து ஈன்று மேலலார்
செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்தநூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே.

(திருத்தக்க தேவர்)

2. **நாட்டுவளம்**

கால்எல்லாம் தகட்டுவரால்; கரும்புஎல்லாம் கண்
பொழிதேன்;
பார்எல்லாம் கதிர்ச்சாலி; பரப்புஎல்லாம் குலைக்கமுகு;
சால்எல்லாம் தரளநிரை; தடமெல்லாம் செங்கழுநீர்;
மேல்எல்லாம் அகில்தூபம்; விருந்துஎல்லாம் திருந்து
மனை.

(சேக்கிழார்)

3. **புலவர் ஆற்றுப்படை**

தேருலைப் புரவி வாரணத் தொகுதி திறைகொணர்ந்து
வரு மன்னநின்
தேயமே துனது நாமமேது புகல் செங்கை யாழ்தடவு
பாண கேள்

வாரு மொத்தகுடி நீரு நாமு மகதேவ னுறைநகர்
காவலன்
வாண பூபதி மகிழ்ந்தளிக்க வெகுவரிசை பெற்றுவரு
*புலவன் யான்*
நீருமிப்பரிசு பெற்றுமீளவர லாகு மேகுமவன் முன்றில்
வாய்
நித்திலச்சிகர மாடமாளிகை நெருங்கு கோபுர மருங்
கெலாம்
ஆருநிற்கு முயர்வேம்பு நிற்கும் வளர் பனையுநிற்கு
மதன ருகிலே
அரசுநிற்கும் அரசைச்சுமந்த சில அத்தி நிற்கும்
அடையாளமே.

## 4. மூங்கிலிலே.

மூங்கிலிலே யொளித்திருந்தான் முக்கண் சாமி
முதியகடல் போய்ப்படுத்தான் முகுந்த சாமி
தாங்கமலப் பொகுட்டுறைந்தான் தலைநாற் சாமி
தடவரையில் உழன்று நின்றான் தகப்பன் சாமி
வாங்கியுண்ண வழிகாத்தான் வயிற்றுச் சாமி
வாணருக்கிங்கு உதவுவர்யார் மற்றோர் சாமி
ஓங்கியசீர் மயிலையிற் பொன்னப்ப சாமி
உதவியவேங் கடசாமி உசித வேளே.

(இராமச்சந்திரக் கவிராயர்)

## 5. பொதியமலைச் சிறப்பு

கன்னமதம் பெய்து உறங்கு கொலைக் களிறு கிடந்து
பிளிறுமலை
தென்னன் தமிழும் பசுங்குழவித் தென்றல் கொழுந்தும்
திளைக்கும்மலை

அன்னம் பயிலும் பொழிற்கூடல் அறல்அம் கூந்தல்
பிடியாண்ட
பொன்மை குடுமித் தடஞ்சாரல் பொதியமலை என்மலை
அம்மே.

**குமரகுருபரர்**

## 6. மொழி பெயர்ப்புப் பாடல்கள்

I. உள்ளமே நல்ல வுரையாளன் ; காலந்தான்
எள்ளற் கருமாசான் என்பரால்—விள்ளும்
உலகே பெருநூலாம் ; ஒப்பிலா நண்பன்
இலகும் உலகிற் கிறை.

II. கல்லைத் தகர்க்குங் கரும்பொன் ; கரும்பொன்னை
ஒல்லை யுருக்கும் உறுகனல் ; அக்கனலைத்
தெண்ணீ ரவிக்கும் ; செறிநீரை வான்முகிலே
உண்ணும் ; முகில்தன்னை ஓட்டும் உறுவளியே ;
நண்ணும் வளியெதிர்ப்பான் மாந்தன் ; நடுக்கந்தான்
எண்ணவனை வெல்லும் ; இதையோட்டுங் கள்ளே ;
துயில்வெல்லுங் கள்ளை ; துயிற்குத் தலைவன்
அயிர்தீர் சாக்காடே ; அது தன்னின் மீட்கும்
செயிர்தீர் அறமே தெளி.

(Translated from Talmud)

புலவர் : **சி. சொக்கலிங்கம்**

# குறிப்புரை

## வாழ்த்துப் பகுதி

மாணிக்கவாசகர் :—இவரது இயற் பெயர் என் என்பது தெரிந்திலது. இவர் மதுரையம்பதியை யடுத்துள்ள திருவாதவூரின் கண்ணே பிறந்தவர் ; ஆதலின் திருவாதவூரர் எனவும் அழைக்கப் பெறுவர், இவர் அரிமர்த்தன பாண்டியனிடம் அமைச்சரா யிருந்தார். அரசனுக்காகக் குதிரை வாங்கச் சென்றவிடத்து, திருப்பெருந்துறையில் இறையுபதேசம் பெற்ருர். கொண்டுபோன பொருளைச் செலவிட்டுத் திருப்பெருந்துறை ஆலயத்தை அமைத்தார். அது கேட்ட பாண்டியன் இவரை அழைப்பித்துத் துன்புறுத்தினுன். அதனுல் இறைவன் நரிகளைப் பரிகளாக்கியும், பரிகளை நரிகளாக்கியும், வையைப் பெருவெள்ளம் வருவித்தும், மண் சுமந்து பிரம்படிபட்டும் இவர்தம் இறையன்பை உலகறியச் செய்தார் என்பன போன்ற வற்றைத் திருவிளையாடற் புராணத்திற் பரக்கக் காணலாம். இவரியற்றிய திருவாசகம், திருக்கோவையார் எட்டாந் திருமுறையாக வகுக்கப் பெற்றுள்ளன.

அன்றே = திருப்பெருந்துரையில் ஆட்கொண்ட அப்போதே
ஆவி = உயிர்
உடைமை = பொருள்
ஆட்கொண்ட = ஏற்றுக்கொண்ட
இடையூறு = துன்பம்
முக்கண் = நெற்றிக் கண்ணெடுங் கூடிய மூன்று கண்கள் (சந்தர, சூரிய, அக்கினி)

நன்று = நன்மை
பிழை = தீங்கு
நாயகம் = தலைவன்

தாயுமானவர் :—சோழவள நாட்டின்கண் திருமறைக்காடு எனும் சிவத்தலம் உளது. அதிற் கேடிலியப்ப பிள்ளை யென்னும் சைவ வேளாளர் ஒருவர் இருந்தார். அவர் கல்வி, கேள்வி மிக்கவர்; இறைவனிடம் மாருத அன்புடையவர். அக்காலத்து, திருமலைநாயக்கரது பெயரரான விஜயரங்க சொக்கநாத நாயகர் திருச்சியிலிருந்து சோழ பாண்டிய நாடுகளை யாண்டிருந்தார். அவர் பிள்ளையவர்கள் குணநலங்களை யறிந்து தமது அரசாங்கத்தில் உயர்ந்த உத்தியோகத்தில் அமர்த்திக்கொண்டார். அவருக்கு அவ்வூரில் ஒரு குழந்தை பிறந்தது. அதற்கு அவ்வூர் இறைவன் பெயராகிய தாயுமானவர் என்ற திருநாமம் இடப்பட்டது. அவர் கல்வி, கேள்விகளில் வல்லவராகித் தம் தந்தைக்குப் பிறகு அவ் வுத்தியோகத்தை யேற்று நடத்தி வந்தார். அவ் வரசனுக்குப் பின்னர், மௌன குருவிடம் ஞான வுபதேசம் பெற்றுக் கொண்டு துறவறம் புக்குத் தேவை நகரிற் றங்கியிருந்து இறையருட் பேறு பெற்றனர். இவர் மணம் செய்து கொண்டு சில காலம் இல்லறம் நடத்தி ஓர் ஆண் மகவையும் பெற்றிருந்தார்.

நித்தியம் = நிலைபேறுனது
நிர்மலம் = தூய்மையானது
நிட்களம் = உருவமற்றது
நிராமயம் = நோயில்லாதது
துரியம் = பரமான்மா ; சுத்தநிலை
தாரகம் = ஆதாரம்
சித்து = அறிவு
சுகாரம்பம் = இன்பத் தொடக்கம்

பாரதியார் :—தேசீயக் கவி சுப்பிரமணிய பாரதியார் இராமநாதபுரத்தையடுத்த எட்டயபுரத்திற் பிறந்தவர். இவர் தந்தையார் சின்னசாமி ஐயர் ஆவர். இவர் இளமையிலேயே கவி பாடும் திறமை வாய்ந்திருந்தார். தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மொழிகள் நன்கு பயின்றவர். நாட்டுத் தொண்டும், மொழித் தொண்டுமே தம் கடனெனக் கருதி விடுதலை யியக்கத்திற்குத் தன்னாலான வகையெல்லாம் உழைத்தார். பல நாட்டுப் பாடல்களைப் பாடி மக்கள் உணர்ச்சியைத் தட்டி எழுப்பியதுடன் 'புதுமைக் கவி பாரதியார்' என்ற பெயரையும் பெற்றார்.

ஆத்தி = ஆத்திமலர்
இளம்பிறை = பிறைச்சந்திரன்
மோனம் = தவநிலை
மறை = வேதம்
பரவிடும் = வணங்குகின்ற
பரம்பொருள் = மேலான பொருள் ; இறைவன்
அமர வாழ்வு = மேலான இன்ப வாழ்வு

வரந்தருவார் :—இவர் வில்லிபுத்தூராரின் திருமகனாவர். தம் தந்தையார் பாடிய வில்லிபாரதத்திற்கு சாற்றுக்கவி பாடியுள்ளார். அப் பகுதியைச் சார்ந்த பாடல் தான் இங்கு பாடமாக வந்துள்ள செய்யுள்.

பொருப்பு = பொதிகைமலை
தென்னன் = பாண்டியன்
ஏனம் = பன்றி (வராகவதாரம்)
மருப்பு = கொம்பு
பாவை = நிலமகள்

(இங்கு ஞானசம்பந்தர் சமணரொடும் நடத்திய அனல் வாதம், புனல்வாதங்களும், திருமால் வராகவதாரம் எடுத்துப் பூமியைக் கொண்டு வந்த வரலாறும் குறிக்கப்பட்டுள்ளன).

## நீதிப் பகுதி

### திருக்குறள்

திருவள்ளுவர் :—இப் பெரியார் சென்னையைச் சேர்ந்த திருமயிலையில் பிறந்து, வாசுகி அம்மையை மணந்து, இல்லறம் நடத்தி வாழ்ந்தவர் எனத் தெரிகின்றது. அன்றி இவர்தம் சமயம், குலம் முதலியவைபற்றி ஒன்றும் அறிதற்கில்லை. இவர் இயற்றியுள்ள நூற் பொருளை நோக்குமிடத்து, இவர் தக்க குடியிற் பிறந்து அறிவு திரு ஆற்றல்களிலே சிறந்து அனுபவ மிக, அதன் விளைவாகவே இந்நூல் எழுந்தது எனக் கொள்ளலே பொருத்தமுடைத்தெனத் தெரிகிறது. திருவள்ளுவருக்குத் தேவர் முதலிய பத்துப் பெயர்களும், இவர்தம் நூலுக்கும் பத்துப் பெயர்களும் உள எனவும், திருக்குறளுக்குப் பதின்மர் உரை கண்டுள்ளனர் எனவும் அறியக் கிடக்கின்றன. இந்நூலுக்கு அண்மையில் வெளிவந்துள்ள புத்துரைகளும் பல உள்ளன. இந்நூல் நாடு, குலம், மொழி வேறுபாடின்றி உலகினர் எல்லோருக்கும் ஒப்ப அமைந்துள்ளதால் உலகத்திலுள்ள பல மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டுப் போற்றப்பட்டு வருகின்றது.

1. வேண்டுதல் = விருப்பு
   வேண்டாமை = வெறுப்பு
   யாண்டும் = ஒருபோதும்
   இடும்பை = பிறவித் துன்பம்
2. விண் = மழை
   இன்று = பெய்யாமல்
   பொய்ப்பின் = இல்லாமல் நின்று போகுமானால்

விரிநீர் = பரந்த கடல்
வியன் உலகம் = பெரிய உலகம்
உடற்றும் = வருத்தும்

3. மாசு = குற்றம்
பிற = ஏனைய வகை
ஆகுல நீர = ஆரவாரத் தன்மை யுடையனவேயாம்

4. என்பிலதனை = என்பில்லாத உடலை
காயும் = வருத்தும்
அன்பில் லதனை = அன்பில்லாத உயிரை
அறம் = அறக் கடவுள்

5. சிறுமையுள் நீங்கிய = பொருளாற் பிறர்க்குத் துன்பம் செய்யாத
இன்சொல் = இனிய சொல்
மறுமை = மறு பிறப்பு
இம்மை = இப் பிறவி

6. செய்யாமல் = ஒருவன் தனக்கு உதவி செய்யா திருக்கவும்
வையகம் = பூமி
வானகம் = மேலுலகம்
ஆற்றல் அரிது = ஈடாகக் கொடுத்தாலும் ஒத்த லரிதாம்

7. கேடு = தீவினையால் வரும் அழிவு
பெருக்கம் = நல்வினையால் வரும் ஆக்கம்
இல் அல்ல = இல்லாம லில்லை (உளது)
கோடாமை = ஒரு சார்பு பற்றி நில்லாமை
அணி = அழகு

8. உள் ஆறும் = மனத்தின்கண் ஆறுதல் பெறும்
வடு = தழும்பு

9. எய்துவர் = அடைவர்
இழுக்கத்தின் = ஒழுக்கத்தினின்றும் தவறுதலானே
எய்தாப் பழி = அடைதற் குரிய தல்லாத பழியை

10. இன்மை = வறுமை
ஒரால் = நீக்குதல்
வன்மை = உறுதி
மடவார் = அறியாதார்
பொறை = பொறுத்தல்

11. அழுக்காறு = பொறாமை
ஒரு = ஒப்பற்ற
திருச்செற்று = செல்வத்தை அழித்து
தீயுழி = நரகின் கண்
உய்க்கும் = செலுத்தும்

12. இலம் என்று = வறுமையுடையோம் என்று
வெஃகுதல் = பிறர்பொருளை விரும்புதல்
புலம் = ஐம்புலன்கள்
புன்மை = குற்றம்
காட்சியவர் = நல்லறிவுடைய பெரியோர்

13. கண் நின்று = ஒருவர் முன்னின்று
கண் அற = இரக்கமின்றி
முன் இன்று = அவன் தன் முன்ன ரில்லாதபோது
பின் நோக்கா = பின் வருங் குற்றத்தை நோக்காத

14. பல்லார் = அறிவுடையார் பலரும்
முனிய = கோபிக்குமாறு
எல்லாரும் = எல்லோராலும்
எள்ளப்படும் = இகழப்படுவான்

15. அறிவினுள் எல்லாம் = தமக்குறுதி நாடும் அறிவு நெறிகள் எல்லாவற் றுள்ளும்
செறுவார்க்கும் = பகைவர்க்கும்

16. தாள் = முயற்சி
தந்த = ஈட்டிய
வேளாண்மை = ஒப்புரவு

17. ஈத்து உவக்கும் இன்பம் = வறியார்க்குக் கொடுத்து அவ ருவத்தலின் தான் மகிழ்கின்ற இன்பத்தை
வன்கணவர் = அருளி லாதார்

18. உரைப்பவை = புகழ்ந்து கூறுபவை

19. தான் = அருளிலான்
மெலியார் = எளியார்

20. கொல்லான் = கொலை செய்யாதவனாகி
புலாலை மறுத்தானை = புலாலை உண்ணாதவனை

21. உற்றநோய் = தனக்குண்டாகிய துன்பம்
நோன்றல் = பொறுத்துக் கொள்ளுதல்
உறுகண் = துன்பம்
உரு = வடிவம்

22. மழித்தல் = மொட்டை யடித்தல்
நீட்டல் = சடைமுடி வளர்த்தல்
உலகம் = உயர்ந்தோர்
பழித்தது = செய்யத் தகாதென வென்று கடிந்த வற்றை

23. சான்றோர்க்கு = துறவறத்தார்க்கு
பொய்யா விளக்கு = பொய்யாமையாகிய விளக்கு (பொய்கூறாமை)

24. உள்ளியது = கருதியது
உள்ளான் = நினைக்கமாட்டான்
வெகுளி = கோபம்

25. எனைத்தானும் = மிகச் சிறிய அளவேனும்
எஞ்ஞான்றும் = ஒருபோதும்
மனத்தான்ஆம் = மனத்திலே எண்ணுகின்ற
மாணா = இன்னாச் செயலை (துன்பத்தை)

26. பகுத்து = பகிர்ந்து கொடுத்து
உண்டு = தானும் உண்டு
ஓம்புதல் = பாதுகாத்தல்
நூலோர் = அறநூலுடையார்

27. அவா = ஆசை
தவாது = முடிவின்றி

28. அளி = தண்ணளி ; இரக்கம்
செங்கோல் = முறை செயல்
வேந்தர்க்கு ஒளி = ஏனைய வேந்தர்கட் கெல்லாம் விளக்கு

29. கேடு இல் = அழிவில்லாத
விழுச்செல்வம் = சிறந்த செல்வம்
மாடு அல்ல = செல்வ மல்ல
மற்றையவை = ஏனைய மணி பொன் முதலியன

30. விலங்கு = மிருகம்
அனையர் = ஒப்பர்
இலங்கு = விளங்குகின்ற
ஏனையவர் = கல்லாதவர்

31. இழுக்கல் = வழுக்குதல்
உழி = இடம்
ஊற்றுக் கோல் = ஊன்று கோல்

32. அறிவுடையார் பொருளில் வழியும் அவை உடையவராகவே கொள்ளப்படுவர் ; அங்ஙனமே அறிவிலார் எல்லாச் செல்வமும் பெற்றிருந்தாலும் ஏதும் அற்றவராகவே கருதப்படுவர்.

33. வியவற்க = தன்னைத் தானே பெருமைப்படுத்திக் கொள்ளற்க
நயவற்க = விரும்பா தொழிக

34. மூத்த = தன்னினும் மூத்த
கேண்மை = நட்பு
திறன் = தன்மை

35. மன்னுயிர் = நிலை பெற்ற வுயிர்
இனநலம் = தம்மைச் சேர்ந்தவரது நன்மை

36. பீலி பெய் = மயிற் பீலி ஏற்றப்பட்ட
சாகாடு = சகடம் ; வண்டி
அச்சு இறும் = அச்சு முறியும்
சால = மிகவும்

37. கூம்பும் பருவத்து = வினைமேற் செல்லாதிருக்குங் காலத்து
சீர்த்த விடத்து = செல்லுங் காலம் வாய்த்தபோது
குத்து ஒக்க = தப்பாமற் செய்து முடிக்கவும்

38. நெடும்புனல் = ஆழமான நீர் நிலை
அடும் = கொல்லும்
பிற = முதலையல்லாத பிற உயிரினங்கள்

39. பற்று அற்ற கண்ணும் = செல்வம் நீங்கிய வழியும்
பழமை பாராட்டுதல் = முன்பு போற் கொண்டாடுந் தன்மை

40. இகழ்ச்சி = சோர்வு
உள்ளுக = நினைக்க
மைந்து = வலிமை

41. கொலையில் = கொலை செய்தலினல்
ஒறுத்தல் = தண்டித்தல்
பைங்கூழ் = பயிர்
களை கட்டல் = களை யெடுத்தல்

42. ஆற்ருது = பொறுக்கமாட்டாமல்
தேய்க்கும் = குறைக்கும் (அழிக்கும்)
படை = கருவி

43. வெள்ளம் = நீர்ப் பெருக்கு
மலர் நீட்டம் = நீர்ப் பூக்களினது தாளின் வளர்ச்சி
உள்ளம் = ஊக்கம்

44. விழையான் = விரும்புத லிலன்
இடும்பை = துன்பம்

45. பிணிக்கும் = தன் வசப்படுத்தும்
தகை அவாய் = குணங்களைப் பொருந்தி
வேட்ப = விரும்புமாறு

46. அழக்கொண்ட = மற்றவர் வருந்துமாறு கவர்ந்து கொண்ட
அழப்போம் = அவ்வாறு கொண்டவன் வருந்தி நிற்கப் போய்விடும்
நற்பாலவை — நல்வினையான் வந்த பொருள்கள்
இழப்பினும் = முதலில் இழந்து விட்டாலும்
பயக்கும் = நன்மை தரும்

47. உற = மிக
துணி வாற்றி = மனத்திட்ப முடையவராய்

48. தள்ளா வினையுளும் = குறையாத வினைவைச் செய் வோரும்
தக்காரும் = அறவோரும்
சேர்வது = ஒருங்கு வாழ்வது

49. தீது இன்றி = கொடுங் கோன்மையினு லல்லாமல்
அறன் ஈனும் = நன்மையைச் செய்யும்

50. புணர்ச்சி பழகுதல் = ஒருவரோடு கூடியிருத்தலும் அடிக்கடி கண்டு பழகுதலும்
உணர்ச்சி = ஒத்த உணர்வு
கிழமை = உரிமை

51. மருவுக = பொருந்துமாறு செய்து கொள்க
ஒப்பு இலார் = உலக நடையோடு ஒத்து நடத்தலில்லாதவர்
ஒருவுக = நீக்குக

52. ஏதிலார் = தன்னுடன் ஓர் இயைபு மில்லாதவர்
ஆர = நிறைந்து அனுபவிக்க
தமர் = இயைபுடைய உறவினர்
பேதை = அறியாமை யுடையான்
உற்றக் கடை = தெய்வத்தால் பெற்ற வழி

53. உறங்குவோரும் இறந்தோரும் ஒப்பாவதில்லை யெனினும் உறங்கும் போதும் அறிதல் தன்மை யில்லையாதலின் செத்தாரின் வேறெனப்படார்; அது போலக் கள்ளுண்பவரும் நஞ்சுண்டவரினும் வேறு படக் கூறக் கூடியவ ராயினும், அறிவின்மையால் நஞ்சுண்டா ரெனவே கொள்ளப்படுவர்

54. அருந்தியது அற்றது போற்றி = தான் முன்னுண்டவை செரித்து அற்றனவாயினவா என்பதைத் தெரிந்து

55. நீப்பின் = நீங்கினல்
மானம் வரின் = அவமானம் உண்டாகுமாயின்

56. பெருமை = பெருமைக்குரிய குணம்
பெருமிதம் இன்மை = தருக்கின்றி யிருத்தல்
சிறுமை = அற்ப குணமாவது
பெருமிதம் ஊர்ந்து விடல் = தனக்கு உண்மையான பெருமையில் வழியும் இருப்பதாகக் கற்பித்துக் கொண்டு தருக்கின் உச்சி நிலையில் நிற்பதாம்.

57. சால்பு = மேன்மைக் குணம்; நற்பண்பு
பயத்ததோ = பயனை உடையதோ ?

58. கூர்மைய ரேனும் = கூர்த்த மதியுடையவ ரேனும்
மரம் போல்வர் = ஓரறிவுடைய மரத்தை யொப்பர்

59. கொடுப்பதும் = பிறக்குக் கொடுத்தலும்
துய்ப்பதும் = தான் அனுபவித்தலும்
அடுக்கிய = பலவாக அடுக்கிய (பெருகிய)
கோடி = கோடி பொருள்

60. பல குடை = பல வேந்தர்களின் குடை (உலகம்)
தம் குடை = தம்மரசனது குடை (ஆட்சி)
அலகு உடை நீழலவர் = உழுதற்ரெழிலுடைய தண்ணளிமிக்க வேளாளர்

## நீதிநெறி விளக்கம்

குமரகுருபரர் :—ஸ்ரீவைகுண்டத்தை யடுத்துள்ள கயிலாயபுரத்தில் சண்முக சிகாமணிக்கவிராயர் என்னும் சான்றோர் ஒருவர் வாழ்ந்திருந்தார். அவர்தம் மனைவியார் சிவகாமசுந்தரி என்பவராவர். அவ் விருவர்தம் அருந்தவப் புதல்வரே குமரகுருபரர். இவர் திருச்செந்தூர் முருகன் அருள் பெற்றுத் துறவுநிலை எய்தி மதுரை, திருசிராப்பள்ளி, ஆரூர் முதலிய தலங்களுக்குச் சென்று தருமபுரத்தை யடைந்தார். அங்கிருந்த மாசிலாமணித் தேசிகரைத் தம் ஞாஞசிரியராகக் கொண்டார். அவர் கருத்துப்படியே காசி சென்று அங்கு ஓர் மடமும் கட்டுவித்தார். அது இன்றும் குமரகுருபரர் மடம் என விளங்குகிறது. மீனாட்சியம்மன் பிள்ளைத் தமிழ், கந்தர் கலிவெண்பா, திருவாரூர் நான்மணிமாலை முதலிய பல நூல்களை இயற்றியுள்ளார். இவரது காலம் பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியாகும்.

1. பயக்கும் = கொடுக்கும்
புறங்கடை = வெளியிடத்தேயும்
இசை = புகழ்

கவல் = துன்பம்
உற்றுழி = நேர்ந்த விடத்து
சிற்றுயிர் = குறைந்த வாழ்நாளையுடைய உயிர் (மக்கள்)

2. துணை = அளவு
உய்த்துணர்வு = நுணுகி ஆராய்ந்தறியும் ஆராய்ச்சி யுணர்வு
பொன்மலர் = பொன்னாலியன்ற மலர்.

3. மெய் = உடல்.
விதிர்ப்பார் = நடுங்குவோருடைய
ஆகுலச் சொல்லும் = ஆரவாரப் பேச்சும்
நவை = (எளியோர்க்குக் கொடாமையால் வரும்) குற்றம்
நல்கூர்ந்தார் = வறியவர்
இல் = மனைவி
நலம் = அழகு
பூத்தலினும் = உண்டாதலினும்

4. தாழ்நடை = பணிவுள்ள ஒழுக்கம்
ஒன்று = செல்வம்
வன்சொல் = கடுஞ்சொல்
கைத்து = கைப்பொருள்
கடல் ஞாலம் = கடல் சூழ்ந்த உலகத்திலுள்ள மக்கள்
பித்துணர்வு = மயக்க வுணர்வு

5. கல்வி நலன் = கல்வியாற் பெற்ற அறிவு
கலன் = அணிகலன்
முற்ற = முழுவதும்
முழு மணி = பருத்த மணிகளால் ஆகிய
பூண் = ஆபரணம்

6. முற்றும் = எல்லாவற்றையும்
கல் = மலை

தகரும் = உடைபடும்
கொல் உலைக் கூடத்தினால் = கொல்லனது உலைக் களத்துள்ள சம்மட்டியால்
கனங் குழாய் = கனமான காதணிகளை யுடையவளே
(இது பெண்ணை முன்னிலைப் படுத்திப்பாடுவதனால் மகடூஉ முன்னிலை)

7. மெலியார் = எளியவர்
கருத்து அழிக = உள்ளம் ஒடுங்குவாராக
எற்றே = எத்தன்மைய
அம்மா = வியப்பிடைச் சொல்

8. ஆக்கம் = செல்வம் (கல்வி, பொருள்)
சிறியார் இடைப்பட்ட = குறைந்தவர்களிடத்தே உண்டான
மீச்செலவு = வரம்பு கடந்த நடக்கையை
நனி = மிகவும்
தாழ்ப = தாழ்ந்து போவார்கள்
மெலியது = நிறை குறையான பொருள்
வலிது = நிறை மிக்குள்ளது
துலை = தராசு

9. சுட்டு = பெருமை
யாண்டும் = எவ்விடத்தும்
நோற்பது = நோன்புபோற் கடைப்பிடிக்கத் தக்கது
தூற்றி = எடுத்துக் கூறி
புறங்காத்து = வெளியிடாமல் மறைத்து
தாழ்ச்சி = பணிவு

10. நோக்கு = (குளிர்ந்த) பார்வை
நகை முகம் = மலர்ந்த முகம்
நாள் மலர் = புதிய மலர்
இன்மொழி = இனிய சொல்
வாய்மை = உண்மை

தீம் காய் = இனிய காய்
வண்மை = கொடை
பலம் = பழம்
நலம் கனிந்த = நன்மை மிக்க
பண்பு = நற்குணம்
சலியாத = தளராத (கொடுப்பதில்)

11. வாங்கும் = வாங்கி உட்கொள்ளும்
கவளம் = உணவின் பிண்டம்
தூங்கும் = அசையும் இயல்பினை யுடைய
களிறு = யானை
ஊரும் = ஊர்ந்து செல்லும்
இங்கு = இவ்வுலகில்
உய்யும் = பிழைத் திருக்கும்
ஆருங் கிளை = நிறைந்த சுற்றம்
அயின்று = (தாமும்) உண்டு

12. மெய் வருத்தம் = உடலுழைப்பாலாகிய வருத்தம்
பசி நோக்கார் = பசியையும் பொருட்படுத்த மாட்டார்கள்
கண் துஞ்சார் = உறக்கமுங் கொள்ளமாட்டார்கள்
தீமை = (செய்கின்ற) துன்பம்
செவ்வி = காலத்தின் அருமை

## கதைப்பகுதி

சேக்கிழார்:—இவர் தொண்டை நாட்டிலுள்ள குன்றத் தூரிலே பிறந்தவர்; அவ்வூரிலிருந்த வேளாண்குடிகளுள் ஒன்ருன சேக்கிழார் குடியிற் பிறந்தவர். இவரது பிள்ளைத் திருநாமம் அருண்மொழித்தேவர் என்பதாகும்; இவரது தம்பியார் பாலருவாயர் என்பவர் ஆவர். சேக்கிழார் அநபாய சோழன் என்ற குலோத்துங்க சோழனது

அமைச்சரா யிருந்து, திறம்படத் தொழிலாற்றி வந்தார். அது கண்டு மகிழ்ந்த மன்னன், இவருக்கு உத்தம சோழப் பல்லவன் என்ற சிறப்புப் பெயரைத் தந்தான். இவர் குடந்தையை யடுத்துள்ள திருநாகேச்சுரத்தில் தங்கி யிருந்ததால் அவ்விறைவனிடம் நீங்காப் பேரன்பு பூண்டி ருந்தார். ஆதலின் தன் சொந்த ஊரில் தங்கியிருந்தபோது அப்பெயராலேயே ஓர் ஊர் உண்டாக்கி, அங்குள்ள முறைப் படியே கோயில் எடுப்பித்து, அது என்றும் சிறப்புற நடை பெறுமாறு நிபந்தம் பலவும் ஏற்படுத்தினர். அரசன் சிந்தாமணி முதலிய அமண நூலைப் போற்றுவதறிந்த சேக்கிழார், அரசனை யடுத்து இம்மை மறுமைக்கும் பயன் படத்தக்க நாயன்மார் வரலாற்றினைக் கூறினர். அது கேட்டு உவந்த மன்னன் அவற்றை யொரு நூலாகச் செய்ய வேண்டினன். சேக்கிழாரும் அதற்கிசைந்து சிதம்பரத்திற் றங்கி, 'உலகெலாம்' என இறைவன் அடியெடுத்துக் கொடுக்கப் புராணத்தைப் பாடினர். அரசன் வந்திருந்து அரங்கேற்றம் செய்வித்து, அப்பெரியாருக்குத் தொண்டர் சீர் பரவுவார், என்ற சிறப்புப் பெயரையும் தந்து சிறப்பித் தான். அந் நூல் திருத்தொண்டர் புராணம் என்றே பெயரிடப்பட்டது. பிற்காலத்தே தான் பெரியபுராணம் என வழங்கலாயிற்று. இவரது காலம் பன்னிரண்டாம் நூற் றுண்டின் முற்பகுதியாகும். இங்குள்ள பகுதி திருநாவுக் கரசு நாயனர் புராணத்திலிருந்து எடுக்கப்பெற்றது.

1. ஆளுடைய நாயகன் = திரு நல்லூரில் (ஆண்டான் கோயில்) எழுந்தருளியுள்ள இறைவன்
   வாளை = வாளை மீன்கள்
   புனல் = நீர்
   பழனம் = கழனி ; வயல்
   மருங்கு = பக்கம்

அணைந்து = சேர்ந்து
காள விடம் = ஆலகால விடம்
இருண்ட கண்டர் = நீல கண்டர்
பணிக் கலன் = அரவாபரணம்
நீளிரவு ஆடுவார் = ஊழிக்காலத்தே நடஞ் செய்வார்; (ஊழிக் காலத்து உலகமும் உயிர்களும் ஒடுங்கியமை உணர்த்து வனவாம்)
நேர் பெற்றார் = வாய்க்கப் பெற்றார்

2. அப்பதி = அந்தத் திருப்பழனமாகிய ஊர்
சூழ்ந்த = சுற்றிலு முள்ள
அரன் = சிவபெருமான்
ஒப்பரிய = ஒப்பற்ற
தானங்கள் = திருக்கோயில்கள்
மெய்ப்பொருள் = உண்மைப் பொருளாகிய இறைவன்
நாவினுக்கு வேந்தர் = திருநாவுக்கரசர்
மேவினார் = வந்து சேர்ந்தார்
செப்பரும் = சொல்லுதற்கரிய
சீர் = சிறப்பு

3. தனயர் = பிள்ளைகள்
சாலைகள் = அறச் சாலைகள்
கூவல் = கிணறு
தரு = சோலை (மரங்களால் ஆகியது)
ஆண்ட = சூலை நோயால் இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட
அரசு = திருநாவுக்கரசு
வாகீசர் = திருநாவுக்கரசர்; (வாக்கு + ஈசர்)

4. மற்று = மேலும்
அவரும் = அப்பூதி யடிகளாரும்
களிகூடா = மகிழ்ச்சி மிக

சூழ்ந்து = சூழ வந்து
மொழிக் கொற்றவர் = திருநாவுக்கரசர்
குறைகொள்வார் = வேண்டிக் கொண்டவர்களாகி
இறை கொள்ள = மறுமொழி வேண்டி நிற்க
பெற்ற = எதிர் பாராது தாமாகவே வந்து கிடைக்கப் பெற்ற
திருவுள்ளம் பெறப் பெற்றுர் = திருவுள்ளத்தின் சம் மதத்தைப் பெறும் பேறு பெற்றுர்

5. காண் தகைமை யின்றியும் = முன்னர் ஒருவரை யொருவர் காணுகின்ற தன்மை இல்லாதிருந்தும்
கலந்த = உண்டாகிய ;
பெருங் கேண்மையினுர் = பேரன்பினை யுடையவர்
பூண்ட = மேற்கொண்ட
காதல் = அன்பு
போனகம் = திருவமுது
கறி யமுது = கறி வகைகள்
அரசு = திருநாவுக்கரசு
அமுது செய = உண்ணுதற்கு

6. அமுது செய்தருள = உணவு உட்கொள்ளுவதற்காக
அவர்தம் = நாவுக்கரசரது
பெரு நாமம் = பெருமை பெருந்திய பெயர்
சாத்திய = சூட்டப் பெற்ற
திருமறையோர் = அப்பூதி யடிகள்
தண்டலை = சோலை ; (தோட்டம்)
வண் கதலி = வளப்ப மிக்க வாழை
குரு = பெரியதாகிய
நாளம் = தண்டு (முழுவதும் வெளிப் போந்த)
தனி விட்டார் = விரைந் தனுப்பினுர்

7. அம்மருங்கு = அச்செயலில்
தாழாதே = காலந் தாழ்க்காது

பூங்கதலிக் குருத்து = அழகிய வாழைக் குருத்து
புகுமளவில் = தொடங்கும்போது
தீங்கு இழைக்க = துன்பஞ் செய்ய ; கடிக்க
அது பேணுன் = அதைப் பொருட் படுத்தாது
ஒல்லே = விரைவு

8. தலைக் கொள்ள = தலைக் கேற
தெருமந்து = மயக்கமுற்று
கரம் = கை
தளர்ந்து = சோர்ந்து
தழல் = நெருப்பு
மேயபடி = தீண்டிய செய்தியை
தூயவர் = புனிதராகிய திருநாவுக்கரசர்
அமுது செய்த தொடங்கார் = உண்ணமாட்டார்
அது ஒளித்தார் = அப்பிணத்தை மறைத்து வைத்தார்கள் (தாயருந் தந்தையும்)

9. தடுமாற்றம் = மனத்தின் கண் தோன்றும் தடுமாற்றம்
உம்பர்பிரான் = தேவதேவராகிய சிவபெருமான்
திருத்தொண்டர் = நாவுக்கரசர்
நம்பர் = இறைவர் ; (உயிர்கள் தம்மை நம்பி வந்தடையும் தலைவர்)
நவை = துன்பம்

10. கொன்றை நறுஞ் சடையார் = நறுமணங் கமழும் கொன்றை மாலை யணிந்த சடையை யுடைய சிவபெருமான்
கொணர்வித்து = (சவத்தைக்) கொணரச் செய்து
உடையான் = ஆளுடைய பெருமான்; சிவபெருமான் உயிர்களையும், உலகங்களையும் தமது உடைமை யாக உடையவன்
சீர் = புகழ்

பின்றை = பின்னர்
பிள்ளை = மூத்த திருநாவுக்கரசு
உணர்ந்து = துயிலுணர்ந்து எழுபவன் போல்

11. தளர்வு எய்தி = மனந் தளர்ந்து
இடர் உழந்தார் = துன்புற்று வருந்தியவர்களாகிய அப்பூதி யடிகளார், மனைவியார் முதலியோர்
மனை = வீடு
மேவு நாள் = அங்கு தங்கியிருந்த நாளில்

12. திருமறையோர் = அப்பூதியடிகள்
பைங்கண் = பசிய கண் (அஃதாவது அருளுடைமை)
விடை = காளை
தம் பெருமான் = தங்கள் (நாவுக்கரசர், அப்பூதி யடிகள்) இறைவனாகிய சிவபெருமான்
கழல் சார்ந்து = திருப்பாதங்களை யடைந்து
பேற்றிசைப்பார் = துதி செய்வாராகி

13. புடை = பக்கத்தில்
மாலை மதி = பிறைச்சந்திரன்
கண்ணி = கொண்டை மாலையை யணிந்த
புரிசடையார் = புரியாகவுள்ள சடை முடியுடைய சிவபெருமான்
பொற் கழல் = அழகிய கழலை யணிந்த பாதங்கள்
மாலை = இயல்பு
சீலம் = நல்லொழுக்கம்
நடை = ஒழுக்கம்
மாணச் சிறப்பித்து = மிகவும் உயர்வாகப் பாராட்டி
நன்மை புரி = நல மொன்றையே உண்டாக்கத்தக்க
தீந்தமிழ் = இனிய தமிழ்
இன்தொடை மாலை = இனிய தமிழால் செய்த பாமாலையாகிய

## பல் சுவைப் பகுதி

1. சொல் அரு = சூலுண்டென்று சொல்லுதற் கரிய
சூல் பசும் பாம்பு = கருக்கொண்ட பச்சைப் பாம்பு
கருவிருந்து = கருத் தாங்கி
மேலலார் = நற்குடிப்பிறவாதார்
தலை நிறுவி = தலை நிமிர்ந்து
தேர்ந்த = மெய்ப்பொருளை ஆராய்ந்த
மாந்தரின் = மாந்தரைப் போல
இறைஞ்சி = வளைந்து (தலை சாய்ந்து)
காய்த்த = காய்த்தன (நெல்)

2. கால் = நீர்க்கால்
தகட்டு = தகட்டு வடிவின தான
வரால் = வரால் மீன்கள்
கண் = கணு
பொழி = சொரிகின்ற
பால் = பக்கம்
சாலி = நெல்
பரப்பு = அகன்ற இடம்
கமுகு = பாக்கு மரங்கள்
சால் = உழு படை
தரளம் = முத்து
நிரை = வரிசை ; கூட்டம்
தடம் = குளம் (பெரிய நீர்நிலை)
செங்கழுநீர் = செங்குவளை மலர்கள்
தூபம் = புகை (திருந்து மனையெல்லாம் விருந்து)

3. உளைப்புரவி = பிடரி மயிருடைய குதிரை
வாரணம் = யானை
தொகுதி = திரள் (கூட்டம்)
திறை = கப்பம்
நாமம் = பெயர்

புகல்=கூறுக
யாழ்தடவு=யாழினை மீட்டுகின்ற
(நீரும் நாமும் ஒத்தகுடி)
ஒத்தகுடி=ஒரே குலம்
ஆறை நகர்=ஆற்றூர்
காவலன்=மன்னன்
வாண பூபதி=ஏகம்ப வாணனாகிய மன்னவன்
வரிசை=பரிசில்
முன்றில்=முற்றம்
ஏகும்=செல்லுவீராக
நித்திலச் சிகரம்=முத்துக்கள் பதித்தியன்ற முடிகளை யுடைய
ஆர்=ஆத்தி மரம்
அத்தி=அத்தி மரம்

[ஆர், வேம்பு, பனை என்பன சோழ பாண்டிய சேர மன்னர்களையும் அரசு என்பது பிறவரசர் களையும், அத்தியென்பது யானைகளையும் குறிப் பாக உணர்த்து கின்ற நயம் பாராட்டத் தக்கது]

4. முக்கண் சாமி=மூன்று கண்களையுடைய சிவ பெருமான்
முதிய=பழமையான
கடல்=பாற் கடல்
முகுந்தன்=திருமால்
தலை நால் சாமி=பிரமன்
கமலம்=தாமரை
வரை=மலை
தகப்பன் சாமி=தந்தையாகிய சிவபெருமானுக்குப் பிரணவப் பொரு ளுபதேசித்த முருகன்
வயிற்றுச் சாமி=பெரு வயிறு படைத்த பிள்ளையார்

வழி காத்தான் = வழிகளிலே காத்துக்கிடக்கின்றான்
வாணர் = தமிழ் வாணர் ; தமிழ்ப்புலவர்
யார் = யாரெனில்
மற்றொருசாமி = மற்றொரு பெரியோன் (அவன் தான்)
ஓங்கிய சீர் = பரந்த புகழ்
மயிலை = மயிலாப்பூர்
உதவிய = தந்த (பிள்ளையாகிய)
உசிதவேள் = சிறந்த வள்ளல்

5. கன்னம் = காது
பெய்து = சொரிந்து
கொலைக் களிறு = கொல்லுந்தன்மையுடைய ஆண் யானை
தென்னன் = பாண்டியன்
குழவி = குழந்தை
திளைக்கும் = சஞ்சரிக்கும்
பொழில் = சோலை
கூடல் = மதுரை
அறல் = கருமணல்
அம் = அழகிய
பிடி = பெண் யானையை யொத்த அங்கயற் கண்ணி
குடுமி = மலை யுச்சி

6. (i) உரையாளன் = அறிவுரை கூறுவோன்
எள்ளல் = இகழல்
ஆசான் = ஆசிரியன்
விள்ளும் = இயற்கையை எடுத்துக் கூறும்
இலகும் = விளங்குகின்ற
இறை = தலைவன் ; கடவுள்

(ii) தகர்க்கும் = பொடி படுக்கும்
கரும்பொன் = இரும்பு

ஒல்லை = விரைவு
கனல் = நெருப்பு
தெண்ணீர் = தெளிந்த நீர்
செறிநீரை = நிறைந்த நீரை
வான் = ஆகாயம்
முகில் = மேகம்
வளி = காற்று
நடுக்கம் = அச்சம்
அயிர்ப்பு = சந்தேகம்
செயிர் = குற்றம்
தெளி = அறிவாயாக

## அருஞ்சொற் பொருள்

**(1) தஞ்சைப் பெரிய கோயில்**

வியத்தகு—வியக்கும் படியான
அறுதி—முடிவாக
முதற்கண்—முதலில்
நிபந்தம்—தேவதானம்
இடையீடின்றி—முட்டுப்பாடில்லாமல்
அத்துணை—அவ்வளவு
பல்லாற்ருனும்—பல வகையாலும்
*வாகை—வெற்றி மாலை*
அரியணை—அரச பீடம்
யாண்டும்—எங்கும்
சுதை—சுன்னம்
இசைவு—பொருத்தம்
அந்தகன்—எமன்
இறை யன்பு—கடவுள் மாட்டுப் பற்று
சாரப் பள்ளம்—கோயில் அமைக்கத் தோண்டும் பள்ளம்
கவின்—அழகு

## (2) தேனீ வளர்த்தல்

அலுவல்—வேலை
மாரி—மழை
இணைக்கப்படும்—ஒன்று சேர்க்கப்படும்
அடை—தேன் கூடு
அரிய—குறைவான, முடியாத

## (3) விவேகானந்தர்

வறியோர்—பொருளற்றோர்
புனல்—நீர்
சிலம்பம்—கோற்பயிற்சி; (உடற்பயிற்சியில் ஒருவகை)
அரற்றல்—கூச்ச லிடுதல்
பேரிடுக்கண்—பெருந்துன்பம்
ஊன்—மாமிசம்
பூவலம்—உலகம் சுற்றுதல்

## (4) கியூரி அம்மையார்

கழிபேருவகை—பெரு மகிழ்வு
கவன்றது—துன்பமடைந்தது
ஒல்லும்—செயல் செல்லும் சமயம்
பரிதி—சூரியன்
அல்லல்—துன்பம்
மாழ்கிட—மூழ்கி அழுங்குதல்—துன்ப நிலையிலிருத்தல்

## (6) குருகுலம்

இடைவிடாது—இடையில் விடாமல்
உறைந்து—வசித்து
வாய்ப்பு—பயன்படும் நிலைமை
உடன்பிறப்பு—தன் உடன் பிறந்தது போல்
வாழ்வாங்கு வாழும்—வாழும் வகை யறிந்து வாழும்
அல்—இரவு

சேய்—குழந்தை
துப்புரவு—சுத்தம் செய்தல்
வழி—முறை
சீரிய—உயர்ந்த
கேட்பார் பிணிக்கும்—கேட்பாரின் உள்ளத்தை ஒன்று படுத்தும்
ஓம்பல்—போற்றுதல்

(7) கடிதம்

பிணிக்கப்படுகிறது—ஒன்று சேர்க்கப்படுகிறது
சமயம்—மதம்
பரனடி—இறையடி
அண்ணல்—பெருமை பெற்றவர்
குருதி—இரத்தம்
கசங்கி—மன மிரங்கி
புரக்கப்படுகின்றது—ஓம்பப் படுகின்றது
ஆய்வகம்—ஆராய்ச்சி நிலையம்
கீழ்மை—தாழ்ந்த எண்ணம்

(8) நோயும் மருந்தும்

அறிவுரை—தேர்ந்து தெளிந்த சொல்
அச்சம்—பயம்
விரைந்து—வேகமாக
வேட்கை—அவா
ஆற்றுது—தாள முடியாது
மடிகின்றனர்—இறக்கின்றனர்

# நமது தமிழ் வாசகம்

## மூன்றும் புத்தகம்

## சிறப்புப் பகுதி

ஆசிரியர்

சென்னை பச்சையப்பன் கல்லூரித் துணைத்தமிழ்ப் பேராசிரியர்

அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட்.

மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட்

மதராஸ் பம்பாய் கல்கத்தா லண்டன்

1954

# முன்னுரை

இந்தியா விடுதலை பெற்றபின் தாய்மொழியானது கல்வித் திட்டத்தில் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றுவிட்டது. தத்தம் மொழியை வளர்க்க வேண்டும் என்ற ஆர்வம் அவ்வப்பகுதியில் உள்ள மக்கள் உள்ளத்தில் உண்டாயிற்று. சென்னை அரசாங்கத்தார் மக்கள் ஆர்வத்தை அறிந்து, இப்பகுதியில் உள்ள மொழிகளை வளர்க்க வழி பல வகுத்தனர். அவற்றுள் ஒன்று பாடநூல்களைத் திருத்தி அமைக்கும் முறை.

தமிழ்ப்பாடதிட்டத்தை அமைப்பதற்காக சென்னை அரசாங்கத்தார் 1951-ஜூன் 26ம் நாள் ஒரு திருந்திய முறையை சென்னை கெஜட்டில் பிரசுரம் செய்தனர். அதில் உயர்தர பாடசாலைகளின் முதல் மூன்று பாரங்களில் தமிழ்ப் பாடம் பொது, சிறப்பு என இருவகையாகப் பிரிக்கப்பட்டு, அவ்வவற்றிற்கு உரிய அமைப்புகளும் விளக்கப்பட்டன. அத்திட்ட முறைப்படி இதுவரை தமிழ்ப் பாடநூல்கள் வெளி வருகின்றன.

சென்னை மாக்மில்லன் கம்பெனியார் அப்பாடதிட்டத்தின் அடிப்படையில் முதல் மூன்று பாரங்களுக்குத் தமிழ் நூல்கள் வெளியிட விரும்பினர். அவர்தம் விருப்பமே இந்த நூற்றொகுதியாக வருகின்றது. மூன்று பாரங்களுக்கும் பொது, சிறப்பு என்ற தனித்தனிப்பகுதிகள், அரசியலார் வரம்பு கடவாத வகையில் அமைக்கப்பட்டு வெளிவருகின்றன. இப்பாடநூல் வரிசை மாணவர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்ற துணிபுடையேன்.

பாடசாலைகளின் தலைவர்களும், தலைமை ஆசிரியர்களும், தமிழாசிரியர்களும் இந்த நூற்றொகுதியை ஏற்று ஆதரிக்கக் கேட்டுக் கொள்ளுகிறேன். இத்துறையில் என்னை ஊக்கிய மாக்மில்லன் கம்பெனியாருக்கு என் நன்றி.

ஆசிரியன்.

# பொருளடக்கம்


| பாடம் | | பக்கம் |
|---|---|---|
| 1. | கனகசபைப் பிள்ளை | 5 |
| 2. | ஆடலும் பாடலும் | 18 |
| 3. | உண்டால் அம்மா இவ்வுலகம் | 25 |
| 4. | உத்தரத் திருவிழா | 33 |
| 5. | இராசராசன் | 41 |
| 6. | வாசவதத்தையின் திருமணம் | 55 |
| 7. | கங்கை வேடன் | 67 |
| | செய்யுள் பகுதி | 80 |
| | நீதிப் பகுதி | 81 |
| | கதைப் பகுதி | 85 |
| | பல்சுவைப் பகுதி | 88 |
| | குறிப்புரை | 90 |
| | அருஞ்சொற் பொருள் | 101 |



*கனக சபைப்பிள்ளையும், பாரதியாரிடன் பாடல்களும், வெங்கிடராம செட்டியாரின் வாழ்த்துப்பாடலும் அதததற்கு உரியவர்களிடம் அனுமதி பெற்று சேர்க்கப்பட்டுள்ளன. அனுமதி தந்துதவியதற்கு எங்கள் நன்றி.*

# 1. கனகசபைப் பிள்ளை

தோன்றிய நாள் தொட்டுத் தெய்வத் தமிழ் மொழியைப் பல்லாற்றானும் ஓம்பி வளர்க்கும் பெரியவர்கள் அவ்வப்போது தோன்றி, வாழ்ந்து, தமிழின் வளம் பெருக்கி அதன் சீரிளமைத் திறங்குன்றா வகையில் தொண்டு செய்து வந்துள்ளனர். எத்தனையோ அறிஞர்தம் பெயர்கள் நம்மிடை தற்போது இல்லை. தமிழ் நாட்டில் மட்டுமின்றி, தமிழ் வழங்கும் இலங்கை, மலேயா போன்ற பிற நாடுகளிலும் அன்றும் இன்றும் தமிழ்ப் பயிர் ஓம்பும் புலவர்களும், புரவலர்களும் வாழ்ந்து வருகின்றார்கள். அவர்களுள் சிறப்பாக நம் பாராட்டுதலுக் குரியவர்கள் யாழ்ப்பாணத் தமிழ் மக்களாவர்.

தமிழன் தன்னைப் பற்றியே பேசிப் பெருமை கொள்ள நினையாதவன். தன்னைத்தான் தாழ்த்திக்கொள்ளும் பண்பாட்டில் தலைசிறந்தவன். எனவே அவனது பெருமை வாய்ந்த முற்கால வரலாறுகளை யெல்லாம் அவன் எழுதி வைக்க விரும்பவில்லை. அந்தக் காரணத்தால் ஒருவேளை தமிழனது சென்றகாலச் சிறப்பு மங்குமோ என்று அஞ்சக் கூடிய நிலை ஏற்பட்டது. பிற நாடுகளெல்லாம் தம் பண்டைப் பெருமையைக் கூட்டியும், சேர்த்தும் ஏற்ற முற்படும் அதே வேளையில், தமிழன் தனக்கு இயற்கையாக உள்ள பெருமையை எண்ண மறந்தான். அந்த மறப்பைப் பற்றி உன் 'சென்ற காலச்சிறப்பு' இது என்று எடுத்துக்காட்ட முன் வந்த பெருமை இன்றைக்கு ஐம்பது ஆண்டுகட்குமுன் வாழ்ந்த யாழ்ப்பாணப் புலவர் கனகசபைப் பிள்ளை அவர்களுக்கே உண்டு.

கனகசபைப் பிள்ளை யவர்கள் தமிழாசிரியர் அல்லர். தமிழ்த் துறையில் பணியாற்றியவரு மல்லர். அவர் பணி அஞ்சலகத்தில் நடைபெற்றது. எனினும் தமிழ்த்தாய்க்குத் தொண்டாற்ற வேண்டும் என்ற தூய எண்ணமே அவரை 'ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் தமிழர்' என்ற வரலாற்று நூலை எழுத வைத்தது. ஆம். அவர் மறைந்து இன்றைக்கு நாற்பத்தைந்து ஆண்டுகள் ஆகின்றன. அவர் எழுதிய அந்தப் பெருநூலே அவர்தம் பெருமையை வாழ வைக்கின்றது. அவருடைய வாழ்க்கை வரலாற்றைக் கண்டு பின் நூல் வழிச் சென்று அவர் தொண்டின் சிறப்பை அறியலாம்.

ஏறக்குறைய இன்றைக்கு ஒரு நூற்றாண்டுக்கு முன் கனகசபைப் பிள்ளையின் தந்தையார் விசுவநாதப் பிள்ளை யவர்கள் யாழ்ப்பாணத்திலுள்ள மல்லாகம் என்னும் ஊரிலிருந்து சென்னைக்கு அழைத்து வரப்பட்டார். ஆங்கிலத் தமிழ்ப் பேரகராதி தொகுத்த மேலை நாட்டுச் செல்வர் வின்ஸ்லோ பாதிரியார் அவர்கள் விசுவநாதரை அங்கிருந்து சென்னைக்கு அழைத்து வந்ததாகக் கூறுகின்றனர். பெர்சிவல் பாதிரியாருடன் வந்ததாகவும் கூறுவர்.

விசுவநாதர் ஆங்கிலத் தமிழ் அறிவு பெற்றவர். எனவே அவருக்குச் சென்னைக் கல்வித் துறைத் தலைவர் அலுவலகத்தில் மொழிபெயர்ப்பாளர் பணி கிடைத்தது. வின்ஸ்லோ அவர்தம் ஆங்கிலத் தமிழ்ப் பேரகராதி வெளி வருவதற்கு அவர் பெரிதும் உதவினார். அத்துடன் விசுவநாதர் தாமே பள்ளிப் பிள்ளைகளுக்கெனச் சில தமிழ் நூல்களை எழுதிப் புகழ் பெற்றார். சிறந்த தமிழ்ப் பற்றும், மொழித் தொண்டும் புரிந்த இவ் விசுவநாதரின் அருமை மைந்தரே கனகசபைப் பிள்ளை யவர்கள்.

25-5-1855-ல் சென்னை கோமளீசுவரன்பேட்டையில் கனகசபைப் பிள்ளை அவர்கள் பிறந்தார். இளமையிலேயே பிள்ளையவர்கள் மதிநலம் வாய்ந்தவராக இருந்தனர். இளைஞராய் இருக்கும்போதே இவர் பட்டம் பெற்றமையின் இவரைப் பட்டதாரிப் பையன் என அழைத்தனர். இவருடன் ஆனரபிள். இராமநாதன், ஸர். பொன்னம்பலம் ஆகியோர் சென்னை அரசாங்கக் கல்லூரியில் கல்வி பயின்றதாகக்



*Courtesy: S. I. S. S. P. W. Society Ltd.*

கனகசபைப் பிள்ளை.

கூறுவர். ஆங்கிலக் கல்லூரியில் பயிலும் நாளிலேயே பிள்ளையவர்களுக்குத் தமிழில் தளராக் காதல் உண்டாயிற்று. அன்னைத் தமிழைத் தந்தையார் மூலம் நன்கு பயின்றார்.

பி. ஏ. பட்டம் பெற்ற பின் வழக்கறிஞர் பயிற்சிப் படிப்பைத் தொடர்ந்து படித்து முடித்தார். அவ் வேளையில் அவருக்கு மணம் ஏற்பாடாயிற்று. அவர்தம் அம்மானாகிய டாக்டர் பொன்னையா பிள்ளை தமது மகள் செல்லம்மாளை அவருக்குக் கொடுக்க இசைந்தார். அவர் மதுரையில் பணியாற்றி வந்தார். 1876-ல் பிள்ளையவர்கள் மண வாழ்வில் புகுந்தார். மணவாழ்வை மேற்கொண்ட பிள்ளையவர்கள் தம் மாமனார் வீடாகிய மதுரைக்கே சென்றார். அங்கே சில காலம் மதுரை மாவட்ட நீதி மன்றத்தே வழக்கறிஞர் பணியில் தொண்டாற்றினார். சிறிது காலந் தான் அங்கே பணியாற்றி யிருந்திருப்பார்போலும். விரைவில் அவர் சென்னையை யடைந்து அஞ்சல் அலுவலகத்தே (Post Office) தம் பணியினை மேற்கொண்டார். சென்னை மாநில அஞ்சலகத் தலைவர் அலுவலகத்தே (Post Master General's Office, Madras) அஞ்சல் நிலைய மேற்பார்வையாளராக அவர் பணி செய்யத் தொடங்கினார். அவர்தம் ஊக்கமும் உழைப்பும் அவரை மேன் மேல் உயர்த்தி உயர்நிலை மேற்பார்வையாளர் (Superintendent of Post Offices) பதவிக்கு உரியவராக்கின. அவர்தம் பணிகள் அவரது தமிழ்த் துறைத் தொண்டுக்குத் துணை செய்தன. தமிழ் நாட்டு ஊர்தோறும் சென்று பலப்பல அலுவலகங்களைப் பார்வையிட்டதோடு அமையாது, அவ்வவ்வூர்களில் என்னென்ன நூல்கள் ஏட்டுப் பிரதிகளில் உள்ளன என்று ஆராய்வார் பிள்ளையவர்கள். டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் ஏட்டுப் பிரதிகளை

அச்சேற்றிய காலம் அது. பிள்ளையவர்கள் சேகரித்த பல பிரதிகளை அவருக்குக் கொடுத்து உதவினர். இன்னும் பிள்ளையவர்கள் செல்லுமிடமெல்லாம் உள்ள கல் வெட்டுக்களையும் பிறவற்றையும் ஆராயும் தொண்டையும் மேற்கொண்டிருந்தனர். அவர் மேலும் சில காலம் வாழ்ந்து, அலுவலகப் பணியிலும் ஓய்வு பெற்று இருந்திருப்பாரானல், பல அரிய ஆராய்ச்சி நூல்கள் மூலம் தமிழ் நாட்டு ஒளியை மங்கா வகையில் தூண்டி விளக்கமுறச் செய்திருப்பார்.

தன் அலுவலகப் பணியில் சிறிதும் வழுவினரல்லர் பிள்ளையவர்கள். அவர்தம் ஆற்றலும் அமைவும் கருதி அத்துறைத் தலைவர்கள் அவர்தம் தொண்டைப் போற்றினர். தம் இறுதிநாள் வரையில் பிள்ளையவர்கள் அப்பணியிலேயே கருத்திருத்தி வந்தனர். கடைசியாக அவர்கள் காஞ்சிபுர அஞ்சல் நிலயத்தை மேற்பார்க்கச் சென்றபோது அங்கேயே 21-2-1906 நாளாகிய சிவராத்திரி நாளிலே மறைந்தார். அவர்தம் தூய சிவநெறியும், கடமை உணர்ச்சியும், அமைதி உள்ளமும் அவரைக் கற்ருர் வாழ் காஞ்சியிலே சிவராத்திரி நாளிலே ஏகம்பன் இணையடிக்கு உரிமையாக்கின என்ருர்கள் அறிஞர்கள்.

கனகசபைப் பிள்ளை யவர்கள் அறிவைப் போற்றி வளர்த்ததோ டமையாது 'உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே' என்ற மொழிக்கிணங்க நல்ல முறையில் உடம்பைப் பேணி வளர்த்தார். இளமையிலேயே நல்ல தேகப்பயிற்சி செய்து திண்ணிய உடலைப் பெற்றவராக விளங்கினர். சில ஆண்டுகள் இவர் வலங்கிமான் சோதிடர் உபதேசத்தால் யோகப் பயிற்சி செய்தார் என்றும் கூறுவர். இவரது உடற் பொலிவைப் 'பரந்த நெற்றி, அகன்ற உருண்டை முகம், குவிந்த கண், பெரிய தலைப்

பாகை, கருத்த மீசை, எடுத்த தோற்றம் ஆகிய இவை பார்த்த வுடனேயே இவர் ஒரு நல்ல தமிழர் என்பதை எடுத்துக்காட்டுகின்றன' என்று கூறித் தமிழர் போற்றத் தவறவில்லை. இத்தகைய திண்ணிய உடலும், நுண்ணிய அறிவும் பெற்ற இவரை, இவரது தந்தையாரோடு யாழ்ப் பாணத்திலிருந்து வந்து தமிழ்ப்பணி புரிந்த சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் போற்றும் முறை நோக்கத் தக்கது.

'யாழ்ப்பாணத்து மல்லாகம் விசுவநாதப் பிள்ளையவர் கள் புத்திரரும், தமிழ்க்கலை விநோதம் தமக்குப் பொழுது போக்காக உடையவருமான ஸ்ரீ கனகசபைப் பிள்ளை' என்று தாமோதரம் பிள்ளையவர்கள் இவரைப் போற்றித் தம் கலித்தொகை முகவுரையில் 1887-ம் ஆண்டு கூறி யிருப்பது அறிந்து இன்புறத் தக்கதொன்றுகும்.

மேலும் இவரது 'ஆயிரத்து எண்ணூறு ஆண்டு களுக்குமுன் தமிழர்' என்ற நூலைப் பயின்றவராகிய டாக்டர் வி. எ. ஸ்மித் என்னும் ஆங்கில வரலாற்றுப் பேராசிரியர் 'இந்திய சரித்திரம் தென்னிந்தியாவி லிருந்து தொடங்கி எழுதப் பெருதவரையில் அது முற்றுப் பெற்ற தாகாது' என்று கூறிச் சென்றனர்.

இவர் இளமையிலிருந்தே தமிழ்த்துறையில் ஊக்கங் காட்டி உழைத்து வந்த போதிலும் பிற்றை நாளில் பேரூக்கங் கொண்டமைக்கு அறிஞர் ஒரு காரணம் காட்டு வர். இவர் தமது இருபத்தொன்பதாவது வயதில் 1884-ல் தம் தந்தையையும், அடுத்த ஆண்டிலேயே தம் தாயையும் இழந்தார். அத்துடன் அடுத்தடுத்துத் தம் இரண்டு குழந்தைகளை இழக்கும் நிலையும் ஏற்பட்டது. இப்படிப் பெற்றோரையும், பெற்றுரையும் ஒரு சேரத் தொடர்ந்து சில்லாண்டுகளில் இழக்க நேர்ந்த கொடுமையே அவர்

உள்ளத்தை அழியாத் தமிழன்னையின் வளர்ச்சித் துறையிற் செலுத்தியது என்பர். எப்படியாயினும் அவர் அலுவலுக் கிடையில் அன்னைத் தமிழுக்கு என்றென்றும் போற்றக் கூடிய வகையில் அவர் ஆற்றிய பணியினைத் தமிழ்நாடு உள்ளவரை—ஏன் உலகம் உள்ளவரை—தமிழராலும், வர லாற்று ஆசிரியராலும் மறக்கமுடியாது. இவரது அறி வாற்றலை அன்றைய தமிழகம் போற்றிற்று. கல்வித் துறையில் இல்லாவிட்டாலும் இவரை அத்துறைக்கு ஈர்த்துப் பல்கலைக் கழகத்தார் பி. ஏ., எம். ஏ., பட்டங் களின் தேர்வாள ராக்கினார்கள். மதுரைத் தமிழ்ச் சங்கம் இவரது அறிவும் பெருமையும் கருதி 1905-ம் ஆண்டில் அச் சங்க ஆண்டு விழாவிற்குத் தலைவராய் வரவேற்றது.

பிள்ளையவர்கள் தமிழில் மட்டுமன்றி ஆங்கிலத்திலும் சிறந்து விளங்கினர். தமிழில் பல கட்டுரைகள் எழுதியது போன்றே ஆங்கிலத்திலும் எழுதினர். இரு மொழிகளிலும் உள்ள பயன்படுவனவற்றை மாற்றி மொழி பெயர்த்தனர். இவரது ஆங்கில எழுத்தின் சிறப்பு எட்வர்ட் இளவரசர் இந்திய நாட்டுக்கு வந்தபோது இவர் ஆங்கிலத்தில் பாடிய வரவேற்புக் கவிகளால் நன்குவிளங்கு மென்பர்.

இவ்வளவு அரும்பே ராற்றல் பெற்ற பெரியார் பிரிந்து இன்றைக்கு நாற்பத்தைந்து ஆண்டுகள் ஆகின்றன. எனினும் அவர் புகழ் மங்காமல் உள்ளது. ஏன்? அவர் எழுதிய 'ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன் தமிழர்' என்ற நூலே அவரை என்றும் வாழ வைக்கின் றது. ஆம். இனி அந் நூல்வழி அவர் பெருமையைக் காண்போம்.

தமிழர்தம் பண்டை வரலாறுகளை அறியச் சாதன மாக இருப்பன அக்காலத்து எழுதப்பட்ட இலக்கியங்களே

யாம். கடைச் சங்கக் காலமென்று பேசப்படும் இன்றைக்கு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் எழுந்த இலக்கியங்களைப் பத்துப்பாட்டு எட்டுத்தொகை என்று பாகு படுத்தினர். அத்துடன் சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காவிய இலக்கியங்களும் எழுந்தன. இவற்றை வெறும் எழுத்தோவியம் என்று மட்டும் எண்ணிய காலம் ஒன்று இருந்தது. ஆனால் கனகசபைப் பிள்ளை யவர்கள் அவற்றை வெறும் எழுத்தோவியங்கள் எனக் கொள்ளாது தமிழர்தம் பண்டைப் பெருமையைை விளக்கும் வரலாற்று ஓவியங்களாகக் கொண்டனர். இந்த இலக்கியங்களின் உறுதுணை கொண்டு அன்றைய தமிழ்நாட்டு வரலாற்றை முதன்முதல் வெளியிட்ட பெருமை இவருக்கே உண்டு.

தம் ஆராய்ச்சியிற் கண்ட முடிபுகளை அவ்வப்போது 1895-க்கும் 1901-க்கும் இடையில் 'மதராஸ் ரெவியூ' என்ற ஆங்கில இதழில் வெளியிடலானார் பிள்ளையவர்கள். அவற்றுள் முதற் கட்டுரை வெளியான வுடனேயே அதைப் படித்து, அதன் ஏற்றத்தைப் புகழ்ந்தவர் பலராவர். அவருள், அக் காலத்துச் சென்னை உயர்நீதி மன்றத் தற் காலிகத் தலைமை நீதிபதியாக இருந்த சர். சுப்பிரமணிய ஐயர் அவர்கள் சிறந்தவர். அவர் பிள்ளையவர்களை ஊக்கி மேலும் அதுபோன்ற பல ஆராய்ச்சிக் கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதிவர வேண்டினர். அவ்வாறே பிள்ளை யவர்கள் ஆறு ஆண்டுகளிலும் தொடர்ந்து பல கட்டுரை களை வெளியிட்டனர். கட்டுரைகள் பல வெளி வந்தபின், அவை வெறும் இதழ்களில் சிதறிய கட்டுரைகளாக இருப்பதினும், தொகுக்கப் பெற்றுச் சிறந்த நூலாக்கப் பெறின் நாட்டுக்கும் உலகுக்கும் சிறந்த பயன் உண்டாகும் என்றனர் நண்பர்கள். அவர்தம் விழைவை யெல்லாம் நிறைவேற்றவும், தமிழரின் பண்டைப் புகழ் பாரில் ஓங்க

வும் திரு. பிள்ளையவர்கள் 16-1-1904-ல் 'ஆயிரத் தெண் ணூறு ஆண்டுகளுக்கு முன் தமிழர்' என்ற ஆங்கில நூலை வெளிக் கொணர்ந்தார். இந்நூலை, தன்னை இத்துறையில் தளரா வகையில் ஊக்கிய உயர் நீதிமன்றத் தலைவர் சர். சுப்பிரமணிய ஐயர் அவர்களுக்கே உரிமையாக்கினுர். தமிழர் மட்டுமின்றி எந்நாட்டவரும் இந்நாட் டியல்பை அறிந்து போற்றும்படி ஆங்கிலத்தில் பிள்ளையவர்கள் இந் நூலை எழுதித் தந்தது ஒரு பெரும் பேறென்று கொள்ளல் வேண்டும்.

இருபதாம் நூற்றுண்டின் இடைக்காலத்தில் நிற் கின்ற நமக்கு நம் நாட்டு வரலாற்றை ஆராய்வது அவ் வளவு கடினமாகத் தோன்றுது. பலர் அத் துறையில் வழி காட்டியுள்ளனர். வரலாற்று மூலங்கள் பலப்பலவாகப் பல்கிப் பெருகியுள்ளன. ஆனுல் இந்த நூற்றுண் டின் தொடக்கத்திலே, தமிழர்தம் பண்டை வரலாறு இன்னதென ஆராயவேண்டும் என்ற எண்ணமே தோன்றுத அன்றை நாளிலே தாமே முன்னின்று முயன்று முதன் முதலாக இத் தமிழ் நாட்டு வர லாற்று நூலைக் கொண்டுவந்த கனகசபைப் பிள்ளையைத் தமிழுலகம் தலைமேற்கொண்டு போற்றக் கடமைப் பட்டுள்ளது. இது வரை தமிழக ஆராய்ச்சியிற் புகுகின்ற யாரும் அந்நூலைப் பற்றிக் கூருது செல்லவில்லை. தக்க சான்றுகளும் மூலங்களும் கிடைக்காத அந்த முன்னைய நாளிலே அவர் கண்ட முடிபுகளில் ஒரு சில தற்போது முரண்பட்டதாகக் காணப்படினும், பெரும்பாலான கருத் துக்கள் அன்றும் இன்றும் ஒப்பவே ஏற்றுக்கொள்ளப் பட்டனவாக அமைவது அவர்தம் ஆழ்ந்த ஆராய்ச்சி நிலையினைப் புலப்படுத்துவதாகும்.

பிள்ளையவர்கள் தம் நூலைப் பதினாறு பகுதிகளாகப் பிரித்திருக்கின்றனர். அவற்றுள் தமிழக நிலப்பிரிவுகளையும், தமிழகத்தைச் சுற்றியுள்ள நாடுகளையும், அன்றைத் தமிழர் அன்னிய நாட்டாரோடு கொண்ட வாணிப வளனையும், அன்று தமிழ் நாட்டில் வாழ்ந்த பழங்குடி மக்களின் நிலையையும் எடுத்துக்காட்டியுள்ளார். அவற்றுடன் தமிழ் நாட்டை ஆண்ட முடியுடை மூவேந்தர்களாகிய சேர, சோழ, பாண்டியரைப் பற்றியும், அவர்களை அண்டியும், தனித்தும் வாழ்ந்த சிற்றரசர்களைப் பற்றியும் குறித்துள்ளனர். மேலும் அக்காலத்து வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறையையும், பிற பண்பாடுகளையும் பிள்ளையவர்கள் தெள்ளத் தெளியக் காட்டியுள்ளனர். நூலின் பிற்பகுதியில் அன்று தோன்றிய குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற வாழ்விலக்கியங்களைப் பற்றியும் அவை பாடிய புலவர்களைப் பற்றியும் பிற புலவர்களைப் பற்றியும் நன்கு ஆராய்ந்துள்ளனர். இறுதியாக அன்றைய தமிழ் நாட்டுச் சமயநிலை பற்றியும் அது வாழ்வோடு பிணைக்கப்பட்ட விதத்தையும் கூற மறக்கவில்லை பிள்ளையவர்கள். இவ்வாறு எல்லாப் பொருள்களையும் ஒருசேரத் தொகுத்த ஒரு பெரு வரலாற்று நூலை, தமிழ் இலக்கியங்களையும், அக்காலத்துத் தமிழ் நாட்டுக்கு வந்து சென்ற பிற நாட்டு அறிஞர்தம் குறிப்புகளையும் கொண்டு முடித்து, இறுதியில் தமிழன் தற்போதுள்ள நிலையையும், இனியும் தமிழ்நாடு தன் பண்டைப் பெருமையில் தளராதோங்க வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும் என்பதையும் கூறி முடிக்கின்றனர்.

சிதறுண்ட தமிழகத்தைச் செம்மைப்படுத்த எண்ணிய கனகசபைப் பிள்ளை யவர்களின் 'ஆயிரத் தெண்ணூறு

ஆண்டுகளுக்கு முன் தமிழர்' என்ற நூலின் இறுதி வாக்கியங்கள் இவை :

'தமிழர்கள் இன்னும் தங்கள் பழைய மூடப்பழக்க வழக்கங்களைப்பற்றி எண்ணிக்கொண்டு, அஞ்சாததற் கெல்லாம் அஞ்சி, அனைத்தும் பொய் என்று வேதாந்த மனப்பான்மை கொண்டு, வாழ்வை வெறுத்து, வருங்கால வளத்தைக் கனவு கண்டுகொண்டு மட்டும் இருப்பார்க ளானால் அவர்கள் நிச்சயமாக, உலக வாழ்வுப் பாதையில் எங்கோ பின் தங்கிக் காட்டுமிராண்டிகளாகத்தான் இருப் பார்கள்.

ஆனால் அவர்கள் மேலை நாடும் கீழை நாடும் இணைந் ததால் உண்டான புது நாகரீகத்தைப் பின்பற்றி, பேராசை யின்றி, சாதி மத வேறுபாடுகளைக் களைந்து, ஆண்க ளோடு பெண்களையும் கல்வித்துறையில் முன்னேற்றி, அவர்களை நல்ல வாழ்வரசிகளாகவும், தாய்மார்களாகவும் ஆக்கி, அறிவுத் துறையால் அறிவியல் (Science) துறை யைச் சீராக்கி, கைத்தொழிற் கல்லூரிகளை ஓம்பி வளர்த்து, குறுகிய மனப்பான்மை கொண்ட சமயத் துறையிலுள்ள மாசுகளைப் போக்கிச் செம்மைப் படுத்தி, இந்து சமயம் கடவுளைக் காட்டும் மெய்ச் சமயம் என்பதை நிலைபெறச் செய்து தலை நிமிர்ந்து வாழத் தொடங்குவார்களானால் அத் தமிழர்கள் உலகில் முன்னேறும் பல பெருஞ் சமூகங் களிடைத் தாமும் முன்னேறி ஏற்றமுறுவர்.

அறிவிலும், முன்னேற்றத்திலும் மேலோங்கும் அத் தமிழர் தம் தலைவர்கள் சீர்திருத்தங்களுக்குக் காலம் வரும் என்று காத்திராது, தாங்களே மற்றவர்களுக்கு வழி காட்டிகளாக நின்று, புத்தம் புதிய வாழ்வுக்கு வேண்டிய வளம் பெருக்கும் நல்ல கருத்துக்களைத் தத்தம் வீடுகளிலும் சுற்றிலுமுள்ள சுற்றத்தார் வீடுகளிலும், ஊர்களிலும்

மெள்ள மெள்ள, வெறும் ஆவேச உணர்ச்சி வகையில்லாது, செயல் துறையில் புகுத்தி, நாடு வாழ நல்வழி காட்டுவார்களானல், அவர்தம் அரும் பெயர்கள் தமிழர் தம் வருங்காலத்தில் அவர்தம் இனம் உள்ளவரையில் வழி வழியாக நிலை பெற்றிருக்கும் என்பது உறுதி.'

இவையே கனகசபைப் பிள்ளையவர்களின் இறுதி மொழிகள். இவை ஐம்பது ஆண்டுகளுக்கு முன் எழுதப் பெற்றிருப்பினும், இன்றைக்கும் தமிழர்களுக்கு ஏற்ற உரையாக அமைகின்றன. தமிழர்கள், சிறப்பாகத் தலைவர்கள், அவர்தம் வாய்மொழியைப் போற்றி நடந்து நாட்டை வாழ்விப்பார்களாக.

[வானொலிப் பேச்சு]

## கேள்விகள்

1. தமிழ் வளர்த்தலில் எவ்வெந் நாட்டினருக்குப் பங்கு உண்டு ?
2. தமிழன் தன் வரலாற்றினை எழுதிவைக்காத தேன் ?
3. விசுவநாதப் பிள்ளை சென்னை சேர்ந்த தெவ்வாறு ?
4. கனகசபைப் பிள்ளையின் கல்வி நிலையும், அலுவல் நிலையும் யாவை ?
5. கனகசபைப் பிள்ளை இயற்றிய நூல் யாது? அது பற்றி நாமறிவ தென்ன ?

## பயிற்சி

1. கனகசபைப்பிள்ளை தாமே தம் வாழ்க்கையைக் கூறுவது போல் எழுதுக.
2. 'ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்குமுன் தமிழர்' என்ற நூல் பற்றி ஒரு சிறு கட்டுரை எழுதுக.
3. மேற்கண்ட நூலிலுள்ள சிறந்த கருத்துக்களுட் சிலவற்றையேனும் ஆசிரியர்வழி அறிந்து கொள்ளுக.

## இலக்கணம்

(1) கீழ்க் கோடிட்ட சொற்களுக்கு இலக்கணத் தொடர்பு கூறுக :—

(1) தமிழன் தன்னைப் பற்றிப் பேசியே பெருமை கொள்ள நினையாதவன்.

(2) அவர் பணி அஞ்சலகத்தில் நடைபெற்றது.

(3) சான்றுகளும் மூலங்களும் கிடைக்காத அந்த நாளு.

(4) சமயநிலை வாழ்வோடு பிணைக்கப் பட்டுள்ளது.

(2) உயர்திணையில் உயர்ந்தோரைக் குறிக்க எப்பாலால் சொல்லப் படுகின்றது? உதாரணம் தந்து விளக்குக.

(3) பண்புப் பெயர் என்றால் என்ன? எடுத்துக் காட்டுடன் விளக்குக.

(4) பிரித்து வரைக :—

நாற்பத்தைந்து, பதினாறு, இருபத்துமூன்று, உவந்தாரில்லை.

(5) இடம் எத்தனை வகைப்படும்? உதாரணங்கள் தருக.

(6) இடவாகுபெயர் என்றால் என்ன? அது இப்பாடத்தில் வந்த விதத்தைக் காண்க.

## 2. ஆடலும் பாடலும்

மக்கள் மட்டுமன்றி உலகில் தோன்றிய உயிரினங்கள் அனைத்தும் மகிழ்ச்சிப் பெருக்கில் திளைக்கும் காலத்து ஆடிப்பாடி இன்புறுவதுண்டு. ஆடுவதும் பாடுவதும் இன்ப உள்ளத்தின் எதிரொலி. துன்பத்திலும் சில சமயங்களில் பாடல் தோன்றும். உள்ளத்தே உண்டாகும் நெகிழ்வினையும் உணர்வினையும் வெளிக்குக் காட்டும் வகையிலே அமைவன ஆடலும் பாடலும்.

செல்வர் மட்டுமன்றி வறியரும், இளைஞர் மட்டுமன்றி யாவரும், மக்கள் மட்டுமன்றி மற்றைய உயிர்களும் இந்த ஆடலிலும் பாடலிலும் தம்மை இழப்பது உலகியற்கை. ஆடலும் பாடலும் உலகம் உண்டான அன்றுதொட்டு, அறிவுநிலை திருந்தப் பெருத அந்தக் காலத்திலேயும் போற்றப்பட்டு வந்தன. ஆடலும் பாடலும் ஒன்றற்கொன்று இயைபுடையன. ஒன்று இன்றேல் மற்றொன்று சிறந்ததாகாது. ஒன்று பொலிவிழந்ததாயின் மற்றொன்றும் குறைவுறும். பண் பொருந்தப் பாட்டிசைக்க அப்பாட்டின் இசைக்கும், தாளத்திற்கும் ஏற்ப அமைவது ஆடலாம். இராகமும், தாளமும், இசையும், அளவும் பாடலை ஆக்குகின்றன. அவற்றுடன் பாவம் சேர்ந்தால் ஆடலாகின்றது. இதையே பரத நூலாசிரியர்

"பாவமோ டிராகம் தாளம் இம்மூன்றும்
பகர்வதால் பரதம் என்றுரைப்பர்."

என்று பாடிப் போனர்.

தமிழ் நாட்டில் மிகப் பழங்காலந்தொட்டு இந்த ஆடல் பாடல் இரண்டும் போற்றப்பட்டு வந்தன. இயற்கை

வழியே வாழ்வு நடத்திய தமிழ் மக்கள் இந்த இரண்டை யும், ஆடலேயும் பாடலேயும், இனிய முறையில், இயற்கை நலத்துடன் போற்றிப் புரந்தனர். ஆடவரும் பெண்டிரும், கைகலந்து ஆடியும் பாடியும் தம் பொழுதைக் கழிக்கு முறை நன்கு கையாளப்பட்டு வந்தது. சங்க கால இலக்கியங்களிலே பாணன், பாடினி என்பார் அரசர் களேக் காணச் செல்லுங்கால் ஆடியும், பாடியும், அசைந் தும் சென்றனர் என்பதைக் காண்கின்றோம். தாம் ஆடலிலும் பாடலிலும் மகிழ்ந்து சென்றது மட்டுமன்றி இயற்கைப் பொருள்களும், பிற உயிருள்ளனவும்கூட அந்த ஆடல் பாடல்களில் அழகுற்று விளங்கின என்று கூறுகின்றார்கள்.

கபிலர் தினேப்புனத்தைக் காணகின்றார். தினே உண்ணக் குருவிகள் சேர்ந்து வருகின்றன. மயில் அங்கே அசைந்து வருகிறது. கண்ட குருவிகள் தத்தித் தத்திப் பறக்கின்றன. அந்தக் குருவிகள் பந்து போலவும், மயில் பந்தாடு மகளேப்போலவும் காட்சியளிக்கின்றது புலவர் கபிலருக்கு. அதைப்பற்றி அவர்தம் பாடல் ஒன்றில் பாராட்டுகிறார்.

காவிரிக் கரையில் தங்குகிறார் காவியந் தந்த இளங்கோவடிகள். அழகுறப் பெருவெள்ளம் அலே கொழித்துச் செல்கிறது. அருகிலுள்ள சோலேயில் மயில் அகவ, குயில் கூவ அசைந் தசைந்து செல்லும் காவிரி யின் காட்சி அடிகள் நெஞ்சைப் பிணிக்கின்றது.

'' பூவார் சோலே மயிலாலப் புரிந்து குயில்கள் இசைபாடக்
காமர் மாலே அருகசைய நடந்தாய் வாழி காவேரி ''

என்று மயில் ஆடலும் குயில் பாடலும் கலக்கக் காவேரி அசைந்தாடி அழகுறச் செல்கிறாள் எனப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

ஏழாம் நூற்றுண்டிலே வாழ்ந்தவர் குழந்தை ஞான சம்பந்தர். ஊர்தோறும் சென்று இறைவனைப் பாடிப் பரவும் முறையிலே பல பாடல்களைப் பாடியுள்ளார் அவர். அவை தேவாரமாகத் தொகுக்கப் பெற்றுள்ளன. அவர் தம் பாடலிலே ஆடலும் பாடலும் அழகுற விளக்கப் பட்டுள்ளன. ஆண்டவனை வணங்கும் அடியவர்கூட ஆடலையும் பாடலையும் விட்டாரில்லை. 'ஆடிப்பாடி அண்ணுமலை யடைந்தார்' என்று கூறியுள்ளார் அவர். மக்கள் மட்டுமன்றிப் பிற இயற்கைப் பொருள்களும் இவ்வாடல் பாடல்களில் தம்மை மறந்தன என்பதை அவர்தம் சொல்கொண்டே காணலாம்.

> "காந்தார மிசையமைத்துக் காரிகையார் பண்பாடக்
> கவிஞர் வீதித்
> தேந்தேமென் றரங்கேறிச் சேயிழையார் நடம்பயிலும்
> திருவையாறே"

என்று பெண்களது ஆடலையும் பாடலையும் கூறுகின்ருர் சம்பந்தர்.

> "வரைசேரும் முகில்முழவ மயில்கள்பல நடமாட
> வண்டுபாட
> விரைசேர் பொன் இதழிதர மென்காந்தள் கையேற்கு
> மிழலையாமே"

என்ற இயற்கை ஆடலைக் காணும்போது அவர் பிள்ளை யுள்ளம் துள்ளி எழுகின்றது. மலைமீதிருந்த மேகம் முழவாக முழங்க, வண்டுகள் பாட, மயில்கள் நடமாடின. அந்த நடனமாகிய, ஆடல் எழிலைக் கண்டு பொன்பரிசு தந்தன அருகிலுள்ள சுரபுன்னை மரங்கள். அதை ஏற்றன காந்த ளாகிய கைகள். ஆம்! இவை சாதாரண இயற்கை ஓவி யங்கள்தான். ஆனல் இத்தகைய இயற்கை ஓவியப்

பாடல்கள் நாட்டின் சிறப்பை நன்கு விளக்கும் பாடல் களாக அமைகின்றன அன்றே!

சம்பந்தர் காலத்திற்குப் பின் வாழ்ந்த புலவர்கள் பலர். அவர்கள் அனைவரும் ஆடலையும் பாடலையும் இணைத்தே பாடியுள்ளார்கள். இறுதியாக வாழ்ந்து மறைந்த சுதந்திரப் புலவன் பாரதி கூடப் பெற்ற சுதந்திரத்தை ஆடல் பாடல் களாலேயே போற்றவேண்டும் என்றான்.

'' ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே ஆனந்த சுதந்திரம்
அடைந்து விட்டோ மென்று ஆடுவோமே ''

என்றான்.

எனவே தமிழ் நாட்டு இலக்கியம் அறிந்த நாள் தொட்டு இன்றுவரை ஆடலும் பாடலும் இயைந்தே வரு கின்றன. மக்கள் ஆடல் பாடலில் ஆற்றிய திறன் நன்கு விளக்கப்படுகிறது. மக்கள் உள்ளம் இந்த இரண்டிலும் இயைந்து நின்றமை நன்கு வெளிப்படுகின்றது. இன்னும் நாட்டிலும், வாழ்விலும், இசை முழங்கக் கேட்கிறோம்; மகிழ்வில் நடம் பயிலக் காண்கிறோம்.

ஆனால், தமிழ் நாட்டில் இன்றைக்கு, அன்று புலவர் கண்ட அளவுக்கு ஆடலும் பாடலும் அமையவில்லை என்பது உறுதி. தெருவெலாம் அரங்கங்கள்! தெரிவையர் நாடக சாலைகள், சேயிழையார் பாடல்கள், தினம் தினம் 'பாடல் முழவும் குழலும் இயம்பப் பணைத் தோளியர் பாட லோடு ஆடல் அறுக்' காட்சிகள் அன்று தமிழ் நாட்டில் சிறந்த காட்சிகளாக அமைந்தன. இன்று அந்த அளவிலே இல்லை.

நாம் முதலில் காட்டியபடி உள்ள மகிழ்ச்சியின் விளைவே ஆடலும் பாடலும் ஆகும். நாட்டில் உள்ள மகிழ்ச்சிக்கு வேண்டிய அளவு நலன்கள் இல்லை. உள்ளம் மகிழ்வதற்கு வேண்டிய சூழ்நிலை இல்லை. அனைத்திலும்

அடிமையாகிக் கிடக்கிருன் தமிழன். கலேயில் அடிமை—மொழியில் அடிமை—வாழ்வில் அடிமை—வளம் பெருக்குவதிலும் அடிமை! இந்த நிலேயில் அவன் உள்ளம் மகிழ்வது எங்கே? மகிழ்வில் பிறக்கும் ஆடலும் பாடலும் அமைவது எங்கே?

மற்றும் தமிழ்நாட்டில் தமிழ்ப் பாடல் பாடுவது இழிவென்று எண்ணிய காலம் இருந்தது. பிற பாடல்களேப் பாடிப் பொருள் அறியா நிலேயில் ஆடல் சிறப்பதெங்கே? ஆகவே இடைக்காலத்தே பிற பாடல்களேப் பாடவேண்டும் என்று எழுந்த போலி எண்ணத்தால் ஒன்றை ஒன்று பற்றி வாழ்கின்ற ஆடலும் பாடலும் வளங்குன்றின எனினும் இன்றைய விழிப்புற்ற தமிழகத்தே—தமிழிசை தழைத்தோங்கும் இந்த நாளிலே—நாட்டிலே ஆடலும் பாடலும் நனி சிறக்கும் என எதிர் பார்க்கலாம்.

ஒரு நாட்டு ஆடலும் பாடலும் சிறக்க வேண்டுமாளுல், அதற்கு அந் நாட்டு அரசியலார் ஆவன செய்ய வேண்டும். நாட்டின் ஆடலும் பாடலும் அழகுற அமையும் முறை கண்டே அந் நாட்டு அரசனது திறன், அறிவு, வளமை அனைத்தையும் அறுதியிட்டுக் கூறலாம். தமிழ் நாட்டு அரசர் அன்று இத்தகைய கலே நலன்களே ஓம்பி வந்ததனுலேயே அவை எல்லாம் வளர்ந்தன. கலேயின் நலன் கண்டே, ஆண்ட மன்னர்தம் மன நலனே மதிப்பிட இயலும். மதிப்பிட்டார் இளங்கோவடிகள். இதோ அவர் அடிகள் :

" மருங்குவண்டு சிறந்தார்ப்ப
மணிப்பூஆடை அதுபோர்த்துக்
கருங்கயற்கண் விழித்தொல்கி
நடந்தாய் வாழி காவேரி !

கருங்கயற்கண் விழித்தொல்கி
நடந்தவெல்லாம் நின்கணவன்
திருந்து செங்கோல் வளையாமை
அறிந்தேன் வாழி காவேரி ''

எனக் காவிரியை ஒரு பெண்ணுகக் காண்கின்ருர். மணிப் பூவாடை போர்த்த பெண்ணுகக் காண்கின்ருர். வண்டு பாட, இம்மங்கை நல்லாள் கயல் விழி பிறழ நடம் புரிந்து செல்கிருள். அவள் அவ்வாறு செல்வதால் அவள் தலைவன்—அந்நாட்டு• அரசன்—சோழன் செங்கோல் செவ்விதாக உள்ளதை அறிந்தேன் என்கிருர். எனவே, நாட்டு அரசன், நலம் புரப்பவனுக இருப்பின் அவன் நாட்டிலே கலைமணம் கமழும். ஆடலும் பாடலும் அழகுற மிளிரும். இன்றைய் தமிழ் நாட்டில் ஆடலும் பாடலும் போற்றவேண்டிய அளவுக்குப் போற்றப் படாதிருப்பதற்குக் காரணம் இதுவரை இருந்த அன்னிய அரசியலேயாகும்.

நல்ல வேளையாக இன்று நம்மை நாமே ஆளுகிருேம். சென்னை அரசியலாராகிய தமிழ் நாட்டு அரசியலார் ஊர்தோறும், நாடுதோறும், தமிழ் இசையும் தமிழர் தம் ஆடல் பாடலும் இடையருது நடை பெறத் தக்க வழியில் ஆவன செய்யவேண்டும். செய்வார்கள் என்று எதிர் பார்க்கலாம். மக்களும் அறிஞரும், அரசியலாரும் இவ் வழி ஒன்றுபட்டு உழைப்பார்களாயின் தமிழ் நாட்டில் கலை மணம் கமழும். ஆடலும் பாடலும் அழகுற விளங்கும்.

## கேள்விகள்

1. இன்ப உள்ளத்தின் எதிரொலி யாது?
2. பரத நூலாசிரியர் ஆடல் பற்றிக் கூறுவதென்ன?

3. கபிலர் காட்டும் பந்தாட்டம் யாது ?
4. ஞானசம்பந்தர் கூறும் இயற்கைக் கூத்தும் பாட்டும் யாவை ?
5. கலை வளர்ச்சியைக் கொண்டே அந் நாட்டு மன்னனின் திறன் முதலியவற்றை அறியலா மென்பதெவ்வாறு ?

## பயிற்சி

1. நம் நாட்டு இசை, கூத்து இவைபற்றித் தனித்தனியே கட்டுரை எழுதுக.
2. ஞானசம்பந்தர் இயற்கைக் காட்சியைக் கற்பனை செய்து காட்டுவதை விளக்கி எழுதுக.
3. நாடக வியல் போன்ற நூல்கள் கிடைக்குமாயின் படிக்கவும்.

## இலக்கணம்

(1) கீழ்வரும் இலக்கணங்களை விளக்கி வரைந்து உதாரணங்கள் தருக:—
எண்ணும்மை, புறச்சுட்டு, தேற்றேகாரம், தொழிற் பெயர்.

(2) பெயர்ச்சொல் எத்தனை வகைப்படும் ?

(3) மரபுச் சொல் என்றால் என்ன ?

(4) செய்வினைக்கும், செயப்பாட்டு வினைக்கும் விளக்கம் தருக.

(5) கீழ்வருஞ் சொற்றொடர்களைத் திருத்தி வரைக :—
(1) மயில்கள் இசைபாட குயில்கள் ஆட.
(2) வரைசேரும் முகில்பாட, மயில் ஆட, குயில் சேரும்.
(3) நடனம் பாடுவோமே, பள்ளு ஆடுவோமே, சுதந்திர ஆனந்தம் வந்ததென்று.

(6) கீழ்வரும் தொடர்களுக்கு இலக்கணம் தருக :—

(1) பாவமோடு இராகம் தாளம் இம் மூன்றும்.

(2) துன்பத்திலும் சிலசமயத்தில் பாடல் தோன்றும்.

(3) இறைவனைப் பாடி உள்ளம் உருகினர்.

## 3. உண்டால் அம்ம இவ்வுலகம்

ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்குமுன்பு அறவண வடிகளுக்கு முன் ஒரு அறிவுடைச் செல்வி நின்று கொண்டிருக்கிறாள். அவள் கையில் ஒரு அமுதசுரபி இருக்கின்றது. அது வந்த காரணத்தை அறிவார் அறவணவடிகள். அறிவுடைச் செல்வியாம் மணிமேகலையும் அறிவாள். எனினும், அதன் சிறப்பை அறியாள். அறிய விழைந்தாள், அறிவுறுத்துகின்றார் அடிகளார்.

அமுதசுரபி ஆபுத்திரன் கையில் இருந்த வரலாற்றையும் அது மணிபல்லவத்தே வந்த வரலாற்றையும் கூறுவதோடு அதன் பயனை எவ்வாறு உலகுக்குப் பயன்படுத்தினான் என்பதையும் அடிகள் விளக்குகின்றார். அச் சுரபியில் எடுக்க எடுக்கக் குறையாது சோறு பெருகிக் கொண்டிருக்கும். உணவு ஊற்றுப் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருக்கும். அதில் வரும் உணவை வாரி வாரிக் கொடுத்துக்கொண்டே இருந்தான் ஆபுத்திரன். எங்கெங்கு பஞ்சம் காணுமோ அங்கெல்லாம் ஓடி ஓடி உணவளித்து வந்தான். அவன் வாழும் பக்கம் பஞ்சமே தலைகாட்டவில்லை. மக்கள் உணவில்லையே என வருந்தினர்களா என்று கேட்கத் தேவை யில்லை. வயிறார உண்டு வாயார ஆபுத்திரனை வாழ்த்திச் சென்றனர் மக்கள். அவனும் அதனால் பெருமை கொள்ளாது, தன் நிலை கெடாது அனைவரையும் 'வருக' என்று ஏற்று அவர் முகங் கண்டு உண

வளித்து, அவர்தம் உண்ட முகம் மகிழ்வால் மலர அது கண்டு தானும் மகிழ்ந்து வந்தான். இவ்வாறு பயன் கருதாது பணி புரியும் இக் கொடையாளனின் புகழ் பல விடங்களில் பரவிற்று. இந்திரனும் இது பற்றிக் கேள்விப் பட்டான். தனது பதவியும் பறிபோகுமோ என்ற பயத்தால் ஓடி வந்து ஆபுத்திரன் முன்னின்று பலவாறு அவனைப் புகழ்ந்தான். ஆனால் ஆபுத்திரன் புகழ்ச்சியைப் பொருட் படுத்தாது கருமமே கண்ணாக இருந்து வருந்திவந் தோர்க்கு அவர்தம் அரும் பசியைக் களைந்து கொண்டிருந் தான். பல ஆசை மொழிகளைப் புகன்று தெய்வலோக இன் பத்தைத் தருவதாகக் கூறினான் இந்திரன். தன் பணிக்கு இடையூறாக வந்த இந்திரன்மேல் சினந்த ஆபுத்திரன் அவனை உறுத்து நோக்கி இந்திர உலக இன்பத்தை இகழ்ந்தான். இங்கு இம் மண்ணில் உணவில்லை என மக்கள் வருந்த, அவர் வாட்டந் தீர உணவளித்து, அவ் வுணவு உண்டு வாட்டம் தீர்ந்து அவர் முகம் மலர, அம் மலர்ச்சி கண்டு தன் அகமலர, மற்றவருக்குக் கொடுக்கும் இன்ப வாழ்வு, தேவஉலகம் அறியாத ஒன்றல்லவா என்று கூறி அந்த உலக வாழ்வை எள்ளி நகையாடினான். உண்டதே உண்டும், உடுத்ததே உடுத்தும் பயனற்று வாழும் அந்நாட்டு அதிபதியும் தம் நாட்டில் பெறமுடியாத ஒரு இன்பத்தை எண்ணி எண்ணி ஏங்கி ஆபுத்திரனை அவன் பணி வழி நிற்கவிட்டு நீங்கினான். இது இரண்டாயி ரம் ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த நிகழ்ச்சி ; சாத்தனாரின் வாக்கில் ஆபுத்திரன் கூறியதைக் காண்போம் :

" அறம் செய் மாக்கள் புறங்காத் தோம்புநர்
நற்றவம் செய்வோர் பற்று அற முயல்வோர்
யாவரும் இல்லாத் தேவர் நன்னாட்டுக்கு
இறைவ னாகிய பெருவிறல் வேந்தே

வருந்தி வந்தோர் அரும்பசி களைந்து அவர்
திருந்து முகங் காட்டுமென் தெய்வக் கடிஞை
உண்டி கொல்லோ உடுப்பனகொல்லோ
பெண்டிர் கொல்லோ பேணுநர் கொல்லோ
யாவையீங் களிப்பன தேவர் கோன் என்றலும் ''

என்று ஆபுத்திரன் கூறியதாகக் காட்டுகின்றார் அவர்.

இந்த வரலாறு நடந்து எத்தனையோ ஆண்டுகள் ஆகியிருக்கவேண்டும். இதை எழுதிய சாத்தனார் இன்றைக்கு ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகட்கு முன் வாழ்ந்தார். அதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னே ஆபுத்திரன் வரலாறு வந்திருக்கவேண்டும். இந் நிகழ்ச்சி இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்ததாக இருப்பினும் இன்னும் இந்த நிகழ்ச்சி நாட்டுக்கும், உலகுக்கும் தேவையாக உள்ளது. ஆபுத்திரன் போன்றார் உலகெங்கிலும் நாட்டின் பல பகுதிகளிலும் தோன்றவேண்டும். தோன்றியிருக்கின்றனர் மிகச் சிலர். அச் சிலர் இருப்பதால் தான் அணுகுண்டு யுகத்தும் ஒரு சிலராவது அல்லல் இன்றி வாழ வழி ஏற்பட்டுள்ளது.

உலகம் உண்டான நாள் தொட்டு இன்று வரை எத்தனையோ கோடிக்கணக்கான மக்கள் பிறந்து வளர்ந்து வாழ்ந்து மாண்டுள்ளனர். ஆனால் அன்னவர்களைப் பற்றியெல்லாம் வரலாறு காட்டவில்லை. வாழ்க்கை விளக்கங்கள் இல்லை. இன்றைய வரலாறு உலகப் போர்களையும், போர் வழி முளைத்த அரசுகளையும் அவர்தம் ஆணைகளையுமே காட்டுவனவாக உள்ளது. அந்தமுறை மேலும் உலகை மண்ணாளும் மண்ணாசையில் கொண்டு சேர்த்து, கொந்தளிப்பையும், கொடுமையையுமே உண்டாக்குமன்றி, அமைதி, இன்பம், எழில் இவற்றை உண்டாக்காது. நாடும் நாமும் செம்மைப் படவேண்டுமானால் வரலாறுவேறு வகை

யில் வரையப்பட வேண்டும். வரலாறு வாழும் வரையும், இறக்காது வாழ்கின்ற உயர்நிலை எய்தினோர் பலர் உலகில் உள்ளனர். பண்டைத் தமிழ் நாட்டை வரலாற்றுக் கண் கொண்டு நோக்குவார்க்கு இவ்வுண்மை புலப்படும். சங்க காலப் புலவர்கள் வெறும் போர்களையும், களங்களை யும், அரசர்களையும் மட்டும் பாடிப் புகழவில்லை. அவர்கள் வாழ்வாங்கு வாழ்ந்தவர்களைப் பாடினர். வையத்தை வாழ வைக்கும்பிறர்க்குரியாளரைக் காட்டினார்கள். கலந்து வாழ்ந்து, உள்ளத்தால் பலம் பெற்ற உலக மக்களைக் காட்டினார்கள். அவர்கள் காட்டக் காணும் உலகம் பெரிது. அவர்தம் அற வழிப்படியே இந்திர வாழ்வு வேண்டாத ஈகைத் தன்மையாளராம் ஆபுத்திரன் போன்றாரால்தான் இன்றுவரை உலகம் வாழ்கின்றது. இனி, என்றும் வாழவும் வழி உண்டு. அதை நன்கு அறிந்தார் புறநானூற்றுப் புலவர் ஒருவர். தன் உள்ளம் அறிந்த உண்மையை வாரி வழங்குகின்றார்.

" உண்டால் அம்ம இவ்வுலகம் ; இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே ; முனிவிலர் ;
துஞ்சலு மிலர் ; பிறர் அஞ்சுவது அஞ்சிப்
புகழெனின் உயிருங் கொடுக்குவர் ; பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர் ; அயர்விலர் ;
அன்ன மாட்சி அனையர் ஆகித்
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே "

என்ற பாடல் அது. இது நமக்கு அறிவிக்கும் உண்மைகள் அளப்பில ; வாழக் கற்றுக் கொடுக்கும் பாடங்கள் கணக் கில. மனிதன் மனிதனாக வாழவேண்டுமாயின் இப் பாடலைப் பாடிய இளம் பெருவழுதியின் வாய்மொழிப்படி

ஒழுகவேண்டும். வீரனென விளங்கிய ஒரு வேந்தன் தன் உள்ளக் கருத்தை உலகம் வாழ வேண்டிய செம்மை நெறியில் கூறுகின்றான். இவன் சொல்லுக்கு ஆபுத்திரன் வாழ்க்கை இலக்கியமாக விளங்குகிறது. நாமெல்லாம் நம் வாழ்வினை இப்பாடலுக்கு இலக்கியமாக என்று ஆக்கு கிறோமோ அன்றே சிறந்தவராவோம்.

அவர் காட்டும் வாழ்விலக்கணம் யாது? இப் பாடல் யாரோ வறுமையில் வாடிய புலவன் பாடியதாயிருப்பின், அவனுக்கும் அவன் குடும்பத்திற்கும் அவன் போன்றாருக் கும் வறுமை நீங்கும் வழியாக இப்பாட்டைப் பாடினான் என்று கூறலாம். ஆனால் பாடியவன் பழம் பெரும் மன்னன். தன் உள்ளக் கருத்தை வாழ்வுத்துறையை வகைப் படுத்தும் வழியில் விளக்கிக் காட்டுகிறான். அவன் காட்டுவது யாது?

இவ் வுலகம் தமக்கென வாழாப் பிறர்க்குரிமையாள ராய் வாழும் பெரியோர்களால்தான் வாழ்கிறது என்று அவன் கூறுகின்றான். இக்கருத்தை மறுப்பார் உண்டோ? இன்றைக்கும் ஒரு சிலராயினும் உலகம் வாழ வேண்டும் என்ற பெருநெறியால் நிற்பதாலன்றோ உலகம் வாழ்கின் றது. தனக்கு வேண்டியதைத் தேடிக்கொண்டு, மிகுதி யைத் தரணியில் வாழும் ஏழைகளுக்கும் பகுத்துக் கொடுத்து வாழுகின்ற வாழ்வறம் அன்றோ அனைத்திலும் மேம்பட்டது.

''பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை''

என்றாரே அந்த அறநூற் புலவர் திருவள்ளுவர். மற்றவர் களுக்குக் கொடுக்கும் அறமே பிற அனைத்தினும் மேம்பட்ட அறமாகும். இளம்பெரு வழுதி இதற்கு மேல் ஒருபடி செல்லுகின்றான். அவன் தான் வாடினும்

தவறில்லை. மற்றவர்க்குக் கொடுத்து அவர் பொருட்டு வாழ்வதே வாழ்க்கை என்கிறான். வாரி வழங்கும் வள்ளல்களாக ஒவ்வொரு செல்வரும் மாறினால் இந்த உலகில் என்றாவது பஞ்சமும் நோயும் பட்டினியும் பரதவிப்பும் காணமுடியுமா? முடியாதே. என்றும் உலகம் வாழ வகுத்த வழி யல்லவா இது. இன்றைய உலகை உயர்ந்ததாகச் செய்ய முயலும் பெருந்தலைவர்கள் இளம்பெரு வழுதி பெற்ற நல் உள்ளத்தைப் பெறுவார்களானால் அவர்தம் வாழ்வு சிறப்பிதோடு உலகம் உயர்வுறுமே!

வழுதி அந்த ஒன்றினோடு அமையவில்லை. அவ்வாறு தனக்கென வாழாதவர்கள் எவ்வெவ்வாறு வாழ்வார்கள் என்பதையும் விளக்கத் தவற வில்லை. இன்று இருநூறு கோடி மக்கள் வாழ்கின்றார்கள். ஆனால் அவர்தம் வாழ்வினை வழுதி காட்டிய வாழ்வோடு ஒப்பிட முடியுமா? ஆபுத்திரன் இந்திரனது அமிர்தத்தையும் அவனது அமரலோக வாழ்வையும் வேண்டாம் என்று வெறுத்தான். அவன் நாட்டில் கொடுத்து அறியும் இன்பம் இல்லை எனக் குறை கூறினான். அந்த இன்பம் இந்த மண்ணில் அல்லது பிற விண்ணிலோ வேறிடத்திலோ இல்லை என்றான். அந்தக் கருத்தை ஒட்டியே வழுதி வகுக்கின்றான் நெறி; வேண்டாமென்று ஒதுக்குவது உயர்நெறி; எனினும் அந்த அமிர்தம் வலுவாகத் தன்னிடம் வந்து சேருமாயின் அறிவுடையோராகிய, பிறர்க்கென வாழும் பெரியோர் அதைத் தனியாக மூடிவைத்துத் தாம் மட்டும் உண்டு மகிழ்ச்சியடையார். தான் பெற்ற இன்பம் உலகமும் பெறுக என்ற உணர்ச்சியில் மற்றவர்களுக்கும் வாரி அளிப்பார். மற்றவர்களுக்குக் கொடுத்து இறுதியில் தமக்கு இல்லையானாலும் அது பற்றி எண்ணமாட்டார். மற்றும் அவர்கள் விருப்பு

வெறுப்பு அற்றவர்கள். விருப்பு அற்றவர் என்பது பெறுதற் கரிய சாவா மருந்தை மற்றவர்களுக்குக் கொடுக்கிறார் என்பதால் தெரிகின்றது. அந்த மருந்து பெருவிடினும், பெற்றதை மற்றவர் கொண்டாலும் வெறுப்பு அடைய மாட்டார்கள். பிறர் அஞ்சுவதற்குத் தாமும் அஞ்சுவர்— சோம்பி இருத்தலும் செய்யார். அவர்கள் விரும்புவ தெல்லாம் ஒன்றே. அதுதான் 'புகழ்'. பாடியவன் அரசன் ஆதலின் அவன் புகழிடம் நாட்டம் வைத்தான். ஆனால் அந்தப் புகழ் ஆணை வழியோ, அடக்குமுறை வழியோ அமைய லாகாது என்பது அவன் எண்ணம். எனவே, தனக்கென வாழா முறையில் வரும் புகழே புகழ் எனக்கருதினான். அதற் கென உயிரையுங் கொடுப்பர் என்றான். அதற்கு மாருகப் பழி வருவதாயின் அந்தப் பழிக்குப் பதில் பரிசாக உலகமே நின்றாலும் பெறமாட்டார்கள். எனவே அவர்கள் வேண்டுவ தெல்லாம் உலக மல்ல. உலகத்தைத் தமதாக வைத்துக் கொள்ளும் வாழ் வல்ல. தன்னுடையதை உலகத்துக்காக, தன்னுயிரையே கொடுப்பர் அந்த நல்லவர். ஆம், அவர் களால்தான் உலகம் வாழ்கின்றது. இத்தகைய அறவோர் இன்றும் நம்மிடை வாழ்ந்தார். நாம் வாழும் இந்த நாளில் ஒருவர் தனக்கென வாழவில்லை ; பிறர்க்கெனவே வாழ்ந் தார். கடமைக்காக வாழ்ந்தார் ; இறுதியில் உலகுக்காக உயிரையும் கொடுத்தார். அத்தகைய அண்ணலார் காந்தி யடிகள் வாழ்ந்த நாளில் நாம் வாழ்கின்றோம். இளம் பெரு வழுதி வசித்த நாட்டில் நாம் வாழ்கின்றோம். நம் ஒவ் வொருவரது வாழ்வும் அவர்கள் காட்டியதும், எழுதியது மாகிய நெறியில் செல்லவேண்டும். காந்தியடிகளார் வாழ்ந்ததால் உலகில் இந்தியா உயர்வுற்று வாழ்கின்றது. அந்தச் செம்மை நெறியாகிய, வழுதி வகுத்த அறநெறி அனைவராலும் மேற்கொள்ள முடியாதது தான். எனினும்,

நாமும் மக்களாகப் பிறந்துவிட்டோம் என்பதற்காக முயன்ருவது பார்க்க வேண்டாமா ?

## கேள்விகள்

1. மணிமேகலைக்கு அமுத சுரபியின் வரலாற்றைக் கூறியது யார் ?
2. மணிமேகலைக்கு அமுத சுரபி எவ்வாறு கிடைத்தது?
3. ஆபுத்திரன் செய்த அறச் செயல் யாது ?
4. ஆபுத்திரனிடம் இந்திரன் சினங்கொண்ட தேன் ?
5. வழுதியின் பாடலின் கருத் தென்ன ?
6. காந்தியடிகள் வாழ்வு இக் கருத்துக் கிசைவ தெவ்வாறு ?
7. இப் பாடத்தால் நாமறியும் நீதி என்ன ?

## பயிற்சி

1. ஆபுத்திரன் வரலாற்றை அவனே கூறுவதுபோல் எழுதுக.
2. இளம்பெரு வழுதியின் செய்யுட் கருத்தைக் கொண்டு ஒரு கட்டுரை எழுதுக.
3. ஆபுத்திரன், மணிமேகலை, அறவணவடிகள் வரலாற்றை ஆசிரியர் வழித் தெரிந்து கொள்க.

## இலக்கணம்

(1) காரணப் பொதுப் பெயருக்கும், காரணச் சிறப்புப் பெயருக்கும் உதாரணம் தந்து விளக்குக.

(2) கீழ்வருவன எவ்வெத் தொடர்க் குற்றியலுகரம் எனக் குறிக்க :—

சோறு, கேட்டு, மகிழ்ந்து, அரசு.

(3) எதிர்மறை சொல் தருக :—

பிற்றை, இன்பம், தொகுத்து, இறுதி, அன்று.

(4) கீழ் வருவன வற்றை வேற்று வினையாக மாற்றுக :—

வாழ்கின்றூர், மகிழ்வர், கேட்பித்தான், உண்டான், செய்வித்தான்.

(5) மிகுதல், திரிதல், இயல்பு, கெடுதல்—இந் நான்கிற்கும் உதாரணம் தந்து விளக்குக.

(6) ஏற்ற பிற பால்களைத் தருக :—
பிடி, நவ்வி, கோழி.

# 4. உத்தரத் திருவிழா

தமிழ் நாடு விழாக்களுக்குப் பேர்போனது. ஆண்டு முழுதும் ஏதாவது விழாக்கள் நடந்து கொண்டேதான் இருக்கும். தமிழர் கொண்டாடிய விழாக்கள் வெறும் வேடிக்கைக்காக மட்டும் அமைந்தன வல்ல. வீடும் நாடும் ஒருசேரப் பயன்பெறும் வகையில் அவ்விழாக்கள் கொண்டாடப் பெற்றன. நாட்டு மக்கள் யாதொரு வேறுபாடுமின்றி, சாதி மத வேறுபாடற்று, ஏழை பணக்காரன் என்ற வித்தியாசமின்றி அனைவரும் ஒன்றிக் கலந்து நல்ல விழாக்களைக் கொண்டாடினர். அத்தகைய விழாக்களுள் பங்குனி உத்தர விழாவும் ஒன்றாகும்.

தமிழர்தம் விழாக்கள் பெரும்பாலும் நிறைமதியை ஒட்டியனவாகவே அமைந்துள்ளன. தமிழர்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்தியவர்கள். இயற்கையிலே தோய்ந்து இன்பம் கண்டவர்கள். அவ் வியற்கையின் எழில் நிறைமதி நாட்களில் நன்கு விளங்கும். பூரண சந்திரன் வான வீதியில் வட்டமிட்டுச் செல்லும் நாளை இன்றும் போற்றி வியவாதவர் உளரோ? காதலர் மட்டு மன்றி மாதவரும் மற்றவருங்கூட அந்தப் பால் நிலவினைக் கண்டு அதன்வழிப் பெருக்கெடுக்கும் இன்பவெள்ளத்தைப் பருகி மகிழ்வர். ஆம். அத்தகைய நிறைமதிநாள் திங்கள் தோறும் வந்து வந்து போகின்றது. அவற்றுள் சிறந்த

நிறைமதி நாளாக, இன்பம் ஊற்றுப் பெருக்கெடுக்கும் முதல் நாளாக அமைவது பங்குனியின் நிறைமதி நாளாகிய உத்தர நாளாகும்.

**வசந்த காலம்**

வாடைக்காற்றும், நடுக்குங் குளிரும், வருத்தும் பனியும் நீங்கி வசந்த காலம் அரும்புவதைக் காட்டும் மாதம் பங்குனியாகும். இலை உதிர்ந்து பட்டனபோல் காணும் மரங்களும் செடிகளும் புதுத் தளிரைக்கொண்டு பூத்துக் குலுங்கும் மாதம் இந்தப் பங்குனி மாதமேயாகும். தென்திசைக் கோடியில் சென்ற சூரியன் வடதிசை திரும்பி, பூ மத்திய ரேகையைத் தாண்டி நம்மை நோக்கி வரும் திங்கள் பங்குனியே யாகும். இந்தப் பங்குனி வரப் போகும் வசந்த காலமாகிய இளவேனிலை ' வருக ' என வரவேற்று நிற்பதாகும். காதல் வாழ்வில் மற்றெவரினும் மிக்கும், சிறந்தும் விளங்கிய தமிழ் மக்கள் அக் காதல் வாழ்வு சிறக்க வசந்தத்தை எதிர்நோக்கி நிற்பர். மாசில் வீணையும் மாலை மதியமும் வீசு தென்றலும் இன்னிள வேனிலும் கலந்த நிலையை எண்ணும் அவர் உள்ளம். அந்த உள்ள உணர்வைத் தூண்டுவது இப் பங்குனியே யாகும். இப் பங்குனியைப் பங்குனிப் பருவம் என்பர் திருத்தக்கதேவர்.

" காசறு துறவின் மிக்க கடவுளர் சிந்தை போல
மாசறு விசும்பின் வெய்யோன் வடதிசை அயன முன்னி
ஆசற நடக்கும் நாளில் ஐங்கணைக் கிழவன் வைகி
பாசறைப் பரிவு தீர்க்கும் பங்குனிப் பருவம் செய்தான் "

என்பது சிந்தாமணி. ஆம். உருவிலியாகிய ஒரு பெருங் காமக் கடவுளாம் மன்மதன் மகிழ்ந்து விளையாடும் பருவம் பங்குனிப் பருவம். அந்தப் பருவம் வருமுன் வாடையிலும்,

பனியிலும் வருந்திய மக்கள் அப்பருவத்தை வரவேற்று மகிழ்வர். பின் பெருங் கோடையும் கார்காலமுந் தொடரு முன் அப் பங்குனி தொடங்கி இளவேனில் முடிய வுள்ள வசந்த காலத்தே இன்புற்று அவர்கள் இன்னல் நீங்கி இனிது வாழ்வர்.

### உத்தரநாள் விழா

மேலும் கார்காலந் தொடங்கி வயலில் உழைத்த உழவன் பின்பனிக் காலம் முடியு முன் அவ்வயலின் பயனை யெல்லாம் கைக் கொள்வான். அடுத்த கார் தொடங்கு முன் சிறிது ஓய்வு கிடைக்கும் அவனுக்கு. தமிழர் பெரும் பாலோர் உழவர்களே என்று சொல்லவேண்டுமோ? உழ வர் விளையும் பயனைக்கொண்டு தாமும் மகிழ்வர்; சுற்றத் தாரையும் மகிழ்விப்பர். பெற்றது கொண்டு சுற்றம் அருத் தும் பெரும் செயல் உழவருடையது. காதன் மனையாளும் காதலனும் இன்ப வாழ்வில் இருந்து தமக்கும் மற்றவருக் கும் பயன்படும் வகையில் விழாவாற்றிச் சிறப்பிப்பார்கள். அவ் விழாக்களின் தொடக்கநாள் உத்தர நாளாகும்.

### மணக் காட்சியே கயிலாயக்காட்சி

தமிழர்கள் தெய்வ நம்பிக்கை உடையவர்கள். தம் செயலையெல்லாம் கடவுள்மேல் ஏற்றிக் கண்டுகளிக்கும் நல்ல உள்ளம் பெற்றவர்கள். கடவுளும் நம்போல் வாழ்கின் றான் என்று இலக்கியம் இயற்றி அந்த நிலையிலே அவனை வழிபடுபவர்கள். அப்பாலுக் கப்பாலாய் இருக்கின்ற ஆண்டவனைத் தம் அருகிலே கொண்டுவந்து காண அவர் கள் கையாண்ட வழி அது. எனவேதான் தாம் இளவேனிற் பருவத்தே பெறும் இன்பச் சிறப்பினை இறைவன் சார்பில் ஏற்றினர். இறைவன் இறைவியை மணம் செய்துகொள் ளும் சிறந்த நாளாக இப் பங்குனி உத்தரநாளை அமைத்த

னர். இறைவன் தனிமை நீங்கிச் சத்தியொடு சேரின் உலகில் காதல் வாழ்க்கை நன்கு சிறக்கும் என்று கண்டார்கள் அவர்கள். காதல் வாழ்வு சிறக்க, சிவனும் சக்தியும் இயைந்து வாழவேண்டும் என எண்ணினர். எனவே தான் உத்தரத் திருமண விழா உண்டாயிற்று. அந்த மணக் காட்சியே கயிலாயக் காட்சி.

**அம்மையப்பர் திருக் காட்சி**

கயிலைக் காட்சியைக் கண்ட அடியவர் ஒருவர் அக் காட்சியைப் பலபடப் பாராட்டுவதைக் காண்கிறோம். அப்பர் கயிலை சென்று ஆண்டவனைக் கண்டார். அவர் கண்ட கயிலாயக் காட்சி திருவையாற்றில் அமைந்தது. அக்காட்சியை அவர் விளக்கும்போது இந்தக் காதல் வாழ்வைத் தான் கூறுகின்றார். 'காதன் மடப்பிடியோடும் களிறு வருவன கண்டேன்,' 'கோழி பெடையொடுங் கூடிக் குளிர்ந்து வருவன கண்டேன்,' என்பன அவர் வாக்கு. ஆம். அவர் கண்ட கயிலைக்காட்சி அம்மையப்பர் காட்சி தான்.

சிவன் வேறு சக்தி வேறு அல்லர். இருவரும் ஒருவரேயாக இயைந்தவர் தாம். அதனால்தான் ஒரே உடலில் பிரிக்கமுடியாதபடி இறைவன் உரு அம்மையப்பராக அமைக்கப்பட்டுள்ளது. செப்புக் கம்பியும் மின்சார சக்தியும் போன்றவர் சிவனும் சக்தியும். சிவன் அனைத்திற்கும் அப்பாற்பட்டுத் தனியான மோன நிலையில் நிற்கும் போது அனைத்தும் சலனமற்று நிற்கும். அவன் சக்தியோடு சேர்ந்து சிறக்கும்போது அனைத்தும் ஆரவாரித்து இன்பத்தில் திளைக்கும். செப்புக் கம்பி தனித்து நிற்கும் போது செயல் இல்லை. ஆனால் அதனுள்ள மின்சாரம் செல்லும் போது உலகையே அழிக்கும் திறன் பெறுகிறது. அதே செயல்தான் சிவசக்தி நிலையும். சிவனும் சக்தியும் சேரும்

இந் நிலையினைப் புராணவாயிலாகப் பௌராணிகர் நன்கு விளக்கியுள்ளார்கள். கந்த புராணமும், காஞ்சி புராண மும் இந்நிகழ்ச்சியைப் புராண முறையில் விளக்குகின்றன.

**பார்வதியை மணந்த வரலாறு**

இறைவன் மோன நிலையினை மன்மதன் கலைக்க, அந் நிலையில் வந்த தேவர்களுக்கு, 'மங்கையை மணந்து நுந்தம் வருத்தம் நீக்குதும்,' என்று வாக்களித்துப் பின் பார்வதியை மணக்க ஏற்பாடு செய்தான். இமயமலைத் தலைவனாகிய இமவான் தன் மகள் பார்வதியை வந்து மணக்குமாறு இறைவனை வேண்டி நின்றான். பங்குனி உத்தரமே அம் மணத்திற்குச் சிறந்த நாள் எனக் கொண் டான்.

"ஆதியில் உலகமெல்லாம் அளித்திடும் அன்னை தன்னைக்
காதலின் வதுவை செய்யக் கருதினை, கணித நூலோர்
ஓதுபங் குனியின் திங்கள் உத்தரம் இன்றே யாகும்
மீதுநன் முகூர்த்தம் எந்தாய் இமயமேல் வருதி என்றான்"

என்று கச்சியப்பர் பங்குனி உத்தரத்தைச் சிறப்பிக்கின்றார். இமவான் வேண்டுகோளின்படி இறைவன் அப் பங்குனி உத்தரத் திரு நாளில் இமயமலைக்குச் சென்று பார்வதியை மணந்து கொள்ளுகிறான். அவன் மணம் செய்து கொண்ட பின் உலகம் இருமை நீங்கி ஒருமை யுற்றது. துன்பம் அகன்று இன்பம் செழித்தது. கண்டவர் 'மூலமாகிய வினைகட்கு இன்றே முடிவு ஒருங்குற்றது,' என்றார். ஆம், விழா என்பது மக்கள் துன்ப நீக்கந்தானே. அந்த இன் பத்தினை ஆண்டவன் சக்தியோடு பொருந்தி இப் பங்குனி உத்தர நாளில் உலகுக்கு அளித்தார்.

**மயிலைக் காட்சி**

ஆண்டுதோறும் இப்பங்குனி உத்தரப் பெருவிழா காஞ்சியிலும் கபாலீச்சுரத்திலும் நடைபெறுவதைக் காண்கின்ற மக்கள் மிகப் பலர். ஆண்டுதோறும் ஆண்டவனுக்கு மணமா என்று பரிகசிப்பார் ஒரு புறம் இருப்பினும், அம் மண நிகழ்ச்சியின் உட்பொருள் அறிந்து ஒன்றிய இன்ப வாழ்வுக்கு வழிகோலும் அடியவர் இந்நாட்டில் இன்று மட்டுமின்றி இன்றைக்கு ஆயிரத்து முன்னூறு ஆண்டுகளுக்கு முன்னும் இருந்தனர். ஏழாம் நூற்றாண்டிலே மயிலையிலே இப்பங்குனி விழா சிறப்புற நடைபெற்று வந்தது. இன்றைக்கும் பல்லாயிரக் கணக்கில் மக்கள் அவ் விழாவினைச் சென்று கண்டு மகிழ்வதை நாம் பார்க்கின்றோம். அத்தகைய விழா அன்றும் நடைபெற்றது. அது போன்று திங்கள் தோறும் பல விழாக்கள் மயிலையில் நடைபெற்றதாக அறிகிறோம்.

**ஞானசம்பந்தர் பாடல்**

இளங் குழந்தை ஞானசம்பந்தர் உள்ளத்தே இவ் விழாக்கள் நிலைத்த இடம் பெற்றுள்ளன. குழந்தைகள் மனம் தூய்மையானது; மாசற்றது. அவ் வுள்ளம் பற்றிய விழாக்கள் உதட்டில் பாட்டாக வந்தன. பூம்பாவையின் எலும்பை நோக்கிப் பாடும்போது மயிலையில் நடக்கும் இன்னின்ன விழாக்களைக் காணாமல் போகின்றாயே எனக் கூறுகின்றார் அவர். அவற்றுள் ஒன்று பங்குனி விழா.

"பலி விழாப் பாடல்செய் பங்குனி உத்தர நாள்
ஒலி விழாக் காணாதே போதியோ பூம்பாவாய்"

என்பது தேவாரம். அவர் அவ் விழாவைப்பற்றிச் சிறப்பிக்கும் அடிகள் எண்ணி இன்புறத் தக்கன.

'பலி விழாப் பாடல் செய் பங்குனி உத்தர நாள் ஒலி விழா' என்கின்றார் சம்பந்தர். பலி என்ற சொல்லுக்குப் பல பொருள்கள் உள்ளன. பயன் விளைத்தல், செழித்தல், மிகுத்தல், கொடுத்தல் என்ற பற்பல பொருள்கள் உள்ளன. சோறு, திருநீறு என்ற பொருள்களும் உள்ளன. விழா என்றால் அது நாடு செழிப்பதாக அமையவேண்டும். 'பசியும்,' பிணியும், பகையும் நீங்கி, வசியும் வளனும் சுரக்க' வருவதே விழா. எனவே மக்கள் செல்வச் செழிப்புற்று, பெற்ற பயனை மற்றவர்களுக்கும் கொடுக்கும் விழா பலி விழா எனப்பட்டது. அனைவரையும் ஒன்று படுத்தி, எல்லாரும் இன்புற்றிருக்கப் பணி யாற்றி, அனைவருக்கும் சோறிட்டுப் பசி யாற்றிப் பிணி போக்கி வாழ வைக்கும் விழா பங்குனி விழா. ஒலி என்ற சொல்லுக்கு தழைத்தல், ஆரவாரித்தல் என்ற பொருள்கள் உள்ளன. மக்கள் உள்ளம் தழைத்து இன்பத்தில் இயங்கி 'வையகமுந் துயர் தீர்க' என்று ஆரவாரித்துக் கொண்டாடும் விழா இப்பங்குனிப் பெருவிழா.

பங்குனி, மாதத்தில் பன்னிரண்டாவது. உத்தரம் நட்சத்திரத்தில் பன்னிரண்டாவது. இரண்டும் ஒன்றிச் சேரும் நாளே பால் ஒளி வீசும் நிறைமதி நாள். தென்றல் தவழும் திருநாள். இன்பம் கொழிக்கும் இனிய நாள். வரும் இன்பத்தை வையத்துக்கு அறிவிக்கும் பொன்னாள். தமிழ் நாடும் தனது தற்போதைய தாழ்ந்த நிலையினின்றும் மாறி, வறுமைக் குழியினின்றுங் கரையேறி, மக்கள் மன ஒளி பெற்று, அன்பு தழைத்து அனைவரும் பசியும் பிணியும் நீங்கி வாழ வழி வகுக்கும் நாளாக இப்பங்குனி உத்தர நாள் என்றும் சிறக்க வாழ்த்துவோம்.

## கேள்விகள்

1. தமிழர்தம் விழாக்கள் எவ் வடிப்படையி லமைந் திருந்தன ?
2. உத்தரத் திருவிழா ஏன் சிறந்தது ?
3. இறைவன் பார்வதியை மணந்து கொண்டதன் உட் பொருள் என்ன ?
4. பார்வதி திருமண வரலாறு யாது ?
5. மயிலையில் பங்குனி விழா முன்னர் நடந்ததாக எதனு லறிகிறோம் ?

## பயிற்சி

1. பங்குனி அல்லது உத்தர விழா பற்றி ஒரு கட்டுரை எழுதுக.
2. திருவிழாவின் நன்மை என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதுக.
3. நீ பார்த்த ஒரு திருவிழாவை விளக்கி ஒரு கடிதம் எழுதுக.

## இலக்கணம்

(1) பல பொருள் ஒரு சொல் என்றால் என்ன? பலி, ஒலி என்பவற்றுக் குள்ள வேறு பெயர்களையும் வரைக.

(2) எழில், மதி, இவைகளுக் குள்ள பொருளாக இரண் டிரண்டு சொற்களை வரைக.

(3) கீழ்வருஞ் சொற்களுள் வினைச்சொல், பெயர்ச் சொல்களைத் தனித்தனிப் பிரிக்க:—

நட, தாண்டி, காண், கண், மாதம், இன்பம், மதி, வாடை.

(4) எழுத்துக் குறைந்தாலும், எழுத்து மாறுபாட்டாலும் வரும் பொருள் மாறுபாட்டைக் கீழ்வருஞ் சொற்களைக் கொண்டு அறிக.

(1) பனி—பணி ; வாடை-வடை ; வீதி—விதி ; மரம்—மறம்.

(5) எதிர்மறைச் சொல் தருக :—

பெருகும் ; தென்றல் ; நிறைமதி ; நல்ல ; புகழ்ச்சி.

(6) கீழ்வரும் இலக்கணங்களுக்கு எடுத்துக்காட்டு தருக.

இடுகுறிப்பெயர், புறச்சுட்டு, வினைமுற்று, வினையாலணையும்பெயர், ஆகுபெயர்.

## 5. இராசராசன்

நம் தாய் மொழியாகிய தமிழ் மொழி மிகப்பழமை வாய்ந்தது ; எத்துணைக் காலமாக இம்மொழி நிலவியுள்ளதென்று வரையறுத்துக் கூறப்படமுடியாதது ; உலகத்து வழங்கும் ஏனைய மொழிகளுக்கெல்லாம் முற்பட்டது ; உலகிலுள்ள விரல் விட்டு எண்ணத்தக்க சில மொழிகள்தான் பழமையாலும், சிறப்பாலும் இத்துடன் வைத்து எண்ணத்தக்கன ; இலக்கியங்கள் நிறைந்தன ; இலக்கணமும் பெற்றன; அவற்றிலுங்கூடச் செந்தமிழ் மொழியே சிறந்துளது. ஏன் ? அம்மொழிகள், உயர்தனிச் செம்மொழியாம் தமிழைப் போன்று இலக்கண அமைதி முற்றியதாய்ப் பெறுதலோடு, தமிழ் மொழிக்கே யுரியதாகக் காணப்படும் பொருளிலக்கணத்தைப் பெறும் பேறற்றனவாயுமுள்ளன. அதுவுமன்றி அவற்றுட் சில வழக்கு வீழ்ந்தும் விட்டன.

'இலக்கியங் கண்டதற் கிலக்கணம்' என்பதுவே முறையாம். நம் செந்தமிழ் மொழியில் வழங்கும் இலக்கண நூல்களில் பொருளிலக்கணத்தையுஞ் சிறப்புறப் பொருந் தக் கூறும் தொல்காப்பியமே பழமை வாய்ந்ததாகும். இது மிகப் பழமை வாய்ந்த தொரு நூல் என்பதனை இதன் பெயரில் அமைந்துள்ள, பழமை என்னும் பொருளமைந்த தொல் என்னும் சொல்லே விளக்குவ தாகும். இத்தகைய சிறந்த இலக்கண நூலே பழமை வாய்ந்த தெனின், இதற்காதாரமான தமிழிலக்கியங்கள் இதற்குச் சின்னூறு ஆண்டுகளாவது முற்பட்டனவாகவே இருத்தல் வேண்டும். சிறந்த இலக்கியங்கள் ஏற்படுவதற் குப் பன்னூறு ஆண்டுகட்கு முன்னரே இம்மொழி தோன்றி, வளர்ந்து, வளம் பெற்றிருத்தல் வேண்டும். ஆதலின் ஒப்புயர்வற்ற நம் செந்தமிழ் தனித்தியங்க வல்ல தொரு உயர்தனிச் செம்மொழி யென்பதும், அறுதியிட்டுக் கூறுதற்கரிய மிகப் பழமை வாய்ந்த தென்பதும் தெள்ளி தின் விளங்குகின்றன.

தமிழ் மொழி வழங்கும் நாடு தமிழ்நாடு எனப்படும், இத் தமிழ் நாடும் மிகவும் பழமை வாய்ந்ததாகும். தமிழ் மொழி யின் தொன்மையிலிருந்தே நாட்டின் தொன்மையையும் அறியலாம். மேலும் நிலநூல், வரலாற்று நூலறிஞர் கள் கூறும் 'குமரிக்கண்டமே' தக்க சான்றாக உள்ளது. இமயந்தானும் கடற் பகுதியா யிருந்தபோதே தற்போ துள்ள ஆப்பிரிக்காக் கண்டம் வரையும் பரவியிருந்து, கடல்கோளாற் கொள்ளப்பட்ட நிலப்பெரும் பகுதியே குமரிக்கண்டமாகும். இப்போதுள்ள குமரிமுனையும் அதனையே நினைவு படுத்துவதா யமைந்துள்ளது. இக் குமரிக் கண்டமே செந்தமிழ் நாடென்பதும், முதல் இடைச் சங்கங்கள் நிலை பெற்றிருந்த கபாடபுரம் முதலிய

வற்றைத் தன்னகத்தே கொண்டிருந்த நாடென்பதும் அறிஞர் ஒப்ப முடிந்த முடிபாகும். ஆகவே தமிழ் நாடும் மிகப் பழமையானதொரு பெருநாடு என்பதும் விளங்கு கின்றது.

தமிழ் நாடு முடியுடைத் தமிழ் மன்னர் மூவராலும் ஆளப்பட்டு வந்தது. அவர்கள் சேரர், சோழர், பாண்டியர் எனப்பட்டனர்; அவர்கள் ஆண்ட நிலப்பகுதிகள் முறையே சேர, சோழ, பாண்டிய நாடு எனப்பட்டன. இம் முடிமன் னர் மூவருள்ளும் சோழரே பல்லாற்றுனுஞ் சிறந்திருந்த தாகக் காணப்படுகின்றர். அவ்வாறு சிறந்திருப்பதற்கு, 'வான் பொய்ப்பினுந் தான் பொய்யா, மலைத் தலைய கடற் காவிரி' யாம் பொன்னியாற்றினுல் வளஞ் செய்யப்பட்டுப் 'புனல் நாடு' எனப் பெயர் பெற்றுச் செழித்திருந்த சோழ நாட்டின் வளப்பமே முதற் காரணமாகும். வளப்ப மிக்க இச் சோழ நாட்டை யாண்ட சோழ மன்னர்களும் 'வளவர்' என்றழைக்கப்படுவதும் இதனை வலியுறுத்துவதாகும்.

சோழ நாட்டை ஆண்ட சோழர்கள் மிகப் பழங்காலத் தவரென்றே கூற முடிகின்றதன்றி எக்காலத்து அவர்கள் ஆட்சி யுரிமை யெய்தினர் என்று கூற வியலாதுளது. இவர்கள் தொல்காப்பியம் இயற்றிய தொல்காப்பியருக்கு நெடுங்காலத்திற்கு முன்னரே சிறப்பெய்தி யிருந்தனர் என் பது, 'வண் புகழ் மூவர் தண் பொழில் வரைப்பு' எனவும் 'போந்தை வேம்பே ஆரென வருஉம்—மாபெருந் தானை யர்,' எனவும் வருகின்ற தொல்காப்பியப் பொருளதிகாரச் சூத்திரங்களால் பெறப்படுகின்றது.

மேலும் இராமாயண பாரத காலத்திற்கு முன்னரே இவர்கள் ஆட்சி செலுத்தி வந்தனர் என்பதற்கு வடமொழி நூல்கள் சான்று பகர்கின்றன. கி. மு. மூன்றும் நூற்றாண் டில் ஆட்சி செய்த அசோக மன்னனது கல்வெட்டுக்

களில் இவர்களைப் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. கி. மு. முதல் நூற்றாண்டில் மேனாட்டி னின்றும் நம் நாடு போந்த யவன ஆசிரியனான தாலமி என்பானது வரலாற்றுக் குறிப்பிலும், மேனாட்டு வரலாற்றாசிரியன் ஒருவனால் எழுதப் பெற்ற 'பெரிபுளூஸ்' என்று நூலிலும் இவர்கள் பேசப் படுகின்றார்கள். இவற்றிலிருந்து கிரேக்கரும் உரோமரும் உயர் நிலையிலிருந்த அந்த நாளிலேயே சோழர்கள் சிறப் பெய்தி யிருந்தன ரென்பது வலியுறுத்தப் படுகின்றது.

இத்துணைப் பழமையும் பெருமையும் வாய்ந்த சோழ மன்னர்கள் சங்க காலத்துச் சிறந்திருந்தன ரெனவும், பிற் காலத்து எக்காரணம் பற்றியோ இவர்களது ஆட்சி மங்கியிருந்த தெனவும் அறியக் கிடக்கின்றது. அவ்வாறு மங்கிக்கிடந்த சோழ ராட்சி ஒன்பதாம் நூற்றாண்டில் மீண்டும் தலையெடுக்கத் தொடங்கியது. ஒன்பதாம் நூற் றாண்டின் இடைக்காலத்தே அரசு கட்டி லேறிய சோழன் விசயாலயனே பிற்காலச் சோழப் பேரரசை நிலைநிறுத்த அடிகோலியவனாவான். இவன் தஞ்சை நகரைக் கைப் பற்றித் தன் தலைநகரமாக்கிக் கொண்டு ஆட்சி புரியத் தொடங்கினான். அது முதல்தான் தஞ்சை சோழர்களின் தலைநகரமாயிற்று. விசயாலயனுக்குப் பின் வந்த மன்னர் களும் ஆற்றல் மிக்கவராயிருந்ததனால் அவர்கள் ஆட்சி சிறிது சிறிதாக வலுவடைந்து வந்தது. பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழன் என்பான் நாட்டை ஆட்சி செய்து வந்தான். அவன் மகன் அருண்மொழிவர்மன் என்பான் தொளா யிரத்து எண்பத்தைந்தில் பட்ட மெய்தினான். அவனே விசயாலயனால் அடிகோலப் பெற்ற சோழப் பேரரசைப் பல்லாற்றானும் பெருக்கி, நிலைபெறச்செய்த முதலாவது இராசராசன் ஆவான்.

இராசராசன் தன் தந்தை யிறந்ததும் அரசுரிமை யெய்தவில்லை. அவன் தன் சிற்றப்பனுகிய உத்தம சோழன் ஆட்சியில் பெரு விருப்புற்றிருந்தான். ஆதலின் அருண்மொழிவர்மன் தன் சிறிய தந்தையாகிய உத்தம சோழனையே நாட்டையாளும்படி விட்டு விட்டான். தானே அரசனுக வேண்டுமென்று விரும்பிய மக்கள் விருப்பத்தையும், தான் இளவரசுப் பட்டங்கட்டிக் கொண்டு நிறைவேற்றி வைத்தான். இவ் வருஞ் செயல் குடிகட்கு இவனிடம் இருந்த விருப்பை மேலும் வளர்த்துவிட்டது.



Courtesy: Dept. of archaeology.
இராசராசன் (தஞ்சைக் கோயிலில் உள்ளபடி.)

உத்தம சோழனுக்குப் பிறகு அருண்மொழி வர்மன் பட்டத்திற்கு வந்தான். இவன் அருண்மொழித் தேவன் எனவும் அழைக்கப்படுவான். அக்காலத்துச் சோழ மன்னர்கள் ஒவ்வொருவரும் தங்கள் பெயருடன் இராசகேசரி, பரகேசரி என்னும் பட்டங்களில் ஒன்றை, மாறி

மாறி, அமைத்துக் கொள்வது வழக்கம். இவன் அவற்றுள் இராசகேசரி என்பதைத் தன் பட்டப்பெயராகக் கொண்டான். இவன் ஐப்பசித் திங்கள் சதய நாளிற் பிறந்தவன் எனத் தெரிகின்றது. இவ்வேந்தன் தான் வென்று கொண்ட மலையாள தேயத்தில், வள்ளுவ நாட்டில் உள்ள முட்டம் என்ற ஊருக்கு மும்முடிச்சோழ நல்லூர் என்று பெயரிட்டான். திருநந்திக் கரையிலுள்ள கோயிலுக்கு அவ் வூரை இறையிலியாகக் கொடுத்து அக் கோயிலில் தான் பிறந்த நாளாகிய ஐப்பசிச் சதயத்தில் விழா•நடத்துமாறு ஏற்பாடு செய்தான். மேலும் இவன் ஆட்சிக் காலத்தில் திருவெண்காட்டிலுள்ள இறைவனுக்கு ஆண்டுதோறும் ஐப்பசித் திங்களில் ஏழு நாட்கள் சதய விழா நடைபெற்றதென்று கல் வெட்டொன்றால் தெரிகின்றது. இது போன்றே இன்னும் பல கோயில்களிலும் நடைபெற்றதாகத் தெரிவதால் இவன் ஐப்பசிச் சதயத்தில் பிறந்தவன் என்பது தெரிகின்றது.

பாஸ்கர ரவிவர்மன் என்பான் அந்நாளிற் சேர நாட்டை யாண்டிருந்தான். அவன் எக் காரணம் பற்றியோ அருண்மொழித் தேவனது தூதனை அவமானப் படுத்திச் சிறையி லடைத்தான். தூதர்களை அவமதிப்பதும், சிறையிலிடுவதும் அரசர்க் குரிய செயல்க ளல்ல. இச்செயலால் கொதித் தெழுந்த சோழ மன்னன் சேர நாட்டின் மேற் படை யெடுத்தான். வழியில், சேரனுக்கு நண்பனான அமரபுயங்கப் பாண்டியன் படையுடன் எதிர்க்கவே அவனை வென்று, சேர நாட்டுள்ள காந்தளூர்ச் சாலையை யடைந்தான். சேரனொடு பொருது வென்றான். பின்னர்த் தன் தூதுவன் சிறை வைக்கப்பட்டுள்ள உதகை நோக்கிச் சென்றான். இவ்வூர் திருவாங்கூரிலுள்ள நாகர்கோயிலுக்கு வடமேற்கிலுள்ளது. அவ்வூர் கோட்டை கொத்தளங்களு

டன் பொருந்தி, சேரனது முக்கிய நகரங்களுள் ஒன்ருக விளங்கியது. இராசராசன் அங்கிருந்த சேரன் படையைத் தாக்கி வென்று தன் தூதனைச் சிறைமீட்டான். அந்நகரும் அழிக்கப்பட்டது. இவ்வாறு சேர பாண்டியர்களை ஒருங்கு வென்ற அவன், 'மும்முடிச் சோழன்' என்ற சிறப்புப் பெயரை ஏற்படுத்திக் கொண்டான். இதன் பின்னர் தான் மன்னர் மன்னன் என்ற பொருளுள்ள 'இராசராசன்' என்ற பெயரையும் அமைத்துக் கொண்டான். பிற்காலத்து அப் பெயரே இயற் பெயராக மாறி வழங்கலாயிற்று.

இதன் பின்னர் இராசராசன், தெற்கிலுள்ள கொல்லம் கொடுங்கோளூரை வென்ருன். குடகு நாட்டைத் தாக்கி வென்ருன். ஆயினும் மனிஜா என்னும் சேனைத்தலைவன் காட்டிய போர்வீரங் கருதி அந் நாட்டை அவனுக்குக் கொடுத்து விட்டதாகத் தெரிகிறது. கங்கைபாடி, நுளம்ப பாடி, தடிகைபாடி என்னும் நாடுகளையுங் கைக்கொண டான். ஈழ நாட்டின்மேல் படையெடுத்துச் சென்று, தன் பகைவராகிய சேர பாண்டியர்க்கு உதவிய ஐந்தாம் மகிந் தனை வென்று, அந் நாட்டினைத் தனதாக்கி, அதற்கு மும் முடிச்சோழ மண்டலம் என்னும் பெயரையும் அமைத்தான். வேங்கி நாடு, கலிங்க நாடுகளைக் கைப்பற்றி, மேலைச்சளுக் கியர், கீழைச் சளுக்கிய மன்னரையும் வெற்றி கொண டான். சீட்புலி நாடு, பாகி நாடு போன்ற பல சிறு நாடு களும் இவன் ஆட்சிக்குட்பட்டன. இறுதியாக, இப்போது மாலத் தீவுகள் என்றழைக்கப்படுகின்ற, முந்நீர்ப்பழந் தீவு பன்னீராயிரத்தின் மேற் படையெடுத்துச் சென்று வென் ருன். இவ்வாறு இராசராசன் தன் நாட்டைச் சுற்றிலு மிருந்த நாடுகளை யெல்லாம் வென்று தன் நாட்டைப் பெரிதாக்கிக் கொண்டான்.

இராசராசன் மிக்க ஆற்றல் வாய்ந்தவனுக இருந்த துடன், வீரம் செறிந்த சேனைத் தலைவர்களையும் அமைந் திருந்தான். மேலும் தன் ஒரே மகனுன இராசேந்திரனுக்கு 1012-ல் இளவரசுப் பட்டங் கட்டி, அவனையே போர்த் தலைவனுகவும் நியமித்தான். அவனே பல போர்களையும் நடத்தித் தன் தந்தைக்கு வெற்றி தேடித் தந்தா னென்றும் அறிகின்ருேம். கங்கைப் போர், கலிங்கப் போர், குந் தளப் போர் முதலியன அவற்றுட் சில வாகும். மேலும் இராசராசன் சிறந்த கடற் படையையும் வைத்திருந்தான் எனத் தெரிகிறது.

இராசராசன் போர்த் திறமை யுடையவனு யிருந்தது போன்றே அரசியல் முறையிலும் மிகச் சிறந்த அறிவுடை யவனுயிருந்தான். தான் வென்று கொண்ட நாடுகளை யெல்லாம் சேர்த்துத் தன் அரசைப் பெருக்கினுனல்லவா? அவ்வாறு அமைந்த நாட்டைப் பல மண்டலங்களாகவும், மண்டலங்களைப் பல வளநாடுகளாகவும், வள நாடுகளைப் பல நாடுகளாகவும் பிரித்து ஆட்சி முறைக்கு ஏற்ற தாக்கிக் கொண்டான். இவனது ஆட்சிக்கு முன்னர் வளநாடு இருந்ததாகத் தெரியவில்லை. பாண்டி மண் டலமும், சேர மண்டலமும் அடங்கிய இராசராசத் தென் ஞடும், தொண்டை மண்டலமாகிய சயங்கொண்ட சோழ மண்டலமும், கங்க மண்டலமும், கொங்கு மண்டல மும், நுளம்பபாடி நாடும், கலிங்க நாடும், ஈழமாகிய மும்முடிச் சோழமண்டலமும் இவனுல் வென்று கொள்ளப்பட்ட நாடுகளாம். சோழமண்டலம் என்பது வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்த தென்றும், அவ்வாறே ஏனைய மண்டலங்களும் பிரிக்கப்பட்டிருந்தன வென்றும், அவற்றுட் பல இவன் சிறப்புப் பெயர்களைக் கொண்டே அழைக்கப்பெற்றன என்றும் தெரிகின்றது.

இவன் ஆட்சியில் மிகவும் சிறந்த ஒரு சீர்திருத்தச் செயல் என்னவெனின், தக்கா னொருவனைக் கொண்டு நாடு முழுவதையும் அளந்து கணக்கிடச் செய்ததாகும். அதனால் விளைபுலத்தை நன்கறிந்து வரி விதித்தற் கேது வாயிற்று. அவ்வாறு நாட்டை அளக்க இரண்டு ஆண்டு கள் ஆயின். நிலத்தை அளந்த கோல் பதினாறு சாண் கொண்டது; உலகளந்த கோல் என்று அது அழைக்கப் பெற்றது. அது போலவே நாட்டை அளந்த அதிகாரி உல களந்தான் என்ற சிறப்புப் பெயரையும், இராசராச மாரா யன் என்ற பட்டத்தையும் பெற்றான். இராசராசன் தக்க அமைச்சர்களை ஏற்படுத்தியிருந்ததுடன் நாட்டதிகாரிகளை யும், அறநிலையப் பாதுகாப்பாளரையும், அறங்கூற வையத் தாரையும், ஊர்ச் சபையாரையும் ஏற்படுத்தி அவரவ ரும் தத்தம் செயலைச் சரிவரச் செய்து வருமாறு கண்கா ணித்து வந்தான். அதனால் ஆட்சி மிகவும் சீரிய முறை யில் அமைந்து விளங்கியது. அத்துடன் அரசியல் தந்திரத் தையும் மேற்கொண்டான் இம் மன்னன். தன்னோடு பொர வந்த வேங்கி நாட்டு மன்னனைச் சிறைப் படுத்தி, அவனுக்குத் தன் மகள் குந்தவையை மணஞ் செய்து கொடுத்து, வேங்கி நாட்டின் மன்னனாக்கித் தன் துணைப் பலத்தைப் பெருக்கிக் கொண்டான்.

இவனது ஆட்சிக் காலத்தே மற்றொரு முக்கியமான நிகழ்ச்சியும் நடந்தது. அதுதான் அன்றைய வரலாற்றை அறிந்து கோடற்குத் துணை புரிவதாயுள்ளது. இவனுக்கு முன்னிருந்த அரசர்களெல்லாம் இறையிலியாக நிலங்களை வழங்குங்கால் செப்பேடுகளில், தம் முன்னோர் வரலாற் றைக் கூறித் தாம் செய்த தருமத்தை எழுதுவிப்பது வழக்கு. ஆனால் இவனோ அவ்வாறின்றித் தன் ஆட்சியில் நிகழ்ந்த வரலாற்றுண்மைகளை யெல்லாம் இனிய அகவற்

பாவில் அமைத்துத் தன் கல்வெட்டுக்களிற் பொறிக்கும் வழக்கத்தை யுண்டாக்கினுன். இது மெய்க்கீர்த்தி எனப் படும். இது மிகவும் சீரிய செயலாயிருத்தலின் இவன் பின் வந்தோரும் இதனையே மேற்கொண்டனர். ஒவ்வொரு மன்னனின் மெய்க்கீர்த்தியும் வெவ்வேறு மங்கல மொழி யால் தொடங்கப்பட்டிருப்பதால், மெய்க்கீர்த்தியின் தொடக்கத்தைக்கொண்டே அது எம் மன்னனுக் குரிய தென்பதைக் கூறி விடலாம். இராசராசனின் மெய்க் கீர்த்தி 'திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்' என்று தொடங்கப் பெறும். ஆண்டாண்டுதோறும் அரசனின் வெற்றி முதலிய நிகழ்ச்சிகள் பெருகுமாதலின் மெய்க் கீர்த்தியும் வளர்ந்துகொண்டே போகும்.

இவன் ஆட்சியின் கீழ்ப் பல குறுநில மன்னர்களும் இருந்தனரெனத் தெரிகின்றது. உடையார்பாளையந் தாலுக்காவிலுள்ள பழுவூரிலிருந்த பழுவேட்டரையன் என் னுங் குறுநில மன்னன் இவனுக் கடங்கி யிருந்தான். இவ் விரு குடும்பத்திற்கும் உறவும் உண்டு. இராசராசனின் மனைவியாகிய பஞ்சவன்மாதேவி பழுவேட்டரையன் மகள் ஆவாள். கொங்குநாட்டை யாண்ட கொல்லி மழவனும் கொடும்பாளூரி லிருந்த சுந்தரசோழன் என்பானும் திரு வல்லத்தி லிருந்த நன்னமரையன் என்பானும் வாண கப்பாடியை யாண்ட இராசராச வாண கோவரையனும் இன்னும் சில குறுநில மன்னரும் இராசராசனுக் கடங்கித் திறை செலுத்திக் குறுநில மன்னரா யிருந்தனரெனத் தெரிகின்றது.

இவ்வரசனுக்கு, சோழமா தேவி, திரைலோக்கிய மாதேவி, பஞ்சவன் மாதேவி, அபிமான வல்லி, இலாட மாதேவி, பிருதிவி மாதேவி, மீனவன் மாதேவி, வீர நாராயணி, வில்லவன் மாதேவி, வானவன் மாதேவி

என்போர் மனைவியரா யமைந்திருந்தனர். வானவன் மா தேவிக்குத் திரிபுவன மாதேவி என்னும் மற்றொரு பெயரும் உண்டு. இராசராசனின் ஒரே மைந்தனான இராசேந்திர சோழனைப் பெறும் பேறுபெற்றவள் இவளேயாகும். குந்தவை என்னும் ஒரு மகளும் இவ்வரசனுக் குண்டு. அவள்தான் வேங்கி நாட்டு விமலாதித்தனுக்கு மணஞ் செய்து கொடுக்கப்பட்டவளாவள்.

இராசராசன் பல துறைகளிலும் சிறப்புற்று விளங்கினுதலின் அதுப் பற்றிப் பலசிறப்புப் பெயர்களைக் கொண்டிருந்தான். அப்பெயர்களிலிருந்தே அதன் தொடர்பான நிகழ்ச்சியையும் அறிந்துகோடல் இயலும். அவை க்ஷத்திரிய சிகாமணி, இராசேந்திர சிங்கன், உய்யக் கொண்டான், பாண்டிய குலாசனி, கேரளாந்தகன், நித்தவிநோதன், இராசாசிரயன், சத்தியாசிரயன், சிங்களாந்தகன், சிவபாத சேகரன், நிகரிலி சோழன், சோழமார்த்தாண்டன் சோழேந்திர சிங்கன் முதலியனவாம். இப்பெயர்களுட் பல மண்டலம், வளநாடு, நாடு, கூற்றம் முதலியவற்றின் பெயர்களா யமைக்கப்பட்டன. அப்பெயர்களுட் பல இன்றும் நிலைத்துள்ளன.

இம் மன்னன் மிக்க தெய்வபக்தி யுடையவனா யிருந்தான். தஞ்சையில் இவனெடுப்பிக்கப் பெற்றுள்ள இராசேச்சரம் ஒன்றே அதற்குப் போதிய சான்றாகும். அதுவே அவனது கலைப்பெருக்கத்திற்கும் எடுத்துக்காட்டா யமைந்துள்ளது. தஞ்சைப் பெருவுடையார் கோயிலெடுப்பித்துப் பல நிவந்தங்கள் வைத்துள்ளமையாலும், தில்லைக் கோயிலுக்குத் திருப்பணி முதலிய செய்தமையாலும், திருமுறை கண்டமையாலும் இவனது சிவ பக்தி தெரிகின்றது. தேவாரப் பதிகங்கள் அனைத்தும், தில்லைக் கோயிலின் ஓரறையுள் வைத்துப் பூட்டப்பெற்றிருப்பதாக

அறிந்த இராசராசன் அதனைத் தருமாறு, அக்கோயிலந் தணர்களைக் கேட்டான். அவர்கள் மூவரும் வந்தாலன் றித் தரவியலா தென்றனர். அரசன் விரைந்துசென்று மூவர் படிமங்களையும் அலங்கரித்து விமானங்களில் எடுப் பித்துக் கொணர்ந்து அவ்வறை முன்னர் நிறுத்தினன். அதுகண்ட அந்தணர்கள் கூறு மாற்றம் வேறின்றி அறை யைத் திறந்து விடுத்தனர். அரசனும் செல்லரித்தன போக எஞ்சியிருந்தவற்றை யெடுத்து வகைப்படுத்தினன். அத் துடன் இறையருட்பாக்களை யெல்லாந் தொகுத்து திரு முறைகளாக வகுத்தனன். இவ்வாறெல்லாம் இவன் சிவத்தொண்டு செய்து சிவனடியானாக விளங்கினன்.

இவன் பிற மதத்தினரையும் போற்றியே வந்தான். தஞ்சையில் தாம் எடுப்பித்த கோயிலில் பல பௌத்தப் படிமங்களை யெல்லாம் வைத்துள்ளான். மேலும் நாகப் பட்டினத்தில், கடாரத் தரசனால் கட்டப்பெற்ற புத்த விகா ரத்திற்கு இராசராசப் பெரும்பள்ளி எனத் தம் பெயரை வைக்க அனுமதித்ததும், அதற்கு நிவந்தமாக ஆனை மங்க லம் என்னும் கிராமத்தைக் கொடுத்ததும் சான்றாகும். இன் னும் பங்களூரைச் சார்ந்த மணலூரில் சயங்கொண்ட சோழ விண்ணகரம் என்ற கோயிலையும், தலைக்காட்டிற்கு அருகில் இரவிகுல மாணிக்க விண்ணகரம் என்ற கோயிலை யும் திருமாலுக்காக எடுப்பித்து நிவந்தங்கள் வழங்கியுள் ளமையும் இவன் புறச் சமயங்களையும் போற்றி வளரச் செய்தான் என்பதற்கான சான்றுகளாம்.

இராசராசன் ஆற்றல் மிக்க வெற்றி வீரனாயிருந்து தன்னாட்டைப் பெருக்கினன். அறிவு மிக்கோனா யிருந்து ஆட்சியைச் செவ்வனே நடத்திச் சோழப் பேரரசு நிலை பெற்றிருப்பதற்கான வழியைத் தேடினன். கருணை காட் டிக் குடிமக்களைத் தன்பாலன்புடையோ ராக்கினன். இறை

பணி செய்து கடவுளன்பை வளர்த்தான். பிற மதத்தையும் பேணி அவர்தம் வாழ்த்தையும் பெற்ருன். நிலத்தை அளப்பித்தும், விளைபுலங்களுக்கே இறை விதித்தும் செம்மையான ஆட்சி செலுத்தினுன். மெய்க்கீர்த்தி எழுதும் முறைகண்டு வரலாற்றுக்குத் துணை செய்தான். தன் காலத்தேயே, தன் மகனை இளவரசாக்கிப் போர் முறை, ஆட்சிமுறை முதலியவற்றில் பயிற்றி, அவன் திறன் கண்டு மகிழ்ந்தான். இத்துணைச் சிறப்பும் ஒருங்கமைந்த இராசராசன் 1014-ல் இறையடி சேர்ந்தான். என்றும் அவன் புகழை அவன் விட்ட சிறப்புக்கள் பாடிக்கொண் டிருக்கும்.

## கேள்விகள்

1. தமிழ் மொழியின் சிறப்புக்கள் யாவை ?
2. தமிழ் நாட்டின் பழமையை எவ்வா றறிகிருேம் ?
3. சோழரின் தொன்மைக் குரிய சான்றுகள் யாவை ?
4. அருண்மொழி வர்மன் முதலிற் செய்த பெருஞ் செயல் யாது ?
5. இராசராசன் என்ற பெயர்வரக் காரணம் யாது ?
6. இராசராசன் பிறந்த நாள் யாது ? ஆதாரங்கள் யாவை ?
7. இராசராசனின் வெற்றிகள் யாவை ?
8. இராசராசன் திருமுறை கண்ட வரலாறென்ன ?
9. இராசராசனின் சிறந்த பண்புகள் யாவை ?

## பயிற்சி

1. இராசராசன் வாழ்க்கை வரலாற்றை விளக்கும் நூல் ஒன்றினைப் படிக்கவும்.

2. ஆசிரியர் உதவியுடன் இராசராசனது பேரரசை விளக்கும் படம் ஒன்றை வரையவும் ?
3. இப் பாடத்தை ஆதாரமாகக் கொண்டு சோழர் கால ஆட்சிமுறை என்ற சிறு கட்டுரை யொன்று எழுதவும்.

## இலக்கணம்

(1) செய்தான், செய்தவன் இவ்விரண்டிற்கு முள்ள வேறுபாடு யாது ?

(2) செய்து என்னும் வாய்பாட்டிற்கும், செயவென் வாய்பாட்டிற்கும் உதாரணம் தந்து விளக்குக.

(3) குற்றியலுகரத்திற்குப் பின் குற்றியலிகரம் கூற வேண்டிய காரணம் யாது ?

(4) அடைமொழி என்ருல் என்ன? எடுத்துக் காட்டு தருக.

(5) கீழ்வருஞ் சொற்களுக்கு ஏனைய காலங்களைக் கூறுக :—

வீழ்ந்தும்
வழங்கும்
வளர்ந்து.

(6) கீழ்வரும் சொற்களுக் கேற்ற இப் பாடத்தில் வந்த சொற்களை வரைக:—

இவ்வளவு
வலிமை
என்பவன்
தேசம்
சேர நாட்டிலுள்ள

## 6. வாசவதத்தையின் திருமணம்

அவந்தி என்பது ஒரு பெரிய நாடாகும். உச்சயினி என்பது அதன் தலைநகரமாக அமைந்திருந்தது. அந்நகரம் மதில், அகழி, காடு, மலை என்னும் நால்வகை அரண்களை யும் பெற்றுச் சிறந்திருந்தது. மாடமாளிகைளும் கூடகோபு ரங்களும் நகரெங்கும் நிறைந்திருந்தன. செல்வத்திற் சிறிதும் குறைபாடுடைய தன்று அந்நகர் என்பதைச் செல் வர்தம் வாழ்க்கை விளக்கி நின்றது. நகர் நடுவில் அரசன் கோயிலும், அடுத்து நாற்புறமும் வரிசை வரிசையான தெருக்களும் அமைந்திருந்தன. அதுவும் ஒரு தனி அழகாகவே காணப்பட்டது.

பிரச்சோதனன் என்னும் மன்னன் அந் நகரின்கண் வீற்றிருந்து அந் நாட்டை யாண்டு வந்தான். அவன் வீரத் திற் சிறந்தவன். அறிவிலுங் கொடையிலும் ஒப்பற்றவன். அரச தந்திரத்திலும் மிக்கவன். சாலங்காயன் என்னும் சிறந்த மந்திரியைப் பெற்றுத் தன்னுட்டைச் செவ்வனே ஆட்சி செய்து வந்தான். அவனுக்கு வாசவதத்தை என்னும் மகள் ஒருத்தி இருந்தாள். பாலகன், பால குமாரன், கோபாலகன் என்போர் அவன் பிள்ளைகளுட் சிறந்தவர் கள். அவனுடைய பட்டத்து யானையின் பெயர் நளகிரி என்பதாகும்.

வாசவதத்தை அழகில் திருமகளையும், அறிவில் கலை மகளையும் ஒத்து விளங்கினாள். அரசனின் தனி மகள் என்ற தால் இன்னும் அதிக சிறப்பையும் செல்வாக்கையும் பெற்றிருந்தாள். சாங்கியத்தாய் என்பவளாலே இளமை தொட்டு வளர்க்கப்பட்டவள் அவள். சுருங்கக் கூறுமிடத் துக் கண்டார்ப் பிணிக்குங் கட்டழகும், அறிஞரும் விரும்

பும் அறிவுத் திறனும், குற்றங் கூற வியலாத குண நலனும் பெற்ற ஒரு மாசற்ற மங்கையாக விளங்கினுள்.

வத்தவ நாடு என்பது ஒரு சிறிய நாடு. கௌசாம்பி என்பது அதன் தலைநகரம். உதயணன் என்னும் அரசிளங் குமரன் அதனை ஆண்டு வந்தான். சேதி நாடு என்பதும் ஒரு சிறிய நாடேயாகும். அதை யூகி என்பான் ஆண்டு வந்தான். அவனும் ஆண்டில் சிறியவனே யாவன். இவ் விருவரும் ஒன்ருகவே வளர்ந்து, கல்வி, கலை முதலியன பயின்றவர்கள். மனமொருமித்த நண்பர்கள். யூகி தன் பெயருக் கேற்பச் சிறந்த முன்யோசனையும், கலங்காத உள்ளமும், காத்திருந்து வினைமுடிக்கும் பொறுமையுடன் கூடிய உறுதியும் உள்ளவன்.

உதயணனுக்கு முனிவர் ஒருவர் ஒரு யாழ் ஒன்றைக் கொடுத்தார். கோடபதி என்பது அவ்வியாழின் பெயரா கும். அந்த யாழை வாசித்தால் எல்லா விலங்குகளும் தம் வசமிழந்து யாழ் வசப்பட்டுவிடும். ஒரு நாள் அவன் கோடபதியை வாசித்துக் கொண்டிருந்தபோது தெய்வத் தன்மை பொருந்திய யானை ஒன்று அவனிடம் வந்தது. அவன் அதனைத் தன்னிடமே இருத்திக்கொண்டான். யானை, தன் மேல் பாகர்கள் ஏறக்கூடாதென்றும், தோல், கயிறு கொண்டு கட்டக் கூடாதென்றும், தனக்கு முன் உதயணன் உண்ணக்கூடா தென்றும் நிபந்தனை விதித்தது. இவற்றுள் ஏதேனும் ஒரு பிழை நேர்ந் தாலும் தான் சென்று விடுவதாகவும் எச்சரித் திருந்தது. எவ்வாருே உதயணன் ஒரு நாள் முன்னதாக உண்டு விட்டான்; யானையும் மறைந்து விட்டது. அது பொருத உதயணன் தன் தம்பியராகிய கடக பிங்கலரை நாட்டை ஆளச் செய்து, தான் யானையைத் தேடிக் காடெங்கும் அலைந்துகொண்டிருந்தான்.

பிரச்சோதனன் ஒரு நாள் தன் நாளோலக்க மண்டபத்தே வீற்றிருந்தான். அமைச்சர், சேனுபதியர், தூதுவர், சாரணர் முதலிய அரச அங்கத்திற் குரியவர்களாகிய யாவரும் அவையில் வீற்றிருந்தனர். அப்போது மன்னன் மந்திரியை நோக்கி எல்லாக் குறுநில மன்னருந் தவருமற் கப்பங்கட்டி வருகின்றனரா என வினவினுன். எல்லோருந் திறைப்பொருளைத் தடையின்றிச் செலுத்தி வருவதாகவும் வத்தவ நாடு, சேதி நாடு ஆகிய இரண்டுமே வரிசெலுத்தவில்லையென்றும் அமைச்சன் கூறினுன். அது கேட்டுச் சினமடைந்த மன்னன் அவர்களைத் தண்டிப்ப தெப்படியென்று கேட்டான்.

அதற்குச் சாலங்காயன் பதில் கூறினுன்: 'வேந்தே அவ்விருவரும் வீரம் மிக்கவர். ஆதலால் தந்திரத்தாலேதான் அவர்களைச் சிறை செய்ய முடியும். உதயணன் தன் தெய்வீக யானை காணுமற் போய்விட்டதால் அதனைத் தேடியலைந்து கொண்டிருக்கின்றுன். நாம் ஒரு இயந்திர யானையை இயற்றி அதனுள் வீரர்களை இருத்தி அக் காட்டிற் செல்லவிட்டால், அவன் அதனருகில் வரும்போது, அதனுள் உள்ள வீரர்களைக் கொண்டு அவனைப் பிடித்து விடலாம். ஆனுல் யூகி உதவிக்கு வராதபடி நாம் அவன்மேற் படையொடு சென்று தாக்கவேண்டும்' என்றும் கூறினுன். எல்லோரும் நன்றென்று கூறப் பின் அதற்கு வேண்டும் முயற்சிகள் விரைந்து நடந்தன.

பிரச்சோதனனது பெரும் படையொன்று யூகியுடன் போரிடச் சேதி நாடு செல்ல, சாலங்காயன் ஒரு படையுடனும் மாயக் கரியுடனும் உதயணனிருக்குங் காட்டையடைந்தான். யானையைக் கண்ட உதயணன் அதுவே தெய்வீக யானை யென்றெண்ணி அதனருகிற் சென்றுன். உள்ளிருந்து வீரர் வரக்கண்ட அவன் ஒரு கணம் திகைத்து

நின்ருன். மறு கணம் அவ்வீரர் யாவரும் எதிர்நிற்க ஆற்ருது மடிந்தனர். மந்திரியும் படையுடன் எதிர்த்துத் தோற்ருன். அந் நிலையில் உதயணனது வாள் ஒரு யானையின் தந்தத்திற் பட்டு முறியவே படையின்றி வறிதே நின்ற அவனை எளிதிற் பிடித்துக் கொண்டனர். உதயணன் உச்சயினி நகரங் கொணரப் பட்டுச் சிறையி லடைக்கப் பட்டான்.

நடந்தவற்றை நண்பன் வழி யறிந்த யூகி கடுஞ்சின மடைந்தான். 'எம் மன்னனை யானையாற் பிடித்ததால் அவன் நகரையும் யானையா லழிப்பேன். அவன் நகர்த்தைத் தீக் கிரை யாக்கி உதயணனை மீட்பேன். மேலும் அவனது ஒரே மகளைக் கவர்ந்து வந்து உதயணனுக்குத் திருமண முடிப்பேன்' என்று வஞ்சினங் கூறினுன். தான் இறந்ததாக எல் லோரும் அறியும்படிச் செய்து, பின் தம் நண்பரொடும் உச்சயினியை யடைந்தான். தன் நண்பருட் பலரை, ஊமை போலவும், செவிடர் போலவும் அரண்மனையி லமர்த்தி வேவு பார்க்கச் செய்தான். தானும் ஒரு நோயாளி போன் றும், தெய்வங் கொள்ளப்பட்டவன் போன்றும் நடித்தான். நகர வீதிகளில் சென்று, நீர்க் கரகத்துடன் ஆடிப் பாடிக் கண்டார் நகைக்கும் வண்ணம் செய்து தன் செயலிற் கண்ணுங் கருத்துமா யிருந்து வந்தான்.

ஓர் நாள் உதயணன் இருக்கும் சிறையருகே சென்று அவனுக்கும் தனக்கும் தெரிந்த பாட்டொன்றைப் பாடினுன். அதை அறிந்து கொண்ட உதயணனும் தன் கையிலிருந்த குழலை ஊதி, வேடிக்கை பார்ப்பவன் போல மேல் மாடிக்கு வந்திருந்து யூகியையும் கண்டு மகிழ்ந்தான். இப்படிப் பல நாட்களாக நடந்து வந்தது. இக் குறிப்பைக் குறிப்பா யறிந்த சிறைக்காவலாள் அரசனிடம் நடந்தவற்றைக் கூறினுன். அது கேட்ட சாலங்காயன் சிந்தித்து,

அது யூகியாயிருக்கலா மெனவும், யூகியின் மார்பிற் காயம் பட்ட பெருவடு ஒன்றுண்டாதலின் அதைக் கவனிக்கு மாறும் கூறினன். இதனைத் தன் நண்பர்கள் வழி யறிந்த யூகி எப்போதும் அத் தழும்பை மறைத்தே வாழ்ந்தான்.

ஒரு நாளிரவில் யாருமறியாமல் யூகி அரசனது பட்டத்து யானை யிருக்குமிடஞ் சேர்ந்தான். மந்திரத்தாலும், மருந்தாலும், அகிற் புகையாலும் அதற்குக் கோப மூட்டி மத வெறி கொள்ளச் செய்தான். அதுவும் கட்டுத் தறியை முறித்துக் கொண்டு நகருட் புகுந்து நாசஞ் செய்யத் தொடங்கியது. எதிர்ப் பட்டவரை யெல்லாம் எடுத்தெறிந்தும், பூமியி லறைந்தும் கொன்றது. இது கேட்ட மன்னன்



உதயணன் யானைப் போர்.

கலங்கி, அமைச்சனை உசாவினன். அவனே, உதயணனே அதை அடக்கவல்லான் எனக் கூறினன். மன்னன் முதலில் மறுத்தா னாயினும் பின்னர் இசைந்தான். உதயணனும் விடுவிக்கப்பட்டான். யானையிடஞ் சென்றான். வாளோச்சி னன். தன் மந்திர வலியாற் கோபந் தணித்து, யாழால் வசப்படுத்தி அதன்மேல் ஏறித் திரும்பினன். வரும் வழி யில் அரண்மனை மாடியிலிருந்து தன்னைப் பார்த்த வாச வதத்தையைக் கண்டான். இருவருள்ளத்திலும் அன்பு அரும்பியது.

மன்னனும் மன மகிழ்ந்து அவனை வரவேற்று, ஆசனத்திருத்தி உபசரித்தான். உதயணனது வீரத்தை யும், இசை வன்மையையும் பலபடப் பாராட்டினன். அத் துணைச் சிறந்த மாபெரும் வீரனை வஞ்சனையாற் கொணர்ந் ததற்காக வருந்துவதாகவும் கூறினன். விலையுயர்ந்த ஆரம் ஒன்றையும் அணிவித்தான். தன் மக்களுக்குப் போர்க் கலையையும், மகளுக்கு இசைக் கலையையுங் கற் பிக்க வேண்டுமென்றும் வேண்டிக் கொண்டான். அது முடிந்தவுடன் அவனை அவன் தலைநகராகிய கௌசாம் பிக்கு அனுப்பி வைப்பதாகவும் கூறினன். உதயணன் தங்கியிருப்பதற்குத் தக்க அரண்மனையையும் பிறவற்றை யும் செய்து முடித்தான்.

உதயணன் முதலில் இதற்கு உடன்படாததுடன் தன் னிலைக்காகவும் வருந்தினன். எனினும் வாசவதத்தையை நாடோறுங் காணக்கூடும் என்ற எண்ணத்தால் அதற்கு உடன்பட்டான். நல்லதோர் நாளிலே இசைக் கலையைக் கற்பிக்கத் தொடங்கினன். அரசகுமாரர்களும் நாடோறும் போர்க் கலையில் தேர்ச்சியடைந்து வருவாராயினர்; வாசவதத்தையும் இசையில் திறமை யடைந்து வந்தாள். அது போலவே அவ் விருவர்தம் அன்பும் வளர்வதாயிற்று.

கொஞ்ச காலத்திற்குப் பின் பிரச்சோதனன் ஏனைய மன்னர்களை யெல்லாம் அழைத்தான். அவர்கள் முன்னிலை யில் தம் குமாரர்கள் கற்ற கலையை அரங்கேற்றச் செய் தான். அவர்கள் யாவரும் போற்றத்தக்க வகையில் தேர்ந் திருந்தனர். அதுபோன்றே வாசவதத்தையும் இசையிலும், யாழிலும் மிகவுந் தேர்ச்சி பெற்றிருந்தாள். இவற்றைக் கண்ட மன்னன், உதயணன் திறமையை மிகவும் வியந்து பாராட்டினன்.

வாசவதத்தையின் எழில் நலத்தையும், குண மேம் பாட்டையும், கலைச் சிறப்பையுங் கேள்வியுற்ற இளவரசர் பலரும் அவளை விரும்பிப் பரிசுகள் பலவற்றை மன்னன் பால் அனுப்பி வைத்தனர். மன்னவனோ எவருக்கும் எவ் வித மறுமொழியுங் கொடுக்கவில்லை. இவற்றைக் கேள்வி யுற்ற வாசவதத்தை, தன் எண்ணம் பழுதாமோ என்றேங் கினள். ஊண் உறக்கமுந் துறந்து வாடினள். இதனைக் குறிப்பாலுணர்ந்த சாங்கியத்தாய் அவளை உதயணனுக்கே மணமுடித்து வைப்பதாய் உறுதி கூறினள். வாசவதத்தை யும் ஒருவாறு மனந்தேறி யிருந்தாள். உதயணனும் இச் செய்தி யறிந்து மகிழ்ந்திருந்தான்.

உதயணன் சிறை பிடிக்கப் பட்டதை அறிந்த ஆருணி யென்னும் பாஞ்சாலதேச மன்னன் கௌசாம்பி மேற் படை யெடுத்து வந்து அதைக் கைப் பற்றிக் கொண்டான். அவனிடமிருந்து கௌசாம்பியை மீட்டு உதயணனுக்குத் தருவதெனப் பிரச்சோதனன் முடிவு செய்து, அதற்கான வற்றைச் செய்து போர் மேற் செல்லுமாறு தன் மகனாகிய பாலகனுக்குக் கட்டளை யிட்டான்.

ஆண்டு தோறும் நீர் விழா ஒன்று நடப்பதுண்டு. அவ் விழா இருபத்தொரு நாட்கள் நடைபெறும். அவ் விழா நடை பெறுங்காலம் அதுவே யாதலின் அரசன் அவ்

விழாவை நடத்தக் கட்டளை யிட்டான், நகர மக்கட்கும் முரசறைந்து தெரிவிக்கப்பட்டது. எல்லோரும் மிக்க மகிழ்ச்சி கொண்டனர். ஆற்றின் இருகரைகளிலும் கூடாரம் அமைத்துக் கொண்டு எல்லோருந் தங்கினர். நன்னேரத்தில் அரசனும் தன் நளகிரி மீது புறப்பட்டுச் சென்றான். பத்திராபதி என்னும் பிடியொன்றைக் கொடுத்து உதயணனையும் வருமாறு அழைத்தான். வாசவதத்தை வண்டியிற் செல்லப் புறப்பட்டாள். ஆயின் புறப்படும்போது எருதுகளின் குளம்புகள் வழுக்கின. அது •சகுனத் தடை யென்றெண்ணிய அரசிளங் குமரி பல்லக்கிற் சென்றாள்.

யூகி தன் வினை முற்றுவதற்கு இதுவே ஏற்ற சமயமெனக் கொண்டு, நகர்க்குத் தீயிடுமாறு சில மகளிரை ஏற்பாடு செய்தான். குழப்பம் ஏற்பட்டவுடன் வாசவதத்தையை அழைத்துக் கொண்டு பத்திராபதி மீதேறிக் கௌசாம்பிக்குப் புறப்படுமாறு உதயணனுக்குத் தெரிவித்தான். உதயணன் செல்லுங்கால் அவனுக்குத் தீங்கு நேராமற் காக்கப் பல போர் வீரர்களையுந் திட்டஞ் செய்திருந்தான்.

மக்கள் எல்லோரும் நீராடத் தொடங்கினர். உதயணன், வாசவதத்தை நீராடுந் துறையருகே தன் யானையைச் செலுத்தி உலவி யிருந்தான். திடீரென்று வானில் மேகங்கள் சூழ்ந்து கொண்டன. பெருங் காற்றுங் கிளம்பியது. நகர்க்கு மகளிரும் தீ வைத்தனர். எங்கும் ஒரே குழப்பம். வாசவதத்தையையும் பாதுகாக்கும்படி உதயணனுக்கு மன்னவன் செய்தி யனுப்பினான். உதயணனும் இதுவே தக்க தருண மென்று வாசவதத்தையை அவள் தோழி காஞ்சன மாலையுடன் யானை மீதேற்றிக் கொண்டு புறப்பட்டான்.

புறப்பட்ட உதயணன் அரண்மனை செல்லாமல் தன் நகர் நோக்கி யானையைச் செலுத்தினான். உதயணன்

நண்பனுன வயந்தகனும் அங்கு வந்து யானையின் முன்புறம் ஏறிக் கொண்டான். யானை கடிது சென்றது. அவன் செல்லுங் குறிப்பை யுணர்ந்த அரசன் படைவீரர்கள் உதயணனைத் தடுக்க முயன்றனர், யூகியின் படைவீரர்கள் அவர்களை வெட்டி வீழ்த்தினர். யூகியும், தன் மந்திர வாளுடன் வெளிப்பட்டு, 'வெற்றியுண்டாகுக! விரைந்து செல்லுக!' என்று உதயணனை வாழ்த்தினுன். உதயண னும் சாங்கியத்தாயை அழைத்து வருமாறு யூகிக் குணர்த்தி விரைந்து சென்றுன். பத்திராபதியின் பாகனுகிய வராகன் அங்கு வரவே, உதயணன் அவனைப் பார்த்து, 'பாகனே! நான் சக்ரவர்த்தியின் ஆணைப்படியே வாச வதத்தையைப் பாதுகாத்து என் நகருக்கழைத்துப் போவ தாகக் கூறி, என் வணக்கத்தையுந் தெரிவிப்பாயாக' என்றுரைத்துச் சென்றுன்.

இதை உணர்ந்த பிரச்சோதனன் சினங்கொண்டு ஒரு சேனையை அனுப்பினுன். அப்போது சாலங்காயன் 'உதயணன் மன்னர்க்குரிய செயலையே செய்தான். அதிற் பிழையில்லை. அவனும் சிறந்த மன்னனே' என்று கூறி மன்னவன் மனத்தை மாற்றினுன். சென்ற வீரரும் யூகி யின் படையாற் சிதறுண்டு மீண்டனர்.

அவந்தி நாட்டெல்லையும் வந்தது. அப்பால் பாலை நிலங் காணப்பட்டது. அப்போது உதயணனின் யாழ் ஒரு மூங்கிலிற் சிக்குண்டு வீழ்ந்தது. அதை யறியாத உதயணன் யானையினைச் செலுத்திச் சென்றுன். அதனை வயந்தகன் அறிவிக்க, உதயணன் 'தந்த தெய்வம் தானே தரும்' எனப் புன்முறுவலுடன் கூறி யானையைச் செலுத் தினுன். எல்லையுங் கடந்தது. பிடியும் மெலிந்து விழும் நிலையடைந்தது. உடனே நால்வருங் கீழிறங்கினர். யானை யும் நிலத்தில் விழுந்து உலகத்தைத் துறந்தது.

பின்னர் இளவரசியை மெல்ல நடத்தி அழைத்துக் கொண்டு சிறிது தூரம் சென்றனர். அதற்குள் கால்களில் கொப்புளங் காண, மேலும் நடக்கமுடியாதவளானாள் வாசவதத்தை. அதுகண்ட உதயணன் அங்கிருந்த பொய்கைக் கரையிற் காணப் பட்ட முள்ளிலவம் புதரைச் சுத்தஞ் செய்து, இலைகளாற் படுக்கை யமைத்து வாசவதத்தையைப் படுத்திருக்கச் செய்தான். கதிரவனும் மறைந்தான்.

அப்போது வயந்தகன் உதயணனை வணங்கி, அருகிலுள்ள புட்பக நகரஞ் சென்று, நண்பன் இடவகனுடைய சேனாவீரர்களை யழைத்துக் கொண்டு பல்லக்கு முதலியவற்றையுங் கொண்டுவருவதாக விடைபெற்றுச் சென்றான். உயிர்த்தோழியை வாசவதத்தையுடன் இருக்கச் செய்து, உதயணன் வாளேந்திய கையுடன் காத்து நின்றான். பொழுது புலரும் நேரமும் ஆயிற்று. எங்கிருந்தோ வேடர் கூட்டம் ஒன்று வந்து வளைத்துக் கொண்டது. உதயணன் முதலில் அவர்களை யெல்லாம் வெற்றி கொண்டான். எனினும் முடிவிற் சிக்குண்டான். அது கண்ட அரசியுந் தோழியும் அஞ்சி நடுங்கினர்.

ஒரு சிறிதும் மனங் கலங்காத உதயணன், வேடுவரிடம் தான், உதயணனது வணிகன் என்றும், தன்னைக் கட்ட விழ்த்து விட்டால், தன் பெரும் பொருள் மறைக்கப் பட்டுள்ள இடத்தைக் காட்டுவதாகவுங் கூறினான். பொருளாசை மிக்க அவர்களும் அதற் குடன்படவே, இவனும் அவர்களை அங்கு மிங்கும் அழைத்துச் சென்று காலங் கடத்தினான். அப்போது வயந்தகன் படையுடன் வரவே கானவர் மறைந்துவிட்டனர். உதயணன் முதலிய எல்லோரும் புறப்பட்டு, உதயணனுக் குட்பட்டதாகிய சயந்தி நகரத்தை யடைந்தனர். அங்கு உதயணனின் அமைச்சர்

களுள் ஒருவனாகிய உருமண்ணுவா ஆட்சி செலுத்தி யிருந்தான்.

உதயணன் வருகை கேட்ட நகர மக்கள் பேரார்வத் துடன் வரவேற்றனர். நகரெங்கும் அலங்கரிக்கப்பெற்றது, எங்கும் மங்கல வாத்தியங்கள் ஒலித்தன. நகரெங்கும் பெரியதோர் விழாக் காட்சியே காணப்பட்டது. தன் மக்களின் அன்பையும், ஆர்வத்தையுங் கண்ட உதயணன் மன மகிழ்ந்து அரண்மனை சேர்ந்தான். அரண்மனைப் பெருங்கணி குறித்த நன்னாளிலே உதயணனுக்கும் வாசவதத்தைக்கும் மிகச் சிறப்புடன் திருமணம் நடந்தேறி யது. மண மக்கள் எல்லோருடைய வாழ்த்துக்களையும் பெற்று மகிழ்ந்தனர்.

## கேள்விகள்

1. அவந்தி நாட்டு மன்னனும், அவன் மக்களும் யாவர்?
2. ஒன்றாகவே வளர்ந்து, பயின்ற இரு நண்பர்கள் யாவர்?
3. தெய்வீக யானையின் வரலாறென்ன?
4. உதயணன் சிறைப்படுத்தப்பட்ட தெவ்வாறு?
5. யூகி கூறிய வஞ்சின மென்ன?
6. வாசவதத்தைக்கும் உதயணனுக்கும் அன்பு ஏற்பட்டு வளர்ந்த தெவ்வாறு?
7. உதயணன் வாசவதத்தையுடன் மீண்ட தெவ்வாறு?

## பயிற்சி

1. உதயணன் கதை முழுவதையும் அறிந்து கொள்க.
2. யூகி தானே தன் செயலைக் கூறுவதுபோல் எழுதுக.
3. உதயணன் சிறைப்பட்ட வகையை ஒரு கட்டுரையாக எழுதுக.

## இலக்கணம்

(1) கீழ்வரும் சொற்களுக்கு ஏற்ற பெயர்களை அமைத்து வரைக:—

குட்டி, கன்று, சாணம், உண்டேன், பருகினேன், தின்றேன், குடித்தேன்.

(2) கீழ்வருஞ் சொற்களுக்கு இலக்கணம் தந்து சொற்றொடராக அமை :—

மணந்தான்

மரம்

சென்ற

வந்து

ஊர் கலக்க முற்றது

பாடிய.

(3) வாசவதத்தையை நாடோறும் காணக்கூடும்.

வாசவதத்தை நாடோறும் காணக்கூடும்.

இவ்விரண்டிற்கு முள்ள வேறுபாடு என்ன?

(4) நிரனிறை என்றால் என்ன? அதற்கு உதாரணம் தந்து விளக்குக.

(5) மன்னன் பால் பரிசுகள் அனுப்பி வைத்தனர்.

இதி லமைந்த வேற்றுமையை விளக்குக.

(6) மன்னன் பால் பரிசுகள் அனுப்பினர். இங்கு எழுவாய் எங்குளது? அதற்குப் பெயரென்ன?

(7) கீழ்வரும் பெயர்கள் யார் யார் என்பதைக் குறிக்க:—

பிரச்சோதனன், சாலங்காயன், வராகன், உருமண்ணுவா, யூகி, சாங்கியத்தாய், வயந்தகன், கடக பிங்கலர்.

# 7. கங்கை வேடன்

## நாடகம்

[இராமன் தந்தையின் ஆணைப்படி காட்டுக்குச் செல்கின்றான். அங்கு கங்கைக் கரையில் உள்ள வேடுவர் தலைவனாகிய குகன் இராமனைக் கண்டு வணங்கிப் போற்றுகிறான். பின் அவனோடு நட்புக்கொண்டு இராமன் சில நாள் அங்கு தங்கிப் பிறகு மேலும் தன்வழி நோக்கிச் சென்று விடுகின்றான். பின்னர்ப் பரதன் இராமனைத் தேடிக்கொண்டு அதே வழியில் வருகின்றான். பரதன் கங்கையின் வடகரையில் வந்து தங்குவதைத் தென்கரையி லிருந்த குகன் காண்கின்றான். கண்டு பரதன் இராமன்மேல் படை எடுத்து வந்துள்ளான் என்று தவறாக எண்ணுகிறான். அவ்வெண்ணத்திடையில் சீற்றம் பிறக்கிறது.]

### காட்சி 1.

**குகன் :**—(அருகிருந்த வேடர்களை நோக்கி) அருமைத் தோழர்களே ! அதோ அந்தக் கரையில் ஒரு பெரிய கூட்டம் வந்து கூடியிருக்கிறதே ? அக் கூட்டம் யாது ? அக்கூட்டத் தலைவன் யார் ? நம் ஒற்றர் அறிந்து வந்தனரா ?

**ஒற்றர் :**—தலைவ ! நான் இப்பொழுதுதான் அக்கரையி லிருந்து வந்தேன். அவர்களைப் பற்றிக் கூறவே வந்தேன். அவர்கள் அயோத்தியாம். முன் நம்மிடமிருந்து சென்ற அண்ணல் இராமபிரான் தம்பி பரதன் வந்திருக்கின்றானாம்.

**குகன் :**—ஆ! அப்படியா? அவன் ஏன் இங்குவர வேண்டும்? காட்டுக்கு அனுப்பிய பின்னும் அண்ணனை அங்கும் வாழ விடாது விரட்ட எண்ணமா? அன்றி வேறு யாதானும் இருக்குமா?

**ஒற்றர் :**—ஒன்றும் என்னால் அறியக்கூடவில்லை. அவர்கள் தற்போதுதான் வந்து தங்கியுள்ளார்கள்.

**ஒருவன் :**—தலைவ! ஒருவேளை தன் அண்ணன் காட்டிலிருப்பின் பின்னும் பதினான்கு ஆண்டுகள் கழித்து நாட்டுக்கு வந்து ஆட்சி கேட்டால் என்னசெய்வதென்று கருதி அடியோடு அண்ணனைக் கெடுத்து அழிக்க வந்திருக்கலாம்.

**குகன் :**—இருக்கலாம். சீ! அப்படியுமா இருக்கும்? இராமனது உத்தம குணங்களை எண்ணும்போது அவனுக்கு இப்படி ஒரு தம்பி பிறப்பான் என்று யாராவது சொல்ல முடியுமா?

**ஒரு வேடன் :**—அரசே! ஏன் இருக்கலாகாது. வஞ்சித்துக் காட்டுக்கு அனுப்பிய கொடுமை செய்தவர்கள் வேறு என்னதான் செய்ய மாட்டார்கள்?

**குகன் :**—ஆம்! எதற்கும் ஆய்ந்து பார்க்க வேண்டும். பார்த்தால் பெருஞ் சேனை அக்கரை அடைந்துள்ளது. ஏதோ ஒரு பெரும் போர் கருதி வந்தது போலன்றோ தோன்றுகின்றது. (சற்று நினைத்து) ஆகா! அப்படியா? இராமனை வெல்ல இவர்கள் படையெடுத்திருப்பின் என்னைத் தாண்டித்தானே இவர்கள் செல்ல வேண்டும்? இவர்களால் முடியுமா என்னைக் கடக்க? ஆழநெடுந்திரை ஆறு கடந்து இவர்

போவாரோ? ஆகா! தன் முன்னவன் என்று நினையாத பாவியின் நெஞ்சில், அவன் அரசனாயினும், நான் விடும் வெஞ்சரம் பாயாவோ! இதோ ஒரு நொடியில் அவனையும் அவன் சேனையையும் கொன்று குவிக்கின்றேன்.

அந்த இராமன்தான் எவ்வளவு கண்ணியனாகக் காணப்பட்டார். என்னைத் தோழனாக வன்றோ—ஏன், தம்பியாகவன்றோ—ஏற்றுக் கொண்டார். அவருக்கு ஒரு மாசு உண்டாக நான் பார்த்திருப்பதா? சேனைகளே தயாராகுங்கள். நொடியில் அவர்களைச் சாடி அழிப்போம்.

**ஒரு கிழத்தலைவர் :**—ஐயா! தங்கள் சீற்றம் தக்கதே! தாங்கள் இராமபிரானிடத்துக் கொண்ட அன்பின் பெருக்கைக் காட்டுகின்றது அது. எனினும் அவசரப்பட்டு நாம் ஒன்றும் செய்யலாகாது. தாங்கள் தனியாக அக்கரை சென்று ஆராய்ந்து வாருங்கள். இதோ தற்போது வந்த ஒற்றன் அப் பரதன் தவக் கோலம் பூண்டு கண்ணீர் மல்கிக் கசிந்து நிற்கின்றான் என உரைக்கின்றான். உண்மை உணரக் கூடவில்லை. ஒருவேளை தன் அண்ணனைத் திரும்பி அழைத்துச் சென்று அரசையே நல்க வந்தாலும் வந்திருக்கலாம். ஆகவே ஆய்ந்து செயலாற்றுங்கள்.

**குகன் :**—ஆம்! அதுவும் உண்மையே! எச் செயலும் ஆய்ந்தோய்ந்து பாராவிடின் பாழ் படும். நான் மட்டும் தனியாகச் சென்று அனைத்தையும் அறிந்து வருகின்றேன். எதற்கும் படைக

ளெல்லாம் தயாராக இருக்கட்டும். என் தனி நாவாயைக் கொண்டு வரச் சொல்லுங்கள்.

**உடனிருந்தவர் :**—அப்படியே!

## காட்சி 2.

[கங்கையில் குகன் மற்றொருவனுடன் தனித்து நாவாய் செலுத்திச் செல்கின்றான்.]

**குகன் :**—அப்பா. விரைந்து செலுத்து. நெருங்கி வரவர ஆட்கள் அதிகமாகத் தெரிகின்றனர்.

**படகோட்டி:**—ஆமாம். பெண்கள் கூட அல்லவா இருக்கின்றார்கள்.

**குகன்:**—ஆம். பெண்களும் ஆண்களும் கலந்து பலர் இருக்கின்றார்கள். படை யென்றால் பெண்கள் ஏன் வரப்போகின்றார்கள். தவிர ஒரே அமைதி யன்றிப் போர் ஆரவாரமே காணோமே!

**படகோட்டி :**—ஆம் ஐயா! அவர்கள் படையெடுத்து வந்ததாகவே தெரியவில்லையே. அதோ யாரோ இருவர் தவ வேடத்தில் நிற்கின்றார்களே! அவர்களைப் பார்த்தால் இராம இலக்குமணர் கள் இங்கே தங்கினார்களே; அவர்களைப்போ லல்லவா இருக்கிறது. அவர்கள் யாரோ?

**குகன் :**—யாரோ என்ன? ஆம்! அவர்கள்தாம் பரதனும் சத்துருக்கனனும். ஆகா! நம்பியும் என் நாயகனை துதிக்கின்றான். அயல் நின்றவனோ தம்பியை ஒத்திருக்கின்றான். இருவரும் தவ வேடமே கொண்டிருக்கின்றனர். கண்களோ நீர்த் தாரை பொழிகின்றது. அவர்கள் பெற்ற துன்பத்தை அளவிட முடியாது போலும்.

**படகோட்டி :**—ஆம் ஐயா! மிகவும் வருந்துகின்றார்கள் போல் தெரிகிறது. அப்படி என்ன வருத்தம் அவர்களுக்கு. காட்டுக்குச் சென்ற அந்த இராம இலக்குமணர்கள் கூட அல்லவா மகிழ்ச்சியாக இருந்தார்கள்.

**குகன் :**— ஆம்! அதுதான் வேறுபாடு. மெய்த்திரு வந் துற்றாலும் வெந்துயர் வந்துற்றாலும் ஒத் திருக்கும் இராமரது உள்ளம் உயர்ந்ததுதான். எனினும் இவர்கள் வருத்தம் என் நெஞ்சைத் தொடுகின்றதே. தன் தமையன் சென்ற திசை நோக்கித் தொழுகின்றாரே! ஏன் இவர்களைப் பற்றித் தவறாக நினைத்தேன். அந்தோ கொடுமை எண்ணிவிட்டேன். ஆராயாது அம் பினைத் தொடுத்திருந்தால் என்னவாயிருக்கும். எம்பெருமான் பின் பிறந்தார் தவறு இழைப் பார்களோ; இதைக்கூட எண்ணாது விட்டேனே. ஆகா! இவர்களை விரைந்து காணவேண்டும். படகை விரைவாகச் செலுத்து. (படகு செல் கிறது.)

## காட்சி 3.

[பரதன் அனைவரோடும் வீற்றிருக்கின்றான். பக்கத்தில் அமைச்சன் சுமந்திரன் மற்றும் பலர் இருக்கின்ற னர்.]

**பரதன் :**—அமைச்சரே! அண்ணலார் இந்த வழியாகத் தான் வந்து கங்கையைக் கடந்தார் என்று கூறு கிறீர்கள். ஆறோ அகன்றுள்ளது, கடப்பது எப்படி? என்று இராமரைக் காண்பது?

**சுமந்தி:**—அரசே! கவல வேண்டா! இராமர் மிக அண்மையிலேதான் தங்கி யிருப்பார். இதற்குள் அந்த அடர்ந்த காட்டுக்குள் நெடுந் தூரம் சென்றிருக்க முடியாது. இந்தக் கங்கைக்குக் காவலன் குகன் என்னும் வேடன் ஒருவன் இருக்கின்றான். அவன் இராமரோடு நட்புக் கொண்டு அவரை அக்கரை கொண்டு சேர்த்தான்.

**பரதன்:**—அதோ கங்கையில் கரையை அடுத்துத் தனிப் படகில் ஒருவர் விரைந்து வருகின்றரே! அவர் யாரோ!

**சுமந்தி:**—அரசே! ஆம். அவன்தான் குகன்! வேடுவர் தலைவன். இராமனை அக் கரை சேர்த்து அவர்தம் நண்பனாகிய நல்லவன். ஒருவேளை நம்மைத்தான் நாடி வருகின்றனோ என்னவோ!

**பரதன்:**—இருக்கலாம். (அத்திசை நோக்கி வணங்கி) அவன் நல்ல செய்தியைக் கொண்டு வருவானா!

**சுமந்தி:**—அரசே! கவலவேண்டா! நம் விரைவில் இராமனைக் காணப் போகின்றோம். (அதற்குள் குகன் கரை சேர்ந்து வந்து பரதன் முன் வீழ்ந்து வணங்குகிறான். அவனும் பதிலுக்கு வீழ்ந்து வணங்குகிறான். இருவரும் தழுவிக் கொள்ளுகின்றனர்).

**குகன்:**—அண்ணலே! வாழ்க! உங்கள் தோற்றமும் செயலும் தாங்கள் இராமபிரா னிடத்துக் கொண்ட அன்பினை விளக்குகின்றது. நீங்கள் யார் என்றும் எவ்வாறு வந்ீர்கள் என்றும்

என் ஒற்றர் மூலம் அறிந்தேன். தாங்கள் காடு வந்த காரணம் யாதோ?

**பரதன் :—** அப்பா! முழுதுல களந்த தந்தை முந்தையோர் முறையாகிய மூத்தவற்கு அரசு என்ற வழியி லிருந்து தவறினன். நான் ஊரிலில்லாதபோது அண்ணல் காடு நடந்தார். என் மன்னனுகிய இராமபிரானை அழைத்துச் செல்வதற்காகவே நான் இங்கு வந்தேன்.

**குகன் :—** ஆகா! நன்று நன்று! நீங்கள் அதுபோது ஊரில் இல்லையா! நினைத்தேன், தாங்களும் தவறு செய்வீர்களா என்று! உங்கள் செயல் இராமபிரான் புகழைக் காட்டிலும் உயர்ந்த புகழை உங்கட்குத் தந்தது. தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத் தீவினை என்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கி அவரைத் தேடி இங்கு வந்ததை நினைக்கும் காலத்து, ஆயிரம் இராமரும் உமக்கு இணையாக மாட்டார்கள் என்பது உறுதி.

**பரதன் :—** அன்பரே! இப்போது புகழ்ச்சி வேண்டுவ தன்று! நான் விரைவில் என் அண்ணனைக் காணவேண்டும். அதற்கு வழி காட்டுவீர்களா?

**குகன் :—** ஆகா! அதற்காகத்தானே காத்திருக்கின்றேன். இராம பிரானும் இங்கே சில நாட்கள் தங்கி யிருந்தார். நானும் உடனிருந்து பல பணிகள் செய்து, பிறகு நானே அவர்களுக்குக் கங்கை யைக் கடந்து செல்ல வழி செய்தேன்.

**பரதன் :—** அண்ணன் இங்கு சில நாள் தங்கி யிருந்தாரா? ஆகா! இந்த இடம் பொன்னிடம். அயோத்தி யின் மிக்கது! (தரையைத் தொட்டுக் கண்ணில்

ஒற்றிக் கொள்ளுகின்றுன்.) ஐயா ! அண்ணன் இங்கே எங்கு தங்கி யிருந்தார் ?

**குகன் :—** அதோ அந்த மரத்தின் அடியிலே கிடக்கும் புல்படுக்கைத்தான் அவருக்குப் பாயலாக அமைந்தது.

**பரதன் :—** ஆகா ! என்ன கொடுமை ! உயர்ந்த உப்பரி கையில் பஞ்சணையில் துயில வேண்டிய என் அண்ணன், இக்காட்டில் மஞ்சம்புல்லின் மேலா துயின்றுர். அந்தோ !. (நினைத்து) ஆமாம் இலக்குவன் எங்கிருந்தார் ?

**குகன் :—** ஐயா ! அதையும் சொல்லவா ! நா எழவில்லையே. பகலிலெல்லாம் அண்ணனுக்கும் அண்ணிக் கும் உணவு தேடித்தருவதில் கழித்தார். இர விலோ......

அல்லை ஆண்டு அமைந்தமேனி அழகனும் அவளும் துஞ்ச
வில்லை ஊன்றிய கையோடும் வெய்துயிர்ப் போடும் வீரன்
கல்லை யாண்டு உயர்த்த தோளாய் ! கண்கள் நீர் சொரியக் கங்குல்
எல்லைகாண்பளவும் நின்றுன் இமைப்பிலன் நயனம்

**பரதன் :—** என்னே ! ஒரு தம்பியால் காடு கடந்த அண்ண னுக்கு உடன் பிறந்தானும் உள்ளான் என்பதை நிறுத்திய இலக்குமணன் பெருமையே பெருமை ! நீயே தம்பி ! நீ வாழ்க ! நானும் இருக்கின்றேனே !

**சுமந்திர :—** அரசே ! எண்ணிக் கவன்று கொண்டிருப் பதில் பயனில்லை. உடன் கங்கையைக் கடந்து அண்ணலைக் காண வேண்டும்.

பரதன் :—ஆம். (சிந்திக்க)

குகன் :— சிந்தனை வேண்டாம். இதோ என் நாவாய்கள் ஒரு நொடியில் தயாராகி வரும். அனைவரும் அக் கரைக்குச் செல்லலாம்.

பரதன் :— நல்லது விரைந்து செல்லுங்கள்.

## காட்சி 4.

[பல படகுகள் கங்கையில் செல்கின்றன. ஒன்றில் பரதன் சத்ருக்கனன், தாயர் மூவரும் ஏறியுள்ளனர். குகனும் உடன் செல்லுகிறான். படகு செல்கிறது.]



கங்கையில் ஓடம் செல்லுகிறது.

**குகன் :**—அண்ணல்; விரைவில் கரை சேர்ந்து இராம பிரானைக் காண்பீர்கள். ஆமாம். இதோ இருக்கின்ற அன்னையரை எனக்கு அறிமுகப் படுத்த வில்லையே.

**பரதன் :**—ஆம். தவறி விட்டேன். இதோ இருக்கின்றார் களே (கௌசலையைக் காட்டி) இவர்களே உல கெலாம் போற்றும் ஒப்பற்ற என் அண்ணலார் இராமபிரானைப் பெற்றவர்கள். நான் பிறந்த தால் தான் பெற்ற செல்வத்தை இழந்தார்கள். (குகன் வீழ்ந்து வணங்குகிறான்.)

**கௌசலை :**—பரதா! அப்படி யெல்லாம் சொல்லாதே! எல்லாம் நன்மைக்கே. இவர் யார்? இவ்வாறு நம்மவரில் ஒருவராக இருக்கின்றாரே!

**பரதன் :**—அம்மா! இவர் நம்மவரில் ஒருவர்தான். இக் காட்டிற்குத் தலைவர். குகன் என்னும் பெய ருடையவர். நம் அண்ணன் காடு செல்லும் போது இவர் விருந்தினராக இருந்தார். இவரைத் தம்பியாக ஏற்றுக் கொண்டார். இவர் நம்மவருள் ஒருவராக ஆகிவிட்டார்.

**கௌசலை :**—பரதா! பார்த்தயா! எல்லாம் நன்மைக்குத் தான் என்று நான் சொல்லவில்லையா! இனி நீங்கள் வருந்த வேண்டா! இராமன் காடு போந் தது எவ்வளவு நல்லதாயிற்று பார்த்தாயா! நால்வராகப் பிறந்தீர்கள். இதோ ஒரு தம்பி உற்றவ ராானார். இன்னும் எத்தனை தம்பியர் வருவார்களே. நீங்கள் ஐந்து உடன் பிறப் பாளரும் ஒருவராக உலகை நெடுங்காலம் ஆளுங்கள்.

**குகன் :**—அன்னாய்! உங்கள் வாழ்த்து வழி கலந்து வாழ்வோம். ஐயா! அறந்தானே என நிற்கும் அந்த அன்னை யார்?

**பரதன் :**—இதோ சொல்கின்றேன். தான் சொன்ன சொல்லைத் தவற விடாது, உயிர் போயினும் கவலையில்லை என மறைந்த மன்னவனின் இளைய மனைவியார். என் சிறிய தாயார். இராமனுடன் உடன் பிறந்தவரும் இருக்கிறார் என்று வாழும் இலக்குவனைப் பெற்ற அன்னையார்.

**குகன் :**— ஆகா! அப்படியா! அன்னையே வணக்கம் (வணங்குகிறான்.)

**சுமித்திரை :**—அப்பா! உன் குணங்களைக் கேட்டறிந்தேன். நீங்கள் அனைவரும் கலந்து வாழுங்கள்.

**குகன் :**— அம்மா! தங்கள் வாக்குப்படியே. ஐயா! அவர்கள்......

**பரதன் :**—அவர்களைத் தெரியவில்லையா! அவர்தான் என் தாய்! எனக்காக முறை திறம்பி அரசநிலை கெட ஆட்சி வேண்டியவர்.

**குகன் :**— அப்படியா! உங்கள் மறக் கருணையன்றோ என்னை உங்களுள் ஒருவனாக்கிற்று. இன்னும் உலகுக்கு என்னென்ன நன்மைகள் தங்கள் மறக்கருணை வழி பிறக்க இருக்கின்றதோ! அன்னாய் வணக்கம். (வணங்குகிறான்.)

**கைகேயி :**—அப்பா எழுந்திரு! அனைவரும் சிறக்க வாழுங்கள்.

**குகன் :**— அம்மா உங்கள் அனைவரையும் உற்றவராகப் பெற்றபின் வாழ் வன்றி வேறு யாது! (திரும்பி) ஆம். கரை வந்து விட்டது. அனைவரும் இறங்க

வேண்டும். என் குடிலில் உணவுண்டு பின் அண்ணலார் சென்ற வழி நாடுவோம்.

**அனைவரும் :—**அப்படியே.

(ஓடம் கரை சேர அனைவரும் இறங்கிச் செல்கின்றனர்.)

## கேள்விகள்

(1) பரதனைப் பற்றிக் குகன் எவ்வெவ்வாறு தவருக எண்ணுகின்ருன் ?

(2) குகனின் நன்றி மறவா நட்பு எவ்வாறுளது ?

(3) பரதனைக் குகன் எவ்வெவ்வாறு போற்றுகின்ருன்?

(4) குகனிடம் இராமனைப் பற்றிப் பரதன் அறிந்து கொண்டன யாவை?

(5) கோசலை இராமன் காட்டிற்குச் சென்றது நன்மையே என்பதற்குக் கூறிய காரணங்கள் யாவை ?

## பயிற்சி

(1) குகனின் குண நலத்தைச் சுருக்கி ஒரு கட்டுரை வரைக.

(2) இராமன் காட்டிற்குச் செல்ல வேண்டிய காரணம் யாது என நும் ஆசிரியரைக் கேட்டுத் தெரிந்து கொள்க.

(3) பரதனின் தன்னலமற்ற தன்மையும், கடமை உணர்ச்சியையும் பற்றி ஓர் கட்டுரை வரைந்து காட்டுக.

(4) இராமனுக் குற்ற இரு தம்பிகள் என்ற தலைப்பில் இப் பாடத்தைக் கொண்டு ஒரு சிறு கட்டுரை வரைக.

## இலக்கணம்

(1) கீழ்வருவன வற்றிற்கு உதாரணம் தருக:—
பெயரெச்சம், வினைமுற்று, எழுவாய், விளி, வியப்பு, இடைச்சொல்.

(2) உரிச்சொல் என்றால் என்ன? இப் பாடத் துணை கொண்டு ஆய்ந்து வரைக.

(3) குறிப்பு வினையாலணையும் பெயர், தெரிநிலை வினையாலணையும் பெயர் இவ்விரண்டிற்கும் விளக்கம் தந்து எடுத்துக்காட்டுடன் விளக்குக.

(4) ஐந்தாம் வேற்றுமையும் ஆறாம் வேற்றுமையும் எவ்வெப் பொருளில் வரும்?

(5) இச் சொற்களை முற்றுவிக்க.

(1) என்தனி நாவாயைக் கொண்டு ——.

(2) நம் ஒற்றர் அறிந்து ——.

(3) ஆய்ந்து ——.

(6) இறந்த காலம் காட்டும் இடைநிலையையும், எதிர் காலம் காட்டும் இடைநிலையையும் எடுத்து வரைக.

# செய்யுள் பகுதி

## கடவுள் வாழ்த்து

### 1. திருநாவுக்கரசர்

சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியொடு வான்ஆளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்
மாதேவர்க்கு ஏகாந்தர் அல்லர் ஆகில்
அங்கமெலாம் குறைந்துஅழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பர் ஆகில்
அவர்கண்டீர் யாம்வணங்கும் கடவு ளாரே.

### 2. ஆண்டாள்

மாயனை மன்னு வடமதுரை மைந்தனை
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை
தாயைக் குடல்விளக்கம் செய்த தாமோதரனை
தூயோமால் வந்து நாம் தூமலர்தூவித் தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசுஆகும் செப்பேல் ஓர் எம்பாவாய்.

### 3. கிறிஸ்து பெருமான் வாழ்த்து

வன்கணன் படிறன் பொல்லா வஞ்சன்என் றிகழ்ந்திடாது என்
புகன்கணுக்கு இறங்கி ஓர்பூம் பொழிலிடைப் புனித மூர்த்தி

நின்கணீர் சொரியச் செந்நீர் நிலத்துஉக வியர்த்தல் கண்டும்
என்கணீர் சொரியக் காணேன் என்செய்வான் தோன்றினேனே.

## 4. தமிழன்னை வாழ்த்து—திரு. வி. க.

இயற்கையிலே கருத்தாங்கி இனிமையிலே வடிவெடுத்துச்
செயற்கைகடந்து இயல்இசையில் செய்நடமே! வாழியரோ!
பயிற்சிநிலப் பயிர்களெல்லாம் பசுமையுற ஒளிவழியே
உயிர்ப்புஅருளும் திறம்வாய்ந்த உயர்தமிழ்த்தாய்! வாழியரோ!

## 5. செ. வேங்கடராமச்செட்டியார்

பழந்தமிழ் அணங்கே பாரெலாம் பரவும்
மொழியெலாம் பரவுசீர் அரசி!
பழகுவார் உள்ளத்து உள்ளுதோ(று) இனிக்கும்
பான்மையில் சிறந்ததோர் சுவையே!
அழகுறு மொழியென் றியம்பிடு மொழிகள்
அனைத்திற்கும் அணிசெயும் அணியே
பழுதறு உலக முழுதும் நின்புகழே
பகர்ந்துஇடர் தணித்திட அருளாய்.

# நீதிப்பகுதி

## 1. நாலடியார் :—சைன முனிவர்

1. உண்ணான் ஒளிநிறான் ஓங்குபுகழ் செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத்து இருப்பானேல் ஆஅ
இழந்தான் என்று எண்ணப்படும்

2. மற்றுஅறிவாம் நல்வினையை யாம்இளையம் என்னது
கைத்துஉண்டாம் போழ்தே கரவாது அறம்செய்மின்
முற்றி யிருந்த கனிஒழியத் தீவளியால்
நற்காய் உதிர்தலும் உண்டு

3. உறக்கும் துணையதோர் ஆலம்வித்து ஈண்டி
இறப்ப நிழல் பயந்தாங்கு—அறப்பயனும்
தான்சிறி(து) ஆயினும் தக்கார்கைப் பட்டக்கால்.
வான்சிறிதாப் போர்த்து விடும்

4. தம்மை இகழ்ந்தமை தாம்பொறுப்பது அன்றி மற்(று,)
எம்மை இகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று
பரிவதூஉம் சான்றோர் கடன்

5. காவாது ஒருவன்தன் வாய்திறந்து சொல்லும்சொல்
ஓவாதே தன்னைச் சுடுதலால்—ஓவாதே
ஆய்ந்(து) அமைந்த கேள்வி அறிவுடையார் எஞ் ஞான்றும்
காய்ந்து அமைந்த சொல்லார் கறுத்து

6. அறிவ(து) அறிந்து அடங்கி அஞ்சுவது அஞ்சி
உறுவது உலகுஉவப்பச் செய்து—பெறுவதனால்
இன்புற்று வாழும் இயல்பினர் எஞ்ஞான்றும்
துன்புற்று வாழ்தல் அரிது

7. கடிப்பிடு கண்முரசம் காதத்தோர் கேட்பர்
இடித்து முழக்கிய(து) ஓர் யோசனையோர் கேட்பர்
அடுக்கிய மூவுலகும் கேட்குமே சான்றோர்
கொடுத்தார் எனப்படும் சொல்

8. இம்மைப் பயக்குமால் ஈயக் குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாம்உளராக் கேடின்றால்

எம்மை உலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து

9. அங்கண் விசும்பின் அகல்நிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன்—திங்கள்
மறுவாற்றும் சான்றோர் அஃ(து)ஆற்ருர் தெருமந்து
தேய்வர் ஒருமாசு உறின்

10. கல்லாது போகிய நாளும் பெரியவர்கண்
செல்லாது வைகிய வைகலும்—ஒல்வ
கொடாது ஒழிந்து பகலும் உரைப்பில்
படாஅவாம் பண்புடையார் கண்

11. அறிமின் அறநெறி அஞ்சுமின் கூற்றம்
பொறுமின் பிறர்கடும்சொல் போற்றுமின் வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மை எஞ்ஞான்றும்
பெறுமின் பெரியார் வாய்ச்சொல்

12. யானை அனையவர் நண்புஒரீஇ நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் எறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கும் நாய்.

## II சதகங்கள்

**1. சகோதரர் யார்? அறப்பளீசுர சதகம்.**

கூடப் பிறந்தவர்க்கு எய்துதுயர் தமதுதுயர்
கொள்சுகம் தம்சுகமெனக்
கொண்டுதாம் தேடுபொருள் அவர்தேடு பொருள் அவர்கொள்
கோதில்புகழ் தம்புகழ்எனத்
தேடுற்ற அவர்நிந்தை தன்நிந்தை தம்தவம்
தீதில்அவர் தவமாம் எனச்
சீவன்ஒன்று உடல்வேறு இவர்க்கென்ன ஐந்தலைச்
சீறுஅரவம் மணிவாய் தொறும்

கூடுற்ற இரையெடுத்து ஒருடல் நிறைத்திடும்
  கொள்கைபோல் பிழைஇன்றியே
கூடிவாழ்பவர் தம்மை யேசகோதரர் எனக்
  கூறுவதுவே தருமமாம்
ஆடிச் சிவந்த செந்தாமரைப் பாதனே
  அண்ணல் எமதுஅருமை மதவேள்
அனுதினமும் மனதில்நினைதரு சதுரகிரிவளர்
  அறப்பளீ சுர தேவனே.

2. அற்பர் வாழ்வு :—தண்டலையார் சதகம்.

விற்பனர்க்கு வாழ்வுவந்தால் மிகவணங்கிக்
  கண்ணோட்டம் மிகவும் செய்வார்
சொற்பருக்கு வாழ்வுவந்தால் கண்தெரியாது
  இறுமாந்து துன்பம் செய்வார்
பற்பலர்க்கு வாழ்வுதரும் தண்டலையாரே
  சொன்னேன் பண்பில் லாத
அற்பருக்கு வாழ்வுவந்தால் அர்த்தராத்திரி
  குடைமேல் ஆகுந் தானே.

3. கல்விச் சிறப்பு :—கயிலாசநாதர் சதகம்.

கடல்உலகில் உற்ற பொருளுக்குளே நன்மைதரு
  கல்வி நிலைபெற்ற பொருளாம்
கனலினுல் உருகாது புனலினுல் கரையாது
  கள்ளரால் திருடொ ணுது
திடமான ராசாதி ராசராலும் அதைத்
  தெண்டம் பிடிக்கொ ணுது
தெரிவை பொதுமாதரால் சேதமாகாது ஒருவர்
  செலவிடில் குறைவுறுது (அங்கு)
அடமிகு சகோதரர்க்கு இடமதுகோடாது அதனை
  அளவிடவும் முடியாது காண்

அப்பொருளினைப் பெருது இப்புவியில் அலைகின்ற
அற்பர் உறுபயன்என் கொலோ
கடகயம் உரித்து உடலினில் தரித்திடு தேவ
கற்பக விராச மேவும்
கங்கைபுனை ஈசனே மங்கைமகிழ் நேசனே
கயிலையங்கிரி வாசனே.

## கதைப் பகுதி

### பாஞ்சாலி சபதம்

### திரௌபதி கண்ணனுக்குச் செய்யும் பிரார்த்தனை

துச்சா தனன்எழுந்தே—அன்னை
துகிலினை மன்றிடை யுரிதலுற்ருன்.
'அச்சோ, தேவர்களே!'—என்று
அலறி அவ்விதுரனுந் தரைசாய்ந் தான்,
பிச்சே றியவனைப் போல்—அந்தப்
பேயனுந் துகிலினை உரிகையி லே
உட்சோ தியிற் கலந்தாள்;—அன்னை
உலகத்தை மறந்தாள், ஒருமையுற்ருள்.

'வையகம் காத்திடு வாய்!—கண்ணா!
மணி வண்ணா, என்றன் மனச்சுடரே!
ஐய, நின் பதமலரே—சரண்
ஹரி, ஹரி, ஹரி, ஹரி, ஹரி!' என்ருள்.
பொய்யர் தந் துயரினைப் போல்—நல்ல
புண்ணிய வாணர்தம் புகழினைப் போல்,
தையலர் கருணையைப் போல்—கடல்
சலசலத் தெறிந்திடும் அலைகளைப் போல்.

பெண்ணொளி வாழ்த்திடு வார்—அந்தப்
பெரு·மக்கள் செல்வத்தின் பெருகுதல் போல்,
கண்ண பிரா னருளால்,—தம்பி
கழற்றிடக் கழற்றிடத் துணிபுதி தாய்

வண்ணப் பொற் சேலைகளாம்—அவை
வளர்ந்தன, வளர்ந்தன, வளர்ந்தனவே!
எண்ணத்தி லடங்கா வே ;—அவை
எத்தனை எத்தனை நிறத்தன வோ!

பொன்னிழை பட்டிழையும்—பல
புதுப்புதுப் புதுப்புதுப் புதுமைக ளாய்,
சென்னியிற் கை குவித்தாள்—அவள்
செவ்விய மேனியைச் சார்ந்துநின்றே,
முன்னிய ஹரிநாமம்—தன்னில்
மூளுநற் பயனுல கறிந்திட வே,
துன்னிய துகிற்கூட் டம்—கண்டு
தொழும்பத் துச்சாதனன் வீழ்ந்து விட்டான்.

தேவர்கள் பூச் சொரிந் தார்—'ஓம்
ஜெய ஜெய பாரத சக்தி' என்றே.
ஆவலோ டெழுந்து நின்று—முன்னை
ஆரிய வீட்டுமன் கைதொழு தான்,
சாவடி மறவரெல் லாம்—'ஓம்
சக்தி சக்தி சக்தி' என்று கரங்குவித்தார்.
காவலின் நெறி பிழைத்தான்,—கொடி
கடியரவுடையவன் மலை கவிழ்ந்தான்.

## வீமன் செய்த சபதம்

வீமனெழுந் துரைசெய் வான்:—' இங்கு
விண்ணவ ராணை, பராசக்தி யாணை ;
தாமரைப் பூவினில் வந்தான்—மறை
சாற்றிய தேவன் திருக்கழ லாணை ;
மாமகளைக் கொண்ட தேவன்—எங்கள்
மரபுக்குத் தேவன் கண்ணன் பதத்தாணை
காமனைக் கண்ணழ லாலே—சுட்டுக்
காலனை வென்றவன் பொன் னடிமீதில்

'ஆணையிட் டிஃதுரை செய்வேன் :—இந்த
ஆண்மை யிலாத்துரி யோதனன் றன்னை,
பேணும் பெருங்கன லொத்தாள்—எங்கள்
பெண்டு திரௌபதியைத் தொடை மீதில்
நாணின்றி "வந்திரு" என்றான்—இந்த
நாய்மகனாந் துரியோதனன் றன்னை,
மாணற்ற மன்னர் கண் முன்னே,—என்றன்
வன்மையி னால்யுத்த ரங்கத்தின் கண்ணே,

'தொடையைப் பிளந்துயிர் மாய்ப்பேன்—தம்பி
சூரத்துச்சாதனன் தன்னையு மாங்கே
கடைபட்ட தோள்களை பிய்ப்பேன்;—அங்கு
கள்ளென ஊறு மிரத்தங் குடிப்பேன்,
நடைபெறுங் காண்பீருலகீர்!—இது
நான்சொல்லும் வார்த்தைஎன் றெண்ணிடல்
வேண்டா!
தடையற்ற தெய்வத்தின் வார்த்தை,—'இது
சாதனை செய்க, பராசக்தி!' என்றான்.

## அர்ஜுனன் சபதம்

பார்த்தனெழுந் துரைசெய் வான்:—'இந்தப்
பாதகக் கர்ணனைப் போரில் மடிப்பேன்.
தீர்த்தன் பெரும் புகழ் விஷ்ணு—எங்கள்
சீரிய நண்பன் கண்ணன் கழலாணை;
கார்த்தடங் கண்ணி எந்தேவி—அவள்
கண்ணிலும் காண்டிவ வில்லினும் ஆணை;
போர்த் தொழில் விந்தைகள் காண்பாய்,—ஹே!
பூதலமே! அந்தப் போதினில்' என்றான்.

## பாஞ்சாலி சபதம்

தேவி திரௌபதி சொல்வாள்—'ஓம்,
தேவி பராசக்தி ஆணை யுரைத்தேன்;

பாவி துச்சாதனன் செந்நீர்,—அந்தப்
பாழ்த்துரி யோதனன் ஆக்கை இரத்தம்,
மேவி இரண்டுங் கலந்து—குழல்
மீதினிற் பூசி நறுநெய் குளித்தே
சீவிக் குழல் முடிப் பேன்யான்;—இது
செய்யுமுன்னே முடியே' னென்றுரைத்தாள்.

ஓ மென் றுரைத்தனர் தேவர்; ஓம்
ஓ மென்று சொல்லி உறுமிற்று வானம்,
பூமி யதிர்ச்சி உண்டாச்சு—விண்ணைப்
பூழிப் படுத்தியதாஞ் சுழற் காற்று.
சாமி தருமன் புவிக்கே—என்று
சாட்சி யுரைத்தன பூதங் களைந்தும்.
நாமுங் கதையை முடித்தோம்—இந்த
நானில முற்றும் நல்லின்பத்தில் வாழ்க!

## பல்சுவைப் பகுதி

1. முக்கால் முதல் வரிசையாகக் கீழரை வரையுள்ள எண் வரும்படியாகப் பாடியது.

முக்காலுக் கேகாமுன் முன்னரையில் வீழாமுன்
அக்கா லரைக்கால்கண் டஞ்சாமுன்—விக்கி
இருமாமுன் மாகாணிக் கேகாமுன் கச்சி
ஒருமாவின் கீழரையின் றேது.

2. **அந்தகக்கவி வீரராகவ முதலியார்**

கவி அந்தகனாயிருப்பதனால், அரசனொருவன் வில்லும் அம்பும் எடுத்து வைத்துக் கொண்டு தன் செயல் குறித்துப் பாடுமாறு கூறப் பாடியது.

வாழும் இலங்கைக் கோமானில்லை மானில்லை
ஏழு மராமரமோ ஈங்கில்லை—ஆழி
அலையடைத்த செங்கை யபிராமா இன்று
சிலையெடுத்த வாறெமக்குச் செப்பு.

### 3. புகழேந்திப் புலவர்

ஔவையார் மூன்று பிறைவரப் பாடச் சொல்லப் பாடியது.

பங்கப்பழனத் துழுமுழுவர் பலவின் கனியைப்
பறித்த தென்று
சங்கிட்டெறியக் குரங்கிளநீர் தனைக்கொண் டெறியுந்
தமிழ் நாடா
கொங்கைக் கமராபதியளித்த கோவே ராஜ
குலதிலகா
வெங்கட்பிறைக் குங்கரும்பிறைக்கும் மெலிந்தப் பிறைக்கும்
விழி வேலே.

### 4. சிவப்பிரகாச சுவாமிகள்

ஒரு திருமணத்துக்குச் சென்றிருந்தபோது பாடிய வாழ்த்து.

அச்சுதன் அளிப்பனிலம் உமது நேயன்வித்தை
அருளுவன் பலபத்திரன்
அலம்உதவுவன் சமன் பகடு ஈவன் நந்தமக்கு
ஆனதோர் எருதும் உண்டே
முச்சிர அயிற்படை யினைக்கொழுவ தாக்குவோம்
மெய்ம்புடன் இழுத் திறுக்க
முந்திய வடக்கயிற்று டன்மற்றும் நமது அன்பர்
முன்போய் ஏன்று கொள்வோம்
இச்சையுடை நமதிளைய தனயனாகிய கந்தன்
இனிமையொடு மாடு மேய்ப்பன்
இனியுழுது பயிரிடுதல் நன்று நன்று இதைவிட்டு
இரந்துஉண்பது ஈனம் எனவே
கச்சுமகிழ் மாதுமை யுரைத்திடும் புத்தியைக்
கைக்கொண்டு உளத்தில் இதுநற்
காரியம் எனக்கருதி மெத்தக் களித்திடும்
கண்ணுதல் உமை காக்கவே.

# குறிப்புரை

## வாழ்த்துப் பகுதி

திருநாவுக்கரசர் : இப்பெரியார் திருமுனைப்பாடி நாட்டிலுள்ள திருவாமூரில் சைவ வேளாளர் மரபில் பிறந்தவர். இவர் தந்தையார் புகழனார்; தாயார் மாதினியார். இவருக்கு இடப்பட்ட பிள்ளைத் திருநாமம் மருள்நீக்கியார் என்பதாகும். இளமையிலேயே தாய் தந்தையரை இழந்து, தம் அருமைத் தமக்கையார் திலகவதியாரால் போற்றி வளர்க்கப்பெற்றார். இவர் எல்லாக் கலைகளும் கற்றுணர்ந்து சமண சமயஞ்சார்ந்து, தருமசேனர் என்னும் சிறப்புப் பெயரையும் பல்லவ மன்னனாகிய மகேந்திர வர்மனால் அளிக்கப்பெற்றுச் சிறப்புற்றிருந்தார். திலகவதியார் வருந்திச் சிவபிரானிடம் முறையிட்டுக்கொண்டார். இறையருளால் மருள்நீக்கியாருக்குச் சூலைநோய் உண்டாகச் சைவசமயஞ் சார்ந்தார். நோயும் நீங்கியது. அதுகண்ட அமண் மன்னன் அவருக்குப் பல இடையூறுகள் விளைத்தும் சிவனருளால் தப்பினார். பின்னர் அவர் சிவபெருமான் கோயில் கொண்டெழுந்தருளி யுள்ள தலங்கள்தோறுஞ் சென்று தேவாரப் பதிகங்கள் பாடி இறைவனை வணங்கியிருந்து பேறு பெற்றார். திருஞானசம்பந்தர் இவர் காலத்தவர். இவர் காலம் ஏழாம் நூற்றாண்டின் தொடக்கம் என்பர். இவர் பாடிய தேவாரப் பதிகங்கள் நான்கு, ஐந்து, ஆறாந் திருமுறைகளாக வகுக்கப் பெற்றுள்ளன.

தரணி = பூமி
வான் = தேவருலகம்
மங்குதல் = அழிதல்

மாதேவர்க்கு ஏகாந்தர் = சிவபெருமானையே முழு முதற் கடவுளாகக் கொள்ளுவார்

தொழுநோய் = குறை நோய்

ஆ = பசு

புலையர் = இழிந்தவர்

வார் = நீண்ட

கரந்தார் = மறைத்தவர்

2. **ஆண்டாள்:** ஸ்ரீவில்லிபுத்தூரில் விஷ்ணுசித்தர் என்பார் திரு நந்தனவன முண்டாக்கி, மலர் பரித்து மாலை கட்டி இறைவனுக்குத் தொண்டாற்றி வந்தார். இவரே பெரியாழ்வார் எனப்படுவர். ஒருநாள் இவர் நந்தவனஞ் செல்லுகையில் திருத்துழாய்ச் செடியின் கீழ் ஓர் பெண் மகவு கிடப்பதைக் கண்டு, எடுத்துவந்து கோதை எனப் பெயரிட்டு வளர்த்து வந்தார். அப் பெண் எப்போதும் வட பெருங் கோயிலுடையானையே துதித்து வந்தார். ஓர் நாள் இறைவனுக்குக் கட்டப்பட்ட மாலையைத் தானணிந்து அழகு பார்த்துவிட்டு வைத்துவிட்டார். நாள்தோறும் இவ்வாறு நடக்க, ஓர் நாள் ஆழ்வார் கண்டு வருந்தி வேறு மாலை கட்டிக் கொடுத்தார். இறைவர் அவர் கனவில் தோன்றிக் கோதையார் சூடிக்கொண்ட மாலையே தனக்கு வேண்டியது என்று சொல்லப் பின்னர் இவர் சூடிக் கொடுத்த பிறகே இறைவனுக்குச் சாத்தப்பெற்றது. ஆதலால் இவருக்கு சூடிக்கொடுத்த நாச்சியார் எனும் பெயரும் வந்தது. அவர் பாடிய பாக்கள் நாலாயிரத்திலுள்ளன. அவர் திருவரங்கப் பெருநகரத் திறைவர்பாற் சென்று அவருடன் இரண்டறக் கலந்துவிட்டார்.

மாயம் = வஞ்சனை

மன்னு பொருந்திய

மைந்து = வலிமை
ஆயர் = இடையர்
மணி = அழகு

## 3. கிறிஸ்து பெருமான் வாழ்த்து

வன்கணன் = கொடியவன்
படிறன் = பொய்யன்
புன்கண் = துன்பம்
புனிதம் = தூய்மை
புனித மூர்த்தி = தூய வடிவினன்
செந்நீர் = குருதி

## 4. தமிழன்னை வாழ்த்து

செயற்கை கடந்து = செயற்கைக்கு அப்பாற்பட்டதாகி
ஒளி = அறிவு
உயிர்ப்பு = மூச்சு

5. அணங்கு = தெய்வமகள்
பார் = உலகம்
பரவும் = வணங்குகின்ற
பழகுவார் = பயிலுவோர்
உள்ளுதல் = நினைத்தல்
பான்மை = தன்மை
இயம்புதல் = சொல்லுதல்
அணி = அழகு
பழுது = குற்றம்
பகர்தல் = சொல்லுதல்
தணிதல் = குறைதல்

# நீதிப் பகுதி

நாலடியார் : இந் நூல் சைன முனிவர் பலரால் பாடப் பட்ட செய்யுட் தொகுப்பாகக் கொள்ளப் படுகின்றது. இந் நூல் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுள் முதலாவதாக அமைந்துள்ளது. ‘நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி’ எனும் பழமொழியிலிருந்தே இந்நூலின் பெருமையை நன்கு அறியலாம்.

1. ஒளி நிறான் = தன் சிறப்பை நிலைக்கச் செய்யாமலும்
புகழ் = உரையும் பாட்டுமாகியவற்றா லியலும் புகழ்
துன் = நெருங்கிய
கேளிர் = உறவினர்
களைதல் = நீக்குதல்
கொன்னே = வீணாக
வழங்கான் = இரப்பார்க்குக் கொடாமலும்
ஆஆ = அந்தோ

2. மற்று அறிவாம் = பின்னர் அறிந்து செய்து கொள்ள லாம்
நல் வினை = நற் செயல்கள்
கைத்து உண்டாம் போதே = கையில் பொருள் உள்ள போதே
கரவாது = ஒளியாமல்
தீவளி = கோடைக் காற்று

3. உறக்கும் துணையது = சிறிய அளவினது
ஈண்டி = தழைத்து
இறப்ப = மிகவும்
அறப் பயன் = புண்ணியம்

4. இகழ்ந்தமை = காரணமின்றியே இகழ்ந்துரைத்தமை
விணைப் பயத்தால் = தீவிணைப் பயனால்
உம்மை = மறுமையில்
எரிவாய் நிரயம் = அழலிடத்ததான நரகம்
பரிவதும் = அவர்களுக்காக இரங்குவதும்

5. காவாது = சினத்திலிருந்து தன்னைக் காவாது
ஓவாதே = எப்போதுமே (ஒழியாமல்)
சுடுதல் = வருத்துதல்
ஆய்ந்து அமைந்த = ஆராய்ந்து பண்பட்ட
காய்ந்து = மனம் வெதும்பி
அமைந்த = சினம் பொருந்த சுடுசொற்களை
கறுத்து = கோபித்து

6. அறிவது = உலக வழக்கு, நூல் வழக்கு என்ற இரண்டானும் தெரிந்து கொள்ளவேண்டுவன
உறுவது = தம் நிலைக்குத் தகுதியாகப் பொருந்துவதாகிய செயல்களை
உவப்ப = மகிழ
அரிது = இல்லை

7. கடிப்பு இடு = குறுங்கோலால் ஒலிக்கப்படும்
இடித்து முழங்கியது = இடித்து முழங்கிய மேகத்தின் ஒலியை
சொல் = புகழுரை
கேட்கும் = கேட்பார்கள்

8. இம்மைப் பயக்கும் = நல் வாழ்க்கையாகிய இம்மைப் பயனை விளைவிக்கும்
ஈய = பிறர்க்குக் கற்பிக்க
விளக்கும் = அறிவாலும் புகழாலும் விளங்குமாறு செய்யும்
தாம் உளரா = தாம் இருக்க
எம்மை உலகத்தும் = எப் பிறவியின் உலகத்திலும்
மம்மர் = அறியாமையாகிய மயக்கம்

9. அம் கண் விசும்பு = அழகிய இடமகன்ற ஆகாயம்
அகல் = விரிந்த
நிலா = நில வொளியை
பாரிக்கும் = பரவச் செய்யும்
திங்கள் = சந்திரன்
சான்றோர் = மேன் மக்கள்
மறு = மாசு ; கறை
ஆற்றும் = பெற்றிருக்கும்
ஆற்றார் = பொறுதவ ராகி
தெருமந்து = மனங் கலங்கி

10. போகிய = கழிந்த
பெரியவர்கண் = பெரியவர்களிடத்தில்
செல்லாது வைகிய = செல்லாமல் நின்ற
வைகல் = நாட்கள்
ஒவ்வ = தம்மா லியன்றவற்றை
பகலும் = நாட்களும்
படா = உண்டாக மாட்டா

11. அற நெறி = கடமை யொழுங்கு
கூற்றம் = யமன்
போற்றுமின் = செய்யாமற் காத்துக் கொள்ளுங்கள்
வஞ்சம் = வஞ்சித் தொழுகுதல்
வினைத் தீயார் = தீச் செயலுடையார்
சொல் = நன்மொழிகள்

12. நண்பு ஒரீ இ = நேசத்தை நீக்கி
கெழீஇக் கொளல் = தழுவிக் கொள்ளுதல்
எறிந்த வேல் = தன்னை வளர்த்தவன் கோபங் கொண்டு எறிந்த வேலானது
மெய்யதா = தன்னுடலில் ஊடுருவித் தைத்திருப்பவும்
வால் குழைக்கும் = அவனிடத்தும் அன்பினால் வால் குழைத்து நிற்கும்

## சதகங்கள்

### 1. அறப்பளீசுர சதகம்

எய்து = வந்தடைந்த
தேடு = தேடிய ; சம்பாதித்த
கோதில் = குற்றமற்ற
நிந்தை = பழிச் சொல்
சீவன் = உயிர்
அரவம் = பாம்பு
மணி வாய் = அழகிய வாய்
தருமமாம் = சிறந்த நெறியாகும்
ஆடி = நடம் புரிந்து

### 2. தண்டலையார் சதகம்

விற்பனர் = அறிவு மிக்க சான்ரேர்
கண்ணேட்டம் = இரக்கம் ; மரியாதை
சொற்பர் = சிறியவர் ; அற்பர்
இறுமாந்து = தருக்கடைந்து
அர்த்த ராத்திரி = நள்ளிரவு

### 3. கயிலாசநாதர் சதகம்

கடல் உலகில் = கடலாற் சூழப்பட்ட இப்பூவுலகில்
நிலை பெற்ற = என்றும் அழியாத
கனல் = நெருப்பு
புனல் = தண்ணீர்
தெண்டம் = அபராதம்
அடம் = பிடிவாதம்
புவி = உலகம்
கடகயம் = மதயானை

## கதைப் பகுதி

பாரதியார் : தேசியக் கவி சுப்பிரமணிய பாரதியார், சின்னசாமி ஐயரின் செல்வமகனாக எட்டையபுரத்தில் அவதரித்தார். இளமையிலேயே செய்யுளியற்றும் ஆற்லைப் பெற்று விட்டவர். தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய வற்றை நன்கு பயின்றவர். எட்டையபுரம் அரசரால் ஆதரிக்கப் பெற்றுப் பின்னர் சுதேசமித்திரன் பத்திரிகைத் துணை யாசிரியராயிருந்து தமிழ்த் தொண்டும், நாட்டுத் தொண்டும் செய்தவர். அவரது பாக்களும், கட்டுரைகளும் மக்களுக்கு விடுதலை உணர்ச்சியை உண்டாக்குவனவா யிருந்ததால் ஆங்கில அரசாங்கத்தாரால் வழக்குத் தொடரப் பெற்று, அகப்படாமல் புதுவையிற் போயிருந் தார். பின்னர் சென்னையை யடைந்து சுதேசமித்திரனில் அலுவல் செய்து வரும்போது திருவல்லிக்கேணி கோயில் யானையால் தள்ளப்பட்டு அது காரணமாக நோயுற்று உயிர் நீத்தார். புதுமைக் கவி பாரதியாரின் பாடல்கள் யாவும் தற் போது நாட்டுப் பொதுச் செல்வமாக ஆக்கப்பட்டுள்ளன.

இங்குப் பாடமாக வந்துள்ள பகுதி பாரதியாரியற்றிய காவியமாகிய பாஞ்சாலி சபதத்தின் இறுதியிலுள்ள பாக்க ளாகும்.

அன்னை = (இங்கு) திரௌபதி
மன்று = சபை
துகில் = ஆடை
பிச்சு = பித்து
பேயன் = கொடியவன்
உட்சோதி = உள்ளொளி

சரண் = தஞ்சம்
தையலர் = மகளிர்
பெண்ணொளி = சிறப்புமிக்க திருமகள்
சென்னி = தலை
மூளும் = உண்டாகும்
துன்னிய = நெருங்கிய
தொழும்பு = அடிமைத் தொழில்
ஆரியன் = சிறந்தவன்
சாவடி = (கச்சேரி) ; அரச சபை
மறவர் = வீரர்
காவலின் நெறி = ஆட்சி முறை
விண்ணவர் = தேவர்கள்
மறை சாற்றிய வேதன் = நான்முகன்
மாமகளைக் கொண்ட தேவன் = திருமால்
காமன் = மன்மதன்
கண்ணழல் = நெற்றிக் கண்ணிலிருந்து வந்த நெருப்பு
காலன் = எமன்
மாண் = பெருமை
பார்த்தன் = அர்ச்சுனன்
தீர்த்தன் = சிவன்
பூழி = புழுதி

## பல்சுவைப் பகுதி

1. முக்கால் = ஊன்று கோலுடன் கூடியமூன்றுகால் (வயோதிகப்பருவம்)
முன் நரை = அதற்கு முற்பட வரும் நரையுண்டாம் பருவம்
காலர் = எமதூதர்
கால் கண்டு அஞ்சாமுன் = (எமதூதரை) கண்டு அஞ்சி அதனாற் கால்கள் நடுங்குவதற்கு முன்

விக்கி இருமா முன் = விக்கல் கண்டு இருமும் பருவம் வரு முன்னர்

மாகாணி = நன் காடு

கச்சி = காஞ்சிப்பதி

ஒரு மா = ஒப்பற்ற மாமரம்

மாவின் கீழரை = மாமரத்தின் கீழே வீற்றிருக்கும் ஏகம்பநாதரை

இன்று = இப்போதே

ஓது = வாழ்த்தி, வழிபடுவாயாக

2. இலங்கைக் கோமான் = இராவணன்

மான் = மாய மானாக வந்த மாரீசன்

(ஏழுமராமரங்களை ஓரம்பினால் துளைத்த பின்னரே இராமன் வாலியைக் கொன்றான்)

அபிராமா = அழகனே

சிலை எடுத்தவாறு = வில்லையும் அம்பையும் எடுத்த காரணம்

செப்பு = கூறுவாயாக

3. பங்கப்பழனம் = சேறு நிறைந்த வயல்

சங்கு = வயலிலுள்ள சங்குகள்

கொங்கு ஐ—கொங்குநாட்டின் அரசன்

அமராபதி = விண்ணுலகம்

(போரில் வென்று கொடுத்த வீர சுவர்க்கம்)

ராஜகுல திலகா = அரசர் கூட்டத்திற்குத் தலைவனே

வெம் கண் பிறைக்கும் = வெப்பமுள்ள பிறைத் திங்களின் நிலவொளியாலும்

கரும்பு இறைக்கும் = கரும்பு வில்லினையுடைய மன்மதனாலும்

மெலிந்து = உடல் தளர்ந்து

அம்பு இறைக்கும் = கண்ணீரைச் சிந்துகின்ருள்
விழி வேலே = வேல்போன்ற கண்களையுடைய பெண்

4. அச்சுதன் = திருமால்
நேயன் = நண்பனுகிய குபேரன்
பலபத்திரன் = பலராமன்
அலம் = கலப்பை
சமன் = எமன்
பகடு = எருமைக்கடா
எருது = காளை (வாகனம்)
முச்சிரம் = மூன்று தலைகளையுடைய
அயிற்படை = சூலாயுதம்
மொய்ம்பு = வலிமை
முந்திய = முதலில் வேண்டப் படுவதாகிய
அன்பர் = தொண்டர் ; அடியார்
இச்சையுடை = விருப்பமுடைய
தனயன் = மகன்
இரந்து = யாசித்து
கைக் கொண்டு = ஒப்புக் கொண்டு
மெத்த = மிகவும்
கண்ணுதல் = நெற்றியில் கண்ணையுடைய சிவபெருமான்

# அருஞ்சொற் பொருள்

## கனகசபைப் பிள்ளை

சீரிளமை—நிலைத்த அழகான இளமை
அஞ்சலகம்—தபால் நிலையம்
மதி நலம்—அறிவுத் திறன்
தளரா—மனங் குன்றாத
திண்ணிய—வலிமை பெற்ற
பிற்றை—பின்னர்
ஈர்த்து—வலித்து
உறு துணை—பொருந்திய துணை
பாரில்—உலகில்
பல்கி—பலவாறு விரிந்து
அண்டி—அடுத்து
ஓம்பி—போற்றி
செற்றம்—சினம்

## ஆடலும் பாடலும்

திளைத்து—மூழ்கி
பொலிவு—அழகு
புரந்தனர்—போற்றிக் காத்தனர்
பாணன்—பாடுவோன்
பாடினி—பாடுவோனுக்குத் துணைவி
ஆல—ஆட
அகவ—பாட
பரவும்—போற்றும்
வரை—மலை

முகில்—மேகம்
விரை—நாற்றம்
அறுதி—முடிவு கட்டி
மிளிரும்—விளங்கும்.

**உண்டால் அம்ம இவ்வுலகம்**

அக மலரும்—மன மகிழும்
அல்லல்—துன்பம்
வையம்—உலகம்
பெரு நெறி—உயர்ந்த ஒழுக்கம்
அண்ணலார்—உயர்ந்தவர்
செம்மை நெறி—சிறந்த முறை.

**உத்தரத் திருவிழா**

எழில்—அழகு
நிறை மதி—வளர்ந்த நிலவு
மாசில்—குற்ற மில்லாத
இன்னல்—துன்பம்
சலனம்—அசை வற்று
மோனம்—முத்தி
பௌராணிகர்—புராண நூலுடையார்
வதுவை—மணம்
வழி கோலும்—வழி அமைக்கும்
மன ஒளி—உள்ளத் தெளிவு

**இராசராசன்**

வீழ்ந்தும்— வழக்கிழந்து நிலைகுலைந்தும்
தொன்மை—பழமை
சின் னூறு—சிலநூறு

ஒப்புயர்வு—ஈடு எடுப்பு
அடிகோலியவன்—நிலைக்கச் செய்யத் தொண்டாற்றியவன்
இராச கேசரி—அரசருள் ஏறு
பர கேசரி—மாற்றருள் ஏறு
இறை யிலி—வரி யில்லாத
பொருது—போரிட்டு
புறச் சமயம்—மற்றச் சமயம்

## வாசவதத்தையின் மணம்

அகழி—மதிலைச் சுற்றிய நீர்நிலை
அரண்—பாதுகாப்பு
வினை—செயல்
மாயக் கரி—மாய யானை
கடிது—விரைந்து
வறிதே—வீணே
வஞ்சினம்—உறுதிமொழி (நெடுமொழி)
உசாவினன்—வினவினன்
தருணம்—சமயம்
பேரார்வம்—பேரொலி

## கங்கை வேடன்

வஞ்சித்து—வஞ்சனை செய்து
ஆய்ந்து—ஆராய்ந்து
திரை—அலை
வெஞ்சரம்—கொடிய அம்பு
வாயாவோ—பாயாவோ
சாடி—போரிட்டு
ஓம்பி—போற்றி

நாயகன்—தலைவன்

நயனம்—கண்

பாயல்—படுக்கை

அயல்—பக்கம்

தாதை—தந்தை

நாவாய்—படகு

